

# சித்தர் பாடல்கள்

## மூலமும் உரையும்

2

780

இரண்டாம் தொகுதி

555

# சித்தர் பாடல்கள்

மூலமும்

முனைவர் அ. அறிவொளி
அவர்களின்
உரையும்

வர்த்தமானன் பதிப்பக வெளியீடு

# 7. காக புசுண்டர்

இவர் பற்றிய பல கதைகளும் கற்பனை மிக்கன வாகவே உள்ளன. புஜங்கம் என்னும் பாம்பிற்கு உரிய பெயர் புசுண்டம் எனத் திரிந்து வந்தது. இதனால் குண்டலினியைக் கொள்ளலாம். இவர் காகம் போல் மாற்று உருவம் எடுத்ததாக இவரே கூறுவதால், காக சித்தியைக் குண்டலினி யோகத்தால் பெற்றவர் என்று கொண்டு இதுவே காக புசுண்டர் என வந்திருக்கலாம் என நினைப்பது பொருந்தும்.

## காக புசுண்டர் பாடல்கள்

மூலமும் உரையும்

### காப்பு

எண்சீர் விருத்தம்

சிறந்தபரா பரமாகிய யெங்குந் தானாய்த்
தீர்க்கமுடன் ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிப்
பரந்தருளும் ஐம்பூத மாயை தோன்றிப்
பல்லாயிரங் கோடிஅண்டம் படைத்த போதம்
வரம்பெருகி அனந்தஅனந்தம் உயிரு மாகி
மதபேத மாகவுந்தான் வடிவைக் காட்டிச்
சரம்பெருக அண்டத்தி லெழுந்தே நின்ற
சச்சிதா னந்தம்அதைப் பணிகு வோமே. 1

பராபரமாக எங்கும் சிறந்து தானே எங்குமாய் நின்று, சூரிய சந்திர விண்மீன்கள் ஆகிய மூன்று ஒளியுமாகி, ஐம்பூதங்கள் கொண்ட மாயையும் ஆகி, பல்லாயிரம் கோடி உலகுகளைப் படைத்த அறிவுடைப் பொருளாகி,

எண்ணற்ற உயிர்களுமாகி, மதங்களை நீக்கி, தன் உண்மை வடிவைப் புலப்படச் செய்து, எங்கும் சஞ்சரித்து நின்ற சத்சித் ஆனந்தம் ஆகிய கடவுளைப் பணிகுவோமே.

ஓமென்ற சுழுனையடா அண்ட வுச்சி
　　ஓம்முடிந்த பட்டணத்துக்கு அப்பாற் சென்று
நாமென்று சொல்லற்று யோக ஞானம்
　　நாட்டுகிறேன் அஞ்சனமுந் திலதப் போக்கும்
வாமென்ற வயித்தியமும் அட்ட கர்மம்
　　வாதமென்ற வித்தையெல்லாந் தெளிவ தாகக்
காமென்ற பீடமதிற் கண்டு தேறிக்
　　காட்டுகிறேன் மெய்ஞ்ஞானக் கருவைப் பாரே. 2

ஓம் என்ற மந்திர ஒலியுடன் சுழுமுனை நாடியில் யோக முயற்சியை ஏற்றினால் அது உச்சித் தலை வரை (அண்ட உச்சி) தானே போகும். அங்குள்ள சகஸ்ராரமாகிய இடம் கடந்து (பட்டணம்) அப்பாலும் போய், நாம் என்ற உணர்வு நீங்கி யோக ஞானத்தை நாட்டுகிறேன். மை தயார் செய்தல், எண்ணெய் விடல், பிற மருத்துவம், எண்வகை மந்திரச் செய்கை, இரசவாதமாகிய திறமை எல்லாம் காம் என்று பீஜத்தால் கண்டு தெளிந்து மெய்ஞ்ஞானமாகிய அடிப்படையைக் காட்டுகிறேன் பார்.

(மையால் பலவற்றைத் தெளிந்து காணலாம்; தைலம் போல் யாவும் தெளிவாதலாம்) தலை உச்சிக்குச் சென்று அதன் மேலும் பரவினால் பிற அண்டங்களையும் கடக்கும். ஆகையால் யோக முயற்சியை அண்ட உச்சி என்றார்.

பாரேநீ யோகமென்ற வழியைச் சொல்வேன்;
　　பத்தடா ஐம்புலனைப் பரத்தின் ஊடே
சீரொருவர் தெரியாமல் மதங்கள் பேசித்
　　திருவான உச்சியிலே சேரா மற்றான்

ஆரொருவன் ஆதாரம் வெவ்வே றென்றே
அடுக்குஅடுக்காய்ப் பன்னிரண்டு தலங்க ளென்று
வீரேதான் பேசியே மெலிந்து போவான்
விடமுண்ட அண்டமதை விரும்பிக் காணே. 3

யோகம் எனும் நால்வழியைச் சொல்வேன், கேட்பா யாக. ஐம்புல உணர்வையும் பரத்தின் ஊடே சேர்த்து நீக்குவன தச நாடிகளேயாம். இப்படி உச்சியில் சேராமல் வேறு மதங்களையே பேசி, வேறு வேறான ஆதாரம் என்றும் பிரித்துப் பேசுபவர். அடுக்கடுக்கான 12 தலங்கள் தலைக்கு மேல் உள்ளன என்பர். இப்படி வீரம் பேசி இறுதியில் தோற்றுப் போவர். விடத்தை உண்டு பிழைக்கச் செய்த விசுத்தி எனும் ஆதாரத்தை விரும்பிக் காண்பாயாக.

காணப்பா தலமெல்லாம் அண்ட வுச்சி
கமலமடா பதினெட்டாங் கோட்டிற் சென்று
பூணப்பா மனத்தையுந்தான் பிசகுஒட் டாமற்
பூட்டடா பிரமத்திற் புகுந்தெந் நாளும்
வீணப்பா மந்திரங்க ளொன்று மில்லை
விதியில்லை மதியில்லை கெதியு மில்லை
தோணப்பா தோணுமடா மனமொன் றான
சுத்தமுடன் நீயிருந்து தவஞ்செய் வாயே. 4

காண வேண்டிய தலம் என்பது அண்ட உச்சியே ஆகும். (தலை உச்சி) ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரை அங்குண்டு. அதற்கு மேல் பதினெட்டு விரல் உயரம் நேர்க் கோட்டில் மனத்தைப் பிசகாமல் செலுத்தி, அங்கே செல்வது பிரம்மத்துள் செல்வதாகும். இதற்கு மந்திரங்கள் தேவை இல்லை. விதிமுறையோ, வேறு கவனிக்க வேண்டு வதோ, நெறியோ இல்லை. மனமொன்றை இப்படிச் செலுத்தினாலே எல்லாம் தானாகத் தோன்றும். அதுவே தவமாகும்.

விளக்கம்: இது பிராசாத யோகமாகும்.

செய்யப்பா வாசிமுனி மகனே கேளு
தீர்க்கமுடன் முன்னுரைத்த ஆயி ரத்தில்
மெய்யப்பா சரக்குநீத்து உவகை யெல்லாம்
மேன்மையுடன் கட்டினங்கள் உருக்கி னங்கள்
பொய்யப்பா சொல்லவில்லை ரத்னப் போக்குப்
புனிதமுடன் சரியாகச் சொல்லிப் போட்டேன்
வையப்பா இந்நூலில் மவுன மெல்லாம்
வகையாகச் சொல்லுகிறேன் பணிந்து கேளே. 5

வாசிமுனி மகனே, கேள். (வாசியோகி செய்பவனே கேள்) மேல்பாட்டில் சொல்லப்பட்ட 1008 இதழ்த் தாமரை மேல் எந்த நாடியும் ஆதாரமுமான சரக்கும் இல்லை. உடம்பாகிய சரக்கையும் உணராமல் கை விடுக. இதனால் உவகை உண்டு. இதனால் உள்ளவை நவரத்தினம் போன்ற ஒளி வீச்சேயாம். இது பொய்யன்று; சரியாகவே சொன்னேன். இதனையே மவுன நிலையாகக் கடைப்பிடிப்பாயாக.

கேளப்பா கேசரமே அண்ட வுச்சி
கெட்டியாய்க் கண்டவர்க்கே மவுன மாகும்
ஆளப்பா பரப்பிர யோக மென்றே
அடுக்கையிலே போதமுந்தான் உயரத் தூக்கும்
வாளப்பா கெவுனமணி விந்து நாதம்
வலுத்ததடா கெட்டியாய்த் திரண்டு போகும்
நாளப்பா அண்டமெல்லாஞ் சத்தி யோடு
நடனமிடும் சிலம்பொலியுங் காண லாமே. 6

அண்ட உச்சியே மனம் தங்க வேண்டிய இடமாகும். இதை உறுதியாகக் கண்டவர்கள் மவுனம் கொள்வர். இதுவே பரப்பிரம்மத்தோடு ஒன்றும் யோகமாகும். இதைச் செய்யும் போது ஞானம் (போதம்) உண்டாகிச் செய்பவனை

உயர்த்தும். மனமென்னும் வாளால் அரிந்து பெறவேண்டிய கவனமான மாணிக்கமும், விந்து நாதமும் திரண்டு வெளியாகும். அண்ட கோடிகளில் சிவசத்தி நடனமாடுவதையும் சிலம்பு ஒலியையும் காணலாம். (கேட்கலாம்)

விளக்கம்: கேசரம் - தங்கும் இடம்.

காணலாம் பிரமத்தில் நிர்ண யந்தான்
காட்டுகிறேன் வாசிமுனி கருவாய்க் கேளு
பூணலாம் அண்டவுச்சி தன்னில் நின்று
பொறிகளையு முண்டாக்கிப் புவனந் தன்னில்
தோணலாம் உயிர்ப்பயிரைப் படைத்துளந் நாளுந்
தொந்தமென்னும் ஏழுவகைத் தோற்ற மாகி
ஆணலாம் நாலுவகை யோனி யாகி
அண்டமடா அனந்தஅனந்தம் ஆன ஆறே. 7

வாசி முனியே, கருத்தாய்க் கேள். பிரம்மத்தில் நிர்ணயம் செய்யலாம். அண்ட உச்சியில் நின்றே இதை அணிய முடியும். பொறிபுலன்கள் செய்து, பல உலகும் படைத்து, எழுவகைப் பிறப்பும் நான்கு வகை யோனியும் பல கண்டங்களில் பலப்பலவாகச் செய்யலாம்.

விளக்கம்: யோக சித்தியால் ஐந்தொழில் செய்யலாம் என்பது இதில் கூறப்பட்டது.

வாறான பிரமத்தில் நடுவே மைந்தா!
வந்ததடா ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிக்
கூறாகப் பின்னியடா கீழே பாயுங்
கூறுகிறேன் இருகண்ணில் ஒளிவைக் கேளு;
வீறான அண்டவுச்சி முனைக்கப் பாலே
வெற்றியுடன் நரம்பதுதான் விழுது போலே
நேராக இருகண்ணிற் பின்ன லாகி
நிச்சயமாய் ஒளியாகி நிறைந்தார் பாரே. 8

பிரம்மத்தின் நடுவிலிருந்தே சூரிய சந்திர விண்மீன்கள் ஆகிய ஒளிகள் தோன்றின. இவை உலகம் முழுதும் பரவின. இந்த ஒளிகளை இரு கண்களால் கண்டபடி கேள். அண்ட உச்சியில் மனத்தை நிறுத்தினவர்க்கு ஒளிகளே கண்ணில் நரம்பு போல் தோன்றிப் பின்னல் கொண்டு எல்லாவற்றை யும் அங்கே கண்ணால் காணும் திறமை உண்டாகும்.

விளக்கம்: பிரமம் - பிரம்மரந்தரம் - உச்சி.

பாரப்பா பரப்பிரமம் ஒளியி னாலே
பத்திலே நரம்புவழி பாயும் போது
ஆரப்பா இருகண்ணில் ஒளிய தாகி
அண்டமெல்லாம் ஏகமாய்த் தெரிய லாச்சு
காரப்பா நரம்பென்ற விழுது வட்டம்
கபாலத்தில் முக்கூறாய்ச் சுழுனை யாச்சு
வீரப்பா காதுக்கும் நாக்குக் குந்தான்
வெற்றிபெற இன்னமுந்தான் உரைக்கக் கேளே. 9

பரப்பிரம்மத்தை இப்படி ஒளி வடிவாகக் காண்க. பத்து நாடிகளில் ஒரு நாடி வழியே இந்த ஒளி பாயும் போது எல்லா அண்டங்களும் தெரியும். கபாலத்தில் இந்த நாடிகள் மூன்று வடிவாகிச் சுழுமுனையுமாகும். காது, நாக்கின் அடிப் பாகம் என்ற இவற்றின் வழியே சுழுமுனை நடுவாக வருவதை வெற்றியுடன் காணலாம்.

கேளப்பா மூலமடா லிங்கந் தன்னில்
கிருபையுடன் தண்டுக்குங் கீழ்மே லாக
நாளப்பா தமர்போலே பிடரி மார்க்கம்
நன்றாக ஓடுமடா நரம்பின் ஊடே
வாளப்பா அண்டமுட்டி வுயர மைந்தா!
வலுவாக முன்சொன்ன நரம்பின் ஊடே
தேளப்பா சேர்ந்துமிகப் பின்ன லாகிச்
சிறந்திடவே புருவமத்தி யாகும் பாரே. 10

மூலாதார லிங்கத்திலிருந்து முதுகுத் தண்டுக்கும் கீழ் நின்று மேலாக உயர்ந்து, நம் உணர்வால் நாளமாகி மேல் ஓடுவது தெரியும். நமக்குள் ஒரு நரம்பில் ஓடுவதாய் உணர்வு உண்டாகும். இதனை மூலாதாரம் முதல் தலை உச்சி வரை முட்டி நிற்கும் நாடி வழியே தெளிக. அதனுடன் பின்னுக. இதைப் புருவ மத்தியில் நேரில் காண்பது போல் காணலாம்.

(நாளம் - உடலில் இரத்தம் பாய்ந்து செல்லும் குழாய்)

பாரடா புருவமத்தி யேதென் றக்கால்
பரப்பிரமம் ஆனதோர் அண்ட வுச்சி
நேரடா முன்சொன்ன நரம்பு மத்தி
நிலைத்ததடா சுழுனையென்று நினைவாய்ப் பாரு
வீரடா அண்ணாக்கில் நேரே மைந்தா!
மேவடா மனம்தனையுஞ் செலுத்தும் போது
காரடா சுழுமுனையிலே மனந்தான் பாய்ந்து
கலந்துஐந்து பூதமுந்தான் ஒன்றாய்ப் போமே. 11

சுழுமுனையில் ஐந்து பூதங்களும் கலந்து ஒன்றாய்ச் செல்லும். உள்நாக்கின் மேல் மனத்தைச் செலுத்தி இதைப் பார். இது கபால உச்சி வரை போவதையே புருவ மத்தி என்று கூறியதோடு உடன் கொள்ளத் தக்கதாம். ஐந்து பூதமும் ஐந்து நிறங்களாய் ஒளியாய்ச் சுழுமுனையில் செல்லும் என்று அறிக.

போமடா முன்சொன்ன நரம்பின் ஊடே
பூரித்து ரவிமதியுஞ் சுடர்தாம் மூன்றும்
ஆமடா பின்னியும் கீழே பாயும்
அந்தரங்கந் தனைப்பார்க்க அடங்கிப் போகும்
நாமடா வெளிதிறந்து சொல்லி விட்டோம்
நாதாந்த பரப்பிரம நாட்டம் தன்னை
ஓமடா விந்துவுந்தான் அண்ட வுச்சி
உறுதியுடன் சித்தமதை ஊன்றிப் பாரே. 12

முன்பு பேசிய சுழுமுனை நாடியில் சூரிய சந்திர நட்சத்திர ஒளிகள் மூவித நிற ஒளியாய் (சிவப்பு மஞ்சள் பச்சை)ப் பிணைந்து போகும். அந்தரங்கமானவற்றைக் காண இப்படி அடங்கிப் போகும் என்க. நாம் வெளியைத் திறந்து (வெளிப்படையாகச்) சொல்லி விட்டோம். இதுவே நாத முடிவான பரப்பிரம்ம நாட்டமாகும். விந்துவாகிய ஒளி தலைக்கு மேல் ஆறு விரலுக்கு அப்பால் போகும் மனத்தை ஊன்றி இதைக் கவனிக்கவும்.

விளக்கம்: நாதம் தலைக்கு மேல் 3 விரல். நாதாந்தம் அதற்கும் மேல் 3 விரலாகும். நாதாந்தம் - நாத + அந்தம் - நாதத்தின் முடிவான பரம்பொருள்.

பாரான சாகரமே அண்ட வுச்சி
 பதினாலு லோகமெல்லாம் பரத்தின் ஊடே
சீராகத் தெரியுமடா மவுன மார்க்கம்
 சித்தான சித்துவிளை யாடிநிற்கும்
வீரான மந்திரங்கள் பிறந்தது எப்போ?
 விஷ்ணுவென்றும் பிரமனென்றும் வந்தது எப்போது?
கூரான முக்குணங்க ளுதித்தது எப்போ?
 கூறாத அட்சரத்தின் குறியைக் காணே. 13

பிரபஞ்சமாகிய கடலே அண்ட உச்சியில் விளங்குகிறது. பதினான்கு உலகங்களாய் அவை காணப்படும். மவுன மார்க்கத்தில் சீராக இவை தெரியும். பலவித சித்துக்களும் விளையாடி நிற்கும். மந்திரம், மும்மூர்த்திகள், முக்குணங்கள் ஆகிய ஆதியில் உள்ளன எல்லாம் எப்போது உதித்தன ஓம் என்னும் நாதத் தத்துவ முடியில் மனத்தை வைத்தால் இவை தெரியும்.

விளக்கம்: கர்மேந்திரியம் 5, ஞானேந்திரியம் 5, அந்தக் கரணம் 4 ஆகிய பதினான்கும் இருப்புத் தருவதும், உணர்வு தருவதும் ஆகும். இந்த அண்டங்கள் பலவும்

ஆகையால் 14 உலகம் என்று கூறுவது மரபாயிற்று. உலகம் பல கோடி என்பதறிக.

காணார்கள் பிரமம்முந்தா னுதிக்கு முன்னே
கருணையுள்ள மந்திரங்கள் பிறந்தது உண்டோ?
தோணாமல் மந்திரங்கள் அனந்தம் கற்றுச்
சுழுனையென்ற மூக்குநுனி தன்னைப் பார்த்து
வீணாகத் திரிந்துமிகப் பித்தர் போலே
வேரோடே கெட்டுழல்வான் விருதா மாடு;
கோணாமல் அண்ணாக்கின் நேரே மைந்தா!
குறிப்பறிந்து பார்த்தவர்க்கே முத்தி தானே. 14

ஓம் என்னும் பிரம்ம மந்திரம் உதிப்பதற்கு முன்பு எந்த மந்திரமும் உதிக்கவில்லை. மூக்கு நுனியாகிய சுழுமுனை இருப்பிடத்தைப் பார்ப்பதே பல மந்திரம் கற்றதன் பலனாகும். பயனற்றவைகளை நம்பி அவ்வழி நடப்பார் இதைச் செய்யாது கெடுவர். இவர் பித்தர் போல்வர். நாக்கின் அண்ணத்தின் மேல் இதே சுழுமுனை ஓடுவதைக் கருதிப் பார்ப்பவரே முத்தி அடைவர்.

(அண்ணாக்கு - நாக்கிற்கு மேலே உள்ள 'அண்ணம்' என்னும் பகுதி)

முத்தியடா மந்திரத்தை நினைக்கும் போது
மோசமடா மனந்தானும் இரண்டாய்ப் போகும்
சத்தியடா மனந்தானே ஏக மாகத்
தனித்திருந்து நித்திரையைத் தள்ளி மைந்தா!
புத்தியடா பிரமத்திற் புகுந்து கொண்டால்
பூலோக மெல்லாந்தான் பணியும் உன்னை;
எத்தியே திரியாமற் பிடரி மார்க்கம்
ஏறுகின்ற வாசியுந்தான் கற்பம் தானே. 15

சுழுமுனையைப் பார்ப்பதாகிய மந்திரத்தை நினைவில் கொள்ளும்போது முத்தி உண்டு. பிறவற்றில் மனம்

இரண்டாகி மோசமாகும். மனம் குவிந்து ஒன்றானால் அது சத்தியாகும். உறக்கத்தையும் தள்ளி விட்டுத் தனித்து உணர்க. பிரம்மத்தில் இப்படிப் புகுந்தால் அதுவே புத்தி யாகும். பூவுலகம் முழுவதும் இதற்குப் பணியும். ஏமாற்றிப் பிழையாமல் பிடரி வழியே உணர்வு தலைக்கு ஏறச் செய்யும் மார்க்கம் கண்டால் கற்ப காலம் வரை வாழலாம்.

விளக்கம்: மூளையும் தண்டு வடமும் இணைவது பிடரியாகும். இதுவே அதோமுகம் எனப்படும். கீழிருந்து வரும் யோக உணர்வை இங்குத் தலையில் ஏறச் செய்தல் பிடரி மார்க்கம் ஆகும். இதை நினைத்து ஒன்றுபட்டாலே இது கை வருவதாகும்.

(அதோமுகம் - மூளையும் தண்டுவடமும் இணையும் பிடரி. பிடரி மார்க்கம் - கீழே இருந்து வரும் யோக உணர்வைத் தலையில் ஏறச் செய்யும் வழி)

தானென்ற கற்பமடா மதுவுண் டக்கால்
சஞ்சார சமாதியென்பது அதற்குப் பேரு
ஊனென்ற பசிதீரும் கோபம் போகும்
உதயகிரி தனிற்சென்று ஊடுருவிப் பார்க்கத்
தேனென்ற திரையேழும் தீய்ந்து போகும்
திரிவாரே உச்சிநடுச் சென்ற போது
கோனென்ற கருவியெல்லா மொடுங்கிப் போகும்
கூற்றுவனார் ஆட்டமதைப் பார்க்க லாமே. 16

யோகத்தால் அமுதம் உண்டால் கற்ப கால வாழ் வாகும். இதைச் சஞ்சார சமாதி என அழைப்பர். இதனால் உடலின் பசித் துன்பம் நீங்கும். கோபம் முதலிய உணர்வு களும் நீங்கும். உதய கிரியாகிய மணிப்பூரகத்தை ஊன்றிப் பார்த்தால் தடையான எழுவகைத் திரைகளும் நீங்கும். பிறகு உச்சி வரை நடுநாடி வழியில் ஏறித் திரிவர். நம்மை ஆட்சி செய்த எல்லாக் கருவிகளும் செயல் ஒடுங்கும்.

அப்போது எமனார் நம்மை நாடி வரமுடியாது ஆடுவதை அறியலாம்.

(சஞ்சார சமாதி - யோகத்தால் அமுதம் உண்டு, கற்பகாலம் வரையில் வாழ்தல்)

பார்க்கலாம் ஒருகாலை உயரத் தூக்கிப்
பாடுவான் ஒருகாலைத் தாழ விட்டே
ஏர்க்கையிலே மேல்நோக்குங் காலைக் கேளாய்
என்மகனே மதியென்பது அதற்குப் பேரு
கார்க்கையிலே கீழ்நோக்குங் காலை மைந்தா
கண்டுபார் ரவியென்று கருத லாகும்
மார்க்கமுடன் அண்டவுச்சி மேலே தானம்
மகத்தான வன்னியிருப் பிடந்தான் பாரே. 17

மேல்கால் என்பது இடா நாடி மூச்சு. கீழ்க்கால் என்பது பிங்கள நாடியின் மூச்சு. இவை மாறிமாறி வரும்போது அண்ட உச்சிக்குப் போகும் உணர்வு கைகூடும். அங்கே தான் குண்டலினி நெருப்பு இருந்து நம்மை அங்கு இழுத்துச் செல்லும்.

பாரப்பா இதையறியார் சித்தர் கூடிப்
பார்தனிலே அறுபத்து நாலு யோகம்
ஆரப்பா இருக்குமென்று வெவ்வே றாக
அலைந்தலைந்து கெட்டவர்கள் அனந்தம் கோடி
நேரப்பா ராசாங்க யோகம் பார்த்து
நிலையறிந்து கண்டவனே கோடிக்கு ஒன்று
வீரப்பா பேசாமல் மனக்கண் ணாலே
விந்துவடா பாய்ந்ததலம் வெளியைக் காணே. 18

பலவித சித்தர்களும் அறுபத்து நான்கு வகை யோகம் என்று ஒவ்வொன்றாகப் பயின்று இறுதியில் கெட்டனர். அண்ட உச்சியில் யோக முயற்சியே யோ்கங்களில் ராஜ

யோகம் (ராஜாங்க யோகம்) ஆகும். இந்த ராஜயோகத்தை ஆராய்ந்து உணர்ந்து மேற்கொண்டவனே மனக்கண்ணால் விந்துவாகிய ஒளியை உடலில் பாயக் கண்டவன் ஆவான்.

(ராஜயோகம் அல்லது ராஜாங்க யோகம் - அறுபத்து நான்கு யோகங்களினால் அண்ட உச்சியில் செய்யும் மேலான யோக முயற்சி)

காணாத காட்சியெல்லாங் கண்ணிற் கண்டு
காகமடா புசுண்டரென்று பேரும் பெற்றேன்
தோணாமல் நானலைந்து சிறிது காலம்
துருவமென்ற பிரமத்தை யடுத்துக்கேட்க
நாணாமல் அண்டவுச்சி தன்னி லேதான்
நாடியே மனத்தாலே நாட்ட மாகக்
கோணாமல் பாருமென்றே எனக்குச் சொல்லக்
கூசாமல் மனமொன்றா யிருத்தி னேனே. 19

இத்தகைய காட்சிகளைப் பிறர் காணாதிருக்க நான் கண்டதால் எனக்குக் காகபுசுண்டர் என்று பெயரும் வந்தது. நானும் பல காலம் அலைந்தேன். துருவமாகிய அண்ட உச்சி யோகத்தை மனத்தாலே கண்டு கொள் எனப் பிரம்மமே எனக்குக் கூறியது. பிறகு அதிலேயே மனம் ஒன்றினேன்.

இருத்தியே இருதயத்தில் மனமொன் றாக
சுகபர மாம்பொருளை யிருத்தி யொன்றாய்
நிருத்தியே வெகுகோடி கால மட்டும்
நிருவிகற்பச் சமாதியிலே நிறைந்ததெந் நாளும்
பொருத்தியே லலாடக்கண் திறந்து பார்க்கப்
பூலோக மெங்கு மொன்றாய் நிறைந்துஎன் மைந்தா!
கருத்தொன்றாய் நிறுத்தியடா கபாடம் நீக்கிக்
காரணத்தைக் கண்டுவிளை யாடுவாயே. 20

நினைவுக்குரிய (இதயம்) பகுதியில் மனம் முதலிய நான்கும் ஒரே பொருளாய் நிற்க, பரம் பொருளையும் அதனுடன் சேர்த்து இயங்கச் செய்தால் பலகோடி காலம் நிர்விகற்பச் சமாதியில் நிற்கலாம். நெற்றிக் கண்ணைப் பல காலத்தின் பின் திறந்தால் பூவுலகு முழுதும் ஒன்றாய்த் திரண்டிருக்கும். ஏகாத்திரமாகிய ஒரே கருத்துடன் இப்படி இருந்தால் தலைக்குமேல் நம் காரண உடலைக் கண்டு விளையாடலாம்.

விளக்கம்: நிருத்தி - இயங்கச் செய்து; லலாடம் - புருவ மத்தியில்.

விளையாடிப் போதமய மாக வும்தான்
வெட்டாத சக்கரத்தின் வெளிச்சம் பார்த்து
நிலையான அண்டமதில் நெற்றிக் கண்ணை
நீயறிந்தே அரவுவிடம் தன்னைப் போக்கி
அலையாம லாரொருவ ருறவு மற்றே
ஆயிழையாள் மோகமதை யதட்டித் தள்ளி
மலையாமற் பிரமமே துணையென் றெண்ணி
மவுனமென்று மனந்தனையும் அடக்கி நில்லே. 21

இப்படி விளையாடும் போது ஞானம் உதயம் ஆகும். வெட்டாத சக்கரத்தின் வெளிச்சம் தெரியும். நிலைத்த இவ் வுடலில் நெற்றிக் கண்ணை நீ அறியும் போது குண்டலினிப் பாம்பின் விஷமாகிய மாயை நீங்கும். வேறு யாரும் உறவாக முடியாது. வாலையின் மேல் மோகத்தையும் உதறிக் காட்டிப் பிரம்மமே துணை என்று மவுனமாக எல்லாம் அடக்கி நிற்பாயாக.

விளக்கம்: வெட்டிய சக்கரம் - உலோகங்களில் உளியால் வெட்டியவை; வெட்டாத சக்கரம் - உடம்பில் சக்கரமாகத் தானே பதிந்தவை.

நில்லென்றால் லோகத்தில் மனிதர் தாமும்
நிட்டையுடன் சமாதியுமே பொருந்தா மல்தான்
வல்லவர்போல் வேதபுரா ணங்காவ் யங்கள்
மந்திரங்கள் கோடானு கோடி யென்றும்
சொல்லுவார் கோவிலென்றுந் தீர்த்த மென்றுந்
திருடர்கள்தாம் அலைந்துஅலைந்து திரிவார் மட்டை
வெல்வதொரு பிரமநிலை யறியா மல்தான்
வேரற்ற மரம்போலே விழுவார் பாரே. 22

யோக நெறியில் நில் என்றால், மனிதர்கள் நிட்டை சமாதி எனப் பொருந்தாமல், எல்லாம் வல்லவர் போல் வேதம், புராணம், காவியம், மந்திரம் எனக் கோடிக்கணக்கில் கூறுவர். கோவில் தீர்த்தம் என்றும் திருடர்கள் போல் அலைந்து திரிவர். இவர்கள் மட்டைகள் (அறிவிலிகள்). வெல்வதற்குரிய பிரம்மத்தின் நிலையை அறியாமல் வேரற்ற மரம் போல் ஒருநாள் இவர்கள் (இறப்பர்) விழுவர்.

(நிட்டை சமாதி - தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுதல் இது. பொதுவாக இரு வகைப்படும். சிறப்பாக வேறும் பல வகையாம். செய்கிறோம் என்ற உணர்வு அழியாத சமாதி - அதையும் இழந்து விட்ட சமாதி - மனத்தை ஒருநிலைப் படுத்தல் நிஷ்டை)

பாரப்பா மலரெடுத்து லிங்கம் வைத்துப்
பார்த்தீப லிங்கத்தைப் பணியா மல்தான்
வீரப்பா நீராட்டிப் பூசை செய்து
வீணர்கள்தாம் கத்தபம்போற் கதறு வார்கள்
தேரப்பா மலரதனைக் கிள்ளும் போது
செத்தசனம் போலாச்சுத் தெளிந்து பாரு
காரப்பா மனங்கொண்டு பரத்தி னூடே
கண்டவரே கயிலாசத் தேகந் தானே. 23

லிங்கம் வைத்துப் பூவினால் கோயிலில் பூசை செய்வர். உடலில் உள்ள லிங்கத்தைப் (பார்த்தீப லிங்கம் - சுழுமுனை

நாடி) பூசிக்க மாட்டார். வீம்புக்காகப் பிற லிங்கத்தை நீராட்டிப் பூசை செய்து வீணர்கள் கழுதை போல் கத்துவர். மலரைப் பறிக்கும் போதே தம் உடல் உணர்வற்று நிற்பதை அவர்கள் உணரார். பரம்பொருளின் மீது மனத்தைச் செலுத்திப் பார்த்தவர் உடலில்தான் கயிலாயம் உள்ளதாகும்.

விளக்கம்: தாயுமானவர் பூவிலும் கடவுள் இருப்பதால் அதைக் கொய்ய மனம் வரவில்லை என்று கூறுவதை இதனுடன் ஒப்பிடுக.

தானென்ற பிரமத்தை அடுத்தி டாமல்
தாரணியில் தெய்வமடா அனந்த மென்றும்
ஊனென்ற குருவென்றுஞ் சீட னென்றும்
உதயகிரி பாராத உலுத்த மாடு
வேனென்ற பொய்களவு கொலைகள் செய்து
வேசையர்மேல் ஆசைவைத்து வீண னாகிக்
கோனென்ற குருபாதம் அடைய மாட்டான்
கூடுவான் நரகமதில் வீழ்வான் பாரே. 24

தான் என்ற உணர்வைத் தரும் பிரம்மத்தை நெருங்காமல், உலகில் பல தெய்வங்களும் கூறுவர். ஊனுடைய மனிதர்களே குரு என்றும் சீடர் என்றும் சொல்லுவர். இவர்கள் யாவரும் குண்டலினி உதயம் ஆகும் மூலாதாரத்தைக் காணாதவரேயாவர். வேண்டுமென்றே பொய், களவு, கொலை, காமம் முதலியன செய்து அரசன் போல் நம் உடலில் உள்ள குருபாதத்தை (புருவமத்தி) அடையாமல், நரகத்தில் விழுவார்கள் பலர்.

பாரப்பா நாக்கையுந்தான் அண்ணாக்கு ஏத்திப்
பார்தனிலே பார்த்தவர்க்குப் பலித மில்லை
ஆரப்பா கண்வெடிக்குந் தேகம் போகும்
அடயோக மென்பார்க ளாகா தப்பா!

சாரப்பா மனந்தனையண் ணாக்கில் நேரே
சார்ந்துமிகப் பார்க்கையிலே வாசி தானும்
வீரப்பா மேலடங்கிக் கீழ்நோக் காது
வெட்டாத சக்கரத்தை அறிய லாமே. 25

நாவை மேல் அண்ணத்தில் ஏற்றும் ஒரு செய்கையால் மட்டும் யோகம் சித்தியாகாது. ஹடயோகம் என்னும் உடல் பயிற்சிகளாலும் இது முடியாது. நாக்கின் மேற் பகுதியில் மனத்தை ஏறச் செய்து பார்த்தால் வாசியாகிய மூச்சு கீழே இறங்காது மேலே போகும். உடலில் கீறாமல் படிந்த சக்கரத்தையும் அறியலாம்.

(அண்ணம் - வாயின் மேற்பகுதி)

அறியலாம் மனந்தானே உயிர்தா னாகும்
அண்டத்திற் சேர்ந்திடவே ஆகும் முத்தி
பரியேறிச் சவாரியுமே நடத்த லாகும்
பஞ்சமா பாதகங்கள் பறந்தே போகும்
விரிவான மனந்தனையும் அணுவது ஆக்கி
விட்டகுறை தொட்டகுறை விதியைப் பார்த்துக்
குறியான குண்டலியாம் அண்ட வுச்சி
கூறுகிறேன் முக்கோண நிலைய தாமே. 26

மனத்தின் வழியே உயிர் நிலையை அறியலாம். மனத்தின் வழியாக அண்டத்தை உயிர்நிலை எட்டுவதே முத்தியாகும்.

குதிரையேறிச் சவாரியும் செய்யலாம். அந்த முத்தியின் போது (குதிரை ஏறல் என்பது பிராணாயாமம் செய்வதாம்.) பஞ்சமாபாதகம் செய்திருந்தாலும், இப்படி யோக மார்க்கத்தில் வர அவை விடுபட்டுப் போகும்.

எங்குமாக விரிந்த மனத்தை அணு அளவாகச் சுருக்கிச் சென்ற பிறவிகளில் நிகழ்ந்தவற்றை விட்ட குறை தொட்ட

குறையாய்ப் பார்த்து, குண்டலினி சென்று அடையும் கபால உச்சிக்குப் (அண்ட உச்சி) போய், அங்குள்ள முக்கோண வடிவில் நிலைத்து நிற்பீராக.

தாமென்ற உலகத்தில் மனித ரோடே
சஞ்சாரஞ் செய்யாமல் தனித்து நில்லே
ஓமென்ற ஊண் மிகுந்த உண்டி டாதே
ஓரமாய் வழக்கதனை உரைத்தி டாதே
ஆமென்ற அட்சரத்தை மறந்தி டாதே
ஆயாச மாகவும்தான் திரிந்தி டாதே
காமப்பேய் கொண்டவனோடு இணங்கி டாதே
காரணத்தைக் கண்டுவிளை யாடு வாயே. 27

உலகத்து மனிதர் வழியில் கலந்திடாது தனித்திரு. உணவை மிகுதியாக உண்ணாதே. வழக்குரைக்கும் போது (ஓரம்) ஒருபுறம் சாய்ந்து பொய் சாட்சி சொல்லாதே. 'ஓம்' என்னும் மந்திர ஜெபத்தை மறவாதே. மனம் கலங்கி எங்கும் திரியாதே. காமாந்தகனோடு சேர்ந்திடாதே. அனைத்திற்கும் காரணமான கடவுளைக் கண்டு விளையாடுவாயாக.

விளையாடிக் கருநெல்லி பறித்தே உண்ணு
வேகாத தலையாகும் விரும்பிப் பாரு
மலையாமல் வெண்சாரை பிடித்தே உண்ணு
மைந்தனே சாகாக்கால் அதுவே யாகும்;
அலையாமல் சோதியதன் பாலை யுண்ணே
அக்கினியாம் கம்பமடா சுழுனை யாச்சு
கலைநாலு போகிறதை எட்டிற் சேரு
கபடமற்ற தேகமடா கண்டு பாரே. 28

இப்படி யோகமார்க்கத்தில் விளையாடி உடலழியாமல் இரு. (கருநெல்லி உடலழியாது காக்கும் என்பது குறிப்பு.) இதுவே வேகாத தலை என்பதாம். பிங்கள நாடியைப்

பிடித்துப் பயிற்சி செய் (வெண்சாரை). இதுவே சாகாக்கால் எனப்படும். வேறு எங்கும் அலையாது. யோகப்பால் (அமுது) உண். இது சோதியைக் கண்டபோது சுரக்கும். அக்கினிக் கம்பமாகச் சுழுமுனை நாடி நிற்கும். மூலா தாரத்தில் உள்ள நால் இதழ்த்தாமரை ஒளியைக் கபாலத்தி லுள்ள எட்டிதழில் சேர்த்து விடு. அப்போது தேகம் கபடமாய் அழியாது என்பதனை அறிந்து கொள்.

கண்டுகண்டு மனந்தானே அண்டஞ் செல்லக்
கலைநாலும் எட்டிலையுஞ் சேர்ந்து போகும்
தண்டுமுண்டு செய்யாதே மனம்வே றானால்
தற்பரத்தை எப்போதும் அறிய மாட்டாய்
தொண்டுசெய்து பெரியோரை அடுத்து மைந்தா
தொழுதுநீ என்னூலை யன்பாய்க் கேளு
விண்டுமவர் சொலாவிட்டா லிந்நூல் சொல்லும்
வெற்றிபெற மனவடக்கம் வைத்துப் பாரே. 29

நன்கு தெளிவடைந்து, மனத்தை அண்டத்தில் செலுத்தி னால் மூலாதாரம் நான்கும், கபால எட்டிதழும் ஒன்றாகச் சேரும். தவறுகள் செய்து மனத்தை வேறுபடுத்தாதே. இதனால் கடவுளை உடலில் காண்பது தவறிப்போகும்.

பெரியோருக்குத் தொண்டு செய்து என் நூலை விளக்குமாறு அவரிடம் கேள். அவர் சொல்லாவிட்டால் என் நூலைக் கூர்ந்து கண்டால் விளங்கும். வெற்றியடைய மனவடக்கம் தேவை.

பாரப்பா விஞ்சைமந்த்ரம் என்பார் வீணர்
பாயடா விஞ்சைகிரி தன்னில் மைந்தா!
ஆரப்பா சென்றேறிப் பார்க்கும்போது
அதீதமுள்ள விஞ்சைமந்த்ரம் அனந்தம் காட்டும்;

நேரப்பா சிருட்டிப்புச் சங்கா ரங்கள்
நிமிடத்தில் செய்திடுவாய் நிலையைக் கண்டால்
வீரப்பா அமிர்தமுந்தான் குமிழி பாயும்
வேறில்லாக் கனிதனையும் உண்க லாமே. 30

விஞ்சை மந்தரம் எனப் பலர் வீணே கூறுவர். மனத்தால் விஞ்சைக்கிரிக்கு (தேவர் உலகு)ப் பாயலாம். அப்படிச் சென்று காணும்போது பற்பல விதமான விஞ்சை மந்தரம் காட்டப் பெறும். படைத்தல் (காத்தல்) அழித்தல் ஆகியவும் நீயே ஒரு நிமிடத்தில் செய்யலாம். வீரமாய் அமுதம் குமிழி யிட்டுப் பாய்வதும் உணரலாம். வேறுபடாத வெற்றிக் கனியையும் உண்ணலாம்.

விளக்கம்: விஞ்சை கிரி - தலை உச்சி; மந்தரம் - மலை.

உண்கலாம் பிரமத்தில் அடங்கும் போதே
உறுதியுள்ள அண்டத்தி லுருகிப் பாயுந்
திங்கலாந் தோணுமடா அமிர்தச் சீனி
தித்திப்புப் பாலுடனே திடமாய் மைந்தா!
தங்கலாந் தேகமது அழியா மல்தான்
சட்டையுமே கழன்றுமிகத் தங்கம் போலே
பொங்கலாம் மெய்ஞ்ஞானத் தீபத் தாலே
பூரித்துப் பார்த்திடவே புவன மொன்றே. 31

இவ்வாறு வெற்றிக் கனியை உண்டு பிரம்மத்தில் நாம் அடங்கும் போதும், உறுதியான நம் உடம்பில் (அண்டம்) அமுதம் உருகிப் பாயும். அமுதமாகிய சீனிச் சுவையைத் தின்னலாம். தித்திக்கும் பாலுடனே உண்ணலாம். தேகம் அழியாது தங்கி இருக்கும். சட்டை போலப் பழைய உடல் கழன்று தங்கம் போல் சுடர்விடும் தேகமாகும். மெய்ஞ் ஞானம் ஆகிய ஒளியும் பெருகும். மனம் பூரித்துப் பார்க்கும் போது பிரபஞ்சமும் நாமும் ஒன்றாகலாம்.

ஒன்றான பிரமமே வெவ்வேறு ஆக
உலகத்தில் அனந்தமடா கூத்து மாச்சு;
நன்றாச்சுத் தீதாச்சு நாலு மாச்சு
ஞாயிறு திங்களென்ற பேருண் டாச்சு;
குன்றாச்சு ஊர்வனகள் அனந்தம் ஆச்சு;
குருக்களென்றுஞ் சீடனென்றுங் குறிக ளாச்சு
நன்றாச்சு நாதவிந்தும் அடங்கி நின்ற
நாதனையும் ஒருமனமாய் நாட்டு வாயே. 32

பிரம்மம் ஒன்று தான். ஆனால் உலகில் அதன் சக்திகள் பலவாகப் பிரிந்து கூத்து ஆடும். நல்லதும் தீயதும் என நான்கு வகை (எண்ணற்ற)யாகி ஞாயிறு திங்கள் என்று பெயரும் பெற்றுக் குன்றுகள், ஊர்வனகள் எனப் பலவாயின. குரு சீடன் எனத் தனிப் பிரிவுகளும் வந்தன. நாத விந்து என்று நல்ல விதமும் ஆயிற்று. அவற்றுள் யாவும் அடக்கம். ஆகவே நாத வடிவான கடவுளை ஒரு மனமாய் நாட்டி உணர்க.

நாட்டுவார் சித்தரெல்லாம் பேத மாக
நலம்போலே சாத்திரங்கள் கட்டி னார்கள்!
பூட்டியே மனித ரெல்லாம் நூலைப் பார்த்துப்
பூரணமாய் அண்டமதைப் பாரா மல்தான்
காட்டிலே திரிந்தலைந்த மானைப் போலே
கபடமாய் வாய்ஞானம் பேசு வார்கள்;
கூட்டிலே அடைந்திருக்கும் குயிலைப் பாரார்
கூறாத மந்திரத்தின் குறியைப் பாரே. 33

சிலர் சித்தர் போல் பிரம்மம் வேறு என்று வேறு படுத்திக் கூறினார்கள்; நலமான சாத்திரங்கள் பல கட்டினார்கள். மனிதர்கள் மனத்தைப் பூட்டி என் நூலைப் பாராமல், பூரணமாய் அண்டத்தில் சேராமல் காட்டில்

திரியும் மான் போலக் கபடத்தோடு வாய் ஞானம் பேசுவர். கூட்டில் அடைபட்ட குயில் போல் உடலுக்குள் உள்ள உயிரைப் (ஆன்மாவை) பாரார். ஆகவே மந்திரத்தில் கூறாத இந்தக் குறிப்பை உற்று நோக்குக.

விளக்கம்: *18* வகையில் சேராத சித்தர் பற்றி இதில் கூறினார் என்க.

குறியென்ற உலகத்தில் குருக்கள் தானும்
கொடியமறை வேதமெல்லாங் கூர்ந்து பார்த்தே
அறியாமல் பிரமத்தைப் பாரா மல்தான்
அகந்தையாய்ப் பெரியோரை அழும்பு பேசி
விரிவான வேடமிட்டுக் காவி பூண்டு
வெறும்பிலுக்காய் அலைந்திடுவான் நாயைப் போலே
பரியாச மாகவுந்தான் தண்டும் ஏந்திப்
பார்தனிலே குறட்டிட்டு நடப்பான் பாரே. 34

இந்தக் குறிப்பை உலகில் காணாமல் குருமார்கள் வேதம் எல்லாம் கற்று, பிரம்மத்தை அறியாமல் போயினர்; அகந்தையாய்ப் பெரியோரிடம் அவர்கள் பயனற்ற வீண் பேச்சுகளைப் பேசுவர்; விரிவாகப் பல வேடமிட்டுக் காவி கட்டி, வெறுமையால் ஆடம்பரம் செய்து நாய் போல் அலைவர்; பரிகசிக்கச் செய்யும் விதமாய் யோகத்தண்டு ஏந்தி உலகில் கால் மறித்திட நடந்து போவர்.

(தண்டு - முக்கோல் பகவர் எனப்படும் துறவிகள் ஏந்தும் கோல்)

பாரப்பா சீடர்களை அழைப்பான் பாவி;
பணம்பறிக்க உபதேசம் பகர்வோம் மென்பான்;
ஆரப்பா பிரமநிலை காட்டா மல்தான்
ஆகாசப் பொய்களையும் அவன்தான் சொல்வான்;

நேரப்பா சீடனுக்குப் பாவ மாச்சு;
நிட்டை சொல்லுங் குருக்களுக்குத் தோட மாச்சு;
வீரப்பா அடங்குகின்ற இடத்தைப் பாரான்
விதியாலே முடிந்ததென்று விளம்பு வானே. 35

அப்பாவிகள் தம்மிடம் வருமாறு சீடர்களை அழைப்பர்; பணம் பறிக்க உபதேசம் செய்வதாகக் காட்டிக் கொள்வர்; பிரம்மத்தைப் பிறர்க்குக் காட்டாமலே ஆகாசம் அளவு பொய் பேசுவர். இதனால் சீடனும் பாவியாகிறான். நிட்டை சொல்லும் குருவுக்கும் இது குறை (தோஷம்) ஆகும். யோகத்தால் உயிர் அடங்கும் இடத்தை அறிவிக்காமல் விதியால் நாம் இறப்பதாக அவர்கள் கூறுவர்.

விளக்கம்: ஆன்மா அடங்குமிடம் தெரிந்தால் அகால மரணம் வராது என அறிக.

வானென்ற அண்டமதிற் சென்று புக்கு
வடவரையில் உச்சிநடுத் தீபங் கண்டு
தேனென்ற சுத்தசிவ கங்கை தன்னில்
தீர்த்தங்க ளாடித்திரு நாம மிட்டுக்
கோனென்ற மனமன்பாய் மலராய்ச் சார்த்திக்
கொடியமறை வேதமுந்தா னடக்கங் கண்டு
தேனென்ற சித்தமே புத்தி யாகத்
தெளிந்தவரே மெய்ஞ்ஞானி யாவர் பாரே. 36

வானமாகிய தலைக்கு மேலுள்ள அண்டத்தில் சென்று புகுந்து, அந்த வடக்குமலையில் (தலைப்பக்கம் வடக்கு) உச்சி நடுவே ஒளியைக் கண்டு, தேன் போல் இனிக்கும் சிவகங்கை (அமுதம்) தன்னில் தீர்த்தமாடி, இறைவன் திருநாமம் மனத்தில் கொண்டு, எந்தத் தாழ்வும் இல்லாத மனத்தில் அன்பு கொண்டு மலரச் செய்து, வேதத்தின் முடிவும் கண்டு (யோக முடிவு) சித்தமே புத்தியாகிடத் தெளிவு கொண்டிருப்பவர் மெய்ஞ்ஞானி என்று அறிக.

பாரண்டம் அதையொன்றாய்ப் பார்க்கும் போது
பலபேத மாயையெல்லாம் மருண்டே ஓடுஞ்
சீரண்டம் அகிலாண்ட பிரமாண் டங்கள்
செனித்தவகை யுயிர்தோறும் நீயாய் நிற்பாய்
காரண்ட லலாடக்கண் திறந்த போது
கண்கொள்ளாக் காட்சியெல்லாங் கலந்தே காட்டும்;
வீரண்ட மேல்வட்டம் விரிந்த சக்கரம்
மெய்ஞ்ஞான வெளியதனில் தொடர்ந்து கூடே. 37

இவ்வுலகினோடு பிற அண்டங்களையும் ஒன்றாகக் காணும்போது, பலவித பேதங்களும் மாயைகளும் மருண்டு ஓடிப்போய் மறையும். அகிலாண்டம், பிரம்மாண்டம் என்ற யாவற்றுள்ளும் உயிர்கள் தோறும் நீ நிற்பாய். நெற்றிக்கண் திறந்தால் கண் கொள்ளாக் காட்சி எல்லாம் கலந்து காணச் செய்யும். தலைக்குமேல் விரியும் வட்டமான சக்கரம் மெய்ஞ் ஞான வெளியாகும். அதில் தொடர்ந்து கூடுவாயாக.

கூடுவதென் குணமறிந்து மனமொன் றாகக்
கூத்தாடித் திரியாமற் கவன மாகப்
பாடுவ பலநூலைப் படித்தி டாமற்
பராபரத்தின் உச்சிநடு வெளியே சென்றே
ஆடுவது தொந்தோமென்று ஆட்டைப் பார்த்தே
அடுக்கடுக்காய் ஆயிரத்தெட்டு இதழும் கண்டு
வாடுகிற பயிர்களுக்கு மழைபெய் தாற்போல்
வாடாத தீபத்தை யறிந்து பாரே. 38

இறைவனுடன் கூடும் குணம் அறிந்து மனத்தை ஒரு வழிப்படுத்தி, பலவிதமும் கூத்தாடாமல், கவனமாக என் நூலைப் பாடுக. பல்வேறு நூல்களைப் பாராதே. உச்சி நடுவெளி வழியே தலைமேல் சென்று தீபமாக ஆடுவதைக் காண். அப்படியே ஆயிரத்தெட்டு இதழும் காணலாம். வாடும் பயிருக்கு மழைபோல் என்றும் வாடாத தீபத்தை அறியலாம்.

பாரென்று மெய்ஞ்ஞானம் பகர்ந்து சொன்னீர்
பராபரத்து நிலையினுடைப் பாதஞ் சொன்னீர்
வீரென்று அண்டமெல்லாம் பாழ தாகி
விராட பிரமம் ஒன்றியாய் இருக்கும் போது
சீரென்ற வுயிர்களெல்லா மிருப்ப தெங்கே?
சித்தருடன் திரிமூர்த்தி யிருப்ப தெங்கே?
கூறென்று நீர்தங்கு மிடந்தா னெங்கே?
குருபரனே! இந்தவகை கூறு வீரே. 39

பலரும் பாரீர் என்று மெய்ஞ்ஞானம் பகர்ந்து சொன்னவர் களே, பராபரத்தின் பாதம் கூறினீர். பிரம்மத்தை அடையும் வழி கூறவில்லை. எல்லா உயிர்களும் இருப்பது எங்கே? சித்தர்களும் மும்மூர்த்தி களும் இருப்பது எங்கே? பலவும் கூறும் நீர் தாம் தங்கும் இடம் எங்கே? குருவே, இவற்றைக் கூறுவீரே.

கூறுகிறேன் என்மகனே வாசி நாதா
குணமான ஈச்சுரனார் சபையிற் கூடித்
தேறுகின்ற பிரளயமாம் காலந் தன்னிற்
சீவசெந்து சித்தருடன் முனிவர் தாமும்
வீறுடனே யெங்கேதா னிருப்பா ரென்று
விமலருந்தான் விஷ்ணுவையும் விவரங் கேட்கக்
கார்மேக மேனியன்அங்கு அவரை நோக்கிக்
கண்டுமிகப் பணிந்துமினிக் கருது வானே. 40

வாசியைப் போற்றும் என் மகனே (சீடனே), கூறக் கேள். இறைவன் சபையில் பிரளய காலத்தில் யாவரும் கூடி இருக்கும் போது, உலக அழிவுக் காலத்தில் எல்லாச் சீவர்களும் எங்கே இருப்பர் என்று சிவன் திருமாலைக் கேட்டார். திருமால் அவரைக் கண்டு வணங்கி மனத்தால் சிந்திக்கத் தொடங்கினான்.

(விமலர் - குற்றம் அற்றவர் ஆகிய சிவன்)

கருதுவான் ஆலிலைமேல் துயில்வேன் யானும்
கனமான சீவசெந்தும் அனந்த சித்தர்
உறுதியா யென்றனுடைக் கமலந் தன்னில்
ஒடுங்குவா ராதரித்து மிகவே நிற்பேன்.
வாருதியாய்ப் புசுண்டருந்தான் வருவா ரென்று
வலவனுடன் மாலானும் உரைக்கும் போது
சுருதியாய் எனையழைத்தே சிவன்தான் கேட்கச்
சூத்திரமாய் நல்வசனம் மொழிந்தேன் பாரே. 41

இப்படிக் கருதி யான் ஆலிலை மேல் யுக வெள்ளத்தில் மிதப்பேன். என் உந்தித் தாமரையில் எல்லா உயிர்களும் ஒடுங்கி இருப்பர். நான் காத்திருப்பேன். காகபுசுண்டரும் அங்கே வருவார் என்று திருமால் சொல்லும்போது சிவன் என்னை அழைத்த விவரம் கேட்டதும் சூத்திரமாக என் கருத்துக்களைக் கூறினேன்.

பாரென்று சிவனுடைய முகத்தைப் பார்த்துப்
பல்லாயிரங் கோடியண்ட வுயிர்க ளெல்லாஞ்
சீரென்ற சித்தருடன் முனிவர் தாமுந்
திருமாலும் ஆலிலைமேல் துயிலும் போது
கூரென்ற வுந்தியிடக் கமலந் தன்னிற்
கூடியே அடைந்திருப்பார் குணம தாக
வீரென்ற ஐவரையும் தாண்டி யப்பால்
வெகுசுருக்காய் வீதிவழி வந்தேன் பாரே. 42

பல உயிர்களும் திருமால் உந்தித் தாமரையில் அடங்கும் போது, நான் மட்டும் அடங்காமல் ஐந்து பூதங்களையும் கடந்து வெகு விரைவில் சென்று சிவன் முகத்தைப் பார்ப்பேன்.

விளக்கம்: மீண்டும் பிறவிக்கு உரியனவே திருமால் உந்தித் தாமரையில் அடங்கும். சிலர் மீண்டும் பிறவார். எனவே அதில் அடங்கார் என்பதாம்.

பாரப்பா ஆகாயஞ் செல்லும் போது
பாலகனே சக்கரந்தான் சுற்றி யாட
ஆரப்பா சக்கரத்தைப் பிசகுஒட் டாமல்
அதன்மேலே யேறியுந்தா னப்பாற் சென்றேன்;
நேரப்பா நெடுந்தூரம் போகும் போது
நிச்சயமாய்க் கம்பத்தின் நிலையைக் கண்டேன்;
வீரப்பா அக்கினிபோல் படர்ந்து நிற்கும்
வெளியொன்றுந் தெரியாம லிருக்குந் தானே. 43

பாலகனே! ஆகாய மார்க்கமாக உடலில் யோகம் செய்யும் போது ஆறு யோக ஆதாரங்களும் சுற்றி ஆடும். ஆனால் அவை இடம் பெயராமல் கவனிக்க வேண்டும். இப்படி அவற்றை நிலை நிறுத்தி மேலே போகும் போது, அக்கினித் தம்பம் போல் சுழுமுனை நாடியில் குண்டலினி ஒளி செய்வது கண்டேன். அதே அக்கினியே வெளி எனத் தெரியாது எங்குமாய்ப் பரந்து நிற்கும்.

இருக்குமடா எங்குமொன்றாய் அக்கினிக் கம்பம்
என்மகனே கம்பத்தின் நடுவே மைந்தா!
உருக்கமுடன் பெண்ணரசி யொன்றி நிற்பாள்;
ஓகோகோ அவள் முகத்தைப் பார்க்கும் போது
பெருக்கமுடன் முன்பார்த்தாற் புருட ரூபம்
புத்திரனே பின்பார்த்தாற் பெண்போல் ரூபம்
மருக்கமுடன் யான்தானுங் கம்பத்து ஊடே
வத்தோடே வத்தாக இருந்தேன் பாரே. 44

மூலாதாரத்திலிருந்து கபாலம் வரை செல்லும் சுழுமுனை நாடியில் குண்டலினி ஏறுவதால் அக்கினிக் கம்பம் ஒரு சீராக இருக்கும். அதன் நடுவே பராசக்தி (வாலை) ஒன்றி யிருப்பாள்; முன்பக்கம் ஆண்வடிவமும் பின்பக்கம் பெண் வடிவமாகவும் இருப்பாள். கம்பத்தில் அப்பொருளுடன் (வாலை) நானும் ஒன்றி இருப்பேன்.

பாரப்பா இப்படியே அனந்த காலம்
பராபரத்தின் ஊடேதான் இருந்து வாழ்ந்தேன்;
ஆரப்பா பிரமமுந்தான் மனம் இரங்கி
அகண்டமதைப் படைப்பதற்கே அருளும் போதும்
வீரப்பா கம்பத்தி லிருந்த பெண்ணும்
விமலரென்றும் உமையென்றும் மிகவே தோன்றிச்
சீரப்பா சக்கரத்தி லிருந்து கொண்டு
திருமாலைத் தானழைக்கத் தீர்க்கம் பாரே. 45

இப்படி அநேக காலம் பராபரத்துடன் ஒன்றி வாழ்ந்தேன். பிறகு பிரம்மமும் மனம் இரங்கி அகண்டமாகிய எல்லாவற்றையும் படைப்பதற்கு எனக்கு அருள் செய்தே. அப்போது கம்பத்திலிருந்த வாலைப் பெண்ணும் விமலராகவும் உமையாகவும் தோற்றம் கொண்டு நான் படைத்தவற்றைக் காக்குமாறு திருமாலுக்கு அழைப்பு விடுத்தாள்.

விளக்கம்: இப்பிரபஞ்சத்தில் மேலும் மேலும் புதிய படைப்புகள் தோன்றிய வண்ணமிருந்ததை இதில் கூறினார்.

பாரப்பா திருமாலுங் கமலந் தன்னில்
பல்லாயிரங் கோடி அண்டவுயிர்க ளெல்லாம்
நேரப்பா அழைத்துமுக் குணத்தைக் காட்டி
நிலையான சமுத்திரங்கள் பூமி தானும்
சேரப்பா ரவியோடு திங்கள் தானுஞ்
சிறந்தெழுந்த மலைகாடு சீவ செந்து
வீரப்பா நவக்கிரகம் நட்சத் ரங்கள்
வெற்றியுடன் நால்வேதம் வகுத்த வாறே. 46

திருமாலுடைய உந்தித் தாமரையில் ஒன்றி இருந்த பல்லாயிரம் கோடி உயிர்களும் அழைக்கப் பெற்று, முக் குணம் தரப் பெற்று, பூமி, கடல், சூரியன், சந்திரன், மலை, காடு, சீவர்கள், நவக்கிரகம், நடசத்திரம் என யாவற்றையும்

வெற்றியுடன் படைத்தோம். (இச்சித்தர் ஆதிப் படைப் பிலும் இருந்து இவை செய்ததாகக் கூறினார்.)

வாறான தெய்வமென்றும் பூத மென்றும்
வையகத்தில் வானமென்றும் பூமி யென்றும்
கூறான மாமேரு கிரிக ளென்றும்
கோவிலென்றுந் தீர்த்தமென்றுஞ் குளமுண் டாக்கி
நேராகப் பிரமமே சாட்சி யாக
நிலைத்தெங்கும் உயிர்தோறும் நிறைந்தா ரையா!
வீராகத் திரியாமல் மவுனம் பார்த்து
வெற்றிபெற இன்னமுந்தான் உரைக்கக் கேளே; 47

இவ்வாறாகத் தெய்வங்கள், பூதங்கள், வானம் முதல் பூமி வரை உள்ளவை, மகா மேரு மலை, கோவில், தீர்த்தக் குளம் ஆகிய இவை யாவும் பிரம்மத்தின் சாட்சியோடு செய்யப் பெற்றன. பிரம்மமும் எல்லா உயிர்களிலும் நிறைந்தது. வீரத்துடன் மவுன யோகம் கொண்டு மேலும் வெற்றி பெற இன்னும் சொல்கிறேன், கேள்.

கேளப்பா இப்படியே பிரள யந்தான்
கிருபையுடன் ஏழுலட்சங் கோடி யானால்
ஆளப்பா அரியயனும் சீவ செந்தும்
அகண்டமென்ற பிரமத்தி லடங்கு வார்கள்;
நாளப்பா நானுமந்தப் படியே செல்வேன்;
நலமாக இன்னமுந்தான் அகண்ட மானால்
வாளப்பா காகமென்ற ரூப மானேன்
வடவரையின் கூடுதொத்தி யிருந்தேன் பாரே. 48

இப்படிப் படைத்தது மீண்டும் பிரளய காலம் வர, ஏழு இலட்சம் கோடி ஆண்டாகும். அதுவரை திருமால், பிரமன், உயிர்கள், அகண்டம் யாவும் பிரம்மத்தில் அடங்கியே

செயல்படுவர். இன்னும் அகண்டம் படைத்தேன்; காக வடிவம் கொண்டு இமயமலையில் ஒரு கூட்டில் தொற்றிக் கொண்டு இருந்தேன்.

விளக்கம்: காகபுசுண்டர் பல வடிவுகளில் வாழ்ந்தார் என்பதாம்.

பாரடா இப்படியே யுகங்கள் தோறும்
பார்தனில்நா னிருந்தேன்எத் தனையோ கோடி
ஆரடா என்னைப்போல் அறிவா ருண்டோ?
ஆதியென்ற சித்திக்கும் ஆதி யானேன்
வீரடா விமலரிடஞ் செல்லும் போது
வெற்றியுட னெனையெடுத்து முத்த மிட்டார்;
காரடா கைலையின்மே லிருக்கச் சொன்னார்!
காகமென்ற ரூபமா யிருந்தேன் பாரே. 49

இப்படிப் பல யுகங்கள் இந்தப் பூமியில் பல கோடி ஆண்டுகள் இருந்தேன். யாரும் என்னைப் போல் அறிந்த தில்லை. ஆதியில் நடந்த படைப்புக்கும் முன்னாக நான் இருந்தேன். குற்றமற்ற இறைவரிடம் இந்த வீரத்துடன் சென்ற போது அவர் என்னை எடுத்து முத்தமிட்டார்; கைலை மலையில் இருந்து காக்கச் சொன்னார். அங்கும் காக வடிவில் இருந்தேன்.

காகமென்ற ரூபமா யிருந்து கொண்டு
காரணங்கள் அத்தனையும் கருவாய்ப் பார்த்து
வேகமுடன் வெளியோட்ட நிலையாய்ப் பார்க்க
வெகுதூரம் சுற்றியின்னம் விவரங் காணேன்;
மோகமுடன் பரந்தமனம் அணுவ தாக்கி
மூர்க்கமுடன் பரவெளியை மனவெளி தாக்க
நாகரீக மாகவுந்தான் அண்டம் மேவி
நடுவணைய உச்சிநடு மத்தி தானே. 50

காகத்தின் வடிவில் இருந்து கொண்டே, எல்லாக் காரணங்களும் தோன்றுவதற்கு உரிய ஆதாரத்தை நீண்ட தூரம் நோக்கினேன்; பரந்த என் மனத்தை அணுவளவாகச் செய்து பரவெளியில் தலை உச்சியில் தாக்கி மேல் ஏறி உச்சி நடுவிலேயே இருந்தேன்.

மத்தியமாம் வானதிலே வளர்ந்த லிங்கம்
மகாமேரு வுச்சியிலே வளர்ந்த லிங்கம்
சக்தியும் ஆவியுடையும் ஆன லிங்கம்
சஞ்சாரச் சமாதியிலே நிறைந்த லிங்கம்
புத்தியால் மனமொன்றாய்ப் புகழ்ந்த லிங்கம்
பூவருந் தன்னில்தான் முளைத்த லிங்கம்
எத்திசையும் புகழ்ந்திடவே வந்த லிங்கம்
ஏகபர மானதொரு லிங்கந் தானே. 51

உடல் மத்தியில் வளர்ந்து வானில் வெளிப்பட்ட லிங்கம், மகா மேருவிலும் உயரத்தால் சென்ற லிங்கம், சக்தி ஆவி ஆகியவையாக விளங்கும் லிங்கம், சமாதியிலும் நிறைந்த லிங்கம், புத்தியும் மனமும் ஒன்றாய்த் திரளச் செய்த லிங்கம், ஆதாரக் கமலங்களில் உள் நுழைந்து முளைத்த லிங்கம், எல்லாத் திசையினரும் புகழுமாறு விளங்கிய லிங்கம், ஏகமாய் எங்கும் பரவிய லிங்கமே யாகும்.

விளக்கம்: லிங்கம் - சுழுமுனை நாடியில் அக்கினி ஏறிய நிலை. இது பிரபஞ்சம் முழுதும் இணைக்கும் என்று அறிக.

தானென்ற சிறுவீட்டுக் குள்ளே சென்று
தலைமாறிப் போனதொரு வாசி யைத்தான்
கோனென்ற பிரமத்தி லடக்க மாகக்
குறித்திடுவாய் மனமடங்கிக் கூர்ந்து பார்க்க

வானொன்றிப் போகுமடா பாணம் பாணம்
மைந்தனே! உண்டிடவே பசிதான் தீரும்;
தேனென்ற சட்டைகளுங் கழன்று போகும்
தேவனுக்குந் தேவனா யிருக்க லாமே. 52

மூலாதாரமாகிய சிறு வீட்டில் இடா, பிங்கலை என்னும் நாடிகள் சென்று ஒன்று மற்றொன்றின் இடமாக மாறி விடும். அப்படியே மூச்சும் மாற்றப்படும். இந்நிலையோடு மனமும் அடங்கினால் நாம் பிரம்மத்தில் அடங்கியது தெரியும். வானத்தில் ஒன்றி இந்தப் பாணம் (அம்பு) எங்கும் பரந்து போகும். அமுதம் உண்டால் மட்டுமே இப்பசி தீரும். உடம்பாகிய சட்டையும் கழன்று போகும். (வேறு உடல் ஒளிவடிவாய்க் கிடைக்கும்.) தேவாதி தேவனாகிய கடவுளுடன் இருக்கலாம்.

இருக்கலாம் எந்தெந்த யுகங்க ளுக்கும்
ஏகாந்த மானதொரு பிரமந் தன்னில்
பெருக்கவே மனமடங்கி மவுனம் பெற்றும்
பேராசை யாகவுந்தான் பிரமத் துள்ளே
குருக்களைப்போல் அரசனைப்போ லிந்திர னைப்போல்
குணமான மூவரைப் போல்பிரமத் தூடே
திருக்கெடுத்தே யெந்தெந்த அவதா ரங்கள்
செய்திடலாம் நிலையறிந்த பெரியோர் தானே. 53

எல்லா யுகங்களிலும் இப்படியே இருக்கலாம். ஏகாந்த மாக (முடிவாக) விளங்கும் பிரம்மத்தில் அடங்கி, மனமும் அடங்கி, மவுனம் கொண்டு சில விருப்பங்களும் சாதனை யாகும். குருக்கள், அரசர், இந்திரன், மும்மூர்த்திகள் ஆகியோர்போல் பல அவதாரங்கள் பெற்றிடலாம். இவை யெல்லாம் பெரியோர் உணர்ந்தவையே.

தானவனே யென்குருவே புசுண்ட நாதா
தாரணியிலே சீவசெந்தாம் அகண்ட மெல்லாம்
தோணவே மும்மூர்த்தி யிவர்கள் தாமுந்
துடியாகப் பிரமத்தி லடங்கு மென்றீர்
கோனவனே பின்னுந்தா னகண்ட மெல்லாங்
குறிப்புடனே படைக்கும்வகைக் குறியுஞ் சொன்னீர்
தானவனே மதுவுண்ணச் சொன்னீ ஐயா
சத்தியா யதன் விவரஞ் சாற்று வீரே. 54

புசுண்ட முனிவரே! அகண்டம், அவற்றின் படைப்பு, உயிரின் தோற்றம், மும்மூர்த்திகளின் நிலை, பிரம்மத்தில் அடங்கும் நிலை எல்லாம் சொன்னீர்கள். அமுதம் உண்பதையும் விவரமாகக் கூறுங்கள்.

சாற்றுகிறே னென்மகனே வாசி நாதா!
சத்தியமாய் அண்டத்திற் செல்லும் போது
போற்றுகிற அக்கினியும் பிரவே சித்துப்
புலன்கள்ஐந்துஞ் சேர்ந்ததனாற் போத மாகும்;
மாற்றிலையும் அதிகமடா உன்றன் தேகம்
மைந்தனே! அவரூப மாகு மப்பா!
வாற்றியே நிழற்சாய்கை யற்றுப் போனால்
வலுத்ததடா காயசித்தி யாச்சுப் பாரே. 55

மகனே வாசி நாதனே, சொல்லக்கேள். அண்டத்தில் இப்படிச் செல்லும் போது அக்கினியை வெளியிட்டதும், எல்லாப் புலன்களும் ஒடுங்கும்; இதுவே ஞானமாகும். உன் தேகம் மாறும், நீ கண்ணுக்குத் தெரியாத உன் உடல் நிழல் கீழே சாய்ந்து படராது. அதுவே காய சித்தியாகும். (அமுதம் உண்பதால் வரும் சித்தி.)

ஆச்சென்ற அவரூப மான போதே
அட்டமா சித்திவகை எட்டும் ஆடும்;
மூச்சொன்றி யடங்கிப்போம் பிரமத் தூடே
முன்னணியும் பின்னணியும் ஒன்றாய்ப் போகும்;
காச்சென்று காச்சிவிடு மவுனங் கண்டு
கலைமாறி நின்றிடமே கனக பீடம்
நீச்சென்றும் இல்லையடா வுன்னைக் கண்டால்
நிலைத்ததடா சமாதியென்ற மார்க்கந் தானே. 56

இந்த நிலையில் எட்டுவகைச் சித்தியும் கிட்டும். மூச்சை அடக்கிப் பிரம்மத்தில் அடங்கலாம். முன்பிறப்பும் பின் பிறப்பும் ஒன்றென அறியலாம். ஆகவே மவுனத்தைத் தீவிரம் செய். இடை கலை நாடியும் பிங்கலை நாடியும் மாறி நிற்கும் இடமே பொற்சபையாம். என்றும் இனித் தளர்வில்லை. சமாதி நிலை நிலைத்ததாகும்.

மார்க்கமுடன் தவசுநிலை யறியா மல்தான்
மனந்தளர்ந்து திரிவார்கள் லோகத் துள்ளே
ஏக்கமுடன் முப்பதுக்குள் மவுனங் கண்டே
இளவயசா யிருப்பார்கள் பெரியோர் மைந்தா!
காக்கவே சற்குருவின் பாதங் கண்டு
கருணையுடன் அவர் பதத்தை வணங்கிப் போற்றித்
தீர்க்கமுடன் பிரமத்தில் மனந்தான் செல்லச்
சீவனுக்குச் சீவனா யிருக்க லாமே. 57

இந்த வழியில் இத்தவ நிலையை அறியாமல் மனம் தளர்ந்து திரிவர் உலகில் பலர். விருப்புடன் முப்பது வயதுக்குள் மவுனம் கொள்பவர் வயது முதிர்ந்தும் அதே இளமையுடன் இருப்பர். இதைக் காக்கவே சற்குருவின் பாதத்தை வணங்கிடுக. பிரம்மத்தின் மீது மனம் செல்லு மானால் உயிருக்கெல்லாம் உயிராக நாம் இருக்கலாம்.

இருக்கலாஞ் செடிபூடு கற்ப மில்லை
ஏகாந்தம் ஆனதொரு பிரமந் தன்னில்
உருக்கியே மனமடங்கிப் பார்க்கும் போதே
உத்தமனே காயமது வுறுதி யாச்சு;
மருக்கியே திரியாமல் மதம்பே சாமல்
வண்டரோடு இணங்கியடா மருவி டாமல்
குருக்கியே கோளரிடஞ் சேர்த்தி டாமற்
குருபாதங் கண்டுமிகப் பணிந்து பாரே. 58

இது செடி பூண்டுகளால் செய்யும் காயகற்பம் அன்று. ஏகாந்தமான பிரம்மத்தில் மனத்தை அடக்கி நின்றால் உடல் உறுதியாகும். மதங்கள் பற்றி மார்க்கம் பேசாமல், பிறருடன் கலந்து மயங்கிடாமல், கோள் சொல்வாருடன் சேராமல் குருபாதத்தை நினைத்துப் பணிவாயாக.

பாரென்று சொல்லிய மெய்ஞ்ஞான மூர்த்தி!
பரத்தினுடை அடிமுடியும் பகுந்து சொல்லும்
சீரென்று சொப்பனங்கள் அதிக மாகத்
திடப்படவே காணுமிடந் தீர்க்கஞ் சொல்லும்
காரென்று மனம்பிறந்த இடந்தான் சொல்லும்
கதிர்மதியுஞ் சுற்றிவரும் மார்க்கஞ் சொல்லும்
வீரென்ற உயிர்பிறந்த இடந்தான் சொல்லும்
வெற்றிபெற இந்தவகை விளம்பு வாயே. 59

மெய்ஞ்ஞான மூர்த்தியே! பரம்பொருளின் அடிமுடி களைப் பகுத்துச் சொல்வீராக. கனவுகளாய் மிகும் நிலையை மாற்றித் திடப்படவே அதைக் காணும் இடத்தைத் தெளி வாகக் கூறும். மனம் பிறக்கும் இடம் எது என்று சொல்லும். கதிர்மதிகளாகிய இருநாடிகள் உடலில் சுற்றி வரும் வழியைச் சொல்லும். உயிர் வெளிப்பட்ட இடத்தை யும் சொல்லி வெற்றி காணும் வழியைச் சொல்வீராக.

வாயாலே சொல்லுகிறேன் மகனே கேளு;
மகத்தான பிரமத்தின் பாதந் தன்னில்
ஓயாமல் முன்சொன்ன நரம்பு பின்னி
உத்தமனே ரவிமதியுஞ் சுற்றி யாடும்;
மாயாமல் வாசியுந்தான் நடுவே நின்று
மார்க்கமுடன் சுழுத்தியிடம் மனந்தான் சென்றால்
காயான சுழுத்தியென்று இதற்கு நாமம்
கண்டுபார் கண்டுகொள்ளப் போதந் தானே. 60

பரம்பொருளின் அடி என்பது பிரம்மத்தின் அடியாகிய மூலாதாரமே. இங்குப் பல நாடிகள் (நரம்பு) பின்னி உள்ளன. சூரிய சந்திரரான நாடிகள் இங்கிருந்தே பின்னிச் செல்கின்றன. இதையறிந்து பிராணாயாமம் செய்து மனத்தைச் சுழுமுனையில் செலுத்துக. இதனால் உனக்கே ஞானம் உண்டாகும்.

விளக்கம்: யோகத் துயில் தருவதால் சுழுமுனையைச் சுழுத்தி என்றார்.

தானென்ற பலரூபம் அதிகங் காணுந்
தன்னுடைய தேவதைபோற் பின்னும் காட்டும்
ஊனென்ற பெண்ணைப்போ லுன்னைக் கூடி
உத்தமனே சையோகஞ் செய்தாற் போலே
தேனென்று மயக்கி வைக்குஞ் சுழுத்தி யாலே
தித்திப்புப் போலேதான் ருசியைக் காட்டும்
கோனென்ற குருவருளைப் பணிந்து கொண்டு
குறிப்பறிந்து பூரணத்தின் நிலையைப் பாரே. 61

தான் என்ற பிரம்மம் பலவடிவில் மிகுத்துத் தோன்றும். தேவதை போல் தோன்றும். பெண் ஒருத்தி உன்னைக் கூடினாற் போல இன்பம் தரும், இந்த இனிப்பு வரும் போது குருவருளைப் பணிந்து கொண்டு பூரணமான பிரம்மத்தின் நிலையைக் கூர்ந்து பார்.

நிலையாத சமுத்திரமே சுழுத்தி யாச்சு;
நின்றிலங்கும் வாசியைத்தான் வெளியிற் சேரு;
தலையான அக்கினியப் படியே சேரு;
சத்தியமாய் ரவிமதியைக் கூடச் சேர்த்து
மலையாமல் ஏகபரா பரனே யென்று
மனமடங்கி அண்டவுச்சி தன்னைப் பார்க்க
அலையாது மனந்தானும் பரத்திற் சென்று
ஆகாய வீதிவழி ஆட்டும் பாரே. 62

சுழுமுனைப் பற்றிச் செல்வது கடலில் நீந்திக் கரை ஏறுவது போலாம். ஆகவே பிராணாயாமத்தைச் செய்து குண்டலினி நெருப்பைக் கிளம்பி, சூரிய சந்திர நாடிகள் பின்னிப் போவதில் கலந்து, பராபரமே என்று நினைத்தபடி தலை உச்சியை நோக்கினால், மனமும் அலையாது பரம் பொருளுடன் சென்று ஆகாய வீதி வழியாக ஆடும்.

ஆட்டுமடா ஆசையற்று ரோசம் அற்றே
அன்னைசுற்றந் தன்னைமறந்தே அகண்டம் மேவும்
பூட்டுமடா நவத்துவா ரங்கள் தம்மைப்
பொறிகள்ஐந்துஞ் சேருமடா புனித மாகக்
காட்டிலென்ன நாட்டிலென்ன மவுனங் கண்டால்
காமதேனு கற்பகமும் உனக்கே சித்தி
வீட்டிலே தீபம் வைத்தாற் பிரகா சிக்கும்
வெளியேறி னால்தீபம் விழலாய்ப் போமே. 63

ஆசை, ரோசம், தாய், உறவு, ஆகியன விட்டுத் தன்னையும் மறந்து அகண்ட வெளியில் மனம் செலுத்தினால், உடம்பின் ஒன்பது துவாரங்களும் பூட்டிக் கொள்ளும். ஐந்து பொறிகளும் மாயம் தவிர்ந்து புனிதமாகும். இதன் பிறகு வேறு ஒன்றைக் காட்டவோ நாட்டவோ தேவை இல்லை. மவுன யோகம் கொண்டால் தேவர் உலகக்

காமதேனு, கற்பக விருட்சம் ஆகியன நீ கேட்பதைக் கொடுக்கத் தயார் ஆகும். வீட்டில் வைத்த தீபம் அவற்றால் அணையாது ஒளி தரும். வெளியில் வைத்தால் அணையும். ஆகவே மனத்திற்குள் எல்லாம் தேடுக.

போமடா புத்திசித்தம் ஒன்ற தாகிப்
புசுண்டனென்று பேரெடுத்துப் புவனந் தன்னில்
ஆமடா வடசாளி மைந்த னென்றும்
அருமையாங் கன்னியுடை மைந்த னென்றும்
நாமடா ஐந்துபேர் தம்மி லேதான்
நாட்டமுடன் முன்பிறந்தேன் நான்தான் மைந்தா!
வாமடா சாண்முழத்திற் காட்சி பார்க்க
வத்துவுந்தான் ஈச்சரனா ரென்பார் பாரே. 64

புத்தியும் சித்தமும் ஒன்றாகிப் போகும். புசுண்டர் என்ற பெயரோடு, என் சீடன் என்றும், வாலையின் பிள்ளை என்றும், ஐவராகிய பூதங்களுக்கு முன்பே நான் பிறந்தேன் என்றும் வாழலாம். சாண் அளவு முழ அளவில் பிரபஞ்சம் முழுதும் ஈசுவரனார் காட்டுவார்.

பாரப்பா என்குலந்தான் சொல்லக் கேளு;
பார்தனிலே பிரமனுடை விந்து வாலே;
ஆரப்பா பிறந்துவிட்டோம் ஐந்து பேரும்;
ஆகாய அண்டமதை யடுத்தே சென்றேன்;
நேரப்பா வெகுகோடி காலம் வாழ்ந்தேன்;
நிட்டையிலே மனந்தவறாது இருந்து கொண்டேன்;
வீரப்பா பேசுவோர் லோகத் தோர்கள்
விட்டஇடம் தொட்டவிடம் விரும்பிக் காணே. 65

என் குலமானது சொல்லக் கேள். பூவுலகில் பிரமனின் விந்துவால் ஐம்பூதங்களுடன் பிறந்தோம். அதனால் ஆகாய அண்டத்தைக் கடந்தேன்; வெகுகோடி காலம் வாழ்ந்தேன்;

நிட்டையில் (யோக சாதனையில்) மனம் தவறாமல் இருந் தேன். வீரம் பேசும் உலகினர் விட்ட இடம் தொட்ட இடம் எது என அறியார் என அறிக.

காணப்பா சாதிகுலம் எங்கட்கு இல்லை;
கருத்துடனே என்குலம்சுக் குலந்தான் மைந்தா!
தோணப்பா தோணாமற் சாதி பேதஞ்
சொல்லுவான் சுருக்கமாய், சுருண்டு போவான்;
வீணப்பா பிரமத்தில் ஆதி காலம்
வீரமுடன் பிறந்ததடா உயிர்க ளெல்லாம்;
நானப்பா அப்படியே உதித்தேன் முன்னே;
நன்றாக உதித்தவிடம் நாடி னேனே. 66

சித்தர்களாகிய எங்களுக்குச் சாதிகுலம் ஏதும் இல்லை. கருத்து வளத்தால் எம் குலம் உயர்ந்ததே. சாதிகுலம் சொல்பவன், சுருண்டு போவான். பிரம்மத்திலிருந்தே ஆதிகாலத்தில் எல்லா உயிர்களும் தோன்றின. நானும் அப்படியே உதித்தேன்; நான் உதித்த இடம் (பிரம்மம்) எது என்று நாடினேன்.

நாடியே உதித்தவிடம் அறியாத் தோஷம்
நடுவாக வந்தவிடம் பாரத் தோஷம்
கூடியே பிறந்தவிடங் காணாத் தோஷம்
குருபரனை நிந்தனைகள் செய்த தோஷம்
வாடியே வத்தோடே சேராத் தோஷம்
வம்பரோ டிணங்கியே திரிந்த தோஷம்
கூடியே உறவற்றே யிருந்த தோஷம்
கும்பியுங்கற் சிப்பியையும் அறியான் பாவி. 67

நாடியே உதித்த இடத்தை அறியாத போது அது குற்றமேயாகும். நடுவாக வந்த இடம் மட்டும் அறிதல் பெரும் குற்றமாம். இப்படிப் பிறந்த விடம் அறியாது

போகக் காரணம் குருவை நிந்தித்த குற்றத்தால் ஆகும். அப்பரம் பொருளுடன் சேராத குற்றம் வம்பு செய்வோருடன் கூடித் திரிந்த குற்றமேயாம். இப்படி அறியாது இருப்பது சிறு வேற்றுமையும் அறியாத குற்றமேயாம்.

அறியாத பாவிக்கு ஞான மேது?
ஆறுமுகன் சொன்னதொரு நூலைப் பாரு;
பரிபாஷை யாகவுந்தான் சொல்ல வில்லை;
பராக்கிரமம் என்னுடைய நூலைப் பாரு;
விரிவாகச் சித்தர்சொன்ன நூலை யெல்லாம்
வீணாக மறைப்பாகச் சொன்னார் ஐயா!
குறியான அண்டமதை ஒளித்தே விட்டார்
கூறினார் வெவ்வேறாய்க் குற்றந் தானே. 68

இவைகளை அறியாதவனுக்கு ஞானமில்லை. ஆறுமுகன் சொன்ன நூலைப்பார். அதிலும் என் நூலிலும் (பரிபாஷை யாக) வேறு குறிப்புக் கூறியதாக எதுவும் சொல்லவில்லை. சித்தர்கள் பலர் விரிவாகச் சொன்னாலும் தேவையின்றி மறைப்பாகவும் சொல்லி உள்ளனர். இலக்காகிய அண்டம் பற்றி வெளிப்படையாகக் கூறவில்லை. அதுவும் ஒரு குற்றமே ஆகும்.

குற்றமது வையாமல் அண்டத்து ஏகிக்
கூறாத மந்திரத்தின் குறியைப் பார்த்துச்
சித்தமொன்றாய் அந்திசந்தி உச்சிக் காலம்
தேவனுக்குப் பூசைசெய்து தெளிவு பெற்றுக்
குற்றமது வையாமல் மனமன் பாலே
குருபரனை நோக்கியடா தவமே செய்து
பற்றாசை வைத்துமிகப் பார்க்கும் போது
பராபரையுங் கைவசமே யாகு வாளே. 69

அத்தகைய குற்றம் வைக்காமல் அண்டத்தில் குண்டலினியை ஏற்றி உபதேசமாகக் கூறாத மந்திரத்தின் குறிப்பைப் பார்த்து, (இது ஓம் என்பதாம்.) சித்தமும் புத்தியும் ஒன்றி நிற்க, காலை மாலை நண்பகல் காலங்களில் தேவனுக்குப் பூசை செய்து, குறையற்ற அன்பை மனத்தில் வைத்து, குருபரனை நோக்கித் தவம் செய்து, அதில் பற்றும் விருப்பமும் மிக வைத்துப் பார்த்தால் பராபரையாகிய வாலை கைவசம் ஆவாள்.

ஆகுவாள் அந்திசந்தி யுச்சி யென்றால்
அப்பனே ரவிமதியுஞ் சுடர்மூன் றாகும்
ஏகுவாய் மூன்றுமொன்றாய்ப் பின்ன லாகி
இருந்திடமே பிரமாண்ட நிலைய தாகும்;
போகுமே நீசெய் கர்மமெல் லாம்
புவனைதிரி சூலிகையுடைக் கிருபை யாலே;
வாகுமே வழியோடே சேர்த்தா யானால்
வாணியுந்தான் நாவில்நடஞ் செய்வாள் பாரே. 70

இப்படி மூன்று வேளையும் பூசை செய்தால் சூரிய சந்திர அக்கினி (இடா பிங்களா சுழுமுனை) ஆகிய மூன்றும் வசமாகும். இப்படிப் பின்னல் நடுவே இருப்பதே பிரம்மாண்ட நிலையாகும். நீ செய்த கர்மமெல்லாம் உணர்வாய்ப் போய் புவனேஸ்வரி, திரிசூலி ஆகிய தெய்வங்களின் அருளாய் மாறும். அதனால் சொன்னவை பலிக்கும்படி கலைமகளும் உன் நாவில் நடம் செய்வாள்.

பாரடா வாணியுந்தா னிருந்த வீடு
பாலகனே சொல்லுகிறேன் பண்பாய்க் கேளாய்;
ஆரடா அண்ணாக்கின் கொடியி னூடே
அண்டத்தைப் பற்றியடா விழுது போலே

நேரடா நரம்பது தான் பொருந்தி நிற்கும்
நிலையான அக்கினியின் மத்தி தன்னில்
வீரடா அதுவழியே அருள்தான் பாய்ந்து
விண்ணுலகில் வேணதமிழ் சொல்லு வாளே. 71

அக்கலைமகள் இருக்கும் வீட்டைச் சொல்கிறேன் கேள். நாக்கின் மேற்பகுதியின் மீது மேல் கொடி போல் ஒரு நரம்பு சென்று அண்டமாகிய உச்சித்தலை வரை விழுது போல் தொடர்ந்திருக்கும். அங்குப் போகும் சுழுமுனை யாகிய அக்கினி நாடியிலும் நடுவே இது போகும். கடவுள் அருள் அங்குப் பாயும். விண்ணுலகம் ஆகிய தலை உச்சியிலிருந்து கலைமகள் வேண்டுமளவுக்குத் தமிழ்ப் புலமை சொல்லுவாள்.

சொல்லுவா ளனந்தமறை வேத மெல்லாம்
சுருதியடா முடிந்தெழுந்த பிரமத் தாலே
வெல்லுவார் தனையறிந்த பெரியோ ரெல்லாம்
வீறாண்மை பேசார்கள் மவுன மாகி
அல்லுபகல் அற்றதொரு பிரமந் தன்னை
ஆரறிவா ருலகத்தி லையா பாரு
சொல்லடங்கு மிடந்தனையுங் கண்டு தேறிச்
சூத்திரமாய்க் கல்லுப்பு வாங்கு வாங்கு. 72

மறைகள் யாவும் அவள் சொல்லுவாள். அது பிரம்மம் தந்த வேதமாகும். பெரியோர் எல்லாம் இதைச் சொல்லாமல் மவுனம் காப்பார்கள். இரவு பகல் என்ற மாற்றமின்றி நிற்கும் பிரம்மத்தை நீயே பார். உன் சொல் அடங்கும் இடத்தையும் உற்றுப்பார். இதன் பின் கல்லுப்பு வாங்கு.

விளக்கம்: இப்பாடலில் காயகல்ப முறை போல் மவுனத்தைக் கூறுகிறார். கல் போல் இருப்பது மவுனம்.

வாங்கியே அண்டத்தில் மூளை சேர்த்து
வளமாக வேப்பிலையும் பிசறு மைந்தா!
தாங்கியே திருகுகள்ளிக்கு உள்ளே வைத்துத்
தமர்வாயைத் தான்மூடிச் சாபந் தீர்த்தே
ஓங்கியே திங்களுந்தான் மூன்று சென்றால்
உத்தமனே கள்ளியைத்தான் தரித்துக்கொண்டு
சாங்கமினிச் செய்யாமற் சீலை மண்ணுஞ்
சத்தியமாய்ச் செய்தபின்னே உலர்த்திப் பாரே. 73

இப்பாடலில் வேப்பிலை, திருகுகள்ளி முதலியவற்றால் செய்யும் காயகல்ப முறை பற்றிக் கூறியுள்ளார். இதில் மூலிகைப் பெயரில் சில மறைவுச் செய்திகள் உள்ளன.

பாரப்பா வுலர்ந்த தன்பின் எடுத்து மைந்தா!
பக்தியுடன் கசபுடத்திற் போட்டுப் பாராய்
ஆரப்பா ஆறவைத்தே யெடுக்கும் போதில்
அருணன்நிறம் போலிருக்குஞ் செந்தூ ரந்தான்
நேரப்பா அணுப்போலே சரக்குக்கு எல்லாம்
நிச்சயமாய்ப் பூசியுந்தான் புடத்திற் போடு
வீரப்பா நீறுமடா நவலோ கந்தான்
வேதையென்ற வித்தையெல்லாங் கைக்குள் ளாச்சே.
74

இது காயகல்பச் செந்தூரம் செய்யும் மருத்துவக் குறிப்பால் யோகம் கூறியதாம். இச்செந்தூரம் ஒன்பது லோகங் களையும் வேகவைக்கும். (இச்செய்முறை அனுபவத்தால் மட்டுமே பயின்று அறிய முடியும்.)

ஆச்சடா வுடம்பிலுள்ள வியாதி யெல்லாம்
அணுப்போல வுண்டிடவே பறந்து போகும்;
வாச்சடா தேகசித்தி யதிக மாச்சு
வத்துடனே கூடியுந்தான் வாழ லாச்சு;

மூச்சடா தலைப்பிண்டங் கொடியும் மாவும்
முத்தியடா வாங்கியபின் தயிலம் வாங்கி
ஏச்சடா தரியாமல் சூடன் சேர்த்தே
இன்பமுடன் வத்துவையும் பூசை செய்யே. 75

அச்செந்தூரத்தில் அணு அளவு சாப்பிடவே எல்லா நோய்களும் குணமாகும். தேகம் சித்தியாகும். கடவுளாகிய பொருளுடன் கூடி வாழ்வதும் ஆகும். இனி, தயிலம் பூசிப் பூசை செய்வது கூறப்பட்டது.

பூசையடா செய்துமிகப் பதனம் பண்ணு
புத்திரனே பேய்ப்பீர்க்குத் தயிலம் வாங்கி
ஆசைபுல்லா மணக்கதவும் அதுபோல் வாங்கி
அப்பனே கேசரியின் நெய்யும் சேர்த்தே
ஓசையுடன் தேவாங்கு பித்துஞ் சேர்த்தே
உத்தமனே தலைப்பிண்டம் தயிலஞ் சேர்த்துப்
பாசையடா பேசாம லரைத்து மைந்தா!
பாலகனே சவாதோடு புனுகு சேரே. 76

இதுவும் மருத்துவத்தில் பதனம் செய்வது பற்றிக் கூறப்பட்டதாகும்.

சேரடா அணுப்போலே புருவத்து இட்டுத்
தீர்க்கமுடன் நீதானுஞ் செல்லும் போதில்
ஆரடா வுன்னைத்தான் ஆர்தான் காண்பார்?
அண்டமெனும் பிரமத்தின் அருளி னாலே
நேரடா திகைப்பூண்டு கொண்டு வந்து
நிச்சயமாய் முன்சொன்ன தயிலம் விட்டு
வீரடா அரைத்தபின்பு புருவத்து இட்டால்
வேசையர்கள் வெகுபேர்கள் மயங்கு வாரே. 77

மேற்கூறிய மையை உன் புருவத்தில் பூசினால் உன்னை யாராலும் காணமுடியாது. மேலும் அந்த மையைப்

புருவத்தில் பூசினால் இம்மையில் பரத்தையர் பலரும் மயங்கி வருவர் என்பதாம்.

வாரான தில்லைப்பால் கருந்து எசியும்
வவ்வாலின் பித்துடனே மந்திப் பித்துஞ்
சீராக முன்சொன்ன கருவை விட்டுத்
திடமாக அரைத்திடுவாய் சாமம் ஒன்று
நேராக அரைத்ததையும் எடுத்து மைந்தா
நிச்சயமாய்ப் புருவத்தி லிட்டுப் பார்க்க
வீராகப் பாதாளம் பிளந்தே யோடும்
வேதாந்த சாரணையை விரும்பிப் பாரே. 78

இதுவும் மை செய்வது பற்றிக் கூறியதாம். இந்த மையைப் புருவத்தில் பூசினால் பாதாளமும் தெரியும் என்பதாம்

பாரடா பரப்பிரமத்து ஊடே சென்று
பரிதிமதி அக்கினியும் மூன்று மொன்றாய்
நேரடா ஆதியுந்தான் எதிரி தன்னை
நிச்சயமாய்ப் பார்த்திடவே நீறிப் போவான்
கூரடா கோடானு கோடி சித்துக்
குறித்திடவே ஆகுமடா பிரமத் தாலே
வீரடா இந்நூலைக் கொடுத் திடாதே
வெற்றியுடன் எண்பதுமே விளங்க முற்றே. 79

பிரம்மத்துடன் (மூலாதாரத்துடன்) இடா பிங்களா சுழுமுனை மூன்றையும் (சூரிய சந்திர அக்கினி நாடிகள்) ஒன்று சேர்த்துப் பயிற்சி செய்தால் எதிரிகளும் பார்வை பட்டு விலகுவார்கள்.

பல கோடி சித்துக்கள் இதனால் செய்யலாம். யாருக்கும் திறமாக இந்த நூலைக் கொடுக்காதே. இது வெற்றியுடன் கூறிய எண்பது பாடல்களால் ஆனதாகும்.

# II. காக புசுண்டர் உபநிடதம் - 31

## காப்பு

### எண்சீர் விருத்தம்

ஆதியெனை யீன்றகுரு பாதங் காப்பு;
அத்துவிதம் பிரணவத்தி னருளே காப்பு;
நீதியாம் ஆரூட ஞானம் பெற்ற
நிர்மலமாஞ் சித்தருடைப் பாதங் காப்பு;
சோதியெனப் பாடிவைத்தேன் முப்பத் தொன்றிற்
துரியாதீ தப்பொருளைத் துலக்க மாகத்
தீதில்லாக் குணமுடைய பிள்ளை யானார்
சீவேச ஐக்யமது தெரியுந் தானே.

முன்பே என்னைப் பெற்ற குருவின் பாதம் காப்பதாக. பிரணவ (ஓம்)த்துடன் ஒன்றாகிய அருளே காப்பதாக. முறையாக ஆரூடம் சொல்லும் ஞானம் கொண்ட நிர்மல மான சித்தர்களின் பாதம் காப்பதாக. (பரம்) சோதியை இதிலுள்ள 31 பாடல்களில் பாடி வைத்துள்ளேன். துரியா தீதத்தில் தோன்றும் தூயதான பொருளாய் உள்ளவரே விநாயகர் (பிள்ளை) ஆனார். இவரை வணங்கச் சீவனும் ஈசனும் ஆகிய சீவேச ஐக்கியம் தெளிவாகத் தெரியும்.

விளக்கம்: சீவ + ஈச = சீவேச.

## நூல்

தானென்ற குருவினுப தேசத் தாலே
தனுகரண அவித்தை யெல்லாந் தவறுண் டேபோம்;
வானென்ற சுவானுபவ ஞான முண்டாம்;
மவுனாதி யோகத்தின் வாழ்க்கை யெய்தும்;

நானென்ற பிரபஞ்ச வுற்பத் திக்கு
நாதாநீ நல்தியானம் நன்றா யெய்தும்;
கோனென்ற கொங்கணவர் தமக்குச் சொன்ன
குறிப்பான யோகமிதைக் கூர்ந்து பாரே. 1

குருவின் உபதேசத்தால் உடல், கருவிகள், அறியாமை முதலிய எல்லாம் சிதறிப் போகும்.

வானில் உள்ள சுய அனுபவமான ஞானமும் கிடைக்கும். மவுனம் முதலிய யோக வாழ்வு கிடைக்கும். பிரபஞ்ச உற்பத்திக்கு உரிய ஞானமும் உண்டாகும். கொங்கணர் கூறிய யோகமிதைக் கூர்ந்து பார்க்கவும்.

பாருநீ பிரமநிலை யார்தான் சொல்வார்?
பதமில்லை யாதெனினும் பவ்ய மில்லை
சேருமிந்தப் பிரமாணந் தானு ணர்ந்து
தெரிவிக்கப் படாதருளிற் சிவசொ ரூபம்
ஊருகின்ற காலத்ர யங்க ளாலே
உபாதிக்கப் பரதத்வ முற்பத் திக்கும்
சாருமிந்த வுபாதான காரணத்தின்
சம்பந்த மில்லாத சாட்சிதானே. 2

பிரம்மம் பற்றி யார் தான் சொல்வார்? அந்தப் பக்குவ மில்லை. இந்தப் பெரும் உணர்வை உணர்ந்து சிவ சொரூபம் ஆகலாம். முக்காலத்திலும் உபாதியாகும். (தற்காலிகம்) எல்லாத் தத்துவங்களும் உண்டாகும். இது அடிப்படையான தொடர்பாகும்.

சாட்சிசத்தா யதீதகுணா தீத மாகிச்
சட்சுமனத் தாலறியத் தகாது யாதும்
சாட்சியதே யேதுசா தனமுந் தள்ளிச்
சகலவந்தர் யாமித்வ சர்வ பூத

சாட்சியினை யிவ்வளவுஅவ் வளவா ம்என்று
தனைக்கணித்து நிர்ணயிக்கத் தகாது யோகம்
சாட்சியதே ஞாதுர்ஞான ஞேய ரூபம்
சத்தாதி பிரமாதி தானே சொல்வாம். 3

சாட்சியாயிருக்கும் சத்துப் பொருள் (நிலையானது) குணங்கள் கடந்ததாம். கண்களாலும் மனத்தாலும் காணப் படாததாம். வேறு ஆதாரம் எதுவுமின்றி எல்லா உயிரிலும் அந்தர்யாமியாக (உள் பொருளாக) இருக்கும் அதை இவ்வளவு அவ்வளவு என்று அளக்க முடியாது. காண்பான், காணும் பொருள், காணப்படுவது ஆகிய மூன்றுமாகப் பிரம்மமே இருப்பதைக் காணலாம்.

சொல்லுமெனக் கேட்டுகந்த மாணாக் காவுன்
தூலகா ரணப்பிரமம் துரியா தீதம்
அல்லுமல்ல பகலுமல்ல நிட்க ளங்கம்
அம்சோகம் அசபாமந் திரத்தி யானம்
செல்லுமவ னேநானென்று அபிமா னிக்குச்
சித்திவிர்த்தி நிரோதகமாம் யோகத் தாலே
வெல்லறிஞர் பலபோக விர்த்தி யோகி
விவேகதியா னாதிகளே மேலாம் பிர்மம். 4

சொல்வதைக் கேட்கும் மாணாக்கனே! தூலமும் காரணமும் ஆகிய பிரம்மம் துரியாதீதத்தில் உணரப்படும். அங்கு இரவு பகல் இல்லை. உருவம் உள்ளதும் இல்லை. சோகமற்ற நிலை அஜபா மந்திரத் தியானத்தால் உணரப் படுவது. (ஜபம் x அஜபம் = வாயால் உச்சரிக்காமல் செய்யம் ஜபம்.) இப்படிச் செய்பவனுக்கு நானே பிரம்மம் என்று விரும்பச் செய்யும். சித்தம் விரியாது அடங்கும் யோகத்தால் பிரம்மத்தில் பிரம்மத்தை உணரும் நிலை யடையலாம்.

(அசபம் - அஜபம்; வாயால் உச்சரிக்காமல் மௌனமாகச் செய்யும் ஜபம்)

பிர்மசுரோத் ராதிஞானேந் திரியம் ஐந்தும்
பேசுதர்க்க வாக்காதியிந் திரியம் ஐந்தும்
கர்மமெனுஞ் சத்தாதி விடயம் ஐந்தும்
கரணாதி நான்குபிரா ணாதி ஐந்தும்
வர்மமிவை யிருபத்து நான்குங் கூடி
வருந்தூல சரீரவிராட் டெனவே சொல்லும்
தர்மவத்தைச் சாக்கிரபி மானி விசுவன்
தனக்குவமை யாம்கிரியா சத்தி தானே. 5

பிரம்ம சுரோத்திரம் முதலான ஞானேந்திரியம் ஐந்தும், கர்ம இந்திரியம் ஐந்தும், அவற்றின் உணர் பொருள்கள் ஐந்தும், நான்கு அந்தக்கரணங்களும், ஐவகைப் பிராண வாயுக் களும் ஆகிய இவை இருபத்து நான்கும் (உணர் பொருள் களைத் தன் மாத்திரை என்றும் கொள்க.) கூடி, தூலசரீர மாகவும் விராட் புருஷனாகவும் உள்ளன. (சாக்கிரம், விழிப்பு) உறக்கம், கனவு ஆகிய மூன்று அவத்தைகளும் விசுவனா யுள்ள. பிரம்மத்திடமிருந்து பெற்ற கிரியாசக்தியால் ஆகும்.

(பிரம்மரந்திரம் - தலையில் உள்ள 1008 இதழ் கொண்ட யோக ஆதாரம். இதன் நடுவே ஓர் நுண் துளை மேல் நோக்கிச் செல்கிறது. விராட் புருஷன் - பிரபஞ்சம் முழுதும் ஒரே பொருளாக (ஒரே உடம்பாக) உருவகம் செய்யப்பட்டது. இவன் உறங்குதல், விழித்தல், கால் நீட்டல், எழல் இவைகள் அறிந்து நல்ல காலம், நல்ல இடம் அறிவர்)

சத்தியுடன் ரசோகுணந்தான் நேத்ரத் தானம்
தனிப்போக மிதனோடே சார்ந்த ஆன்மா
வெற்றிபெறும் சீவாத்மா அகார மாச்சு
விவகார சீவனிதை விராட்டென் பார்கள்;
வித்தையெனு மவித்தையிலே பிரதி விம்பம்
விலாசமிந்தக் தூலசூக்க விருத்தி யாச்சு;
தத்வமசி வாக்குச்சோ தனையி னாலே
தான்கடந்து சூட்சுமத்திற் சார்ந்து கொள்ளே. 6

சத்துவம், ரஜோகுணம் முதலியன நேத்திர தானம் போன்ற சிறப்பாம். இப்போகத்துடன் ஆன்மா சார்ந்து நிற்கும். சீவாத்மா அகாரம் எனக் கூறப் பெறும். சீவனை விராட்புருஷன் என்பர். அறிவிலும் அறியாமையிலும் பிரதி பிம்பமாகும் பிரம்மப் பொருளே தூல சூக்கும விருத்திக ளாகும். தத்துவமசி எனும் மகாவாக்கியச் சோதனையால் தன் தூல உடலைவிட்டுச் சூக்குமத்தில் சார்ந்திடுக.

கொள்ளடா ஞானேந்திரி யங்கள் ஐந்து
கூடினவை கர்மேந்திரி யங்கள் ஐந்து
தள்ளடா பிராணாதி வாயு ஐந்து
சார்வான மனம்புத்தி தானி ரண்டு
விள்ளடா பதினேழு தத்து வங்கள்
விர்த்தியெனுஞ் சூட்சுமமாம் இரண்ய கர்ப்பத்து
உள்ளடா அபிமானி சைதன்ய னாகுஞ்
சொப்பனா வத்தையெனச் சொல்லும் நூலே. 7

ஞானேந்திரியம் ஐந்தும், கர்ம இந்திரியம் ஐந்தும், பிராண வாயு ஐந்தும், மனம், புத்தி இரண்டும் ஆக இந்தப் பதினேழு தத்துவங்கள், விருத்தியாம் சூட்சுமத்தில் இரணிய கர்ப்பத்தில் உள்ளன. அதில் அபிமானிப்பது சைதன்யம் எனப்படும். இதுவே கனவு எனும் அவத்தை யாகும்.

(சைதன்யர் - தூய்மையான அறிவு பெற்றவர். இரணிய கர்ப்பம் - ஒரு வகை தானம். இரணியம் - தங்கம். தங்க நிற உதய சூரியனுக்கு இரணிய கர்ப்பன் எனப் பெயர். அவத்தை - விழித்தல், உறங்குதல், கனவு காணுதல், இவை யாவர்க்கும் பொது. யோகமறிந்த பயிற்சியாளர் துரியம் என்ற நான்காம் நிலை காண்பர். தூங்காமல் தூங்கும் நிலை. அதற்கும் மேல் துரியாதீதம் எனும் சமாதி நிலை என ஐந்து அவத்தைகளாம்)

நூலான சாத்மிகமாம் அகங்கா ரத்துள்
நுழைந்தஇச்சா சக்தியல்லோ நுணுக்க மாச்சு?
காலான கண்டமெனுந் தானத் துள்ளே
கலந்திருக்கும் போகமல்லோ இச்சா போகம்?
நாலான ஆன்மாவே அந்த ரான்மா
ஞானமிந்தப் படியறிந்தால் உகார மாச்சு;
தூலமெனுஞ் சூட்சுமத்தைக் கடந்து நின்று
சொல்லுகிறேன் காரணத்தின் சுயம்பு தானே. 8

சத்துவம் கூடிய அகங்காரத்தில் இச்சா சக்தி வெளிப் படும். இது கண்டம் (கழுத்து) என்னும் இடத்திலிருந்து தொழில்படும். அந்தரான்மாவை அறிவதே உகாரம் ஆகும். தூல சூக்குமம் கடந்து காரண நிலையில் இருந்து பேசுகிறேன்.

(அந்தரான்மா - உடம்புக்குள் உணர்வு வடிவமாக மட்டும் உள்ள ஆத்மா)

தான்நல்யாகக் கிருதமெனுஞ் சரீரத் துக்குத்
தானமதே இதயமா ஞான சத்தி
வானமதே அகங்காரம் வித்தை யாகில்
வருஞ்சுழுத்தி யபிமானி பிராக்ஞ னாகும்
கோனிதற்கே ஆனந்த போக மாகும்
கூடுகின்ற ஆன்மாவே பரமான் மாவாம்
கானிதற்குப் பரமான்மா சீவ னிந்தக்
காரணமே மகாரமெனக் கண்டு கொள்ளே. 9

கிருதமாகிய உடலுக்கு இதயமே தானம் ஆகும். ஞான சக்தி அங்குள்ளது. உறக்கமும் பிராக் ஞானமும் இங்கு உண்டாகும். ஆனந்தமே இங்கு அனுபவமாம். இங்குப் பரமான்மா கூடும். இங்குள்ள சீவனுக்கே மகாரம் என்று பெயர் சொல்வர்.

(பிரக் ஞானம் - மிகப் பெரிய ஞானம். கடவுளுக்கு மட்டுமே உரியது. அவரை ஐக்கியமாய் அடைந்த ஞானிகளுக்கும் இது கிடைக்கும்)

கொள்ளுமந்தப் பொருள்தானே சத்து மல்ல
கூறான அசத்துமல்ல கூர்மை யல்ல
உள்ளுநிரா மயமல்ல சர்வமய மல்ல
உற்றுப்பார் மூன்றெழுத்தும் ஏகம் ஆச்சு;
தள்ளுகின்ற பொருளல்ல தள்ளா தல்ல
தான்பிரம ரகசியஞ்சந் தான முத்தி
விள்ளுமந்தப் படிதானே வேத பாடம்
விசாரணையாற் சமாதிசெய்ய விட்டுப் போமே. 10

உள்ளத்தால் நினைத்தற்கு உரிய அப்பரம்பொருள் சத்து அல்லது அசத்து ஆகிய இரண்டுமற்றது; தனித்தோ எங்கும் பரந்ததோ இல்லை. அ, உ, ம் என்ற மூன்று எழுத்து ஒன்றாய்க் கலப்பது போல் இப்பொருளும் எல்லாம் கலந்து நிற்கும். இப்பிரம ரகசியமே முத்தியாகத் தொடரும். இப்படிப் படிப்படியாகச் சொல்லும் வண்ணம் நிற்பதே வேத பாடமாகும். நன்கு ஆராய்ந்தாலே சமாதி கை கூடும்.

(ஆத்ம விசாரம் - ஆத்மா உண்டென்பதையும், நம் உணர்வே ஆத்மா செயல் என்பதையும், இன்ப துன்பங்களைத் தான் அனுபவிக்கும் என்பதையும், ஞானம் பெற விரும்பும் என்பதையும், கடவுளை அடைய முயன்று வரும் என்பதையும் விசாரிப்பது போல் தானே உணர்தல்)

விட்டுப்போம் சமுசார வியாபார ங்கள்
விடயசுக இச்சைவைத்தால் விவேகம் போச்சு;
தொட்டுவிட லாகாது ஞான மார்க்கம்
துரிய நிலை நன்றாகத் தோன்று மட்டும்
எட்டுகின்ற பரியந்தம் சுருதீ வாக்கியத்து
எண்ணமெனுந் தியானத்தா லெய்தும் முத்தி;
தட்டுகின்ற சீவத்வம் தனக்கில் லாமற்
சமாதியுற்றால் நாமதுவே சாட்சாத் காரம். 11

சம்சாரமாகிய பற்றுக்கள் இதனால் உன்னை விட்டுப் போகும். பொருள்களின் சுகத்தில் பற்று வைத்தால் விவேகம்

இல்லை. துரிய நிலை நன்கு தோன்றும் வரை ஞானம் தோன்றாது. வேதவாக்கியத்தை உணரும் வரை தியானம் செய்து முத்தி அடைக. சீவகுணம் நம் மனத்தில் தோன்றாமல் சமாதி நிலையை அடைந்தால் அதுவே கடவுள் நிலையாகும்.

சாட்சாதி பிரமத்தால் பூர்வ கர்மம்
தத்வாதி வாசனைகள் தாமே போகும்;
சூட்சாதி பிராந்தியெனும் மாயா சத்தி
தொடராமற் சேர்வதுவே சொரூப ஞானம்;
தீட்சையினாற் பிரமாண்டம் பிண்டஅண் டங்கள்
சிருட்டி முதல் யாவற்றும் தெரியும் நன்றாய்;
காட்சியென்ன ஏகவத்து வொன்றல் லாமற்
காண்பதெல்லாம் வியர்த்தமெனக் கண்டு கொள்ளே.
12

நேரில் பதியும், பிரம்ம உணர்வால் சென்ற பிறவிச் செய்கையும், தத்துவங்களின் தொடர்பும் தாமாக விட்டுப் போகும். சூக்குமமாயுள்ள மாயா சத்தி தொடராமல் விலகுவதே சொரூபத்தை அறியும் ஞானமாம். தீட்சையால் பிரம்மாண்டம், பிண்டம், அண்டம், தொடர்பு, படைத்தல் முதலிய மூன்று தொழில்கள் யாவும் தெரியும். காண்பவை யெல்லாம் பிரம்மம் ஆகிய ஒரே பொருளன்றி வேறு அல்ல என உணர்க.

கண்டுபார் மூடமெனும் அஞ்ஞா னிக்குக்
காணாதுசீ வான்மா பரமான் மாவும்;
தொண்டுபட்டுக் குருமுகத்தில் விசேட மாகச்
சுருதியெனும் வேதாந்தம் அப்பிய சித்தே
உண்டுமனு பவஞானங் கிர்த்யா கிர்த்யம்
யோகிதனக்கு ஏதேனுந் தேவை யில்லை;
விண்டுசொல்வோம் நதிகடக்க ஓடம் அல்லால்
விடயத்தாற் சாதனங்கள் வீணாம் என்றே. 13

மூடருக்கு ஆன்மாவும் பரமான்மாவும் தோன்றமாட்டா. குருவிடம் கேட்டு வேதாந்தத்தைப் பயின்றால் இவை உணரலாம். ஆனால் யோகிக்கு இவை தேவை இல்லை. ஆற்றைக் கடக்க ஓடம் தான் தேவை. வெறும் பேச்சினால் விளக்கத்தால் ஆற்றைக் கடக்க முடியாது. அது வீண். எனவே வேதம் முதலிய விளக்கம் மட்டும் போதாது.

வீணல்லோ சாதனப்ர யோச னங்கள்
மெய்ஞ்ஞான அபரோட்சம் வந்த போது?
வீணல்லோ வேதபா டத்தி னிச்சை
வியோமபரி பூரணத்தில் மேவி நின்றால்?
வீணல்லோ இருட்டறையிற் பொருளைக் காண
விளக்கதனை மறந்தவன்கை விடுதல் போலும்
வீணல்லோ தியானதா ரணைக ளெல்லாம்?
மெய்பிரகா சிக்கும்வரை வேணுந் தானே. 14

மெய்ஞ்ஞானமாகிய உயர்நிலை வந்தபின், சாதனங்கள் ஆகியவற்றைப் பயன் கொள்வது வீணானதேயாம். வேதம் படிக்கும் ஆசையும் வீணேயாகும். வியோமமாகிய பரிபூரணத்தின் மேலிருந்தால் இவை எல்லாம் வீணே யாகும். இச்செயல் விளக்கைக் கைவிட்டு இருட்டறையில் போய்ப் பொருளைத் தேடுவதற்கு ஒப்பாகும். தியானம் முதலியவும் உண்மை வெளிப்படும் வரை தான்; பிறகு வேண்டாம்.

விளக்கம்: வியோமம் - உடம்பினால் செய்யப்படும் குண்டலினி எழுப்புதலாகிய முயற்சி.

வேணுமென்றால் எள்ளுக்குள் எண்ணெய் போலும்
வித்தினிடத் தடங்கிநின்ற விருட்சம் போலும்
காணுகின்ற பூவிலுறை வாசம் போலும்
கன்றாவின் பாலிலுள்ள நெய்யைப் போலும்

தோணுமயில் முட்டையின்மேல் வன்னம் போலும்
தூலமதிற் சூட்சுமந்தான் துலங்கி நிற்கும்;
ஆணவத்தாற் சாதனத்தை மறந்தாயானால்
அபரோட்ச ஞானமுத்தி யரிது தானே. 15

எள்ளில் படர்ந்த எண்ணெய், விதையில் அடங்கிய மரம், பூவில் உள்ள மணம், பாலில் உள்ள நெய், மயில் முட்டைக் கருநீரில் முழுதும் தோன்ற நிறம் ஆகிய இவை போன்று தூலமாகிய நம் உடலில் சூக்குமமாய் மேலான பரம்பொருள் அடங்கி உள்ளது. ஆணவம் கொண்டு யோக முயற்சியைக் கைவிட்டால், உயர் ஞான முத்தி நமக்குள் கிட்டாது.

(தூலம் - கண்ணுக்கு வெளிப்படையாகத் தெரிவது)

அரிதில்லை பிரமவியா கிருத சீவன்
ஐக்கியமெனுஞ் சத்தியானம் அப்ய சித்துச்
சுருதிகயிற் றால்மனமாம் யானை தன்னை
சுருக்கிட்டுச் சிக்கெனவே துறையிற் கட்டிக்
குருவுரைத்த சிரவணத்தின் படியே நின்றால்
குதியாகும் பிரபஞ்சக் கோட்டில் தானும்
திரிவதில்லை திரிந்தாலும் மதமி ராது;
சீவவை ராக்யமெனுந் திறம்இ தானே. 16

பிரம்மத்தை வியாபித்த உயிராக அமைவது அரியது இல்லை. ஐக்கியமாய்த் தியானப் பயிற்சி செய்து, வேதம் எனும் கயிற்றால் மனமாகிய யானையைக் கட்டி, யோகப் படியில் நிறுத்தி, குரு கூறிய நினைவுக்கு உரியன செய்து நின்றால் பிரபஞ்சம் நமக்குள் குதித்து வெளிப்படும். திரியாமல் வரும்; திரிந்தாலும் அகங்காரம் இராது. உயிரின் வைராக்கியம் என்பது இதுவேயாகும்.

திரமென்ன ஹம்சோகம் மந்த்ரா தீதம்
திருசியசூன் யாதிகளே தியான மாகும்
சரமென்ன சாக்ரசத்தாம் வித்தை சூன்யம்
சாதனையே சமாதியெனத் தானே போகும்;
வரமென்ன விபரீத விர்த்தி மார்க்கம்
வாசனையே சாதனமாய் வகுத்துக் காட்டும்;
அரமென்ன இதையறிந்தால் யோகி யாவான்
அஞ்ஞானம் அவனிடத்தி லணுகாது என்னே. 17

'ஹம்ஸம்' என்று சிவசக்தி இரண்டையும் நினைத்துச் சொல்லும் மந்திரமே அதீதமாகும். மயங்கிய சூன்யம் யாவும் தியானத்திற்கு வரும். விழிப்புணர்வும் போய் சமாதியாகும். பழைய (வாசனை) தொடர்புகள் சாதனமாய் வழி வகுக்கும். இதையறிபவனே யோகி ஆவான். அவனிடம் அஞ்ஞானம் என்றும் நெருங்காது.

விளக்கம்: ஹம்ஸம் என்னும் மந்திர ஜபத்தால் யோக சித்தி வரும்.

என்னவே அஞ்ஞானி உலகா சாரத்து
இச்சையினால் தர்மார்த்த வியாபா ரங்கள்
முன்னமே செய்ததன்பின் மரண மானால்
மோட்சமதற்கு அனுபவத்தின் மொழிகேட் பீரேல்
வின்னமதாய் ஆங்கார பஞ்ச பூத
விடயவுபா திகளாலே மேவிக் கொண்டு
தன்னிமைய இலிங்கசரீ ரத்தோடு ஒத்துச்
சதாகாலம் போக்குவரத் தாகும் தானே. 18

உலக வழக்கங்களில் ஆசை கொண்டு, அறம் பொருள் இன்பம் எனும் தொடர்புகள் கொண்டு வாழ்ந்தால் மரணமே கிட்டும். மோட்சம் பெறும் அனுபவம் கேட்டால், பஞ்ச பூதங்களில் படரும் அகங்காரத்தை விடுவித்து, தனக்குள்

உயரும் சுழுமுனையாகிய லிங்க சரீரத்தில் எப்போதும் ஒன்றி, மேலும் கீழுமாய் யோக நெறியில் சென்று வந்தால் அது மோட்சம் தரும்.

தானிந்தப் படியாகச் சீவ ரெல்லாஞ்
சகசபிரா ரத்வவசத் தாகி னார்கள்;
ஏனிந்தக் கூரபிமா னத்துஆதி னாலே
இத்தியாதி குணங்களெல்லாம் வியாபிக் கும்பார்
வான்இந்து போல்மெலிந்து வளர்ந்து போகும்
வர்த்திக்கும் அஞ்ஞானம் மாற்ற வேண்டி
நானிந்தப் பிரமவுபா சனையைப் பற்றி
நாட்டம்வைத்தே வித்தையெல்லாம் நாச மாச்சே. 19

இப்படி எல்லா உயிர்களும் இயல்பாகப் பிராரத்துவத் துடன் (பூர்வ கன்மத்துடன்) வசமாகி விட்டால், அப்போது முக்குண விரிவுகள் உண்டாகும். வானில் உள்ள நிலவு போல் யாவும் தேய்ந்து போகும். பிறகு வளரும். அறியாமை நீங்க வேண்டின் பிரம்ம உபாசனையைக் கைக் கொண்டு அதில் நாட்டம் கொண்டு பிற வித்தைகளைக் கை விடுக.

விளக்கம்: இந்து -. நிலவு; வித்தை - மந்திரம்.

(பிராரத்துவம் - நரம் சென்ற பிறவியில் செய்த வினையை இப்பிறவியில் அனுபவிப்பதற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டது)

ஆச்சப்பா எத்தனையோ கோடி காலம்
அந்தந்தப் பிரளயத்துக்கு அதுவாய் நின்றேன்;
மூச்சப்பா ஓடவில்லை பிரமா தீத
முத்திபெற்றேன் பிரமாண்ட முடிவிற் சென்றேன்;
கூச்சப்பா வற்றபிர்ம சாட்சாத் காரம்
குழிபாத மாகியகோ சரமாய் நின்றேன்;
பேச்சப்பா சராசரங்க ளுதிக்கும் போது
பின்னுமந்தப் புசுண்டனெனப் பேர்கொண்டேனே.20

எத்தனையோ பிரளயங்கள் நடந்த போதும் அழியாது நின்றேன்; மூச்சு நின்று போகாமல் இருந்தேன்; முத்தி எனப்படும் பிரமாண்ட முடிவில் சென்றேன்; பிரம்மம் என்னும் முழுமையான பொருளுடன் நானும் ஒன்றி அதனில் ஒரு பாகமாய் நின்றேன். சராசரங்கள் தோன்றும் போதெல்லாம் புசுண்டன் என என்னையும் நினைப்பர்.

பேர்கொண்டேன் சொரூபசித்தி யனேகம் பெற்றேன்
பெரியோர்கள் தங்களுக்குப் பிரிய னானேன்
வேர்கண்டேன் ஆயிரத்தெட்டு அண்ட கூட
வீதியெல்லாம் ஓர்நொடிக்குள் விரைந்து சென்றேன்
தார்கண்டேன் பிருதிவியின் கூறு கண்டேன்;
சாத்திரவே தங்கள்வெகு சாயுங் கண்டேன்;
ஊர்கண்டேன் மூவர்பிறப் பேழுங் கண்டேன்;
ஓகோகோ இவையெல்லாம் யோகத்து ஆட்டே. 21

சொரூப சித்திகள் பல அடைந்தேன்; பெரியோர்க்குப் பிரியன் ஆனேன்; பிரபஞ்சத்தின் வேரையும் பார்த்தேன்; ஆயிரத்து எட்டு அண்டங்கள் முழுதும் ஒரு நொடியில் விரைந்து கண்டேன்; சென்றேன்; பூமியின் கூறு எங்கெங்கு உள்ளது என்றும் சாத்திர வேதங்களின் சாய்வும் கண்டேன்; மும்மூர்த்திகளின் ஊர்களும் (உலகுகள்) அவர்களின் ஏழு பிறப்புக்களும் கண்டேன். யாவும் யோகத்தால் ஆயின.

யோகத்தின் சாலம்ப நிராலம் பந்தான்
உரைத்தாரே பெரியோர்க ளிரண்டா மென்றே;
ஆகமத்தின் படியாலே சாலம் பந்தான்
அநித்யமல்ல நித்தியமென் றறைய லாகும்;
சோகத்தைப் போக்கிவிடும் நிராலம் பந்தான்;
சூன்யஅபிப் பிராயமதே சொரூப முத்தி;
மோகசித்தி விருத்திகளைச் சுத்தம் பண்ணி
மம்மூட்சு பிரமைக்ய மோட்ச மென்னே. 22

ஆதார யோகம், நிராதார யோகம் என்னும் இரண்டையும் பெரியோர் உரைத்தனர். ஆகமப்படி ஆதார யோகம் காணலாம். நிராதார யோகமும் காணலாம். நிராதபர யோகம் நினைவால் உணர்வதாகும். இதனால் சோகம் போகும். சொரூபமுத்தி கிடைக்கும். யோகம், சித்த விருத்தி இவை நீக்கி மோட்ச விருப்புடன் மேற்கொள்க.

விளக்கம்: உடம்பிற்குள் செல்லும் யோகம் ஆதார யோகம். நிர்ஆதார யோகம் உடம்பிற்கு மேலும் செல்வது (அந்தரத்தில் செல்வது) நிராதார யோகம் ஆகும்.

மோட்சசாம் ராச்யத்தில் மனஞ்செல் லாத
மூடர்களுக்கு அபரோட்சம் மொழிய லாகா;
சூட்சமறிந் தாலவனுக் கனுசந் தானம்
சொரூபலட்ச ணந்தெரியச் சொல்ல லாகும்;
தாட்சியில்லை சாதனைத் துட்ட யத்தில்
சட்சேந்த்ரி யாநாதா தீத மாகும்;
மூச்சுலயப் படுவதல்லோ பிரம நிட்டை
மூலவிந்து களாதீதம் மொழிய லாமே. 23

மோட்சம் பற்றி மனம் செல்லாத அறிவற்றவர்களுக்கு உயர்ந்த ஞானம் பற்றிச் சொல்லக் கூடாது. சூக்குமமாகக் குரு சீடனுக்குத் தொடுவுணர்வால் உணர்த்தும் அனுசந்தான முறையில் சொரூப லட்சணத்தைக் காட்டலாம். நாதாதீதத்திலும், மூச்சை லயம் செய்வதிலும், பிரம்மத்தை நினைத்து நிட்டை கொள்ள முடியும். இப்படி மூல விந்துவால் அதீதங்கள் உணர்த்தலாம்.

(லயம் செய்தல் - கலக்கும்படி செய்தல். நாதா தீதம் - நாதத்தின் அதீத (உச்ச) நிலை. இரு காதுத் துளைகளையும் கட்டை விரல்களால் மூடிக் கொண்டு உள்ளே கேட்கும் நாதத்தை (தொனியை) உணர்தல்)

மொழிவதிலே அகாரமெனும் பிரண வத்தின்
மோனபிரா ணாதியதே நாத மாச்சு;
தெளியுமிந்த ஓங்காரத் தொனிவி டாமற்
சிற்ககனத் தேலயமாய்ச் சேர்க்க வேணும்;
ஒளிதானே நிராலம்பம் நிர்வி சேடம்
உத்கிருட்ட பரமபத வுபகா ரத்தான்
வெளியோடே வெளிசேர்ந்தால் வத்து வாச்சு
விரோதசத் ராதியெலாம் விருத்த மாச்சே. 24

பிரணவத்தின் முதல் எழுத்தாகிய அகரத்தை உச்சரிப்பதே நாதம் என்பதாம். இதனால் ஓம் என்பதைத் தொடர்ந்து கீழிருந்து தலை உச்சி வரை நாதம் பிளவு படாமல் சேர்க்க வேண்டும். அப்போது அதில் ஆதாரமற்ற நிற ஒளி தோன்றும். பரமபதத்தால் வந்த துணையே இதுவாம். உள் வெளியும் புற வெளியும் ஒன்றானால் பிரம்மப் பொருளாகும். பிற எல்லாம் வீணாம்.

விளக்கம்: ககனத்தில் லயம் ஆதல் - வானில் கலக்கும் படி செய்தல்.

விருத்தமா மனாதிபிரா ரத்வ கர்மம்;
விடயாதிப்ர பஞ்சவீட் டுமங்க ளெல்லாம்
ஒறுத்தவனே யோகியென்பா னவனா ரூடன்
உலகமெலாந் தானவன துண்மை யாகும்;
நிறுத்தவென்றால் நாசிகாக் கிரக வானிமா
நிலைபுருவ மத்தியிலே நிட்ட னாகிக்
கருத்தழிந்து நின்றவிடம் சாட்சாத் காரம்
கண்மூக்கு மத்தியிலே கண்டு பாரே. 25

முற்பிறவியில் தோன்றிய கர்மங்கள், இப்பிரபஞ்சத்தில் வெளிப்படும். அவற்றை நீக்கியவன் யோகியாவான். உலக மெலாம் அவன் உடைமையாகும். நாசியில் தோன்றும் ஆத்மா புருவ மத்தியில் நிட்டை கொள்ளும். (இது கேசரி

யோகம்.) மனம் முழுதும் அடங்கி நிற்குமிடமே பிரம்மத்துடன் கூடுவதாம். கண் மூக்கு ஆகிய இவற்றின் நடுவே காது வழியாகச் சுடர் ஒளிர்வதைக் கண்டு தெளிக.

(கேசரி யோகம் - நாசியில் தோன்றும் ஆத்மா, புருவ மத்தியில் நிட்டை கொள்ளுதல்)

பார்ப்பதற்கு நீண்டதுவாம் குறுகி வட்டம்
பரிதிமதி உதயமெனப் பளிங்கு ஆகாசம்
தாப்பதற்கு மூன்றுசுழி பின்னாய் நிற்கும்
சாக்கிரத்தின் அடையாளந் தாக்கிப் பாரு;
சேர்ப்பதற்குச் சுழுமுனையென்று இதற்கு நாமம்;
திரிகோணக் குண்டலியே சிவசொ ரூபம்;
காப்பதற்கு நடுநாடி யூடே சென்று
கால்நிறுத்திப் பிடரிவழிக் கண்ணைப் பாரே. 26

பார்ப்பதற்கு நீளமாயும் குறுகியும் உள்ள வட்டம் இந்தக் கண்டம். சூரியசந்திர உதயங்கள் ஆகாசத்தில் தெளிவாய்க் காணும். இவற்றை வந்து பொருந்துவதே சுழுமுனை எனும் நாடியாகும். முக்கோணக் குண்டலியைக் காண்பது சிவசொருபம் ஆகும். இவற்றைக் காக்க நடுநாடி வழியே மேல் ஏறி, மூச்சை அடக்கிப் பிடரி வழியாகக் கண்ணில் செலுத்திக் காண்க.

கண்ணான பிடரிமுது கோடு ரந்த்ரம்
கால்கூட்டிப் பார்த்தாலே தலைமே லாகும்;
விண்ணான பெருவெளிக்குள் ஈன மானால்
விமோசனமாம் நிராலம்ப மெனத்தான் சொல்லும்;
ஒண்ணான யோகமல்லோ இந்த நிட்டை
உபதேசம் பெற்றவர்க்கே உண்மை யாகும்;
அண்ணாந்து பார்த்திருந்தால் வருமோ ஞானம்?
அசபாமந் திரத்யானம் அறைகின் றேனே; 27

பிடரி, கண், முதுகு, பிரம்மரந்திரம் (1008 தாமரை) ஆகிய இவற்றில் காற்றை நிறுத்திப் பார்த்தால் தலை மேல் உள்ள பெருவெளியில் பார்த்தால் விமோசனம் உண்டாகும். இதனை (நிராலம்பம்) நிராதாரம் என்பர். இதுவே யோக நிட்டையாகும். உபதேசம் பெற்றவர்க்கு இவை உண்மை அனுபவமாகும். வெறும் வெளியை மட்டும் அண்ணாந்து பார்த்தால் ஞானம் வந்து விடுமோ? ஆகவே அஜபா மந்திரத் தியானம் பற்றிச் சொல்கிறேன்.

(நிராலம்பம் - ஆதாரமின்றி இருப்பது)

அறைகின்றேன் அசபையெனும் பிராணஆன் மாவை
அகண்டபரா பரத்தினுள்ளே ஐக்யஞ் செய்யக்
குறைவில்லை ஓங்கார மூல வட்டக்
குண்டலியாய் நின்றிடத்திற் குணாதீ தந்தான்
நிறைகின்றேன் நாசிகா ரந்த்ர வாயு
நீக்காமல் ஏகமாய் நிர்ண யித்துப்
பறைகின்றேன் அட்சரசா தனமுந் தள்ளிப்
பந்தமற்ற மாமோட்சப் பதிபெற் றேனே. 28

பிராணனை அடக்கி விடுவதால் ஆன்மாவை அறிதலே (அஜபா) அசபையாகும். இப்படி அகண்ட பராபரத்தில் ஐக்கியம் செய்தால் குறைவு இல்லையாம். ஓங்காரம் தோன்றும் மூலாதாரத்தில் குண்டலியை எழுப்புவதும் குணங்கள் அதீதமாவதே ஆம், நாசியிலிருந்து பிரம்மாந்திரம் வரை வாயுவை நிறைத்து ஏகமாய் உணர்க.

விளக்கம்: அட்சரத்தை உச்சரிப்பதும் தள்ளிப் பந்தமில்லாது மோட்சப் பதியில் செல்லலாம்.

புதிபுருவத்து அடிமுனைக்கீழ் அண்ணாக்கு என்னும்
பவளநிறம் போன்றிருக்குந் திரிகோ ணந்தான்
துதிபெறுசிங் குவையுபத்த சுகந்தி யாகச்
சுபாவசா தனையினால் மவுன மாச்சு;
விதிவிகிதப் பிராரத்வ கர்மம் போச்சு;
விடயபோ கத்தினிச்சை விட்டுப்போச்சு;
மதியெனுமோர் வாயுவது அமிர்த மாச்சு;
வத்துவதே காரணமாம் மகிமை யாச்சே. 29

புருவத்தின் அடிமுனை, அண்ணாக்கு ஆகிய இவற்றில் பவள நிறத்தில் ஒரு முக்கோணம் உண்டு, வாயுவை அங்கே நிறுத்தி மவுனம் செய்க. இதனால் முற்பிறவி கர்மம் போகும். உலகப் பொருள்கள் மேல் ஆசையும் விட்டுப் போகும். சந்திர கலையால் அமிர்தம் உண்டாகும். இவை யாவும் பிரம்மம் என்னும் பொருளால் வந்த பெருமையாம்.

மகிமையென்று யோகசா தனையி னாலே
மகாகாச நிருவிகற்ப வாழ்க்கை யாச்சே;
அகம்அகமென்று ஆணவத்தை நீக்க லாச்சே;
அத்துவிதப் பிரமசித்தா னந்த காரம்
சகளாதீ தங்கடந்து களாதீ தத்தில்
சாதித்தேன் தன்மனமாய்ச் சார்ந்து போச்சு;
பகலிருளில் லாதவெளிக்கு அப்பா லாச்சு;
பந்தமற்ற மாமோட்சப் பதம்பெற் றேனே. 30

மதிப்பு மிக்க யோக சாதனையால் மகா ஆகாசத்தில் நிர்விகற்ப சமாதியாவது கூடும். நான் என்னும் ஆணவம் நீங்கும். பிரம்மத்தை விட்டுப் பிரியாத சித்தம் உண்டாகும். உருவு கடந்து அருவத்தில் சாதித்தது நம் மனமேயாகும். இரவு பகல் இல்லாத இடத்திற்கு அப்பால் மிகப் பெரிய மோட்சப் பதம் கிடைத்தது.

பெற்றதனைச் சொல்லிவிட்டேன் வடநூல் பாடை
பிரிந்து முப்பத்து ஒன்றினிலே பிரம ஞானம்
தத்துவத்தைச் சொல்லிவைத்தேன் யோகி யானால்
சாதனைசெய் வானறிவான் சைதன் யத்தில்
முத்தியடை வானதிலே நிருத்தஞ் செய்வான்
மும்மூட்சுத் துவமறிந்த மூர்த்தி யாவான்
நித்யமெனும் உபநிடதப் பொருள்தான் சொல்லும்
நிலவரத்தால் யோகநிட்டை நிறைந்து முற்றே. 31

முப்பத்தொரு பாடல்களில் வடமொழியில் உள்ளதும் அனுபவமும் ஆகிய பிரம்ம ஞானம் சொல்லி விட்டேன்; தத்துவம் சொன்னேன். யோகியானால் சாதனையால் சைதன்யமாய் எங்கும் நிறைந்திருப்பதை அறிவான்; வானில் நடம் செய்வான். மும்மூட்சுவாகிய மோட்சத்துக் குரியவன் ஆவான். உபநிஷதப் பொருள்களை இதில் கூறியதால் இனி யோக நிட்டையில் நிறைந்து முற்றுக.

# III. காக புசுண்டர் காவியம் (33)

## காப்பு

கணபதியே அடியாகி அகில மாகிக்
காரணத்தின் குருவாகிக் காட்சி யாகிக்
குணபதியே கொங்கைமின்னாள் வெள்ளை ஞானக்
குருநிலையாய் அருள்விளங்கும் கொம்பே ஞானக்
கனவினிலும் நினைவினிலும் ஒளியாய் நின்ற
காரணத்தின் வடிவாகிக் கருத்துள் ளாகிப்
பணியரவம் பூண்டசிவ வாசி நேர்மை
பாடுகின்றேன் காவியந்தா னெண்ணிப் பாரே.

கணபதியே! மூலாதாரமாகிய அடியாகவும், அகில அண்டமும் ஆகி, காரணமான குருவும், காணும் காட்சியும் நீ ஆனாய். உமாதேவியாகிய மின்னற் கொடியில் தோன்றிய வெண்மையான ஞான குருவே! அருளை விளக்கும் கொம்பே! ஞானக் கனவிலும் நினைவிலும் ஒளியுடன் தோன்றிக் காரணத்தின் வடிவமாகி, கருத்துள் நின்று சிவனுடன் ஐக்கியமாகும் வாசியாகிய பொருளே காவியம் பாடுகிறேன், எண்ணிப்பார்!

## நூல்

எண்ணியெண்ணிக் காவியத்தை எடுத்துப் பாராய்;
எந்நேரங் காமசிந்தை யிதுவே நோக்கும்
பண்ணிபன்றி பல குட்டி போட்டா லென்ன
பதியானைக் குட்டியொரு குட்டி யாமோ?
சண்ணியுண்ணி யிந்நூலை நன்றாய்ப் பாரு
சக்கரமும் அக்கரமும் நன்றாய்த் தோணும்;
தண்ணி தண்ணி யென்றலைந்தால் தாகம் போமோ?
சாத்திரத்தி லேபுகட்டித் தள்ளி யேறே. 1

எண்ணி எண்ணி என் காவியத்தைப் படி. எப்போதும் இதிலேயே விருப்பம் கொள். பன்றி கருவிருந்து பல குட்டி போட்டாலும் ஒரு குட்டி போடும் யானைக் கன்றுக்கு நிகரமாகுமோ? அப்படி இச்சிறு காவியம் பலபடப் பேசா விடினும் நிகரற்றது. இந்நூலைச் சிந்தித்தால் சக்கரங்கள், அவற்றில் உள்ள மந்திர எழுத்துக்கள் யாவும் தோன்றும். தண்ணீர் என்று சொல்லி அலைந்தால் தாகம் போய் விடுமா? சாத்திரங்களில் படிப்பதும் இப்படியேயாகும். அவற்றை விடுக.

புகட்டினாள் தசதீட்சை மகிமை தன்னைப்
　　பூரிப்பால் எனக்களித்தே அகண்டந் தோறும்
சகட்டினாள் சகலசித்தும் ஆடச் சொன்னாள்
　　சந்திரபுட் கரணிதனில் தானஞ் சொன்னாள்
பகட்டினாள் உலகமெல்லாம் முக்கோ ணத்திற்
　　பரஞான சிவபோதம் பண்பாய்ச் சொன்னாள்
அகட்டினாள் ஐவர்களை யீன்றாள் அம்மன்
　　அந்தருமை சொல்லவினி அடியாள் கேளே. 2

வாலைப்பெண் பத்துவிதத் தீட்சையும் தந்தாள்; அகண்டதில் ஏறிச் சகல சித்தம் செய்யச் சொன்னாள்; சந்திரனாகிய புஷ்கரணி (அமுதம் ஊறும் இடம்) இருக்கும் இடம் கூறினாள்; ஒரு முக்கோணத்தில் சகல அண்டமும் அடங்குவதைக் கூறினாள்; (ஒரு முக்கோணத்தில் உடல் முழுதும் அடங்குவது இது.) இதுவே சிவஞானம் என்றாள். இவளே ஐவர்களை ஈன்றவள். அதன் அருமையைச் சொல்லக் கேட்பாயாக.

விளக்கம்: ஐந்து ஐந்தாய் எண்ணப்படுவன அவளால் வந்தன என்க. சந்திரபுஷ்கரணி எனும் தீர்த்தம் ஸ்ரீரங்கத்தில் உள்ள கோவிலில் உள்ளது. இது உடம்பில் அமுதம் ஊறும் பகுதியைக் குறித்தது.

(தச தீட்சை - நயன தீட்சை, பரிச தீட்சை, மானச தீட்சை, வாசக தீட்சை, சாத்திர தீட்சை, யோக தீட்சை, அவுத்ரி தீட்சை, ஞான தீட்சை, கிரியா தீட்சை, நிர்வாண தீட்சை. உட்பிரிவுகள் சமய தீட்சை, விசேட தீட்சை, ஆசாரிய அபிஷேக தீட்சை, நிர்ப்பீஜ தீட்சை, சபீஜ தீட்சை, உலோகதர்மணி, சிவதர்மணி ஆகியவையாம்)

கேளப்பா ஈசனொரு காலந் தன்னிற்
கிருபையுடன் சபைகூடி யிருக்கும் போது
வாளப்பா மாலயர்தம் முகத்தை நோக்கி,
வந்தவாறு எவ்வகையோ சென்றது ஏதோ
கோளப்பா செயகால லயந்தா னெங்கே?
குருநமசி வாயமெங்கே? நீங்க ளெங்கே?
ஆளப்பா ஐவர்களும் ஒடுக்க மெங்கே?
அறுத்தெனக்கு இன்னவகை யுரைசெய் வீரே. 3

ஈசனாகிய கடவுள் ஒரு காலத்தில் அருள் கொண்டு சபையைக் கூட்டியபோது, திருமாலையும் பிரம்மனையும் மற்றைய தேவர்களையும் நோக்கி "வந்தது, சென்றது, லயமாய் ஒன்றியது ஆகிய யாவையும் எங்கே? எனக் கேட்டார். குருவாகிய நமசிவாயம் எங்கே? நீங்கள் எங்கே? ஐம்பூதங்கள் ஒடுக்கம் எங்கே? இவற்றை சந்தேகம் இல்லாத அளவுக்கு தெளிவாக்கி உரைப்பீராக" என்று கேட்டார்.

இன்னவகை ஈசரவர் கேட்கும் போதில்
எல்லோரும் வாய்மூடி யிருந்தா ரப்போ
சொன்னவகை தனையறிந்து மார்க்கண் டேயன்
சொல்லுவான் குழந்தையவன் கலக லென்ன
அன்னைதனை முகம்பார்த்து மாலை நோக்கி
அரிகரி! ஈசர்மொழிக் குரைநீர் சொல்வீர்;
பின்னைவகை யாருரைப்பார் மாயை மூர்த்தி
பேசாம லிருந்துவிட்டால் மொழிவா ரெங்கே? 4

இவ்வாறு கடவுள் கேட்ட போது யாவரும் வாய் மூடிப் பேசாதிருந்தனர். மார்க்கண்டேயன் என்னும் இளமை மாறான முனிவன் அப்போது கலகல எனச் சிரித்துச் சொன்னான்; அன்னை முகம் பார்த்தான்; திருமாலை நோக்கினான் ''அரி ஹரி என்னும் கடவுள் மொழிக்கு நீவிர் பொருள் சொல்வீராக'' என்றான்.

எங்கென்று மார்க்கண்ட னெடுத்துச் சொல்ல
என்ன சொல்ல ஏகவெளிச் சிவனை நோக்கிக்
கங்கைதனைப் பூண்டானே! கடவு ளோனே!
காரணமே! பூரணமே! கண்ணே! மின்னே!
சங்கையினி யேதறிவேன் மகுடச் சோதி
சந்திரனைப் பூண்டிருந்து தவம்பெற் றோனே!
மங்கையிடப் பாகம்வைத்த மகுடத் தோனே!
மாமுனிகள் ரிஷிசித்தர் அறிவார் காணே. 5

மார்க்கண்டேயன் வினாவிற்கு விடை சொல்ல முடியாமல் முனிவர்களும் சித்தர்களும் காண ஏகமாகச் சிவனை நோக்கி ''கங்கையைச் சூடியவனே! கண் போன்றவனே! சோதி வடிவாகத் திகழ்பவனே! முடியின் மீது சந்திரனைச் சூடிய வனே! உமையவளை இடப் பாகத்தில் வைத்தவனே! இவ்வினாவிற்கு நீங்கள் தான் விடையளிக்க வேண்டும்'' என்று வேண்டினர்.

அறிவார்கள் ரிஷிசித்தர் முனிவோ ரையா!
அரகரா! அதுக்குக்கோ ளாறென் றக்கால்
பொறியாகப் புசுண்டமுனி சொல்வா ரையா!
போயழைக்கக் கோளாறி வசிட்ட ராகும்
நெறியாக இவ்வகைநா னறிவே னையா!
நிலைத்தமொழி புசுண்டரலால் மற்றோர் சொல்லார்;
புரிவாரு மிவ்வளவென் றுரைத்தார் மாயர்
பொருள்ஞானக் கடவுளப்பா மகிழ்ச்சி பூண்டார். 6

அப்போது சிவன், ''ரிஷிகளும் சித்தர்களும் முனிவர் களும் இதன் விடை அறிவார்கள். புசுண்டமுனி சொல்வார். வசிட்டரிடமும் கேட்கலாம் சென்று அழைத்து வாரும். நிலையாக நான் அறிவேன். புசுண்டர் தவிரப் பிறர் அறியார்'' என்றார்.

புரிந்தவர்களும் இவ்வளவு என்று கூறுவர். மாயும் பிறர் கூறார். ஞானப் பொருளான சிவன் இவ்வாறு கூறியதை அனைவரும் மகிழ்ந்து ஏற்றனர்.

மகிழ்ச்சியுடன் மார்க்கண்டா வாராய் கண்ணே!
வரலாறு நீயெவ்வா றறிவாய் சொல்வாய்;
சுகட்சியுடன் கருதிப்பார் யுகங்கள் தோறும்
சூட்சமிந்த மாலோன்றன் வயிற்றிற் சேர்வான்
அகட்சியுடன் ஆலிலைமே லிருப்பா ரையா!
அப்போதே இவரிடத்தி லெல்லாம் ஞானம்
இகழ்சசியுட னிவற்குப்பின் எவரே காணேன்
இவ்வார்த்தை நானறியே னவரைக் கேளீர். 7

இப்படி அனைவரும் மகிழும்போது சிவன், ''மார்க்கண்டே யனே! வருக. இந்த முனிவர் வரலாறு எப்படி அறிவாய்? சுகத்தோடு இதைக் கருதிப்பார். பல யுகங்கள் தோன்றும். அவற்றை எல்லாம் திருமால் தன் உந்தியில் சேர்த்தார். உலகம் முடியும் போது ஊழி வெள்ளத்தில் ஆலிலை மேல் சுருக்கி இருப்பார். எல்லா ஞானமும் அடங்கிய இவரிட மிருந்து எவரிடம் வந்தது என்று காணேன். அவரை நீ கேட்டு அறிவாயாக'' என்று கூறினார்.

கேளுமென்றான் மார்க்கண்டன் சிவந்தா னப்போ
கிருபையுட னிவ்வளவு மறிவா யோடா?
ஆளுகின்ற ஈசனுநா மறியோ மிந்த
அருமைதனை நீயறிந்தா யருமைப் பிள்ளாய்!

காளகண்டர் மாயோனைச் சொல்வீ ரென்றார்
கருவேது நீயறிந்த வாறு மேது!
பாளுகின்ற முப்பாழுந் தாண்டி நின்ற
பரஞான சின்மயமும் பகர்ந்தி டீரே. 4

சிவனும் மார்க்கண்டேயனிடம் கிருபையுடன் ''நீ இவ்வளவையும் அறிந்தாயோ? ஈசனாகிய நானே இதை அறியேன்'' என்றார். காளகண்டரும் திருமாலிடம் இது பற்றிச் சொல்லுமாறு கேட்டார். ''நீ யறிந்த ஆதாரம் ஏது? முப்பாழும் தாண்டி பரஞான சின்மயமாய் நிற்பதை வெளியிடுவாயாக'' என்று கூறினார்.

பரமான பரமகயி லாச வாசா!
பார்த்திருப்போம் ஆலிலைமேற் பள்ளி யாகித்
தரமான புசுண்டமுனி யந்த வேளை
சக்கரத்தைப் புரளவொட்டார் தவத்தி னாலே
தூரமாக எவ்வாறோ திரும்பப் போவார்
சூட்சமதை நாமறிவோம் பின்னே தோதான்
வரமான வரமளித்த சூரன் வாழ்வே
வசிட்டர்போ யழைத்துவரத் தகுமென் றாரே. 9

''கடவுளாகிய கயிலாய நாதரே! திருமால் ஆல் இலையில் பள்ளி கொண்டு ஊழிக் காலத்திருப்பதை நாம் பார்த்திருப்போம். அப்போது திருமால் சக்கரத்தைப் புசுண்ட முனியே இயக்கினால் தவத்தினால் எவ்வளவு தூரமாயினும் அவரால் போகமுடியும். அந்தச் சூட்சுமம் நமக்கும் தெரியும். வரம் பல பெற்ற சூரனின் தன்னிச்சை வாழ்வே முனிவர் வாழ்வாம். வசிட்டரே போய் அவரை அழைத்து வரத் தகுதி பெற்றவர்'' என்று கூறினார் மார்க்கண்டேய முனிவர்.

தகுமென்ற வார்த்தைதனை யறிந்தே யீசர்
தவமான வசிட்டரே புசுண்டர் சாகை
அகமகிழ அங்கேகி அவர்க்கு ரைத்தே
அவரையிங்குச் சபைக்கழைத்து வருவா யென்ன
செகமான செகமுழுதும் ஆண்ட சோதி
திருவடிக்கே நமஸ்கரித்துத் திரும்பி னார்பின்
உகமானந் தனையறிந்தும் அரனார் சொன்ன
உளவுகண்டார் புசுண்டரெனுங் காகந் தானே. 10

உடனே ஈசனார் வசிட்டரை அழைத்துக் காகபுசுண்டரை அழைத்து வரக் கூறினார். எல்லா உலகிற்கும் ஒளி தரும் சோதியின் திருவடியை வசிட்டர் வணங்கித் திரும்பி வந்தார். இதனால் தமக்கு நிகர் யார் என அறிந்து புசுண்டராகிய காகம் இறைவன் செய்த உளவை அறிந்து கொண்டார்.

காகமென்ற வேடமதாய் விருட்ச மீதிற்
காத்திருந்தார் வசிட்டரவர் கண்டார் நாதர்
ஏகமதாய் எட்டான வசிட்ட ரே! நீர்
எங்குவந்தீர்? வாரும்என்றே இடமும் ஈயத்
தாகமுடன் ஈசரும்மை யழைக்கச் சொன்னார்.
சங்கதியைத் தங்களிடஞ் சாற்ற வந்தேன்;
பாகமுடன் எட்டான விவரந் தன்னைப்
பத்தமெய்ஞ் ஞானபொருள் அருள்பெற் றோரே. 11

மரத்தின் மீது புசுண்டர் காக்கையின் வடிவத்தில் அமர்ந்து இருப்பதை வசிட்டர் கண்டார். அப்போது காக புசுண்டர் "எவர்க்கும் எட்டாது இருக்கும் வசிட்டரே, எங்கு வந்தீர்" என்று வரவேற்று இடம் தந்தார். "இறைவன் உம்மை அழைக்கச் சொன்ன செய்தியைச் சொல்ல வந்தேன். எட்டுவித விவரமும் பத்துவித மெய்ஞ்ஞானமும் பெற்றவர் நீரே" என்றார் வசிட்டர்.

பெற்றோரே யென்றுரைத்தீர் வசிட்ட ரே!நீர்
பிறந்திறந்தே எட்டாங்காற் பிறந்து வந்தீர்;
சத்தான சத்துகளும் அடங்கும் காலம்
சக்கரமுந் திரும்பிவிட்டாற் சமயம் வேறாம்
சித்தான பஞ்சவர்கள் ஒடுங்கும் போது
சேரவே ரிஷிமுனிவர் சித்த ரோடு
முத்தாக அஞ்செழுத்தில் ஒடுக்க மாவார்
முத்துமணிக் கொடியீன்றாள் முளைத்திட் டீரே. 12

''வசிட்டரே! நீர் பிறந்தும் இறந்தும் எட்டாம் நிலைக்கு வந்தீர். அழியாத நிலைப் பொருள்களும் அடங்கும் ஊழிக் காலம் திருமால் சக்கரம் நின்றால் நடப்பது வேறு ஆகும். இவ்வூழியில் ஐந்து பூதங்களும் ஒடுங்கும். ரிஷிகள் சித்தர் முனிவர் ஆகியோரும் திருஐந்தெழுத்தில் ஒடுங்கிப் போவர். பிறகு பராசக்தியால் மீளுவர்.''

விளக்கம்: ஊழிக்காலத்தும் சித்தர்கள் இருப்பதை இது விவரிக்கிறது.

முளைத்திட்டீ ரித்தொடெட் டுவிசை வந்தீர்
முறையிட்டீ ரிவ்வண்ணம் பெருமை பெற்றீர்;
களைத்திட்டுப் போகாதீர் சொல்லக் கேளும்;
கண்டமதில் விடம்பூண்டார்க்கு அலுவ லென்ன?
கிளைத்திட்டுப் போனக்கால் மறந்து போவார்
கிளர்நான்கு யுகந்தோறு மிந்தச் செய்கை
பிழைத்திட்டுப் போவமென்றா லங்கே போவாம்
பேய்பிடித்தோர் வார்த்தைசொல்ல நீர்வந் தீரே. 13

''இப்படி எட்டு ஊழிக்குப் பின் திரும்பவும் வந்தீர். களைப்படையாது சொல்லக் கேளும். நீலகண்டர் செயல் என்ன? நான்கு யுகத்திலும் இப்படி மீட்பார். இதை உணராது பேய்ப் பிடித்தோர் வார்த்தைகளை நீரும் சொல்லாதீர்.''

விளக்கம்: ரிஷிகளை விடச் சித்தர் நீண்டு வாழ்வார் என்பது இதன் கருத்தாகும்.

வந்தீரே வசிட்டரே! இன்னங் கேளும்;
வளமைதான் சொல்லிவந்தேன் வேடம் நீங்கி
இந்தமா மரக்கொம்பி லிருந்தே னிப்போ
திதுவேளை யெவ்வளவோ சனமோ காணும்
அந்தமோ ஆதியோ இரண்டுங் காணார்
அவர்களெல்லாம் ரிஷியோகி சித்த ரானார்
சந்தேக முமக்குரைக்கப் போகா தையா!
சாமிக்கே சொல்லுமையா இதோவந் தேனே. 14

"வசிட்டரே, என் வேடத்தை நீக்கி வளப்பமானதைச் சொல்லி வந்தேன். இதே மாமரக் கிளையில் இருந்து மாந்தர் பலரும் பிறந்து இறந்து போவதையும் கண்டேன். உம் ஐயங்கள் எதையும் முழுதுமாகத் தீர்க்க முடியாது. சிவபெருமானிடம் சொல்லுங்கள். இதோ வந்தேன்."

வந்தேனே யென்றுரைத்த வாறு கொண்டு
வசிட்டருமே வாயுலர்ந்து காலும் பின்னி
இந்தேனே முனிநாதா! சரணங் காப்பீர்
என்றுசிவன் சபைநாடி முனிவர் வந்தார்.
மைந்தனையே யீன்றருளுங் கடவுள் நாதா!
மாமுனிவன் வாயெடுக்கப் புசுண்டர் சொல்வார்;
சிந்தனைசெய் ஈச்சரனே வந்தேனையா
சிவசிவா இன்னதென்று செப்பி டீரே? 15

வசிட்டர் இதைக் கேட்டு வியப்பில் வாயுலர்ந்தார். கால்களும் பின்னின. "முனிநாதரே உமக்குச் சரணம் செய்தேன்" இவ்வாறு கூறிச் சிவனின் அவையை நாடி ரிஷியுடன் முனிவரும் வந்தார். இவர் வரவை வசிட்டர் கூற வாய் திறந்ததும் "ஈசுவரனே, வந்தேன். சிவசிவா, அழைத்த காரணம் என்ன என்று அருளுவீராக."

செப்புமென்ற புசுண்டமுனி முகத்தை நோக்கிச்
சிவன்மகிழ்ந்தே ஏதுமொழி செப்பு வார்கேள்;
கொப்புமென்ற யுகமாறிப் பிறழுங் காலம்
குருநமசி வாயமெங்கே பரந்தா னெங்கே?
அப்புமெந்தப் பஞ்சகணத் தேவ ரெங்கே?
அயன்மாலும் சிவன்மூவ ரடக்க மெங்கே?
ஒப்புமிந்த யுகமாறிப் பிறந்த தெங்கே?
ஓகோகோ முனிநாதா வுரைசெய் வீரே! 16

புசுண்ட முனிவர் முகம் பார்த்து ஈசுவரனும் பேசினார். "யுகங்கள் மாறிப் பிறழும் காலத்தில் குருநமசிவாயமும், பரமும், பஞ்சபூத தேவர்களும், மும்மூர்த்திகளும், எங்கே ஒடுங்கினர்? இந்த யுகமாறி எப்படி வெளிப்படுவர்? என நீர் கூறுவீராக" என்று ஈசனே கேட்டார். மும்மூர்த்திகளுக்கும் மேலான பிரம்மத்தில் ஐக்கியமான புசுண்டர் மேலும் கூறினார்.

உரையென்றீர் உந்தமக்குப் புத்தி போச்சு;
உம்மோடே சேர்ந்தவர்க்கும் மதிகள் போச்சு
பரையென்றால் பரைநாடி நிலைக்க மாட்டீர்;
பரமசிவன் தான்என்னும் பேரும் பெற்றீர்;
இரையென்றால் வாய்திறந்து பட்சி போல
எல்லோரும் அப்படியே இறந்திட் டார்கள்;
நிறையென்ற வார்த்தைகளைச் சொன்னே னானால்
நிசங்கொள்ளத் தந்தரங்கள் நிசங்கொள் ளாதே. 17

"யுக முடிவில், மும்மூர்த்திகளில் ஒருவரான சிவனே, உமக்குப் புத்தி போய்விட்டது. உம்மைச் சேர்ந்தவர்களுக்கும் புத்தியில்லை. பராசக்தி இல்லாது நீர் நிலைக்க மாட்டீர். அதனால் தான் பரமசிவன் என்னும் பெயரும் பெற்றீர். இரை உண்ணும் பறவை இறந்தது போல் எல்லாச் சக்திமான் களும் இறந்தனர். இவை பற்றிக் கூறினால் ஆகமங்களில் இடமில்லாது போகும்" என்று கூறினார் காக புசுண்டர்.

விளக்கம்: சாக்த சமயத்தில் பராசக்தியில் சிவம் ஒடுங்கும் என்பதால் இப்படிக் கூறினார்.

கொள்ளாமற் போவதுண்டோ மவுன யோகி;
கோடியிலே உனைப்போல ரிஷியோ காணேன்;
உள்ளாக ரிஷியொருவர் இல்லா விட்டால்
யுகவார்த்தை யாருரைப்பார் யானுங் காணேன்;
விள்ளாமல் தீராது முனிவனே! கேள்;
மெய்ஞ்ஞான பரம்புகுந்த அருள்மெய்ஞ் ஞானி;
தள்ளாமற் சபையிலுள்ளோர் எல்லாம் கேட்கச்
சாற்றிடாய் முனிநாதா! சாற்றிடாயே? 18

அப்போது சிவன் ''மவுனயோகியே, உம்மைப் போல் கோடியிலே ஒரு ரிஷியைக் காணேன். இப்படி ஒரு ரிஷி இல்லாவிட்டால் யுகமுடிவு வரை நிற்கும் உபதேசம் யாரால் சொல்ல முடியும்? சொல்லாமல் இது புரியாது. மெய்ஞ் ஞான வரம்பில் புகுந்த மெய்ஞ்ஞானியே, எதையும் நீக்காமல் சபையில் உள்ளவர்கள் கேட்க முழுதும் சொல்வீராக'' என்று கூறினார்.

சாற்றுகிறே னுற்றபடி யுகங்கள் தோறும்
தமக்குஉவந்து சொல்லுவதே தவமாய்ப் போச்சு;
மாற்றுகிறேன் கணத்தின்முன் னுரைத்துப் போனேன்;
வாதாட்ட மெனதாச்சே இனியென் சொல்வேன்?
சேற்றிலே நாட்டியதோர் கம்பம் போலத்
திரும்பினது போலாச்சு யுகங்கள் தோறும்;
ஆற்றுகிறான் அந்தமது ஆகும் போது
அரகரா அந்நேரம் நடக்கை கேளே. 19

''யுகங்கள் தோறும் தவம் செய்து இதைச் சொல்ல நேர்கிறது. சில நொடிகளில் இதைச் சொன்னேன். சேற்றில்

நட்ட ஒரு கம்பம் போல் பாதுகாப்பின்றி இந்த உபதேசம். அதனால் யுக முடிவில் நடப்பதைக் கேட்பாயாக.''

கேளப்பா நடந்தகதை சிவமே யுண்மை
கொடியாகச் சக்கரங்கள் திரும்பும் போது
பாளப்பா தசநாதம் மவுனம் பாயும்;
பரமான மவுனமது பரத்திற் சாடும்;
ஏளப்பா அடுக்குகளும் இடிந்து வீழும்
இருந்தசதா சிவம்ஓடி மணியில் மீளும்
கேளப்பா இதுகேளா யெவருஞ் செல்வார்
ஓகோகோ அண்டமெல்லாங் கவிழ்ந்து போமே. 20

''சிவபெருமானே! நடந்த கதையை உமது முன்னிலையில் உண்மையாகக் கூறுவேன். காலச்சக்கரம் திரும்பும் போது பத்துவித ஒலிகளும் மவுனயோகமும் திரும்பும். அதனால் பரம்பொருள் வருவார். இருந்த சதாசிவம் மணி ஒலியாக மீள்வார். அண்டம் எல்லாம் அப்போது கவிழ்ந்து விடும்.

கவிழ்ந்துபோ மப்போது அடியே னங்கே
கருத்துவைத்துத் தியானமொரு தியான முண்டு
தவழ்ந்துபோங் காலமப்போ நிறுத்து வேன்யான்
சமையமதில் அக்கினிபோல் தம்பங் காணுஞ்
சிவந்தவண்ணம் நீலவுருச் சுடர்விட் டேகும்;
சிவசிவா அக்கினிபோற் கொழுந்து வீசும்;
நகர்ந்துஅத னருகேதான் சென்று நிற்பேன்;
நகரமுத லஞ்செழுத்தும் வரக்காண் பேனே. 21

''அண்டங்கள் கவிழும் காலத்திலும் நான் தியானத்தில் இருப்பேன்; சென்ற காலத்தை மீட்டும் நாட்டுவேன். அக்கினி போல் ஒளித் தூண் ஒன்றுண்டு. சிவப்பும் நீலமுமாக அவ்வொளி தோன்றும். நானும் அந்த அக்கினியருகில்

நிற்பேன். 'நமசிவாய' எனும் ஐந்தெழுத்து ஒளிகளும் அப்போது வரக் காண்பேன்.''

காண்பேனே நகரமது மகாரம் புக்கும்
கருத்தான மகாரமது சிகாரம் புக்கும்
தேண்பேனே சிகாரமது வகாரம் புக்கும்
சிவசிவா வகாரமது யகாரம் புக்கும்
கோண்பேனே யகாரமது சுடரிற் புக்கும்
குருவான சுடரோடி மணியிற் புக்கும்
நாண்பான மணியோடிப் பரத்திற் புக்கும்
நற்பரந்தான் சிவம்புக்குஞ் சிவத்தைக் கேளே. 22

''ஆறு ஆதாரங்களிலும் ஓம், ந,ம,சி,வா,ய என்னும் ஆறு ஒலிகள் நிற்கும். இவை முறையே ஒன்றில் மற்றது அடங்கி நிற்கும். கடைசியில் இவற்றின் ஒளி வெளிப்படும். குருவாம் சுடர் மணி நிறத்தில் புகும். மணி ஒளியில் பரம்பொருள் வெளிப்படும். இதில் சிவத்தின் ஒளியும் சேர்ந்து நிற்கும்.''

கேளப்பா சிவம் ஓடி அண்டம் பாயும்
கிருபையாய் அண்டமது திரும்பிப் பாயும்
கோளப்பா அண்டமது கம்பத் தூண்தான்
குருவான தசதீட்சை யொன்று மாச்சு
மீளப்பா தம்பமது விளங்குஞ் செய்கை
மேலுமில்லை கீழுமில்லை யாதுங் காணேன்;
ஆளப்பா நரைத்தமாடு ஏறு வோனே!
அன்றளவோ வின்றளவோ அறிந்தி லேனே. 23

''வெண்ணிற ஏற்றின் மீது ஊர்ந்து வரும் ஈசனே! சிவம் அண்டத்தில் அடங்கும். அண்டம் திரும்பிச் சிவத்தில் படியும். அண்டம் முழுதும் அக்கினித் தூணே நிற்கும். தச தீட்சையும் இங்கே கிடைக்கும்'' என்று கூறினார்.

அறிந்திலே னென்றுரைத்த புசுண்ட மூர்த்தி!
அரகரா உன்போல முனியார் காணேன்;
தெரிந்திலே னென்றுரைத்தார் மனங்கே ளாது
சிவன்நயந்து கேட்கவும்நீ யொளிக்க வேண்டா;
பொருந்திலேன் பூருவத்தில் நடந்த செய்கை
பூரணத்தா லுள்ளபடி புகழ்ந்து சொல்லும்
பரிந்திலேன் மிகப்பரிந்து கேட்டே னையா!
பழமுனியே கிழமுனியே பயன்செய் வாயே. 24

"புசுண்டரே, அறிந்திலேன் என்றீர். உம்மைப் போல் முனிவர் வேறு யார் உள்ளார்? சிவனாகிய யான் விரும்பிக் கேட்பதை நீர் ஒளிக்க வேண்டாம். அது முன் யுகத்தில் நடந்ததுதானே. ஆகையால் பூரணத்தில் உள்ளபடி உம்மைப் புகழ்ந்து கேட்டேன். பழமையான வயது மிக்க முனியே, இதன் பயன் சொல்வீராக" என்றார் சிவன்.

பழமுனிவ னென்றுரைத்தீர் கடவு ளாரே!
பருந்தீபதம்பத்தைப் பலுக்கக் கேளும்;
குழுவுடனே தம்பமதில் யானும் போவேன்
கோகோகோ சக்கரமும் புரண்டு போகும்;
தழும்பணியச் சாகரங்க ளெங்குந் தானாய்ச்
சத்தசா கரம்புரண்டே யெங்கும் பாழாய்
அழகுடைய மாதொருத்தி தம்பத் துள்ளாள்
அரகரா கண்ணாடி லீலை தானே. 25

"இறைவரே! பழமுனிவர் என்றீர். பெரிய தீபதம்பத்தை விரித்துக் கூறக் கேளும். குழுவுடன் இத்தூணின் உச்சி வரை நானும் போவேன். காலச் சக்கரம் அதற்குள் முடிந்து ஓடிவிடும். எல்லாக் கடல்களும் புரண்டு எங்கும் வெள்ளப் பாழாகிப் போகும். மனோன்மணி எனும் பெண் அத் தூணில் உள்ளாள். இது கண்ணாடிக்குள் தெரிவது போன்ற லீலையாகும்."

லீலைபொற் காணுமுகம் போலே காணும்
நிலைபார்த்தால் புருடரைப்போல் திருப்பிக் காணும்;
ஆலைபோற் சுழன்றாடுங் கம்பத் துள்ளே
அரகரா சக்கரங்க ளாறுங் காணும்
வாலைபோற் காணுமையா பின்னே பார்த்தால்
மகத்தான அண்டமது கோவை காணுஞ்
சோலையாய் அண்டமதிற் சிவந்தான் வீசுமிச்
சிவத்திலே அரகரா பரமுங் காணே. 26

"லீலைகள் பலவும் பொன்முகமாய்க் காணும் நிலையை அத்தூணில் பார்த்தால், ஆறு யோகச் சக்கரங்களும் வெளிப் படும். வாலையைப் போல் அவை விளங்கும். அண்ட உச்சி யில் சிவம் தெரியும் அதன் உள்ளேயே பிரம்மமும் தெரியும்."

பரத்திலே மணிபிறக்கும் மணியி னுள்ளே
பரம்நிற்கும் சுடர்வீசும் இப்பாற் கேளும்;
நிரத்திலே சடமதனில் யகாரங் காணும்
நிச்சயமாம் யகாரமதில் வகாரங் காணும்
வரத்திலே வகாரமதிற் சிகாரங் காணும்
வரும்போலே சிகாரத்தில் மகாரம் காணும்
நரத்திலே மகாரத்தில் நகாரங் காணும்
நன்றாமப் பூமியப்போ பிறந்த தன்றே. 27

"பரத்தில் மணி ஒளியும் அதனுள் பிரம்மமும் சுடர் விடும். ஓம், ந, ம, சிவா, ய என்பதும் உடம்பில் மேல் இருந்து கீழாய் 'ய' என்பது தொடங்கி ஓம் என்பது முடிய ஒளி உமிழத் தோன்றும்."

பிறந்ததையா இவ்வளவு மெங்கே யென்றால்
பெண்ணொருத்தி தூணதிலே நின்ற கோலம்
கறந்ததையா யிவ்வளவும் அந்த மாது
சூட்சமதே அல்லாது வேறொன் றில்லை;

கறந்ததையா உலகமெல்லாங் காமப் பாலைக்
காலடியிற் காக்கவைத்துச் சகல செந்தும்
இறந்ததையா இவ்வளவுஞ் செய்த மாது
எங்கென்றா லுன்னிடத்தி லிருந்தாள் கன்னி. 28

“இவை யாவும் மனோன்மணி வரை தீபத்தம்பம் காண்பதால் புலப்படும். (பிராசாதயோகம் இது.) காலடியில் (மூலத்தில்) காக்க வைத்து யோக அமுதத்தை அளிப்பாள். எல்லா உயிர்களும் போன பிறகும் நீடு வாழும் வரை உன்னிடத்தே அக்கன்னி நிற்பாள்.”

இடப்பாக மிருந்தவளும் இவளே மூலம்
இருவருக்கும் நடுவானது இவளே மூலம்
தொடக்காக நின்றவளு மிவளே மூலம்
சூட்சமெல்லாங் கற்றுணர்ந்த திவளே மூலம்
அடக்காக அடக்கத்துக் கிவளே மூலம்
ஐவருக்குங் குருமூல மாதி மூலம்
கடக்கோடி கற்பமதில் நின்ற மூலம்
கன்னியவள் சிறுவாலை கன்னி தானே. 29

“இறைவனின் இடப்பாகத்தில் இருந்தவளும், இடா பிங்களா நாடிக்கு நடுவே மூலாதாரத்தில் இருந்தவளும், தொடர்பு கொள்ள உதவியவளும், எல்லாச் சூக்குமங்களை யும் கற்றுத் தந்தவளும், எல்லாம் அடங்கிய பின்னும் குரு மூலத்துக்குப் பின்னும் மூலமாய் இருப்பவளும், கடைசியான கோடி கற்ப காலத்தில் நிற்கும் மூலமாகிய பெண்ணும், கன்னியான சிறு பெண்ணாம் வாலையே என்றறிக” என்றார் புசுண்டர்.

கன்னியிவ ளென்றுரைத்தார் புசுண்டமூர்த்தி
கர்த்தப்ரபோ மனஞ்சற்றே கலங்கி னார்பின்
மண்ணுள்ள தேவர்களும் பிறப்பித்து இந்த
மார்க்கத்தி லிருப்பதுவோ மவுனப் பெண்ணே!

உன்னிதமா யுன்கருணை யெங்கே காண்போம்
ஓகோகோ ஐவருந்தான் வணங்கினார்கள்
கொன்னியவள் வாக்குரையாள் சிவமே கன்னி
கொலுமுகத்தில் நால்வரும்போய் வணங்கி னாரே. 30

புசுண்டர் இவளைக் குமரி என்று கூறினார். ஈசன் அப்போது மனம் கலங்கினார். எல்லாத் தேவர்களையும் உண்டாக்கி மவுனமாக இவள் இருக்கிறாள். இவள் பெருமையை உணர்ந்த ஐந்து கடவுளரும் (சிவதத்துவம் ஐந்தும்) இவளை வணங்கினர்.

வாலையாகிய கன்னி வாய் திறந்து பேசாள். அவள் முன்னால் அனைவரும் சென்று வணங்கினர்.

வணங்கியவர் வாய்புதைந்து நின்றார் பின்னே
மாதுகலி யாணியென வசனித் தார்கள்
வணங்கினார் தேவரொடு முனிவர் தாமும்
மற்றுமுள்ள தேவர்களும் நவபா டாளும்
வணங்கினார் அட்டகசம் திகிரி யெட்டும்
வாரிதியுஞ் சேடனுமா லயனு மூவர்
வணங்கினார் மிகவணங்கித் தொழுதா ரப்போ
வாலையவள் மெய்ஞ்ஞானம் அருள் ஈவாளே. 31

அனைவரும் அவளை வணங்கி அடக்கமாக வாயைப் பொத்தி நின்றனர்; கல்யாணி என்று அவளைக் கூறினார்கள். தேவர்களும், முனிவர்களும் எட்டுத் திக்குப் பாலகரும், நவமான தேசமான் பலரும், திக்குயானைகளும், எட்டுத் திசை மலைகளும், வருணன் முதலிய காவலரும், மும்மூர்த்தி களும் இவ்வாலைப் பெண்ணையே முழுதாக வணங்கினர். காரணம் மெய்ஞ்ஞானம் வழங்குபவள் இப்பெண்ணே யாம்.

அருளீவாள் திருமணியை மாலை பூண்டாள்
அரகரா சின்மயத்தி னீறு பூசிப்
பொருளீவா ளவரவர்க்கும் ஏவல் சொல்லிப்
பொன்றாத பல்லுயிர்க்கைக் கிடங்கள் வேறாய்த்
தெருளீவாள் சிவயோகந் தெளிவ தற்குச்
செயலுறுதி யாகவல்லோ தெரிய வேண்டித்
தெருளீவாள் தாயான சிறிய வாலை
சிவசிவா சூட்சம்பூ ரணமு முற்றே. 32

அருள்புரிபவளாகிய இவள் திருமாலின் மார்பில் உள்ள கவுத்துவமணியை பூண்டிருந்தாள். எல்லார்க்கும் எல்லாப் பணிகளும் சொல்லித் திருநீறு பூசிச் சிவயோகத் தெளிவு தந்தாள். சிறிய வாலைப் பெண்ணே சூட்சுமமாகிய பரிபூரணம் ஆவாள்.

பூருவத்தில் நடந்தகதை இதுதான் என்று
புகன்றுவிட்டுப் புசுண்டருந்தம் பதிக்குச் சென்றார்;
காரணத்தி லேவகுத்து அளித்த ஞானங்
கம்பமணி வாலைகொலுக் கூட்டம் அப்பா
நாரணத்தில் நின்றிலங்கும் மவுன வாலை
நாட்டினாள் சிவராச யோகங் கேளு
ஆரணத்தி பூரணத்தி யருள்மெய்ஞ் ஞானி
ஆதிசத்தி வேதமுத்தி யருள் செய்வாளே. 33

இவ்வுலக உற்பத்திக்கு முன் நடந்த கதை இதுவே என்று சொல்லிவிட்டுத் தம்மிடம் திரும்பினார் காக புசுண்டர். ‘‘உரிய காரணத்தால் இதைச் சொன்னேன். வாலைப் பெண் தீபத்தூணில் இருப்பவள்; நாராயணன் உலகிலும் மவுனமாயிருப்பவள். இவளே சிவராச யோகம் விளக்கியவள். வேதத்தில் பூரணமாகப் பேசப்பட்ட ஞானி இவளே. ஆதிசத்தியும் வேதத்தின் முத்தியும் அருள்பவள் இவளேயாவாள்’’ என்று கூறி விட்டுச் சென்றார் சித்தர்.

# IV. காக புசுண்டர் குறள் (16)

## குறள் வெண்பா

சின்மயத்தைப் போற்றிச் சிவராச யோகத்தில்
நன்மை பராபரத்தை நாடு. 1

அண்ட முடிமீதில் அங்கிர விமதியைக்
கண்டுதரி சித்தல் கதி. 2

வலமிடமாய் நின்ற மதிரவியை மாறி
விலகா தடியினிற்பின் வீடு. 3

அறுபத்து நால்யோகம் அவ்வளவுந் தள்ளி
ஒருபொழுதும் உண்டுநிலை யோர். 4

உலகமே மாயமென வுன்மனதிற் கண்டு
நலமாக நாதனடி நம்பு. 5

சித்தர் பதினெண்மர் செய்கையில் தோன்றாத
அத்தனரு ளும்புசுண்டன் யான். 6

சொன்னே னறிந்து சுகமா யுலகோருக்கு
எந்நாளும் வாழ்கவென்றே யான். 7

கண்ணுள் மணியாகிக் காரணமாய் நின்றான்
மண்ணுள் முதிர்பதியு மாறு. 8

1. சிவராச யோகத்தில் நன்மையான பராபரத்தை அடையச் சின்மயத்தை நாடுக.

2. தலை உச்சியில் அக்கினி, சூரியன், சந்திரன் என்ற மூன்று நாடிகளைக் காண்பதே முறை.

3. வலப்பக்கம் இடப்பக்கமாக இருக்கும் பிங்களா, இடா நாடிகளை விட்டு விலகாமல் அவற்றை மனத்தில் பதித்தால் வீடுபேறு கிடைக்கும்.

4. அறுபத்து நான்கு வகை யோகத்தையும் நீக்கி ஒரே வழியில் பிடியாக நிற்பீராக.

5. உலகத்தையே மாயம் என்று கருதி இறைவனே அழியாதவன் என்று நம்பி அவன் அடியில் நிற்பீராக.

6. பதினெட்டு வகைச் சித்தரும் செய்யாத செய்கையை இறையருளால் சொல்லும் புசுண்டன் நானே.

7. உலகினர் எல்லாரும் எல்லாக் காலத்தும் வாழ வேண்டும் என்பதற்காக இவற்றைச் சொன்னேன்.

8. இறைவன் மண்ணில் யாவும் விளங்கும்படிக் கண்ணின் மணி போல் காவலுக்கு நின்றான்.

விண்டனே ஞானம் வெளியாக முப்பத்தி
ரண்டில் அறிவீர் நலம். 9

நேத்திரத்தைக் காகம்போல் நிச்சய மாய்நிற்க
ஆத்துமத்தில் ஆனந்த மாம். 10

உலகி லறிந்தோ ரொருநாளும் மாளார்
பலநினைவை விட்டுநீ பார். 11

கண்டோருஞ் சொல்லார் கருத்தாற் பெரியோரைத்
தொண்டுசெய்து பெற்ற சுகம். 12

ஆதியிற் சொன்னவியர் அண்டம் அதையெடுத்து
மாதுசிவன் பூசைசெய்து வை. 13

முப்பொருளைச் சுட்டு முழுதுஅழுது நீறாக்கித்
தப்பாம லுண்டுநிலை சார். 14

யோகமுடன் கற்பம் உரைத்தேன் ஈரெட்டினில்
வேகமுடன் கண்டுணரு வீர். 15

வாசிமுனி மைந்தா மருவு பிரமத்தில்
மோசம்வா ராகுறள்முற் றும். 16

9. முப்பத்திரண்டாகப் பாடிய குறட்பாக்களால் ஞானம் முழுதும் நலமாக அறிவீர்.

10. காகத்தின் இரு கண்ணில் ஒரு மணிபோல் எல்லா வற்றுக்கும் காரணமான ஆத்துமம் ஒன்றேயாம்.

11. பலவற்றையும் மனத்திலிருந்து அகற்றி, இவற்றை அறிந்தோர் ஒருநாளும் சாவதில்லை.

12. பெரியோரைத் தொண்டு செய்து பெற்ற சுகத்தைக் கருத்தினால் கண்டவர்களும் என்போல் சொல்லமாட்டார்கள்.

13. ஆதியில் காணும் அண்டத்தை எடுத்துப் பராசத்தி யுடன் சிவனைப் பூசித்து உள்ளத்தில் இருத்து. (இது மூலாதாரம்)

14. மூன்று மண்டலங்களிலும் (உடம்பில்) யோகம் கண்டு அனுபவித்து தவறாமல் அவற்றைச் சாருக.

15. இப்பதினாறில் யோகமும் கற்பகாலமும் உரைத் தேன். இவற்றை விரைவாக அறிக.

16. வாசிமுனிமைந்தனே, பிரமத்தில் ஈடுபடுக. இதனால் மோசம் வாராது. (மோசம் - மரணம்)

## காக புசுண்டரின் பாடல்கள் அனைத்தும்

மூலமும் உரையும் முற்றும்.

# 8. சங்கிலிச் சித்தர் பாடல்கள்

சங்கிலி என்ற குலதெய்வப் பெயர் பெற்றவராகவோ, அதன் அருள் பெற்றவராகவோ இருக்கலாம்.

## சங்கிலிச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### கும்மி

மூலக்க ணேசன் அடிபோற்றி எங்கும்
முச்சுட ராகிய சிற்பரத்தில்
வாலை திரிபுரை அம்பிகை பாதத்தை
மனத்திற் கொள்வாய் ஆனந்தப் பெண்ணே. 1

எங்கள் குருவாம் திருமூலர் பாதம்
எப்போதும் போற்றித் துதித்தோன்
சங்கைகள் அற்றமா சித்தர்கு ழாங்களின்
தாளைப் பணிவாய் ஆனந்தப் பெண்ணே. 2

ஓங்கார வட்டம் உடலாச்சு பின்னும்
ஊமை எழுத்தே உயிராச்சு
ரீங்காரம் ஸ்ரீங்கார மான வகையதை
நீதான் அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 3

அகாரம் உகாரத் துடன்பொருந்த அது
யகார மானது அறிந்துகொண்டு
சிகார மான தெளிவினி லேநின்று
தேர்ந்து கொள்வாய் ஆனந்தப் பெண்ணே. 4

1. ஆனந்தப் பெண்ணே! மூலாதாரக் கணபதியின் திருவடிகள் போற்றி, முச்சுடர் உள்ள சிற்பரமாகிய புருவ மத்தியில் வாலை திரிபுரசுந்தரி அம்பிகையின் பாதத்தை மனத்திற் கொள்க.

2. ஆனந்தப் பெண்ணே! எங்கள் குருவாகிய திருமூலரை நான் எப்போதும் வணங்கினேன். ஐயமற்ற பெரும் சித்தர் குழுவின் திருவடிகளைப் பணிவாய்.

3. ஆனந்தப் பெண்ணே! ஓம் எனும் எழுத்தில் உண்டான நிற ஒளி வட்டமே உடலானது. 'ம்' எனும் (ஊமை எழுத்து) எழுத்தே அந்த உடலில் உயிரானது. ஹ்ரீம் என்பதும் ஸ்ரீ என்பதும் சக்திக்குரிய பிரணவம் எனறு நீ அறிவாயாக.

4. ஆனந்தப் பெண்ணே! அகரம் வயிற்றின் மேல் நான்கு விரல் உயரம். உகரம் அதற்கு மேல் எட்டு விரல் உயரம். இதையறிந்து ஒலியை எழுப்பினால் அது புருவ மத்தி யாகிய 'ய' என்பதில் போய் நிற்கும். 'சி' என்பது மார்பின் நடுவாகும். அதையும் தெளிந்து கொள்க. (மார்பு நடு முதல் தோள் வரை எல்லை)

விளக்கம்: அகரம் உகரம் இவற்றின் இடம் பிராசாத யோகத்தால் உணர்க. 'சி' 'ய' என்பதை நடராசர் மேனியில் 'நமசிவாய' மந்திரம் செல்லும் இடத்தால் அறிக.

பஞ்சபூ தங்களைக் கண்டறிந்தோர் இகப்
பற்றினைச் சற்றும் நினைப்பாரோ
சஞ்சலம் இல்லாது யோக வழியதைத்
தானறிந்துஉய்வாய் ஆனந்தப் பெண்ணே 5

தவநி லையை அறிந்தோர்க்கு ஞானந்
தன்னால் தெரியும் எனவேதான்

நவசித் தாதிகள் கண்டு தெளிந்ததை
நன்றாய் அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 6

வாசி நிலையை அறிந்துகொண்டால் தவம்
வாச்சுது என்றே மனதுகந்து
தேசி எனும்பரி மீதேறி நாட்டம்
செய்தது அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 7

நந்தி கொலுவைத் தெரிந்தோர்கள் வாசி
நாட்டம் விடார்கள் ஒருக்காலும்
உந்திக் கமலத்தில் அந்தணன் பீடத்தை
உற்றறிந்து உய்வாய் ஆனந்தப் பெண்ணே. 8

5. ஆனந்தப் பெண்ணே! உடம்பில் பஞ்சபூதக் கலப்பைக் கண்டு அறிந்தோர் இவ்வுலகப் பற்றை நினைக்க மாட்டார்கள். சிறிதும் துன்பமின்றி யோக வழியை அறிந்து உய்வாயாக.

6. ஆனந்தப் பெண்ணே! தவநிலை அறிந்தோர்க்கு எல்லாம் தாமே தெரியும். ஆகவே நவநாதராகிய சித்தர்கள் தெளிவாக உணர்த்தியதை நன்கு அறிவாய்.

7. ஆனந்தப் பெண்ணே! பிராணாயாமம் நன்கு பழகினால் யோகம் வாய்த்தது என்று மனம் மகிழலாம். பிறகு உள்ளொளியாகிய குதிரையில் ஏறிப் புருவ மத்தியில் சென்று எல்லாம் அறிவாயாக.

8. நந்தியெம் பெருமான் கூட்டிய சபையில் இருந்து யோகம் கற்றோர் தம் குறிக்கோளை ஒரு நாளும் கை விடார்கள். உந்திக் கமலத்தில் முதலில் நின்று அதன் கீழே செல்லும் பிரமன் இருப்பிடமாகிய சுவாதிட்டானத்தை உற்று அறிவாயாக.

மாலுந் திருவும் வசித்திருக்கும் இடம்
வணங்கி இப்பால் செல்லும்போது

மேலும் உருத்திரன் ருத்திரி சேவையை
மேவியே காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 9

எந்தெந்தப் பூசை புரிந்தாலும் பரம்
ஏகம்என்றே கண்டு அறிந்தாலும்
சிந்தையும் அடங்கும் உபாயம் சதாசிவன்
சீர்பாதம் அல்லவோ ஆனந்தப் பெண்ணே. 10

தானே தானாக நிறைந்துநின்ற சிவ
தற்பரம் ஆகிய உற்பணத்தை
நானேநான் என்று அறிந்துகொண் டுபர
நாட்டம் அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 11

வஞ்சப் பிறப்பும் இறப்புக்கும் ஏகு முன்
வாசனை என்றே அறிந்துகொண்டு
சஞ்சல மற்றுப்பி ராணாயமஞ் செய்திடில்
தற்பர மாவாய் ஆனந்தப் பெண்ணே 12

*9.* ஆனந்தப் பெண்ணே! மணிப்பூரகத்தில் (உந்தி) திருமாலும் திருமகளும் இணைந்திருப்பர். அதைத் தாண்டிச் செல்லும்போது ருத்திரன் ருத்திரியுடன் இருப்பதைக் காணலாம்.

விளக்கம்: இவை விஷ்ணுக் கிரந்தி, உருத்திரக் கிரந்தி என்ற உடம்பின் மண்டலப் பகுதியைக் குறிக்கும்.

*10.* ஆனந்தப் பெண்ணே! ஒவ்வோர் ஆதாரத்திலும் உள்ள கடவுளர்களைக் கண்டு பூசித்தாலும், கடவுள் ஒன்றே என்று சுழுமுனை நாடியின் ஏகமான (தனித்த) ஒளித்தூணை அறிந்தாலும், சிந்தை அடங்கும் வழியாக விளங்குவது சதாசிவனின் சிறப்பான பாதமாகும்.

*11.* ஆனந்தப் பெண்ணே! தானே தனக்கு ஆதாரமாய் எங்கும் நிறைந்து நின்ற (தற்பரம்) கடவுளை - நானே அது

ஆக உள்ளேன் என்று அறிந்து பரவெளியில் செல்லும் பாதையை அறிவாய்.

*12.* ஆனந்தப் பெண்ணே! பிறப்பு இறப்புக்குச் சென்ற பிறவி வாசனையே காரணம் என அறிந்து கொண்டு, கவலையை நீக்கிப் பிராணாயாமம் செய்தால் நீயே (தற்பரம்) கடவுள் ஆவாய்.

சரியை கிரியை கடந்தாலும் யோகம்
சாதித்து நின்றருள் பெற்றாலும்
உரிய ஞானவி சர்க்கம் இலாவிடில்
ஒன்றும் பயனின்று ஆனந்தப் பெண்ணே. 13

தன்னைஇன் னானெனத் தான்தெரிந்தால் பின்னும்
தற்பர னைப்பார்க்க வேணுமோதான்
அன்னையும் அப்பனும் போதித்த மந்திரம்
அறிந்தவன் ஞானி ஆனந்தப் பெண்ணே. 14

எண்சாண் உடம்பும் இதுதாண்டி எழில்
ஏற்கும் நவவாசல் உள்ளதடி
தண்மை அறிந்து நடப்போர்க்கு எட்டுத்
தலங்கள் தோணும் ஆனந்தப் பெண்ணே. 15

அஞ்சுபேர் கூடி அரசாள ஒரு
ஆனந்தக் கட்டடங் கட்டிவைத்த
செஞ்சிக் கோட்டையைக் கண்டிது தானெனத்
தெரிந்து கொள்வாய் ஆனந்தப் பெண்ணே. 16

*13.* ஆனந்தப் பெண்ணே! சரியை கிரியை எனும் நெறிகளில் சாதித்து நின்று அருள் பெற்றாலும், ஞான விசாரணையில் ஈடுபடாமல் எந்தப் பயனும் பெற இயலாது.

*14.* ஆனந்தப் பெண்ணே! தன்னை யார் என்று தெளிவாக அறிந்த பின் தற்பரனாகிய கடவுளைப் பார்க்கத் தேவை இல்லை. அன்னையும் அப்பனும் பிறக்கும் போதே நமக்குப் போதித்த மந்திரம் எத்தகையது என அறிந்தவன் ஞானியாவான்.

விளக்கம்: இது இயற்கையாக நமக்குள் இருக்கும் நாதமாகும். இதில் ஓம் என்பதை மனத்தால் எழுப்பினால், குண்டலினி நிற ஒளியாக மேலே ஏறிச் செல்லும்.

*15.* ஆனந்தப் பெண்ணே! எண்சாண் உடம்பிற்கு மேல் உணர்வு போகும்போது நமக்குள் உள்ள ஒன்பது வாயிலும் கவசமாகும். இதை நன்கு அறிந்து நடப்போர்க்குப் புரியட்டகம் எனும் பிரபஞ்ச மூலங்கள் எட்டும் தோன்றும்.

*16.* ஆனந்தப் பெண்ணே! ஐந்து புலன்களும் இவ் வுடம்பில் அரசாளுகின்றன. அந்த உயர்ந்த கோட்டையைக் கண்டு இதுவே யாவும் எனத் தெரிந்து கொள்க.

விளக்கம்: செஞ்சி மலை உச்சியில் கோட்டை உள்ளது. அப்படித் தலையில் சகஸ்ராரம் உள்ளது என அறிக. செஞ்சிக்கோட்டை *17* அல்லது *18* ஆம் நூற்றாண்டிற்கு உரியது என்பது கொண்டு இவர் காலமும் அறிக. ஆனந்தக் கட்டடம் - தலையில் உள்ள சகஸ்ராரம்.

ஊத்தைச் சடலம் இதுதாண்டி
உப்பிட்ட பாண்டமும் இதுதாண்டி
பீத்தத் துருத்தி இதுதாண்டி நன்றாய்ப்
பேணித் தெளிவாய் ஆனந்தப் பெண்ணே. 17

ஆத்தாள் எந்தனைப் பெற்றுவிட்டாள் என்தன்
அப்பனும் என்னை வளர்த்துவிட்டான்
வேத்தாள் என்று நினையாமல்இதன்
விபரங் கேட்பாய் ஆனந்தப் பெண்ணே. 18

இந்தச் சடலம் பெரிதென எண்ணி யான்
இருந்து வீண்காலந் தான்கழித்துச்
சொந்தச் சடலம் எதுவெனப் பார்த்திடில்
சுத்தமாய்க் காணோம் ஆனந்தப் பெண்ணே. 19

மணக்கோலம் கண்டு மகிழ்ந்தபெண் ணோடுபின்
மக்களைப் பெற்று வளர்த்துஎடுத்துப்
பிணக்கோலம் ஆவது அறியாமல் வீணே
பிதற்றுவது ஏதுக்கு ஆனந்தப் பெண்ணே. 20

*17.* ஆனந்தப் பெண்ணே! மலத்தாலும் உப்பினாலும் ஆகிய எங்கும் துவாரம் மூடப்படாத இந்த உடலைத் தாண்டி நன்கு மேல் உணர்வைப் பேணுக. (நவ துவாரங் களும் மயிர்த்துளைகளும் மூடாது இருப்பதால் பீத்தத் துருத்தி என்றார். மூச்சு வாங்குவதைக் கொல்லன் உலைத் துருத்தியாகக் காட்டினார்)

*18.* ஆனந்தப் பெண்ணே! தாய் என்னைப் பெற்றாள். தகப்பன் என்னை வளர்த்தான். இவர்களை விட வாலைப் பெண் வேற்று ஆள் எனக் கருதாமல் இதன் விபரங்களைக் கேட்டு அறிக.

*19.* ஆனந்தப் பெண்ணே! இவ்வுடலே பெரியது என எண்ணி நான் வீணாகக் காலம் கழித்தேன். உள்ள படி எனக்குச் சொந்தமான உடல் எது எனப் பார்த்தால் முழுதும் என் பார்வைக்கு அது புலப்படவில்லை.

*20.* ஆனந்தப் பெண்ணே! ஒரு பெண்ணை மணம் செய்து கொண்டு பிள்ளைகளைப் பெற்று வளர்த்தாலும் அவர்கள் யாவரும் ஒரு காலத்தில் பிணமாகவே ஆவார்கள் என்பதை அறியாமல் வீணே பிதற்றுவது எதற்கு?

எல்லாப் பொருள்களும் எங்கிருந்து வந்த
என்றுநான் உற்றிதைப் பார்க்கையிலே

நல்லதோர் மண்ணினில் உற்பத்தி என்றுபின்
நன்றாய்த் தோணுதே ஆனந்தப் பெண்ணே. 21

செத்தபின் கொண்டே சமாதிசெய்து அப்பால்
சிலநாள்கள் கழித்துஅந்த மண்ணெடுத்து
உய்த்துஓர் பாண்டம் ஆகச் சுட்டுப்பின்
உலகோர்க் குதவு ஆனந்தப் பெண்ணே. 22

சகல பொருள்களும் மண்ணாய் இருப்பதைச்
சற்று நிதானித்துப் பார்க்கையிலே
பகவான் அங்கங்குள் ளெண்ணெயைப் போலவே
பற்றி இருப்பார் ஆனந்தப் பெண்ணே. 23

மண்ணில் பிறந்தது அழிந்துவிடும் பார்த்து
வைத்த பொருளும் அழிந்துவிடும்
கண்ணினில் காண்பது அழிந்து விடுமென்று
கண்ட றிந்துகொள் ஆனந்தப் பெண்ணே. 24

*21.* ஆனந்தப் பெண்ணே! எல்லாப் பொருள்களும் எங்கிருந்து தோன்றின என்று ஒவ்வொன்றாகச் சிந்தித்தால், மண்ணில் தான் அவை தோன்றின என்பது நலமாகத் தோன்றும்.

*22.* ஆனந்தப் பெண்ணே! செத்தபிறகு அவ்வுடலைச் சமாதி செய்து, சில காலம் கழித்த பின் அதே சமாதி மண்ணை எடுத்துப் பாத்திரம் செய்து சுட்டால் உலகினர்க்கு உதவும்.

விளக்கம்: இதனால் மண் தன்மை மாறாதது அறிவிக்கப் பட்டது.

*23.* ஆனந்தப் பெண்ணே! எல்லாப் பொருள்களும் முடிவில் மண்ணாகவே போகும். இதை நிதானமாகப் பார்த்தால் கடவுள் எள்ளில் எண்ணெய் எங்குமாய்ப் பரந்து இருப்பது போல் பிரபஞ்சம் முழுதும் பரவி இருப்பார் என அறியலாம்.

**24.** ஆனந்தப் பெண்ணே! மண்ணில் தோன்றிய எவையும், சேர்த்து வைத்த பொருளும், கண்ணால் காணப் படும் எதுவும் அழிவது திண்ணம் என்று அறிந்து கொள்க.

பெற்ற தாய்தந்தை சதமாமோ? உடல்
பிறப்புச் சுற்றமும் சதமாமோ
மற்றுஉள் ளோர்கள் சதமாமோ கொண்ட
மனைவி சதமாமோவாய் ஆனந்தப் பெண்ணே. 25

யாரார் இருந்துஞ் சதம்அலவே நம
ஆத்துமா கூடுவிட்டுப் போகும்போது
ஊரார் ஒருவர் சதமிலை என்பதை
உற்றுநீ காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 26

இந்த வழியைத் தெரிந்துகொண்டே இவ்
இகத்தும் பரத்துமாய் சித்தன்என்றே
சொந்தம தாகஎன் பாட்டன் போகரிஷி
சொல்லை அறிவாய் ஆனந்தப் பெண்ணே. 27

வழிதெரி யாது அலைந்தோர்கள் இந்த
மாநிலந் தன்னில் கோடானகோடி
சுழிமுனை தன்னைத் தெரிந்து கொண்டால்பின்
சுகவழி கண்டோர் ஆனந்தப் பெண்ணே. 28

**25.** ஆனந்தப் பெண்ணே! பெற்ற தாயும், தந்தையும், உடன்பிறந்தோரும், உறவினரும் மற்றும் உள்ள அனை வரும், மனைவியும் ஆகிய யாவரும் நிலையானவர்கள் இல்லை என்று அறிந்து உணர்க.

**26.** ஆனந்தப் பெண்ணே! யாரும் இவ்வுலகில் நிலை யல்லர். ஆத்துமாவாகிய உயிர் உடலை விட்டுப் போகும் போது ஊரில் உள்ள எவரும் அங்கேயே இருக்கப் போவ தில்லை என்று உற்று உணர்வாயாக.

27. ஆனந்தப் பெண்ணே! இதனை அறிந்து இவ்வுலகிலும் மேல் உலகிலும் சித்தனாக விளங்கும் என் தாத்தா போக முனிவர் கூறிய கருத்தை உணர்க. (போகரின் சீடருக்குச் சீடராகையால் தாத்தா என்றார்)

28. ஆனந்தப் பெண்ணே! மேல் உலகில் வாழும் வழி தெரியாது அலைந்தவர்கள் கோடிக்கணக்கான சுழுமுனை நாடிகள் இருப்பதையும், அவற்றினுள் உணர்வைச் செலுத்துவதையும் தெரிந்து கொண்டால் சுகத்துக்கான வழி அது என அறியலாம்.

ஆசைஒ ழிந்தருள் ஞானம்கண்டு வீண்
ஆண்மையைத் தான்சுட் டறுத்துத் தள்ளி
பாசத்தை விட்டுநீ யோகத்தைச் செய்திந்தப்
பாரினில் வாழ்வாய் ஆனந்தப் பெண்ணே. 29

இரவைப் பகலாய் இருத்தித்தெரிந்து நீ
ஏக வெளியையும் கண்டறிந்த
விரைவாய் இந்த விதம்தெரிந் தால்இம்
மேதினி போற்றும் ஆனந்தப் பெண்ணே. 30

பெற்றதாய் தந்தை இருந்தால்என் கொண்ட
பெண்டீர் பிள்ளை இருந்தால்என்
நற்தவஞ் செய்யாது இருக்கில் நமனுக்கு
நாம்சொந்தம் காண்பாய் ஆனந்தப் பெண்ணே. 31

தீர்த்தம் ஆடிக் குளித்தாலும் பல
தேவா லயம்சுற்றி வந்தாலும்
மூர்த்தி தரிசனஞ் செய்தாலும் நாலாம்
மோனம் உண்டோசொல் ஆனந்தப் பெண்ணே. 32

29. ஆனந்தப் பெண்ணே! ஆசையை நீக்கி, அருள் ஞானம் பெற்று, தன் முனைப்பை முழுதும் நீக்கி,

பாசத்தையும் விட்டு நீ யோகத்தைச் செய்தால் இவ்வுலகில் நீடு வாழலாம்.

30. ஆனந்தப் பெண்ணே! இரவு பகல் இல்லாத ஏக வெளியைக் கண்டு, விரைவில் இந்த நுட்பங்களைத் தெரிந்து கொண்டால் இந்த உலகே போற்ற இருக்கலாம்.

31. ஆனந்தப் பெண்ணே! தாய், தந்தை, மனைவி, பிள்ளை ஆகியோர் இருந்தும் பயனில்லை. நல்ல தவம் செய்தால் எமனுக்கு ஆட்படாமல் இருக்கலாம்.

32. ஆனந்தப் பெண்ணே! தீர்த்தங்கள் பலவற்றில் நீராடினாலும், தேவாலயம் பல தரிசித்தாலும், கடவுள் படிமத்தை வணங்கினாலும், மௌனம் செய்வதற்கு ஈடாகாது என அறிக.

காடு மலைகள் அலைந்தாலும் அந்தி
கன்மானுட் டானம் புரிந்தாலும்
ஓடுஞ்சித் தத்தை நிறுத்தார்க் குப்பர
உற்பனம் வாய்க்காது ஆனந்தப் பெண்ணே. 33

மாயா உலக மயக்கத்தையும் நல்ல
வஞ்சியர் மீதுற்ற மோகத்தையும்
தீயா மாந்தர் ஒருக்காலும் வீடு
சேருவது இல்லை ஆனந்தப் பெண்ணே. 34

நாலா வகைக் கலைகள் அறிந்தாலும்
ஞான வழிகள் தெரிந்தாலும்
மேலான மோனம் அறிந்தவரே துஞ்சா
வீடுறு வார்கள் ஆனந்தப் பெண்ணே. 35

சங்கிலி கண்டத்து அணிந்துகொண்டு நல்
தவயோகஞ் செய்துஅங்கு இருக்கையிலே
சங்கிலிச் சித்தனென்று என்பாட்டன் வந்து
சாற்றைத்தெரியும் ஆனந்தப் பெண்ணே. 36

**33.** ஆனந்தப் பெண்ணே! காடு மலை என அலைந் தாலும், அந்தி சந்தி வேளைகளில் கர்மங்களாகிய அனுட்டானம் செய்தாலும், பயனில்லை. அலையும் மனத்தை நிறுத்தினால் தான் பரத்தில் இணையலாம்.

**34.** ஆனந்தப் பெண்ணே! உலகில் மாயமான மயக்கத்தையும் பெண்ணாசையையும், நீக்காத மனிதர் ஒருபோதும் வீட்டுலகில் சேர்வதில்லை.

**35.** ஆனந்தப் பெண்ணே! பல கலைகளும், ஞான வழிகளும், தெரிந்தாலும் மேன்மையான மோனத்தை அறிந்தவரே அழியாத வீடு பெறுவர்.

**36.** ஆனந்தப் பெண்ணே! சங்கிலி எனும் சித்தரை மனத்தில் நினைத்து, தவயோகம் செய்து அங்கே இருக்கும் போது, என் குருவாகிய பாட்டன் சங்கிலிச் சித்தன் தோன்றியாவும் விளங்கச் செய்வான் என்பதனை அறிக.

## சங்கிலிச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 9. சத்தியநாதர் என்ற ஞானச் சித்தர் பாடல்கள்

இவர் நவநாதர்களில் சிறந்தவர்; பிராசாத யோகத்தில் மனோன்மணியை மிகவும் பாராட்டிப் பாடுகிறார். 35 பாடல்கள் இவருடையன.

## சத்தியநாதர் என்ற ஞானச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### கண்ணிகள்

ஆதி பராபரையே அம்பிகை மனோன்மணியே
சோதிச் சுடரொளியே சுத்த நிராமயமே. 1

தாயே பகவதியே தற்பரையே அற்புதமே
நேயமுடன் ஞான நெறியைஅறி விப்பாயே. 2

முடிநடுவும் மூலமுமாய் முச்சுடராய் முப்பொருளாய்
மடிவில்லா மெய்ஞ்ஞான மார்க்கத் தகோசரமாய். 3

அஞ்ஞானக் காடுகடந் தாங்குவழி யேதொடர்ந்து
மெய்ஞ்ஞானங் காணநின்னை வேண்டி அலைகிறண்டி. 4

நிலையில்லாப் பொய்க்கூட்டை நிச்சயங் கொண்டாசை
வலையில்அகப் பட்டுஉழன்று வாடித் திரிகிறண்டி. 5

*1. கண்ணிற்குப் புலப்படாத ஆதி பராசக்தியே! சோதியாகிய சுடரே! அம்பிகையான மனோன்மணியே!*

விளக்கம்: தலைக்குமேல் *18* விரலில் தெரியும் பெரிய சோதியே மனோன் மணியாவாள்)

2. தாயே! பரமசிவன் மனைவியே! தற்பரமே! அற்புதக் கோலமே! ஞானநெறியை அன்புடன் அறிவிப்பாய்.

3. மூலமும் முடிவும் நடுவுமாய், மூன்று சுடராய், மூன்று மூர்த்தியாய், மடியாத மெய்ஞ்ஞான மார்க்கத்துத் தனித்திருப்பதாய் (அகோசரம்) உள்ள பொருளே!

4. அறியாமைக் காட்டைக் கடந்து அங்குள்ள வழியைத் தொடர்ந்து மெய்ஞ்ஞானம் காண உன்னை வேண்டியே அலைகிறேன்.

5. நிலையற்ற இப்பொய் உடலை நிலையானதாக எண்ணிக் கொண்டு ஆசை வலையில் அகப்பட்டு உழன்று வாடித் திரிகிறேன்.

தன்னைஅறி யாமல் தலமெட்டுங் காணாமல்
அன்னைஅன்னை என்று அலறித் திரிகிறண்டி. 6

தவநிலையில் தேறாமல் உன்னை உணராமல்
பவநிலையில் புக்குஅகப் பட்டுஉழன்று வாடுறண்டி 7

பொல்லாக் கொலையும் புலைஅவா விட்டுஉன்றன்
வல்லபதம் காண மயங்கித் திரிகிறண்டி 8

துன்பமெல்லாம் போக்கிச் சுகானந்த மானநின்தாள்
இன்பம் அனுபவிக்க ஏங்கித் தவிக்கிறண்டி. 9

வஞ்சகம்பொய் சூதுகொலை மாரனார் மயக்கமெனும்
சஞ்சலத்தை நீங்கித் தனித்திருக்கத் தேடுறண்டி. 10

6. தன்னையே அறிவதையும் விடுத்து, எட்டுத் தலங்களை (புரியட்டகம்) ஆய்வதையும் விட்டு, அம்மா அம்மா என்று உன்னையே கருதி அலைகிறேன்.

7. தவநிலையிலும் தெளிவடையாமல், உன்னை முறை யாக உணராமல், பாவநிலைகளில் புகுந்து வருந்துகிறேன்.

*8.* கொலை, புலால் உண்ணல், ஆசை முதலியவற்றை விட்டு, துணை செய்யும் உன் பாதம் காணவே மயங்கித் திரிகிறேன்.

*9.* துன்பங்களை நீக்கிச் சுகமும் ஆனந்தமும் தரும் உன் பாதத்தை அனுபவிக்க ஏங்குகிறேன்.

*10.* வஞ்சகம், பொய், சூது, கொலை, காமம், மயக்கம் என்ற சஞ்சலங்கள் நீங்கித் தனியே இருக்க உன்னைத் தேடுகிறேன்.

ஆசைப் பெருக்காறு அதில்வீழாது உன்பந்த
பூசைப் புரியப் புலம்பித் தவிக்கிறண்டி. 11

ஊணுறக்கம் இன்பதுன்பத்து உற்றவினை யைஒழித்துக்
காணுதற்கு எட்டாப்பொருளைக் கண்டு மகிழ்ந்தனடி. 12

பஞ்சபூதாதிப் பகுப்புகள் பொய்யென் றுணர்ந்துன்
செஞ்சரணக் கஞ்சம்அதைத் தேடி அலைகிறண்டி. 13

ஆசை ஒழித்தும் அருள்ஞானம் கண்டுஅறிந்தும்
பேசத் தெரியாமல் பேய்போல் அலைகிறண்டி. 14

ஆங்காரம் விட்டு அருள்வெளியைக் கண்டுஅடுத்து
நீங்காப்பே ரின்ப நிலையறியத் தேடுறண்டி. 15

*11.* ஆசையெனும் பெரிய ஆற்றில் வீழாமல் உன் பந்தத்தைப் பூசை புரியப் புலம்பித் தவிக்கிறேன்.

*12.* உணவு, உறக்கம், இன்பம், துன்பம், செய்யும் செயல் ஆகிய எல்லாம் கைவிட்டுக் காண்பதற்கு அரிய பொருளைக் கண்டு மகிழ்ந்தேன்.

*13.* பஞ்ச பூதங்களாகிய பூதங்களின் பகுப்புகள் ஒரு காலத்தில் அழியும் என்று உணர்ந்து, உன் சிவந்த திருவடித் தாமரையைத் தேடி அலைகிறேன்.

*14.* ஆசையை நீக்கியும், அருள் ஞானம் கண்டு அறிந்தும் அவற்றை வெளியே சொல்ல முடியாமல் பேய்போல் அலைகிறேன்.

*15.* அகங்காரத்தைக் கைவிட்டு, அருளாகிய பெரிய வெளியைக் கண்டு, அதில் செறிந்து பேரின்பம் என்னும் நீங்காத நிலையறியவே தேடுகிறேன்.

சருவம் பிரமம்எனத் தான்தெரியுந் தன்மை
மருமம் காணாமல் மயங்கித் திரிகிறண்டி. 16

ஐங்காயக் கோட்டை அதுமெய்யென்று உன்பாத
பங்கயம்போற் றாமல் பரிதவித்து நிற்குறண்டி. 17

பச்சைப்பாண் டத்தைப் போலநாள் இருக்குமென
நிச்சயமாய் எண்ணி நிலைதவறி வாடுறண்டி. 18

நீரிற் குமிழியைப்போல் நில்லா உடம்பினைவி
சாரிக்கப் பொய்என்றே தானறிந்து வாடுறண்டி. 19

நானென்ற கர்வம் நசித்ததனைச் சுட்டறுத்துத்
தான்என்ற அமிர்தந் தனைஅறிய வேண்டுறண்டி. 20

*16.* எல்லாப் பொருளும் பிரம்மமாகவே உள்ளது அல்லது பிரம்மத்தில் முளைத்துள்ளது எனத் தெளிந் துணரும் மருமம் தெரியாமையால் மயங்கித் திரிகிறேன்.

*17.* ஐந்து கோசங்கள் கொண்ட கோட்டை போலும் உடலை மெய்யாகக் கருதி, உன் பாத மலரை வணங்காமல் பரிதவிக்கிறேன்.

*18.* வாழ்நாளானது பச்சை மண்பாண்டம் போல் எப்போதும் அழியத் தயாராய் உள்ளது என்று உறுதியாக அறிந்தும் நிலை தவறியவனாய் உள்ளேன்.

விளக்கம்: நீர் விட்டாலும் வெப்பம் மிகுந்தாலும் பச்சை மண் பாத்திரம் உடன் அழியும்.

19. நீர்க்குமிழி போன்று நிலையற்றது உடம்பு என்பதை அறிந்து ஆராய்ந்து உணராமையால் வருந்துகிறேன்.

20. நான் என்னும் செருக்கை நன்றாக வருத்திப் பொசுக்கி, தான் (ஆத்மா) என்னும் அமிர்தத்தை அறிய வேண்டுகிறேன்.

யோகந் தெரிந்துஅதன்றன் னுண்மை யறிவதற்குப்
பாகமுண ராமற் பதறி யலைகுறண்டி. 21

மவுனத்தை உச்சரித்து மந்திரபீ டத்தேறிக்
கெவுனம் அறிந்து கிலேசம்அதை விட்டேண்டி. 22

கல்பஞ்சாப் பிட்டே கனத்ததவஞ் செய்ததினால்
விற்பனன் என்றுபேர் விதித்தார் பெரியோர்கள். 23

காயசித்தி யோகசித்தி கண்டதனில் ஒண்டினதால்
மாயசித்தி யாலே மயங்காது இருக்கிறண்டி. 24

ஓமென்ற அக்கரத்தின் உட்பொருளைக் கண்டுவந்தும்
தாமென்ற ஆணவத்தால் தன்னை மறந்தேண்டி. 25

21. யோகம் எனக்கு இன்று தெரிந்தது. இதற்கு முன் தெரியாத உண்மையை நான் உணர்ந்து உரைப்பதாகினேன்.

22. மவுனமாக மந்திரத்தைச் சொல்லி, மந்திரம் இருக்கும் இருப்புகளில் ஏறிச் செல்லும் கவனம் அறிந்து கொண்டதால், தடுமாற்றத்தைக் கைவிட்டேன்.

23. கல்லைப் பஞ்சுபோல் பிட்டுக் கனத்த தவம் செய்ததனால் எல்லாம் தெரிந்தவன் என்று என்னைப் பெரியோர் கூறினர்.

24. உடலை அழியாத சித்தியும், யோகத்தில் முழுமையாகும் சித்தியும் கண்டு, அதனில் பொருந்தியதால் மாயமான சித்திகளில் மயங்காது உள்ளேன்.

25. ஓம் என்ற எழுத்தின் உட்பொருள் என்ன என்று கண்டபிறகும் ஆணவத்தால் என்னையே நான் மறந்தேன்.

விளக்கம்: ஓம் என்று உச்சரிக்க உச்சரிக்க, சோதி யானது புறப்பட்டு மேலும் மேலும் ஏறிப்போவதே 'ஓம்' என்பதன் உட்பொருளாம்.

பிரணவமும் தானறிந்து பேச்சடங்கி நின்ற
சொருபந் தெரிந்துஅத் துலக்கத்தில் நிற்குறண்டி. 26

நந்தி கொலுவிருப்பை நான்அறிந்து கண்டுகொண்ட
சத்தி தெரிந்து தவியாது இருந்தேண்டி. 27

அட்டகரு மம்தெரிந்தும் ஐவர் நிலைஅறிந்தும்
இட்டம் அதிற்சற்றும் இல்லாது இருக்குறண்டி. 28

நானென்னும் ஆணவங்கள் அணுகாது நான்எனலும்
தான்எனலும் அற்றுத் தனியே திரிகுறண்டி. 29

எட்டாச் சுழிமுனையி லேயிருந்து என்மனதுக்கு
எட்டாப் பொருளதனை எட்டிப் பிடித்தேண்டி. 30

26. பிரணவத்தில் இந்தப் பரப்பெல்லாம் அறிந்து மவுனமாகி நின்றதால் பிரம்மசொருபம் தெரிந்தது. அதைத் துலக்கி நிற்கிறேன்..

27. நந்தியின் சபையில் இருந்து உபதேசம் பெற்று சத்தியை உணர்ந்ததால் தவிக்காமல் உள்ளேன்.

28. அட்ட கர்மமாகிய மந்திரச் செய்கையைத் தெரிந்தும், பஞ்ச கர்த்தர்கள் (சிவ மூர்த்தத் தத்துவங்கள்) நிலையை அறிந்தும், அதில் சற்றும் விருப்பம் இல்லாது இருக்கிறேன்.

விளக்கம்: ஆதாரந்தோறும் நிற்கும் கடவுள் நிலை யறிதலே பஞ்சகர்த்தா நிலையறிதலாம்.

(அட்ட கர்மம் - வசியம், மோகனம், உச்சாடனம், தம்பனம், பேதனம், ஆசர்ஷணம், வித்வேஷணம், மாரணம் என்பனவாம். மந்திரத்தால் செய்யும் செய்கைகள்)

29. நான் என்ற ஆணவம் என்னை அணுகாமல் இருக்கத் தான் என்றும் (ஆத்மா என்றும்) நான் (உணர்வு) என்றும் உணராமல் நான் தனியே திரிகிறேன்.

30. அறிவுக்கு எட்டாத சுழுமுனையில் இருந்து கொண்டு என் மன உணர்வுக்கு எட்டாத பரம்பொருளை எட்டிப் பிடித்தேன்.

சாகாக்கால் இன்னதெனத் தானறிந்து கொண்டதன்பின்
வேகாத் தலையும் விரைவில் அறிந்தேண்டி. 31

மோகாந்த காரமெனும் மோகம் தவிர்ந்தன்பின்
வேகாத் தலையும் விரைவில் அறிந்தேண்டி. 32

சரியைகிரி யையோகம் தாண்டியபின் ஞான
புரிக்கோட்டைக் குள்ளே புகுந்து திரிகுறண்டி. 33

மந்திரமுந் தந்திரமும் மாய விசர்க்கமெலாம்
உந்திரம் என்றுஎண்ணி உறுதியது கொண்டேண்டி. 34

சத்தத்தின் உள்ளே சதாசிவத்தைத் தானறிய
உத்தமியே நின்னுருஎன்று ஓர்ந்தறிந்து கொண்டேண்டி. 35

*31.* சாகாத கால் (கால் - வாயு) இன்னது என அறிந்த பின், வேகாத தலை (வெறும் வெளி)யும் இன்னது என விரைவில் அறிந்தேன்.

(சாகாத கால் - வாயு எனப்படும் காற்று)

32. மோகாந்தகாரம் என்னும் இருளாகிய மேகம் தவிர்ந்த பின்னர் நான் வேகாத தலையைக் கண்டேன்.

(வேகாத் தலை - வெறும் வெளியாகிய பரந்த வெற்றிடம்)

33. சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றும் தாண்டிய பின் ஞானபுரிக் கோட்டையாகிய பயிற்சியில் இருக்கிறேன். (நான்கு வழியாட்டு நெறிகள் இவை.)

(நான்கு நெறிகள் - சரியை, கிரியை, யோகம், ஞானம்)

*34.* மந்திரம், தந்திரம் (ஆகமம்), விசர்க்கம் (விரிவு) ஆகியவை உய்யும் திறம் என்று எண்ணி உறுதியாக அவற்றைக் கொண்டேன்.

விளக்கம்: 'உய்ந்திறம்' என்னும் தொடர் எதுகை நோக்கி 'உந்திரம்' என விகாரப்பட்டு நின்றது.

35. ஓம் எனும் சத்தத்தாலும் பத்துவித உள் ஓசையாலும் சதாசிவத்தை நான் அறிந்ததும் உத்தமியே, அஃது உன் உருவமே ஆகும் எனவும் ஓர்ந்து தெரிந்தேன்.

## சத்தியநாதர் என்ற ஞானச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 10. ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர் பாடல்

இவர் அகத்தியரின் சீடர் எனவும், காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர் எனவும் கருதப்படுகிறது. 34 கண்ணிகள் இவர் பாடிய பாடல்கள் ஆகும்.

## ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

காரண மான கணபதி
சற்குரு கர்த்தனும் காப்பாமே
நாரணன் நான்முகன் நல்ல
குறுமுனி நாதனுங் காப்பாமே. 1

முன்கலை யான முடிவான
சோதியின் முற்றிலும் தானறிந்தே
பின்கலை யான பிரமாண்ட
சோதியைப் பேணித் துதிப்பேனே. 2

புத்தியும் வித்தையுந் தந்தருள்
பாதனைப் போத மயமாக்கி
சித்தியும் புத்தியும் கண்டந்த
நாதனைத் தேகல யத்துள்வைத்து. 3

சித்தம் பலத்தில்அச் சிதம்பர
வித்தையைத் தேறித் தெளிந்தேதான்
சத்தம் பிறந்திட வாசி
அறிந்து தானும் நடந்தேனே. 4

1. அனைத்திற்கும் முதற் காரணர் ஆகிய கணபதி, சற்குரு, திருமால், பிரமன், நல்ல குறுமுனிவராகிய அகத்தியர், ஈசன் நாதன் ஆகியோர் காப்பாராக.

2. முன் கலையாகிய சோதியை முற்றிலும் கண்டு, பின் கலையான பிரமாண்ட சோதியைப் பேணித் துதிப்பேன்.

3. புத்தியும் வித்தை (மந்திரம்)யும் தந்து அருள் செய்யும் பாதத்தை ஞானமயமாகக் கொண்டு, சித்தியும் புத்தியும் கண்டு, அந்த இறைவனைத் தேகத்தில் வயம் ஆக்கிக் கொண்டேன்.

4. அதன் மூலம் சித்தமாகிய அம்பலத்தில் அந்தச் சிதம்பர வித்தையை (தகராகாச வித்தை)த் தேறினேன்.

விளக்கம்: மார்பு நடுவில் ஒரு சிறிய துளை மூலம் சிறிய ஆகாசத்தையும், அதன் மூலம் பெரிய ஆகாசத்தை யும் அறிதலே தகரவித்தை அல்லது சிதம்பர வித்தை என்பர். தகரம் - சிறியது.

நத்தும் உலகத்தோர் சித்தை
அறிந்திட நல்ல கதியெனவே
தத்துவ மான எழுத்துஅஞ்சி
னாலே தான்வரை கீறினனே. 5

அங்கி பொருந்தின வீட்டுக்கோர்
அஞ்சு அஞ்சுக்கும் அஞ்சாக
தங்கி இருந்திடு மந்திர
விஞ்சையைத் தான்கண்டு பேறும்பெற்றேன். 6

அங்கங்கே மாறினால் அட்டகர்
மத்தொழில் ஆடும் இதுதானும்
சங்கை யுடனே துகையைப்
பெருக்கித் தான்வரை கீறிடுவாய். 7

தானா யிருக்கும் பிரமத்தின்
தன்செயல் தன்னை அறிந்தாக்கால்
வானாகி நின்று மறைபொருள்
ஆனதை வாய்கொண்டு சொல்லுவாரோ? 8

5. விரும்பும் உலகினர்க்கு சித்தத்தை அறிய நல்ல வழியாக, எல்லாத் தத்துவமும் அடங்கிய ஐந்து எழுத்தை ஓதும் வரையரை செய்தார்.

விளக்கம்: குரு, ஆத்ம தத்துவம் இருபத்து நான்கும் ஐந்தெழுத்தை ஓத ஓத ஒடுங்கும் என்று கூறினார்.

6. நெருப்புப் பூதத்துக்குரிய வீடான மணிப்பூரகத்தில் இருந்து பதினைந்து விரல் உயரத்தில் இருக்கும் 'சி' என்னும் தனி எழுத்து மந்திர வித்தையை நான் கண்டு கொண்டேன்.

விளக்கம்: இந்த இடத்தில் இந்த எழுத்தையே உச்சரித்த உணர்வில் லயம் பெறுவதாம் இது.

7. அங்கங்கே மாறினால் எட்டுவித மந்திரத் தொழில் இட்டும், நீளம் அகலம் கொண்ட தொகையைப் பெருக்கி யும் மந்திரச் சக்கர அறைகள் செய்வாய்.

8. தான் என்ற பிரம்மத்தின் செயலை அறியும் போது வானத்தில் நின்ற வேதத்தில் உள்ள ஓசையை வாயால் மவுனமாகச் சொல்ல வேண்டும்.

விளக்கம்: மறைப் பொருள் ஓம் என்பது. இது உள்ளுக்குள் சொல்ல உலகம் முழுதும் வான்வழியே பரவும் நாதமாகும்.

அருவும் உருவும் திருவும்
பலவுமாய் ஆதிசி தம்பரத்தைக்
கருவும் குருவும் கண்டறிந்
தோர்கள் கையால் எழுதுவரோ? 9

தானந்த மான தத்துவங்
கண்டோர்கள் தானேதான் எவ்வுயிர்க்கும்
ஆனந்த மாகி யறிவை
அறிந்தவர் அட்சரம் தானறிவார். 10

ஏக வெளியில் இருக்கின்ற
சக்கரம் ஏது மறியார்கள்
சாகாக்கால் என்றும் வேகாத்
தலையென்றும் தானே அறிவாரோ. 11

வாதங்கள் செய்வது வேறொன்றும்
இல்லை வாசி அறிந்தோர்க்கு
நாதம் பிறந்திடக் கண்டறிந்
தோர்கள் நான்என்று சொல்லுவரோ? 12

*9.* அருவும் உருவும் திருவும் (வடிவு) பலவிதமாகி விளங்கும் ஆதிசிதம்பரத்தின் உள் கருவும் வெளிமுகமும் கண்டறிந்தோர் கையால் எழுதிக் காட்ட முடியுமோ?

*10.* தானே எல்லாத் தத்துவத்துக்கும் முடிவு என அறிந்தோர், தானேதான் எல்லா உயிர்க்கும் ஆனந்தமாகிய அறிவை அறிந்தவர் ஆவார். அவர் எழுத்தை அவரே அறிவார்.

*11.* ஏகவெளியில் உள்ள சக்கரத்தை அறிய இயலாத வர்கள். எப்படிச் சாகாக்கால், வேகாத்தலை என்பவற்றை அறிய முடியும்?

*12.* வாதங்கள் செய்வதால் அடிவேர் தெரியாது. வாசியை அறிந்து மூச்சு விடுவோர் வாக்குப் பிறக்கும் இடம் (நாதம் பிறக்கும் இடம்) இன்னது என்று அறிந் தாலும் சொல்ல மாட்டார்கள். (சுழுமுனை தொடங்கும் இடமே வாக்குப் பிறக்கும் இடமாம்)

யோகமும் ஞானம் உகந்து
அறிந்தோர்கள் உண்மை அறிவார்கள்
தாகமும் பசியும் கோபமும்
வந்தவர் தாமும் அறிவாரோ? 13

தானென்ற தத்துவ மாயை
அறுத்தவர் தன்னை அறிந்தோர்கள்
ஊனென்ற ஊமை எழுத்தை
அறிந்தவர் உற்பனந் தானறிவார். 14

சூட்சாதி சூட்சங்கள் என்று
மௌனத்தின் சொல்லும் பொருளறிந்தால்
பேச்சோடே பேச்சாகப் பேசி
இருப்பரைப் பெரியோர் தாமறிவார். 15

பேசாது இருந்த மௌனங்கள்
என்பது பேசத் தெரிந்தோர்கள்
ஆசான் உரைத்த உபதேசம்
என்று அறிவுள்ளோர் தானறிவார். 16

*13.* யோகம், ஞானம் என்ற இரு நிலைகளை அறிந்தோரே உண்மை அறிவார்கள். இதை விட்டுத் தாகம், பசி, கோபம் என்ற உணர்நிலையில் சிக்கியவர்கள் உண்மை அறியமாட்டார்கள்.

*14.* தான் என்று உணரும் தத்துவமாயையை விட்டு விலகியவரே தன்னை அறிந்தவர் ஆவார். ஊனமாகிய ஊமை எழுத்து உள்ள பகுதியை அறிந்தவர் (புருவ மத்தியில்) உண்மைத் தோற்றம் அறிவார்.

*15.* மவுனத்தில் சூட்சாதி சூட்சுமம் என்று சொல்லும் பயிற்சியின் பொருள்கள் அறிந்தால் வெறும் பேச்சாய் இருக்கும் வேறுபாடுகளைப் பெரியோர்கள் அறிவார்கள்.

*16.* பேசாது இருக்கும் மவுனங்கள் என்பன பேசத் தெரிந்த ஆசான் உபதேசித்தது என்பதை அறிவர்.

விளக்கம்: பேசத் தெரிந்தது என்பது விளக்கத் தெரிந்தது என அறிக.

வாதமும் ஞானமும் ஒன்றென்று
சொல்வதும் வையகத் தோர்அறிய
சூதகங் கெத்தியும் தாளகம்
வங்கமும் சொல்லும்நா தங்களல்லோ? 17

ஆடும் சரக்கு அறுபத்தி
னாலும் அவரவர் தாமறிவார்
காடும் மலையுஞ் செடியுஞ்
சரக்கென்பர் காணாதார் காணுவரோ? 18

தானே அறிவது சித்தி
இதுவென தத்துவந் தானறிந்தோர்
வீணே அலைந்து திரிந்துநால்
வேதத்தை விரும்பித் தேடுவரோ? 19

தங்க ளிடத்தில் இருக்கும்
பொருள்தனைத் தாங்களே தானறிந்தால்
எங்கே இருக்குது எனச்சொல்லித்
தேடி ஏங்கி அலைவாரோ. 20

*17.* இரசவாதமும் ஞானமும் ஒன்றென்று சொல்லுவர். இரசம், கந்தகம், தாளகம், வங்கம் என்று பலவிதமான பொருள்களின் நாத வேறுபாடு போல் அவையும் வேறுபடும்.

விளக்கம்: இவை மருத்துவப் பயன்களோடு சமம் செய்தது என உணர்க.

*18.* பக்குவம் செய்யும் சரக்குகள் அறுபத்து நான்கு மூலகங்களாம். இதைப் பழகியவர்கள் அறிவார்கள். காடு,

மலை, செடி இவைகளின் பொருள்களும் சரக்கு என்பர். (மூலம் வேறு. பிற பொருள் வேறு. இரண்டும் சரக்குகள் அல்ல) ஆய்வு செய்தால் அல்லது அவர்கள் உண்மையை அறிய மாட்டார்கள்.

*19.* தானாக அறிவதும், சித்தி பெற்றது இது என தத்துவங் களால் அறிவதும் கொண்டோர் வீணாக அலைந்து நான்கு வேதங்களின் பொருள்களை விரும்பித் தேட மாட்டார்கள்.

**20.** தங்களிடத்திலேயே இருக்கும் பொருளைத் தாங்க ளாகவே அறிவார்களாயின் எங்கே இருக்கிறது அது எனத் தேடி அலைய மாட்டார்கள்.

விளக்கம்: தங்களிடம் இருக்கும் பொருள் கடவுளாகும்.

பண்டு பழுத்த கனியைப்
பொசிக்கப் பறிக்கப் பொருள்அறிந்தால்
உண்டு சுகித்து உடம்பை
வளர்த்து உறங்கித் திரிவாரோ. 21

இத்தனை சித்தையும் கண்டு
தெளிந்தவர் ஏது மறியார்போல்
பித்தனைப் போலவே வத்துவைத்
தேடிப் பேசா திருப்பாரோ? 22

தாங்காமல் விட்ட குறையாளர்க்கு
எய்திடும் தத்துவத் தைநினைக்க
பாங்கான ஐவரும் கட்டின
வீட்டில் பரம சுகம்பெறுவார். 23

ஓங்காமல் ஓங்கும் பிரம
சொரூபத்தின் உண்மை தனையறிந்தால்
நீங்காத செல்வம் நிலைபெற்ற
மாதவம் நின்ற பொருளறிவார். 24

21. தானாகவே பழுத்து விளைந்த கனியைத் தாங்களே பறித்து உண்ணும் வழியறிந்தவர், அதை அனுபவித்து தம்மை வளர்த்து உறங்குவர்.

விளக்கம்: பரிபக்குவத்தால் தனக்குள் வளரும் சித்தியைக் கனி என்றார்.

22. பலவிதமான சித்துக்களையும் கண்டு தெளிந்தவர்கள், ஏதும் தெரியாதவர் போலவும் பித்தர் போலவும் அப்பரம் பொருளைத் தேடிப் பேசாதிருப்பர். (மவுனியாய் இருப்பர்.)

23. விட்ட குறையால் தாமே சித்தியடையும் தத்துவச் சிறப்பை நினைத்தால், பஞ்ச பூதங்களால் ஆகிய இந்த உடம்பிலேயே சுகம் பெறுவர்.

24. பெரிதாய் ஓங்கும் பிரம்ம சொரூபமாகிய உள் ஒலியின் உண்மையை அறிந்தால் நீங்காத செல்வமும் நிலையான மாதவமும் அறிவார்.

எங்கெங்கு பார்த்தாலும் எங்கும்
குருநாதன் இருப்பிடம் தானறிந்தோர்
பங்கமாய் உள்ள பரம
சுகத்தையே பார்த்துத் திரிவாரோ? 25

அற்பமாய் எண்ணியே கற்பங்கள்
தேடி அலைவர் வெகுகோடி
சொற்பங்கள் அல்லாச் சுருதி
முடிவல்லோ சொன்னது கற்பங்கள்தான். 26

வாசம் பொருந்தும் சதுர
கிரியின் மகத்துவங் கண்டோர்கள்
தேசங்கள் தோறுங் கற்பங்கள்
தேடித் திரிவரோ தானறிந்தோர். 27

கண்டதை விண்டிலர் அண்டர்கள்
ஆனாலும் கருத்தைச் சொல்லார்கள்
விண்டிலர் கண்டிலர் வேணது
சொல்லுவர் வேத முடிவறியார். 28

எங்கெங்கு பார்த்தாலும் எம் குருநாதரே இருப்பதை யறிந்தால் தடையான சிற்றின்பத்தைத் தேடி அலைய மாட்டார்கள்.

26. எளிது என்று எண்ணிக் கற்பமருந்துகளைத் தேடி அலைபவர்கள் கோடிக்கணக்கானவர்கள் வேத முடிவில் கூறப்பட்டவையே உண்மையான கற்பங்கள் ஆகும்.

விளக்கம்: மருந்தால் முடியாதது யோகத்தால் முடியும் நீண்ட வாழ்க்கை என உணர்க.

27. சதுரகிரியின் மகத்துவம் அறிந்தவர்கள் நாடு தோறும் சுற்றிக் கற்பமருந்துக்கு அலைய மாட்டார்கள்.

விளக்கம்: சதுர கிரி - நால் இதழ்த் தாமரையான மூலாதாரமும் தலை முடியாகிய மலையும் இணைப்பதே கற்பம் பெற வழி என அறிக.

28. தேவராயினும் தாம் கண்டதை எடுத்துக் கூறிய தில்லை. கருத்தாகச் சொல்பவர்கள் கண்டதில்லை. வாயால் பேசுவோர் வேத முடிவை அறிய மாட்டார்கள். (அது மவுனத்தால் முயலும் பயிற்சியே ஆகும்)

பாசம்பொருந்தும் கருநெல்லி வெண்சாரை
பார்த்தோர்க்குத் தான்தெரியும்
பேசப் படாதென்று சித்தர்கள்
சொல்லுவர் பேசத் தெரியார்போல். 29

நீந்தின செந்தூரம் நேரான
பூரணம் நின்ற நிலையறிந்தால்

சாத்திரம் ஏதுக்குத் தானறி
யாருக்குச் சகலமும் வேணுமென்பார். 30

வீட்டுக்குள் வாசலின் பூட்டுக்குள்
பூட்டது வேணது உண்டுஇங்கே
பூட்டக்கம் இன்னதுஎனத் தெரிந்தோர்
சாவி போட்டுத் திறந்திடுவார். 31

*29.* கருநெல்லி (அமுதூறும் இடம்), வெண் சாரையைப் பார்த்தவர்க்குத் தான் மவுனமே தேவை எனத் தெரியும். சித்தர்கள் இது தெரியாதவர் போல் பேசுவர். (யோகப் பயிற்சியால் அமுதூறும் இடம் தேடி முடிப்பர் என்பதாம்)

*30.* பல ஆதாரங்களையும் கடந்து செந்தூரம் போல் ஒளியால் நீண்டு நேராக வளரும் பூரணத்தின் நிலையறிந் தவர் சாத்திரம் தேவை இல்லை என அறிவர். இது தெரியார்க்கே பல சாத்திரங்கள் தேவை என உணர்க.

*31.* உடலாகிய வீட்டின் ஒன்பது வாசல்களுக்கும் பூட்டு உண்டு. இதை நன்கு அறிந்தோர் உரிய சாவி கொண்டு பூட்டைத் திறப்பர்.

கண்டபேர் கொண்டதை விண்டுதான்
பேசுவர் காரியா காரியமாய்
கண்டும் அறிந்தும் அறியாதார்
போலவே காணாதார் போலிருப்பர். 32

நித்திய பூசையும் நேமாநுட்
டானமும் நேரான பூரணத்தைப்
புத்தியு டனறிந்த தேயனு
போகமாய் பூசைகள் செய்திடலாம். 33

காலையும் மாலையுங் கண்டது
கொண்டு கற்பூர தீபமுடன்

மாலை மனோன்மணி தாய்பதம்
போற்றி வணங்கியே வாழ்ந்திடலாம். 34

**32.** கண்டவர்களும் தாம் கொண்ட மார்க்கத்தை வெளிப்படப் பேசுவர். அதற்கு வேறு காரணம் உள்ள தாகும். கண்டும் அறிந்தும் உள்ள சித்தர் பலர் அறியாதார் போலக் காணாதார் போலவே இருப்பர்.

**33.** நித்திய பூசையும், நியமங்களைக் கடைப் பிடித்தலும் ஆகியவற்றுடன் நேரிடையாகப் பூரணத்துடன் நம் புத்தியையும் இணைத்து அனுபவமாக அறிந்து பூசை காணச் செய்யலாம்.

**34.** காலை மாலை என்ற சந்தியா காலங்களில் மனத்தால் கருதிய வடிவைக் கொண்டு, கற்பூர தீபமுடன் மாலை அணிவித்து, மனோன்மணியாகிய தாயின் பாதம் போற்றி வணங்கியே வாழலாம்.

## ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 11. மச்சேந்திர நாதர் என்ற நொண்டிச் சித்தர் பாடல்கள்

## நொண்டிச் சிந்து

ஆதி பராபரையாள் சிவசக்தி
அம்பிகையின் பாதமதைக் கும்பிட்டு நித்தம்
கோதிலாச் சுடரொளியில் திரிகோணக்
குஞ்சரத்தின் பாதமலர் தஞ்சமாய்க் கொண்டு 1

திருமூலர் காலாங்கி போகர்
தென்பொதிகைக் குறுமுனி தன்வந் திரியர்
கருவூரார் இடைக்காடர் அத்திரி
கலைக்கோடார் மச்சமுனி புலத்தியரே. 2

சுந்தரா னந்தர்கபிலர் கொங்கணர்
சூதமுனி கோசிகர் வேத முனிவர்
நந்தீசர் சட்டைமுனிவர் தன்னை
நான்தொழு தேனடி தாள்ப ணிந்தேன். 3

1. ஆதிபராசக்தியான சிவசத்தியாம் அம்பிகையின் பாதத்தைக் கும்பிட்டு, நாள்தோறும் குறைவற்ற சுடர் ஒளி கொண்ட மூலாதாரத் திரிகோணத்தில் உள்ள கணபதியின் பாதமலரை அடைக்கலம் கொண்டு,

2. திருமூலர், காலாங்கி நாதர், போகர், அகத்தியர், தன்வந்திரி, கருவூரார், இடைக்காடர், அத்திரி முனிவர், கலைக்கோடர், மச்சமுனி, புலத்தியர்,

3. சுந்தரானந்தர், கபிலர், கொங்கணர், சூத முனிவர், கோசிகர், வேதமுனிவர், நந்தீசர், சட்டை முனிவர் ஆகியோரைத் தொழுதேன்; திருவடி பணிந்தேன்.

அஞ்சுபுலக் கதவறிந்து பிரம
ரந்திரத்தின் உண்மைவழி விந்தை தெரிந்து
சஞ்சலந் தனைப்பிரிந்து சித்தாதிகள்
தாள்ப ணிந்தேன் நான்து ணிந்தே. 4

சரியையுங் கிரியையும்விட்டு அப்பாற்
சாதனாமா யோகமதின் பாதம் அதைத்தொட
துரியா தீதம் வெளிப்பட்டு அங்கு
சும்மாயிருந் ததைச்சொல்ல எம்மா லாகுமோ. 5

பராபர வெளிகைக்கொண்டு மனம்ஒன்றிப்
பற்றிடவே சிற்பரத்தின் உற்பனங் கண்டு
நிராதர மான பண்டு
நீங்கா ஆனந்தரசம் பாங்கதாய் உண்டு. 6

அடிநடு முடிவுகண்டேன் மோனநிலை
அறிந்து கொண்டேன் ஞானந் தெரிந்து கொண்டேன்
முடிவில்லாப் பரப்பிரம சொரூபத்தை
முற்றும் கண்டேன் இகப்பற்றும் விண்டேன். 7

4. ஐந்து புலன்களின் கதவு திறக்கும் முறை அறிந்து, பிரம்மரந்திரத் (1008 தாமரை உள்ள தலை)தின் உண்மை வழியாகிய (நடுநாடியே வழி) அற்புதம் தெரிந்து, மனக் கலக்கம் நீங்கி, சித்தர்கள் திருவடிகளைத் தீர்க்கமாகப் பணிந்தேன்.

(பிரம்ம ரந்திரம் - ஆயிரத்தெட்டிதழ்த் தாமரையான தலைப் பகுதி)

5. சரியையும், கிரியையும் விட்டு, அடுத்த சாதனமாகிய யோகவழியைப் பற்ற உரிய அதீதம் வெளிப்பட்டு அதனால் மவுனயோகம் பயின்றதைச் சொல்லி முடிக்க முடியாது.

6. பராபரம் இருக்கும் வெளியை ஏற்று அங்குச் சிற்பரம் தோன்றுவதை அறிந்து நிராதாரமான பழையதும் நீங்காததும் ஆகிய ஆனந்த ரசத்தை முறையாக அனுபவித்து,

7. பராபரத்தின் அடி, நடு, முடி ஆகியன கண்டேன்; மோனநிலையை அறிந்தேன்; ஞானம் தெரிந்தேன்; முடிவற்ற பரப்பிரம்மத்தை முற்றவும் பார்த்தேன்; இவ்வுலகப் பற்றை விட்டேன்.

(பரப்பிரம்மம் - மேலான பரம்பொருளாகிய இறைவன்)

சுத்தப் பரவெளியே ஒளியாகத்
தோன்றிட மெய்ஞ்ஞானச் சுகம டைந்தேன்
சத்துச்சித் தானந்தத்தைத் தெரிசிக்கச்
சகலமும் பிரம மயம் புகலரிதே. 8

நாசிமுனை நடுவில் விளங்கிய
நயனத்திடை ஒளியாம் பரவெ ளியில்
தேசிகன் திருக் கூத்தை
தெரிசித்தே மோனநிலை பரிச முற்றே. 9

நினைவே கனவெனவும் தெளிந்தந்த
நினைவையும் மறந்தெழு கலைம றந்தே
தனதெனும் தனைமறந்தே சுத்த
சாகரத்தில் உழலாத பாகந் துறந்தே. 10

ஓமென்ற பிரணவத்தை இன்னதென
உண்மைகண்ட பின்புவெகு நன்மையும் பெற்றேன்
நாமெனும் அகங்காரந் தனைவிட்டு
நாட்டந் தெரிந்து கொண்டேன் தேட்டமுடனே. 11

8. சுத்தமான பரவெளியில் பேரொளி தெரியும்போது மெய்ஞ்ஞானத்தையும் சுகத்தையும் பெற்றேன்; சத்சித் ஆனந்தமாகிய பொருளைத் தரிசித்தேன். எல்லாம் பிரம்மமே. அதை விளக்க முடியாது.

9. மூக்கின் நடுவில் ஒளியாய்த் தோன்றி புருவமத்தி ஆகிய பரவெளியில் குருநாதன் திருக்கூத்தைத் தரிசித்து மவுனயோகத்தைப் பின்பற்றினேன்.

*10.* நினைவையும் ஒரு கனவாகக் கொண்டு, பிறகு அதையும் மறந்து, ஏழு கலைகளையும் மறந்து, தனது என்னும் உணர்வையும் மறந்து, வாழ்வாகிய கடலில் துன்புறாதபடி எல்லாம் துறந்து,

*11.* ஓம் என்னும் பிரணவத்தை இன்னதென உண்மை கண்ட பிறகு, மிகுந்த நன்மையடைந்தேன்; நாம் என்று எழும் அகங்காரத்தை விட்டு உண்மை புரிந்து கொண்டேன்.

ஆசையை விட்டுஒளிந்து விரிந்தோடும்
ஐம்புலனைத் தான்அறுக்குந் தெம்பை அளித்துப்
பாசந்தனைக் கடந்து குருசொல்
படிதவ றாமல்அப் படிந டந்து. 12

கவனக் குளிகைகொண்டு அதனாலே
ககனமார்க் கந்தனிலே கவனமாய்ச் சென்று
தவமுறும் மாசித்தர்கள் வாழ்கின்ற
சதுரகிரிக் குப்போய் குதூக லித்தேன். 13

தவப்பரம் பரையின்மேல் இருக்கிற
சாமிபர ஞானநவ சித்த ருடனே
சிவசொரூ பம்தெரிந்தேன் மனதினில்
தீபவொளி கண்டபின்பு ஆவலும் விண்டேன். 14

மூலாதாரந் தெரிந்தேன் தெரிந்துஅந்த
முச்சுடரின் தீபவொளி கண்டு மகிழ்ந்தேன்
நாலா கலையறிந்தேன் என்பாட்டன்
நந்தீசர் கிருபையால் சந்தோடம் கொண்டேன். 15

*12.* ஆசையை விட்டு, மறைந்து வெளிப்படும் ஐம்புலனை முற்றும் நீக்கும் வலிமை தந்து, பந்த பாசத்தை விட்டு அகன்றிட உதவிய குருவின் சொல்லைச் சிறிதும் நீங்காதபடி நடந்து,

*13.* கவனத்துடன் யோக மாத்திரை சாப்பிட்டு, ஆகாய மார்க்கமாக மெல்லச் சென்று, பெரிய சித்தர்கள் தவம் செய்யும் சதுரகிரியை அடைந்து மகிழ்ந்தேன்.

*14.* தவம் செய்யும் பரம்பரையில் உள்ள கடவுளாம் நிலைகொண்ட நவநாத சித்தர்களுடன் கலந்து சிவ சொரூபத்தைக் கண்டேன்; தீபஒளியைக் கண்டபிறகு என் ஆவல் எல்லாம் விட்டேன்.

*15.* மூலாதாரத்தையும், சூரிய, சந்திர, விண்மீன் ஆகிய மூன்று ஒளிகளையும் கண்டு மகிழ்ந்தேன்; பலவகைக் கலைகளையும் அறிந்து என் குரு பரம்பரையில் மூத்த நந்திதேவர் அருளால் இன்பமும் கொண்டேன்.

யோகா அனுபவமறிந்தே மணிப்பூரகம்
உத்தமர்க்குச் சித்தியென மெத்தவுங் கண்டேன்
சாகாது இருந்திடவே விசுத்திநிலை
தன்னில்இருந்து அந்நிலையே நன்னி லையதாய். 16

கண்டதே அங்குநின்றேன் சிவசக்தி
கற்பனையது என்றுமகிழ்ந்து அப்புறஞ் சென்றேன்.
பண்டுஅன்னை உமையவட்கு அருளிய
பரதைகண்டு ரசபான போதையும் உண்டேன். 17

ஆரும்அறிய ஒண்ணாப் பூரணத்து
ஆச்சரியங் கண்டபின்பு பேச்சு அடங்கினேன்
சீருஞ்சிறப்பும் மிக்க மனோன்மணி
தேவிஅருளால் அறிந்து மேவிக் கொண்டேன். 18

காமியங் கடந்தவிடம் தினந்தினம்
கண்டறிந்து கொண்டேன்முனி அண்டர் புகழும்
வாமியிவள் எனப்பேர் நன்றாக
வாங்கிக் கொண்டேன்பரத்து ஓங்கிக் கொண்டேன். 19

*16.* யோகஅனுபவத்தை அறிந்ததும் மணிப்பூரகத்தின் முயற்சியே உத்தமர்க்குச் சித்தியளித்ததென அறிந்தேன்; சாகாத கலையை விசுத்தியில் ஒன்றியிருப்பதால் அதுவே நல்ல நிலை என்று உணர்ந்தேன்.

விளக்கம்: மணிப்பூரகம் முதல் மனோன்மணி வரை உள்ள பிராசாத யோகத்தைக் கூறுகிறார்.

*17.* விசுத்தியில் ஒன்றுவதே நல்ல நிலை எனக் கண்டு அங்கு நின்றேன்; சிவசத்தியையே கற்பனையாகக் கொண்டு மகிழ்ந்து அப்பால் சென்றேன்; முன்பு உமை அன்னைக்கு அருளிய ரசபானத்தை உண்டேன்.

*18.* யாராலும் அறியப்படாத பூரணத்தை வியந்திடக் கண்டபின் மவுனமானேன்; சீரும் சிறப்பும் கொண்ட மனோன்மணி தேவியின் அருளால் யாவும் அறிந்தேன்.

*19.* காமியமான ஆசைகள் அற்ற இடத்தைத் தினமும் அறிந்தேன்; முனிவரும் உலகினரும் புகழும் வாமபாகத் துள்ளவள் என்ற பெயரை அறிந்து பராபரத்தில் ஓங்கினேன்.

நாதாந்த மோனமெனும் நிலைகண்டு
நானிருந்தேன் உறக்கம் ஊணும் அற்றேன்
வேதாந்த வழியறிந்தேன் அஞ்ஞான
வீட்டைக் கடந்துமேலாம் வீட்டையுங் கண்டேன். 20

சாத்திரம் பலபடித்தேன் பொல்லாச்
சண்டாளர் சவகாசந் தன்னை மறந்தேன்
பாத்திரம் அறிந்துகொண்டேன் அவருடன்
பத்தியொடு சேர்க்கைசெய்து முத்தியைக் கண்டேன்.
21

உப்பிட்டபாண்டமிது வந்தவழி ஃதென்று
உண்மைதெரி யாதமாந்தர் நன்மை யீதென்று

செப்புக் குயமானார் ஆசைகொண்டு
தேசமதிலே அலைந்து பாசத்து உழல்வார். 22

நிலையிலாப் பொய்க்கூடு இத்தேகம்
நிச்சயம தற்றதென் அச்சம தோடு
மலைகுகை தனில்ஏகி சிவஞான
மார்க்கம் தெரிந்ததின் நேர்கை யாகி. 23

*20*. நாதாந்தமோனம் என்னும் நிலையைக் கண்டு உறக்கம் உணவு இன்றி இருந்தேன்; வேதாந்தத்தின் (யோகம்) வழியையறிந்தேன்; வீட்டையும் கடந்து மேலாம் வீட்டையும் கடந்து கண்டேன். (கீழ்வீடு ஆதாரங்கள்; மேல் வீடு நிராதாரங்கள்)

(நாதாந்த மோனம் - மூலாதாரம் முதன் தலைக்கு மேலுள்ள நாதாந்த நிலை வரை ஒரே நிலையில் உள்ள உணர்வாகக் கொண்டு இந்திரியங் களின் செயலற்ற தன்மையை உணர்ந்து நிட்டை நிலையில் இருத்தல்)

*21*. பல சாத்திரங்களையும் படித்தேன்; சண்டாளர் உறவை மறந்தேன்; பாத்திரத்தை அறிந்தேன்; பக்தியைக் கொண்டு முத்தியடைந்தேன்.

*22*. உப்பினால் செய்த உடலாகிய இந்தப் பாண்டம் எப்படி வந்தது என்று உண்மை தெரியாத மாந்தர்களுக்கு இதுவே நன்மை என்று சொல்லுவர் பெரியோர். இல்லா விடில் ஆசை வழியில் அலைந்து பாசத்தில் துன்புறுவர்.

*23*. நிலையற்றதான பொய்க்கூடே இந்த உடல் என்று தெரிந்து, அச்சத்தோடு மலைக் குகையில் சென்று சிவஞான மார்க்கம் தெரிந்து அதில் பயின்று,

ஆங்காரமும் ஒழித்தேன் உண்மைநிலை
அறிந்திடம் நொண்டியெனச் சிறந்தி ழித்தேன்
பாங்காம் நிலைதெரிந்தேன் குருசொன்ன
பரப்பிரம சொரூபத்தின் தெளிவ றிந்தேன். 24

தன்னையும் தானுணர்ந்தேன் எட்டுத்
தலங்களும் ஒன்பது வாசல் உணர்ந்தேன்
பின்னுமக் கதவடைத்தேன் மேலாம்
பெருவழி ஊடுசென்று திருவ டைந்தேன். 25

மாதா மனோன்மணியாள் பீடமதில்
மணிச்சத் தத்தொனி யதுகணகணஎன
நாதகீ தங்கேட்டுச் சிவதிரு
நடனக்கண் காட்சியை உடனே கண்டேன். 26

மந்திரந் தனைத்தெரிந்தேன் ஓங்கார
வட்டமதைத் திட்டதால் எட்டி அறிந்தேன்
இந்திர பீடம்உணர்ந்தேன் மோனநிலை
இன்னதென்று கண்டுமனம் நன்னயங் கொண்டேன். 27

24. என்னுடைய அகங்காரத்தைக் கைவிட்டேன்; உண்மை நிலையை அறிந்து என்னை நானே இயலாதவன் என்று இகழ்ந்து கொண்டேன்; உண்மைப் பாங்கை அறிந்து பரப்பிரம சொருபத்தின் தெளிவை அறிந்தேன்.

25. தன்னையும் (ஆத்மாவையும்) நானே உணர்ந்தேன்; உடலில் உள்ள எட்டுத் தலங்களையும், ஒன்பது வாசல்களையும் அறிந்தேன்; பிறகு அவற்றின் வாசல் கதவை மூடினேன்; பெருவழி வழியாகச் சென்று மோட்சம் அடைந்தேன்.

(எட்டுத் தலங்கள் - ஆறு ஆதாரம், பிரம்மரந்திரம், தலைக்கு மேல் 18 விரல் உயரத்தில் உள்ள மனோன்மணி ஆகியவை எட்டு இருப்பிடங்களாம்; தலம்)

26. அன்னை மனோன்மணி பீடத்தின் மணி ஒலியைக் கேட்டு, நாத கீதமும் கேட்டுச் சிவத்திரு நடனமும் கண்டேன்.

27. மந்திரத்தைத் தெளிந்து ஓங்கார ஓசையின் வட்டத்தையும் அறிந்தேன்; இந்திரபீடத்தையும் அறிந்தேன்;

மோனநிலை என்ன என்று அறிந்து மனத்தில் நன்மை கொண்டேன்.

விளக்கம்: ஓம் என்பது கூறியது உச்சிவரை ஒளிபடர் வதைக் கூறினார். இந்திர பீடம் - இந்திரயோனி என்பதாம். உண்ணாக்கு (உள் + நாக்கு) இதுவேயாகும்.

அழியாப் பொருளிதுதான் என்றுதொழுது
அகமகிழ்ந்தேன் ஞானச் சுகம டைந்தேன்
வழியாய் உணர்ந்தவர்க்கு மோட்சநிலை
வாய்க்குமென்று பேய்க்குணத்தைப் போக்கிப்
புகழ்ந்தேன். 28

வேத முடிவுணர்ந்தேன் எங்கும்
விளங்கும் பொருளைக்கொண்டு உளங்கு ளிர்ந்தேன்
நாத வெளியில்உற்றேன் இந்த
நானிலத்தோர் புகழவே ஞானிபேர் பெற்றேன். 29

வெட்ட வெளிதானே யாமிது
வென்றறிந்து கொண்டவர்வே றொன்றையும் உன்னார்
பட்டப் பகலதனை இருளாகப்
பார்த்தவருக்குக் காணஞான நேத்திரம் உண்டோ? 30

28. இது அழியாத பொருள் என்று உணர்ந்து தொழுது அகமகிழ்ந்தேன்; ஞானமாகிய இன்பமடைந்தேன்; இவ் வழியை உணர்ந்தவர்க்கு மோட்சம் வாய்க்கும் என்று பேய்க்குணத்தைப் போக்கிப் புகழ்ந்தேன்.

29. வேத முடிவை உணர்ந்தேன்; எங்கும் வெளிப் படும் பரம்பொருளைக் கண்டு உள்ளம் குளிர்ந்தேன்; நாதவெளியில் சென்றேன்; இவ்வுலகினர் புகழ்ந்திட ஞானி எனப் பெயர் பெற்றேன்.

30. வெட்டவெளியை இன்னது என்று அறிந்து கொண்டவர் வேறு எதையும் நினைக்க மாட்டார். பட்டப் பகலையும் இருளாகப் பார்ப்பவருக்கு ஞானக்கண் இல்லை.

மூலமுதலி மொள்ளே என்றுமுன்னாள்
மொழிந்தார் நமதுகுரு மூல ரன்றே
சாலவே மறைநான்கும் சொன்னதோர்
சங்கைதெளிந்து ஆனந்தம் பொங்கித் ததும்ப. 31

தான்நான் எனஅற்று குருவருள்
தன்னைமற வாமல்என்னை என்னால் அறிந்தேன்
ஊனுடல் அழியாமல் நிட்டைதனில்
உற்றவிழி துயிலாத பெற்றியி லிருந்தேன். 32

ஒருபொருள் விரிவாலே கண்டறிந்த
உற்பனமெல் லாம்விழலாம் கற்பனை யென்றே
அறிவால் அறிந்து கொண்டு சிதம்பரத்து
ஆடல்கண்டு ஆனந்தப் பாடல் விண்டேன். 33

31. மூலத்திலிருந்து தொடங்குக என்று குரு திருமூலர் கூறினார். மறைகள் நான்கும் கூறியவற்றின் ஐயங்களைத் தெளிவு செய்து கொண்டால் ஆனந்தம் பொங்கித் ததும்பும்.

32. தான் என்றும் நான் என்றும் வேறு வேறாகத் தெரியாமல் குருவருளால் தன்னையும் மாறாமல் என்னை என்னால் அறிந்தேன்; (ஏகமாகக் கடவுளுடன் தம்மை இணைப்பது கூறினார்) இவ்வுடல் அழியாமல் உறங்காமல் யோக சமாதியில் ஈடுபட்டேன்.

33. ஒரே பொருள் எங்குமாக விரிவு அடைந்திருப்பதை அறிந்தால் பிற எல்லாம் கற்பனை என அறியும். சிவ அறிவால் என் அறிவையும் இணைத்து அறிந்தேன்; இறைவனின் ஆடலைச் சிதம்பரத்தில் கண்டேன்; ஆனந்தப் பாடல் பாடினேன்.

## மச்சேந்திர நாதர் என்ற நொண்டிச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்

# 12. திரிகோணச் சித்தர் பாடல்கள்

இவர் யாழ்ப்பாணத்துத் திரிகோண மலையைச் சார்ந்த வரோ என ஐயுறுவர். குற்றால மலைக்கும் திரிகோணமலை என்ற பெயருண்டு. இதில் உண்மை உணரச் சான்றில்லை. இவர் 90 கண்ணிகள் இயற்றியுள்ளார்.

## திரிகோணச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

### கலிவெண்பா

சிவனே பரமகுரு தேசிகனே பாதம்
அவனே அனுதினமும் ஆகும் நவநீத 1

பொன்பூத்த நீலப் புயல்வண்ண னும்பொறிவாய்
மின்பூத்த நான்முகனா வேதாவும் தென்பூத்த 2

செக்கச் சடையானும் தேசுபெற வேயுருவாய்
ஒக்கத் தனிவந்து உதித்தபிரான் தர்க்கமிடும் 3

வேதமும் சாத்திரமும் வேண்டும் பலசமயம்
பேதமும் காணாப் பெருஞ்சமயம் நாதத்தில் 4

ஓசை அடங்க ஒளியும் பரமனையில்
ஆசை அடங்க அனுபவிப்போன் பூசைபுரி 5

தொண்டர் இதயச் சுனைமடலில் வேரூன்றி
விண்ட நறைக்கமல மெல்லடியான் எண்திக்கும் 6

*1.* தினமும் பரமகுரு தேசிகனாகவும் சிவனாகவும் இருக்கும் அவன் பாதமே பணிக.

2. (நவ நீதம் - வெண்ணெய்) வெண்ணெய் தின்ற வாய் உடைய நீல நிறமான திருமாலும், பிரம்மனாகிய நான்முகனும்,

3. சிவந்த சடை கொண்ட உருத்திரனும் ஆகிய மும் மூர்த்திகள் கூடிச் சென்று உதித்தவனாகிய குரு.

4. தர்க்க சாத்திரம் வேதாந்தம், பல சமயங்கள் ஆகிய வற்றால் பேதம் காணாத பெரும்சமயமாய்,

5. நாதத்தின் ஓசை உடலில் அடங்கும் இடம் கண்டு, அது கடவுள் இருக்குமிடம் என்று உணர்ந்து அவ்விடத்தில் யோகம் செய்து ஆசையை விட்டு அனுபவிப்பவன்.

6. தொண்டர்கள் இதயமாகிய சுனையில் வேரூன்றி மலர்ந்த வாசம் மிகுந்த தாமரைத் திருவடி கொண்டவன்.

சாதியான் தோன்றும் சமரச மாயிருந்து
பேதியான் வஞ்சம்இலாப் பேதைமையான் ஆதி 7

முதலாய் நடுவாய் முடிவாய் முடிந்து
சிதலாய் வெளியொளியாஞ் சென்மம் சதகோடி 8

சத்தியும் மந்திரமும் தானாகப் பாவித்து
முத்தி கொடுக்கும் முழுமுதல்வன் சுத்திய 9

செஞ்சடையான் யோகநிலை தேர்ந்து தனைக்குறியார்
நெஞ்சடையான் பிஞ்சுநிலாச் சடையான் நஞ்சார்ந்த 10

கண்டத்தான் தேடரிய காட்சியான் பல்கோடி
அண்டத்தான் சோதி அருவுருவான் முண்டகச்செம் 11

போதம் கடலும் பொருப்பும் விருப்பாகிச்
சூதுபுரி மூன்று தொழிலுடையோன் ஓதும் 12

7. எங்குமுள்ள சாதிகளுக்குள் சமரசம் காத்து வேற்றுமையை நீக்கி வஞ்சமிலாது அறியாதுள்ளான்.

*8.* ஆதியாகவும் முதல் நடு முடியாகவும் எங்கும் பரவி வெளியில் பரவும் ஒளியாகியவன்.

*9.* சதகோடி சத்தியும் மந்திரமும் தான் என்றே பாவித்து முத்தியை வழங்கும் முழுமுதல்வன்.

*10.* சுற்றிய சடைக்கோலம் கொண்டவன்; யோக நிலையில் தெளிவடையாது தன்னை நினைக்காதவர் நெஞ்சைச் சேராதவன்; பிறை நிலவைச் சடையில் வைத்தவன்.

*11.* நஞ்சுண்ட கண்டன்; தேட முடியாத காட்சியுடையவன்; பல கோடி அண்டங்கள் உடையவன்; சோதியாகிய அருஉருவமானவன்.

*12.* தாமரைப் பாதத்தில் ஞானம் தருபவன்; கல், மலைகளில் விரும்பி இருப்பவன்; ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களும் தானே செய்பவன்.

சரியை கிரியை தவயோக ஞானம்
தெரிய அமைத்த சிவசித்தன் துரியத்தில் 13

தோத்தி அணுவாய்த் திகழும் சுடரொளியாய்த்
தேத்தியுரு வாகவந்து சென்மிப்போன் சாத்தரிய 14

முக்குணமும் ஐம்பொறியும் மும்மலமும் உண்டாகி
எக்குணமும் தானாய் இருந்தருள்வோன் அக்கரமாம் 15

அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோர் அட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய் எங்கும் பிரணவமாய்க் கொஞ்சப் 16

பொருளாய் மருளாய்ப் புரையாய் உரையாய்
அருளாய்த் தனியிருந்த ஆனந்தன் இருளாத 17

காட்சியான் கண்டவர்க்குக் காணாத பேர்க்கு உருவும்
சூட்சியாய் நின்ற தொழிலாளி ஆட்சி 18

*13.* சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு படிகளில் பயிற்சி அடைந்தவர் தெரியுமாறு உள்ள சிவனாகிய சித்தன்.

*14.* தூங்காமல் தூங்கலாகிய யோக நிலையில் (துரியத்தில்) தோன்றி அணுவாகவும், திகழும் சுடர் ஒளி ஆகவும், தெளிவாக உருவமும் கொண்டு தோன்றுபவன்.

*15.* சொல்லுதற்கு இயலாத மூன்று குணங்களும் (சத்துவம், ராஜஸம், தாமசம்), ஐந்து பொறிகளும், மூன்று மலங்களும் (சஞ்சிதம், ஆகாமியம், கன்மம்) உள்ள உயிர்களுக்கு எல்லாக் குணமும் உடையவனாய்த் தோன்றுபவன்.

*16.* சிவாயநம எனும் ஐந்து எழுத்தாய், ஓம் நமோ நாராயணாய என்னும் எட்டு எழுத்தாய், ஐம்பத்தொரு (வடமொழி) எழுத்துக்களாய், பிஞ்செழுத்தாகிய ஓரெழுத்து பீஜங்களாய், பிரணவமாகிய ஓம் எழுத்தாய் உள்ளவன்.

*17.* சிறு பொருளாய், அறிய முடியாததாய், உவமையாய், உரைப் பொருளாய், அருளாய், தனியாக இருக்கும் ஆனந்த மயமானவன்.

*18.* காட்சி வடிவில் தவத்தினர்க்குக் காணப்படுபவன், காணமுடியாதவர்க்காக உருவ மேனியில் வணங்கப்படுபவன், இப்படி சூட்சியாய் இருக்கும் தொழிலும் உடையவன்.

இடைபிங் கலைசுழியினை எட்டாமல் மூலக்
கடையில் நடக்கும் கழலுடையோன் விடையேறும் 19

பாசன் குடிலைப் பராசத்தி வீட்டிலுறை
ஏகன் பிறப்பிறப்பு ஒன்றுஇல்லாதான் யோகன் 20

சிறியன் பெரியன் சிவன் கருப்பன்
குறியன் நெடியன்எனக் கூறாதான் பொறிகலந்த 21

பாசத்தான் பாசக் கட்டை அறுத்தவர்க்கு
மாசத்தான் சோதிமணி மண்டலத்தான் நேசத்தான் 22

பொய்யர்க்குப் பொய்யன் பொருந்தி உளந்தோறும்
மெய்யர்க்கு மெய்யாய் வெளிநின்றோன் ஐயன் 23

உருவும் அருவும் ஒளியும் வெளியும்
கருவும் கடந்தகன மாயன் குருவாகித் 24

*19.* இடா, பிங்களா எனும் இரட்டை நாடிகளிலும், சுழிமுனையிலும் எட்டாதபடி மூலாதாரத்தில் இயங்கும் திருவடி கொண்டவன்.

*20.* காளை வாகனத்தில் ஏறும் குடிலை (நாதம்) இருக்கும் பராசத்தி வீட்டில் தனியானவனாய், பிறப்பும் இறப்பும் இன்றி இருப்பவன்.

*21.* குறுகிய வடிவமும், விசுவமாகிய பெரிய வடிவமும், சிவப்பு கருப்பு ஆகிய நிற வடிவமும், குட்டை நெட்டை ஆகிய வடிவும் என்று பலவற்றில் எது தனக்குரியது எனக் கூற இயலாதவன்.

*22.* பக்தியாகிய பாசம் உடையவன்; உலகினர் பாசக்கட்டை அறுத்து மாசின்றிச் செய்பவன்; சோதியான மாணிக்க மண்டலம் உடையவன்.

*23.* பொய்யர்க்குப் பொய்யாக இருந்து, உள்ளங்கள் யாவற்றிலும் மெய்யுடையார்க்கு மெய்யாய் இருந்து வெளியில் நிற்பவன்.

*24.* உரு, அரு, ஒளி, வெளி, ஆதாரமாகிய கரு என்ற யாவும் கடந்து கனமாய் உள்ள மாயவனானவன்.

தோத்திப் பழவடியார் சூழ்வினையை நீக்கியுரு
மாத்தித் தனதுவசம் ஆக்கியே சாத்தரிய 25

மானிடச் சட்டை வடிவெடுத்த மாயோகி
யானிடப முந்தும்அருள் ஆனந்தன் தேனடர்ந்த 26

செங்கமலத் தோற்குஅரிய தேவன் அடியவர்கள்
அங்கமலத் தேயுறையும் ஆனந்தன் எங்கள்குரு 27

நேசிக்கும் அன்பர்துயர் நீக்கி நிலைபெறவே
யாசிக்கும் எங்கள்குரு ஆனந்தன் பூசிக்கும் 28

பொன்மலைக்கும் வெள்ளிப் பொருப்புக்கும் பொற்புடைய
கன்மலைக்குந் தானே கடவுளாய் பன்மலைக்கும் 29

எட்டாச் சிகரம் எழுத்துக் கொழுந்தோட
மட்டான ஓங்கார வன்மலையான் கட்டாகத் 30

**25.** பழைய அடியார்களின் வினைகளை நீக்கி அவர்கள் துன்ப உருவை மாற்றித் தன் வசம் ஆக்குபவன்.

**26.** மானிட உடம்பாகிய குரு வடிவு தாங்கிய பெரும் யோகியாவன். அவனை நினைக்கும் போது முன்னதாக நந்தி அருள் கிடைக்கும். அவன் ஆனந்தம் தரும் குருவாவான்.

**27.** பிரமன் முதலிய தேவர்களுக்கு அரியவன். அடியவர் உள்ளத் தாமரையில் வாழும் இன்பவடிவன்.

**28.** அன்பு கொள்வார் துயரத்தை நீக்கி நிலையாகச் செய்யும் எங்கள் குருவாகிய ஆனந்தன்.

**29.** பொன் மலையாகவும் வெள்ளிமலையாகவும் காட்சி தரும் கைலை மலை முதலிய பலமலைகளிலும் வாழும் கடவுள்.

**30.** பல மலைகளிலும் எட்ட முடியாத உயரமான முடிவில் நாதம் எழுந்து தொடரும்படியான ஓங்காரமாகிய வலிய மலையான். (ஓங்கிய நாதமாய் எங்கும் உயரும் என்பதாம்)

தேடும் அடியார்கள் சின்னம் துகளறவே
ஆடுஞ் சிவகருணை ஆற்றினான் நாடுதவம் 31

பண்ணும் அடியார் பழவினைபோய்ப் பாதமலர்
நண்ணும் மொழியிற் பேரின்பம் நாட்டினான்
எண்ணும்நிறை 32

கற்புடையான் என்னக் கலங்காத நெஞ்சுகொண்ட
பொற்புடைய காயா புரிநகரான் அற்பவிசை 33

வண்டு தொடாமல் மதுஒழுகி வாய்ந்தாறைக்
கொண்டு மணத்த குணமலையான் துண்டத் 34

தரமே கரமாய் ஒருநாளும் ஓயாச்
சரமே முழங்கும் தவத்தோன் கரமெடுக்கும் 35

தொண்டர் பலபகையைச் சூறைகொள வேணும்எனக்
கொண்டதவ வேடக் கொடியினான் சண்டமிகும் 36

*31.*தேடிடும் அடியார்கள் மனத்தில் கருதிய வடிவுகள் நீங்கிடத் தானே நடனமாடிக் கருணை புரிபவன்.

*32.* தவம் செய்வோரின் பழைய வினைகள் போய் அவன் பாதமலரில் இன்பம் அடையுமாறு செய்வான்.

*33.* நினைப்பதால் கிடைப்பது என்று தவறாத நிலையை உடையவன்; கலக்கம் தோன்றாத நெஞ்சுடையான்; பொலிவுடைய காயாம்பூ போலும் நிறமுடைய நகரில் உள்ளவன்.

*34.* வண்டுகள் மொய்க்காததால் தானே தேன் வெளிப் பட்டு ஆறு (யோகத்) தாமரைகளும் மலர்ந்து மணம் வீசச் செய்பவன்.

*35.* தாம் எங்கும் விட்டுவிட்டுத் தோன்றுவதால் எங்கும் என்றும் ஓயாது சஞ்சரிக்கும் தவமானவன்.

36. கையெடுத்துத் தொண்டர்கள் தம் பகையை நீக்குமாறு வேண்டும் தவ வேடத்தையே கொடியாகக் கொண்டவன்.

சமையப் பகைதுடைத்துச் சாதிமுறை எல்லாம்
குமைய மிதித்துக் குளப்பி அமையாத 37

ஆணவத்தை வேரோடு அறுத்து விழுத்தாட்டி
நாணமுற்ற பாகம் நறுக்கியே காணத் 38

தொடர்ந்த கிளைநிகழச் சூரைபட வீசி
அடர்ந்தமக வாகைக்கு அடங்காப் படர்ந்ததெரு 39

வீதியும் அம்பலமும் மிக்கதொரு சாதிகட்குப்
பூதிப் பொடிஅணிந்து பொய்மிதித்துக் காதிச் 40

சினக்குறும்பை வாரிச் சிதறித் திரட்டி
மனக்குறும்பைப் பற்றி வளைத்து உனக்கென் 41

ஓது குறும்பை உழக்கி எமராசன்
தூதனைப் பாய்ந்து துரத்தியே தாதுசெறி 42

37. பல சமயங்களின் பகைமையை நீக்கிச் சாதி முறைகளை எல்லாம் மிதித்துச் சமம் செய்து,

38. ஆணவத்தை வேரோடு அறுத்து விழுதுபடாது பாகங்களைத் துண்டித்தவன். (ஆணவத்தை மரமாகக் கற்பனை செய்தார்)

39. தொடர்ந்த இடமெல்லாம் ஆணவத்தின் கிளைகளை வெளிப்பட வீசி வாகை பெற வைப்பான்.

40. வீதிகளிலும் அம்பலத்திலும் நிறைந்த பல சாதியர்க்கும் விபூதி அணிந்து பொய்ய நீக்கியவன்.

41. கொடிய குணமாகிய சினத்தின் பற்றை அறுத்து, மனத்தின் கெட்ட செய்கைகளை முழுதும் வளைத்து நீக்கி,

**42.** எல்லாக் குணக்கேடுகளையும் நீக்கி எமனின் தூதனை உயிர் கவராமல் துரத்தியவன்.

43\. அஞ்ஞான மோகம் அறுக்கும் அனுபோக
மெய்ஞ்ஞான மோனமத வேளத்தான் பைநாகம் 43

நெட்டுடலை மாறி நெருக்கிப் பரிபடுத்திக்
கட்டும் இசைக்கும் கடிவாளந் தொட்டுத் 44

திசைவாயு என்னுஞ் சின்னூல் அகப்பட்டுக்
குசையால் இறுக்கிக் குணப்படுத்தி அசையா 45

மனம்என்னுங் கல்லணையை வைத்திறுக்கி வாய்ந்த
சினமென்னும் அங்கவடி சேர்த்துக் கனமான 46

நாகபந்தஞ் சாரி நடைதுலுக்குத் தூவான
மாகமுற விட்டுள் ளடக்கியே சோகப் 47

புரியட்ட காயப் பொருப்பைத் தகர்த்துச்
சரியட்ட ஐம்பொறியைத் தாண்டித் துரியத்தில் 48

**43.** அறியாமையாகிய மோகத்தை அறுக்கும் அனுபோகத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் மவுனத்தையும் மேற் கொண்டு மன்மதனை வென்றவன்.

**44.** உடலை நெருக்கிப் பரிபக்குவம் செய்து வைக்கும் நாதத்திற்குக் கடிவாளமாய் இருப்பவன். (நாதம் பல விடத்திலும் பரவிச் சிதைவுறாது செய்பவன்)

**45.** உடலின் எல்லாப் பக்கங்களிலும் பரவும் வாயுவைச் சிறிய சொல்லால் பிடித்து அகப்படுத்திச் சுதியோட்டும் கருவி (இசை)யால் இறுக்கிக் குணம் செய்பவன்.

**46.** மனம் எனும் கல்லணையைக் கட்டுப்படுத்திக் கோபம் என்பதைத் தன் திருவடியில் மிதித்துள்ளவன்.

**47.** நாகபந்தத்தைச் (அணி) சாரியாக நடத்தித் தன் மார்பில் வரச் செய்துள்ளவன்.

விளக்கம்: நாகபந்தம் இறைவன்மேனியில் இருப்பது, குண்டலினியைப் பலவிடத்துச் செல்ல நடத்துவதை அறிவிக்கும்.

**48.** புரியட்டகமாகிய எட்டுப் பொருள்களால் ஆகிய இந்த உடம்பைத் தகர்த்து, சரியாக வைத்த ஐம் பொறி களையும் தாண்டியவன்.

விளக்கம்: ஐம்பூதங்கள், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய எட்டுப் பொருள்களால் உடலைக் கட்டியவன்.

ஓடிவிந்து நாதமெனும் உட்கோட்டை யும்கூத்து
வாடியிடும்நாடி வரம்பு அழித்து ஆடியிடும் 49

தொண்டுபரி அன்பர் தொடர்நரகில் வீழாமல்
மண்டுசினம் கொண்டெழுந்த வாசியான்கண்டுதொழும் 50

தன்னாணை தானே தனக்காணை யாவதன்றிப்
பின்னாணை இல்லாத பெற்றியான் எந்நாளும் 51

மாறாத கீர்த்திமது மாலையான் வாய்திறந்து
சீறாத மோனச் சிவயோகி நேராக 52

ஆண்டகுரு சிற்றம் பலவன் அடிஅருளும்
வேண்டி வளர்த்த இருபதத்தான். பூண்டசிவ 53

வேடத்தான் ஓங்கி விளங்கும் செழுங்கமல
பீடத்தான் ஞானப் பிரகாசன் ஆடில் 54

**49.** உடம்பினுள் நாதம், விந்து என்பவற்றையும் அவை கூத்தாடும் நாடிகளின் எல்லையையும் அழித்து,

**50.** தொண்டர்கள் தொடரும் நரகில் சேராமல் அவர்கள் கோபத்தைத் தன் சினத்தால் மறித்த பிராணாயாமத்தான்.

51. அவன் ஆணையே அவனுக்குண்டு. வேறு ஆணையோ விதியோ இல்லாத தன்மையன்.

52. மாறாத புகழ் உடையவன்; தேனமுத மாலை யான்; வாய் திறந்து யாரையும் சீறாத மோனமுடைய சிவயோகியான்.

53. நேரில் ஆண்டு கொண்ட குரு; சிற்றம்பலம் உடையவன்; அருள் தரும் திருவடியான்.

54. சிவவேடம் கொண்டவன்; தாமரையிலிருக்கும் பிரமனின் பீடத்தையும் கொண்டவன்; விளக்கமான ஞானம் உடையவன்.

பரியான் உரியான் பசியான் பொசியான்
பெரியான் அரியான்பேர் இல்லான் துரியா 55

தீதம் கடந்து திகழ்அம் பரம்கடந்து
போதம் கடந்துநின்ற பொற்பதத்தான் சீதம் 56

கருணை ஆனந்தமுனி கண்டுதொழ வந்த
வருணன் ஆனந்த மழைமேகம் அருணப் 57

பிரகாசம் கொண்டுநின்ற பேரொளிபோல் மாயைப்
பிரகாசம் மாற்றும் பெருமையான் இறவாத 58

மெய்ப்பொருளைக் காட்டி விரும்பும் அடியாரைக்
கைப்பொருளாய்க் கொண்ட கருணையான் துய்க்கும் 59

உடல்பொருள் ஆவி யுதகத்தாற் கொண்டு
சடவினையை மாற்றும் சமனன் இடைபிங் 60

55. பரிந்து வருதலோ உரியவனாகக் காட்டுவதோ பசிப்பதோ உண்பதோ இல்லாத அவன், பெரியவனோ அரியவனோ ஆகமாட்டான்; ஒரு பெயரும் இல்லாதவன்.

**56.** துரியாதீதம் (சமாதிநிலை) கடந்து, திகழும் பரம் பொருளையும் கடந்து, ஞானத்தையும் கடந்து நிற்கும் பொன் அடிகள் உடையவன்.

**57.** கருணையும் ஆனந்தமும் கொண்ட முனிவன்; யாவரும் கண்டு தொழ வந்த வருணன்; ஆனந்த மழை பொழியும் மேகம்.

**58.** அருணனின் பிரகாசத்தைக் கொண்டு நிற்கும் பேரொளிபோல் மாயையை மாற்றும் பெருமை உடையவன்.

**59.** என்றும் அழியாத மெய்ப் பொருளைக் காட்டித் தன்னை விரும்பும் அடியவர்களைத் தன்கைப்பொருளாகக் கொண்ட கருணையுடையவன்.

**60.** உடல் பொருள் ஆவி யாவும் தன் கலையால் கொண்டு, சடமாகிய இந்த வினையை மாற்றிச் சமம் செய்பவன்.

கலைசுழினைக்கு எட்டாத காட்சியான் காமம்
கொலைகளவு தீர்த்த குடோரி அலையாமல் 61

ஆட்கொண்ட சித்தம் பலவன் அடிக்கமலத்து
ஆட்கொண்ட தொண்டர்தனக்கு அடியேன்ஆட்கொண்ட 62

தூர்த்தன் இவன் என்பர் சொல்லத் துயருளழந்து
பார்த்தவிடம் எல்லாம் பகையாகி வேர்த்துக் 63

கலங்கி விதிர்விதிர்த்துக் கண்ணீர்ஒழுக
மலங்கிக் குருநாட்டில் வந்தேன் துலங்குமெனக் 64

காயா புரிநகரைக் கண்ணுற்றேன் அவ்வூரில்
போய்ஆ தரித்துப் பொருந்தினேன் மாயாத 65

மாது சிவானந்த வல்லிஎனப் பேரிட்டாள்
ஓதுதிரி கோணவல்லி யூர்தான் ஆதரவாய் 66

*61.* கலைகொண்ட சுழுமுனைக்கும் எட்டாத காட்சி யினன்; காமம், கொலை, களவு தீர்த்த குடோரி. (மருந்து)

*62.* என்னை ஆட்கொண்ட சிற்றம்பலவனின் திருவடியில் ஆட்கொள்ளப்பட்ட தொண்டர்களுக்கு அடியவன்.

*63.* காமம் கொண்டவன் என்று பலர் பேசப் பலவிதத் துயரம் அடைந்து, பார்க்குமிடம் எங்கும் பகையாகி,

*64.* வியர்த்துக் கலக்கமடைந்து நடுங்கிக் கண்ணீர் வழிந்தோடக் கலக்கமுற்று இந்தக் குருநாட்டிற்கு வந்தேன்.

*65.* விளக்கமுறும் காயாபுரிநகரைக் கண்டேன்; அவ்வூரில் ஆதரிக்கப் பெற்றுப் பொருந்தினேன்.

*66.* சிவானந்தவல்லி என்றபெயர் பெற்றவளால் வெளிப்பட்டேன்; பலர் புகழும் திரிகோணவல்லி என்னும் ஊர் மக்களால் ஆதரிக்கப்பட்டேன்.

கொஞ்சி வளர்த்த குடிலை மகள்தனையே
மிஞ்சுசிலம் பத்தொழிற்கு விட்டாளே ரஞ்சிதமாய் 67

கால்மாறி யாடக் கலாதி கரணவித
மேல்மாறிச் சுத்தி விளையாட நூல்மாறிக் 68

கைலாகு பாயக் கலந்து பலசமய
மெய்வாகு தாவிஅதன் மேல்மிதிக்கப் பையப் 69

பரதத் தொழிலும் பலகோடி வேத
கரதத் தொழிலும் தொகுத்து விரதவுரை 70

தென்னூல் வடநூலைத் தேர்ந்து பலகோடி
முந்நூலுந் தானே மொழிந்திட்டாள் இந்நிலத்தில் 71

ஆடப் பதுமைதனை ஆட்டிவிக்க அப்பதுமை
பாடத் தொழிலும் பலகற்றாள் நாடறிந்த 72

67. குடிலையின் மகளையே நாதத் தொழிலுக்கு அவள் அனுப்பினாள். (குடிலை - ஓம் என்னும் பிரணவ மந்திரம்)

68. கால் மாறியாடவும் இதனால் கரணங்களில் உள்ள கலைகள் மேல் உடம்பில் சுற்றி விளையாடின. (கால் மாறுதல் - இடது வலது எனப் பிரணாயாமம் செய்து காற்றை மாற்றல்)

69. பழகுவதற்கு (கைலாகு) எளிதானதில் கலந்து, பல சமய மெய்களும் தாவிக் கடந்து, அவற்றைவிட்டு நீங்கி,

70. நடனமும் பல கோடி வேத மந்திரத் தொழிலும் தொகுத்து விரித்து, (கலை நூல்கள்)

71. தொன்மையான வட நூலைத் தேர்வு செய்து, பலகோடியான முன்னோர் செய்த நூல் நூலாகத் தானே மொழிந்தான். (இவை யோகநூல்கள்)

72. பொம்மையை ஆடுமாறு ஆட்டுவிக்க, அது பாடும் தொழிலும் பலவாகக் கற்றது.

வம்பி திரிகோண வல்லி வடகிரியைக்
கெம்பூரம் எல்லாங் கிரகித்தேன் அம்புவியில் 73

மின்னே ளிந்தெழுந்த மேகம்போல் மெய்குளிர்ந்து
தன்னை அறிந்து தளதளத்தாள் பொன்னனையாள் 74

பக்குவத்தை நோக்கிமுகம் பார்த்துப் பரிமளிக்க
முக்குணமும் கற்ற முதுகிழவி தொக்குஅறுத்து 75

மின்னே அமுதம் விளைந்த மனக்கமலப்
பொன்னே உறுதியுள்ள புத்திகேள் பன்னரிய 76

வேத புராணர் வெறும்பிலிக்காய் உன்கமலப்
பாதம் பணிவர்முகம் பாராதே நாதத் 77

துரியமணி வாசலிலே தோன்றிமுகம் சற்றே
தெரியநின்று பின்னை உள்ளேசென்று அரிதாகச் 78

73. திரிகோண வல்லியானவள் வடக்கு மலையைப் போல் கம்பீரமாய் இருந்ததைக் கிரகித்தேன்.

74. இவ்வுலகில் மின்னல் தோன்றிய மேகம் போல் மெய் குளிர்ந்து தன்னை அறிந்து தளதளத்தாள்.

75. பொன்னை ஒத்த அவள் பக்குவத்தைப் பார்த்து முகத்தின் வழியே புகட்டினாள். அவள் முக்குணமும் கொண்ட மூதாட்டி. (வாலைக் கிழவி)

76. மின்னல் போன்றவளே! அமுதம் விளைந்த மனமாகிய தாமரையில் உள்ள திருமகளே! உறுதி கொண்ட என் கருத்தைக் கேள்.

77. வேதம், புராணம் மட்டும் பயின்றவர்கள் பொய்யாக உன் திருவடிகளைப் பணிவர். அவர்களுக்கு அருள் செய்யாதே.

78. துரிய நிலையின் தொடக்கத்தில் எதிர்ப்பட்டு, சிறிதே முகம் தெரியுமாறு நின்று, பிறகு உள்ளே யோகப் பயிற்சிக்காகச் சென்று,

சாற்றுஞ் சரியைச் சளுக்கர் உனைத்தழுவப்
போற்றுவார் அங்கவர்பின் போகாதே ஏற்றும் 79

அவலக் கிரியை அசடர் உனைமேவக்
கவலைப் படுவார் கடத்திச் சிவயோக 80

ஆதியர்கள் வந்துன் மலரடியைத் தெண்டனிட்டால்
பேதியாது உள்ளழைத்துப் பேசிக்கொள் ஆதி 81

தவஞான மோனத் தனக்காரர் வந்தால்
அவமானம் பண்ணாது அழைத்துச் சிவபொருளைத் 82

தேடாத மூடரிடம் சிக்காதே சிந்தையிலே
நாடாத வஞ்சரிடம் நத்தாதே கோடாத 83

சாத்திரத் தூர்த்தர்தமைச் சாராதே தர்க்கமிடும்
கோத்திரப் பஞ்சியரைக் கூடாதே சூத்திரப் 84

**79.** சரியை மட்டும் பழகியவர்கள் உன்னைப் பற்றிப் புகழ்வார்கள். அவர் பின் போகாதே.

**80.** கிரியை பயின்றவர்கள் உன்னை அடையக் கவலைப்படுவர். போகாதே.

**81.** சிவயோகம் பயின்றவர்கள் வந்து உன் மலரடியைத் தொழுதால் அவர்களை அந்நியமாக்கி விடாமல் உள்ளே அழைத்துப் பேசிக் கொள்.

**82.** தவஞானப் பயிற்சி கொண்டவர்கள் வந்தால் அவமானம் செய்யாமல் அவர்களை ஏற்றுக் கொள்.

**83.** சிவமாகிய பொருளைத் தேடாத மூடரிடம் சிக்காதே. சிந்தையில் இதை நாடாத வஞ்சரிடம் பரிவு கொள்ளாதே.

**84.** சாத்திரம் மட்டும் படித்து வாதிடுவாரோடு சேராதே. தர்க்கம் செய்யும் குலகோத்திர பேதம் உடையவருடன் கூடாதே.

பொய்வீணர் ஆசை பொருந்தாதே புத்தகப்பேய்
மெய்வீணர் ஆசை விரும்பாதே கையோகக் 85

காமத்துக்கு ஆன கலாதிவேள் நூல்கற்ற
வாமத்தார் பால்மனது வையாதே நாமமிட்டுப் 86

பஞ்சரிக்கும் பாசிப் பதப்பிலுக்கர் வந்தக்கால்
நெஞ்செரியத் தள்ளிவிடு நில்லாமல் 87

சித்தக் கருவியிடம் செல்லாதே சீலமதக்
கொத்தவன்தன் னாசை குறியாதே பற்றற்ற 88

மோனக் குறும்பரசர் மோகித்தால் நீ அவருக்கு
ஆனபடியே அழைத்து விடு ஞானப் 89

பொருள்தேடும் வல்லாரைப் போற்றிப் பொருந்தி
அருளோடு நீசென் றிடு. 90

85. பொய் வீணர்களின் ஆசையை ஏற்காதே. புத்தகப் பேய் ஆகிய மெய் வீணரின் ஆசையை விரும்பாதே.

86. காமத்துக்கு ஆளாகி மன்மதன் நூல் கற்ற வாமாச்சாரர் பக்கம் மனம் வைக்காதே.

விளக்கம்: வாமாச்சாரம் என்பது சாக்தமதத்தில் சிற்றின்பத்தை வழியாகக் கொள்ளும் பிரிவு.

87. வெறும் சொற்களுக்கு மட்டும் ஆதரவு தந்து விடும் மனிதர் வந்தால் அவர்களுக்கும் இடம் தராதே.

88. சித்தமாகிய கருவியிடம் செல்லாதே. மதவாதி களின் ஆசையை ஏற்றுக் கொள்ளாதே.

89. மவுனம் பயின்றவர்கள் விரும்பினால் அவர்களை உன்பக்கம் அழைத்திடுக.

90. ஞானப் பொருளைத் தேடுவோரை நீயே அவர்களோடு சேர்ந்து அருளுடன் கொள்க.

## திரிகோணச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 13. கடேந்திர நாதர் என்ற விளையாட்டுச் சித்தர் பாடல்கள்

இச்சித்தர் இவ்வுலகில் நிகழ்வன எல்லாம் விளையாட்டு எனப் பாடுகிறார்.

## கடேந்திர நாதர் என்ற விளையாட்டுச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

### கண்ணிகள்

ஆதிசிவ மானகுரு விளையாட்டை - யான்
அறிந்துரைக்க வல்லவனோ விளையாட்டை
சோதிமய மானசத்தி யென்னாத்தாள் - சுய
சொரூபத்து அடங்கிநின்ற விளையாட்டை 1

பார்தனி லுள்ளவர்க்கு விளையாட்டாய் - ஞானம்
பற்றும்வழி யின்னதெனச் சொன்னதினால்
சீர்பெறுஞ் சித்தர்களு மென்னைவிளை - யாட்டுச்
சித்தனென்றே அழைத்தார்க ளிவ்வுலகில். 2

இகபர மிரண்டுக்குஞ் சரியாகும் - இதை
இன்பமுடன் சொல்லுகிறேன் தெம்புடனே
சகலமும் விளையாட்டாய் பிரமமுனி - முன்பு
சாற்றினார் எந்தனுக்குஈது உண்மையுடன் 3

நானென்று சொல்வதும் விளையாட்டே - இந்த
நானிலத்து இருப்பதுவும் விளையாட்டே
தானென்று அறிவதுவும் விளையாட்டே - பெற்ற
தாயென்று உரைப்பதுவும் விளையாட்டே. 4

1. ஆதிசிவமாகிய குருவின் விளையாட்டை என்னால் அறிந்து சொல்ல முடியாது. சோதிமயமான சத்தியாம் என் தாயின் சொரூபத்தில் அடங்கி நின்ற விளையாட்டை.

2. உலகில் உள்ளவர்க்கு விளையாட்டாகப் புரிய வைக்கவும் ஞானம் பெறும் வழி இன்னதெனச் சொல்ல வும் முயன்றதால் சித்தர்களும் என்னை விளையாட்டுச் சித்தன் என்றே அழைத்தனர்.

3. இகம், பரம் என்ற இரண்டு வாழ்வுக்கும் சரியானதை மகிழ்ச்சியுடன் சொல்கிறேன். முன்பு பிரமமுனி இவற்றை எல்லாம் எனக்குக் கூறினார்.

4. நான் சொல்வதும், உலகில் இருப்பதும், தன்னை அறிவதும், தாயை உணர்வதும் எல்லாம் விளையாட்டே.

தாய்தந்தை கூடுவதும் விளையாட்டே - பூவில்
தநயனாய் வந்ததுவும் விளையாட்டே.
மாயையாய் வளர்ந்ததும் விளையாட்டே - பத்து
வயது தெரிந்ததுவும் விளையாட்டே. 5

பெற்றபிள்ளை என்றதுவும் விளையாட்டே - தந்தை
பேரிட் டழைத்ததுவும் விளையாட்டே
மற்றதை யுணர்வதுவும் விளையாட்டே - இந்த
வையகத்து இருப்பதுவும் விளையாட்டே. 6

பெண்டுபிள்ளை யென்பதுவும் விளையாட்டே - எங்கும்
பேரோங்க வாழ்வதும் விளையாட்டே
கண்டுபொருள் தேடுவதும் விளையாட்டே - பணம்
காசுவட்டி போடுவதும் விளையாட்டே. 7

மாடிமனை வீடுவாசல் விளையாட்டே - என்றன்
மனைவிமக்கள் என்பதுவும் விளையாட்டே
தேடிவைத்த பொருளெல்லாம் விளையாட்டே - இச்
செகத்திற் திரிவதுவும் விளையாட்டே. 8

5. தாயும் தந்தையும் கூடி மகிழ்வதும், வயிற்றில் மகனாக வந்ததும், பிறகு வளர்ந்ததும், பத்து வயதில் பலவும் தெரிந்ததும் எல்லாம் விளையாட்டே.

6. தன் மகன் என அறிவதும், மகனுக்குத் தந்தை பெயரிட்டு அழைப்பதும், மற்றச் செய்திகளை உணர் வதும், இவ்வுலகில் வாழ்வதும் எல்லாம் விளையாட்டே.

7. மனைவி மக்களோடு எங்கும் புகழ் பெற வாழ் வதும், பொருள் தேடுவதும், காசு வட்டியாக வளர்வதும் எல்லாம் விளையாட்டே.

8. மாடி வீடு, மனைகள், வீடு, வாசல், என் மனைவி, மக்கள் என்பதும், தேடிய பொருளும், உலகில் திரிவதும் எல்லாம் விளையாட்டேயாம்.

ஆடுமாடு தேடுவதும் விளையாட்டே - சதுர்வேத
ஆகமநூ லாய்வதுவும் விளையாட்டே
கூடுவிட்டுப் போகுமுயிர் விளையாட்டே - உற்றார்
கூடி மகிழப் பேசுவதும் விளையாட்டே. 9

பிணமா யிருப்பதுவும் விளையாட்டே - அதைப்
பெற்றோர்கண் டழுவதும் விளையாட்டே
குணமாய்க் கழுவியதும் விளையாட்டே - ஈமங்
கொண்டுபோய்ச் சுட்டதுவும் விளையாட்டே. 10

செத்தோர்க்கு அழுவதுவும் விளையாட்டே - சுடலை
சேரும்வரை அழுவதும் விளையாட்டே
மெத்தஞானம் பேசுவதுவும் விளையாட்டே - குளித்து
வீடுவந்து மறப்பதும் விளையாட்டே. 11

வீணாள் கழிவதுவும் விளையாட்டே - சுடலை
சேரும்வரை அழுவதும் விளையாட்டே
மெத்தஞானம் பேசுவதும் விளையாட்டே - குளித்து
வீடுவந்து மறப்பதுவும் விளையாட்டே. 12

9. ஆடு மாடுகள் பெறுவதும், நான்கு வேதங்களையும் ஆகமங்களையும் ஆய்வதும், உடலை விட்டு உயிர் போவதும், உற்றவர்கள் கூடி மகிழப் பேசுவதும் எல்லாம் விளையாட்டே.

10. பிணமாய் இருப்பதும், அது கண்டு பெற்றோர் அழுவதும், அதைக் குளிப்பாட்டுவதும், ஈமத்தில் சென்று அடக்கம் செய்வதும் விளையாட்டே.

11. செத்தவர்க்காக அழுவதும், சுடுகாடு போகும் வரை அழுவதும், ஞானம் பற்றிப் பேசுவதும், அடக்கம் செய்து குளித்து வீடு வந்ததும் அவரையும், தமக்கும் இது நிகழும் என்பதையும் மறப்பதும் விளையாட்டே.

12. வீணாக வாழ்நாள் கழிவதும், சுடலை சேரும் வரை துக்கமடைவதும், மிகவும் ஞானம் பற்றிப் பேசுவதும், குளித்து வீடு வந்ததும், நிலையாத வாழ்வை மறப்பதும் எல்லாம் விளையாட்டே.

கனவுநினைவு என்பதுவும் விளையாட்டே - இக்
காசினியோர் உழல்வதும் விளையாட்டே
நினவாய்ச்செய் வஞ்சகமும் விளையாட்டே - மிக்க
நிதிநிலம் பெண்ணென்பதும் விளையாட்டே. 13

பெண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - அவர்
பின்னால் திரிவதுவும் விளையாட்டே
மண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - நல்ல
வயல்தோட்டம் புஞ்சையெல்லாம் விளையாட்டே. 14

சீராக வாழ்வதுவும் விளையாட்டே - செம்பொன்
சேகரித்து வைப்பதுவும் விளையாட்டே
நேராய்ப்பொய் சொல்வதும் விளையாட்டே - நெஞ்சில்
நினைக்காமற் செய்வதுவும் விளையாட்டே. 15

பந்துசனம் என்பதெல்லாம் விளையாட்டே - லோகப்
பற்றுடனே வாழ்வதுவும் விளையாட்டே
சொந்தநிதி தேடுவதும் விளையாட்டே - இதைச்
சொப்பனம்போ லெண்ணாததும் விளையாட்டே. 16

*13.* கனவு நினைவு என்பதுவும், உலகினர் துன்பப் படுவதும், நினைத்துச் செய்யும் வஞ்சகமும், பணம், நிலம், பெண் என்பதுவும் விளையாட்டே.

*14.* காமமும், பெண்கள் பின் திரிவதும், மண்ணாசை என்பதும், வயல் தோட்டம் புஞ்சை என்பனவும் எல்லாம் விளையாட்டே.

*15.* சீராக வாழ்வதுவும், பொன் சேர்ப்பதும், பொய் புகல்வதும், நினைக்காமல் ஒரு செயலைச் செய்வதும் விளையாட்டே ஆகும்.

*16.* உறவினர் என்பதும், உலகப் பற்றுடன் வாழ்வதும், சொந்தச் செல்வம் சேர்ப்பதும், இவற்றை ஒரு கனவாக எண்ணாததும் எல்லாம் விளையாட்டே.

யோகம்வந்து மகிழ்வதும் விளையாட்டே - அதன்
உண்மைதெரி யாததுவும் விளையாட்டே
சாகசஞ் செய்வதுவும் விளையாட்டே - ஒருவர்
தஞ்சமென்று நினைப்பதுவும் விளையாட்டே. 17

கோடிபணந் தேடுவதும் விளையாட்டே - அதைக்
குழிவெட்டிப் புதைப்பதுவும் விளையாட்டே
தேடியலைவதும் விளையாட்டே - மனந்
தேறுதலாய் திரிவதும் விளையாட்டே. 18

கற்பனையுங் கபடமும் விளையாட்டே - அதைக்
காணாமல் மறைப்பதுவும் விளையாட்டே
சற்பங்கள் ஆட்டுவதும் விளையாட்டே - ஒரே
சாதனையாய்ப் பேசுவதும் விளையாட்டே. 19

நம்பினோருக்கு ஆசைசொல்லல் விளையாட்டே - பின்பு
நட்டாற்றில் போகவிடுதல் விளையாட்டே
கும்பிக்கு இரைதேடுதல் விளையாட்டே - கடன்
கொடுத்தாரைக் கெடுத்தலும் விளையாட்டே. 20

*17.* யோகம் பயின்று மகிழ்வதும், அதன் உண்மை தெரியாதிருப்பதும், அரிய செயல் செய்வதும், ஒருவரைத் தஞ்சமடைவதும் எல்லாம் விளையாட்டே.

*18.* கோடிக்கணக்கில் பணம் தேடுவதும், குழி வெட்டிப் பணத்தைப் புதைப்பதும், பிறகு அதைத் தேடியலைவதும், மனம் தெளிந்து திரிவதும் எல்லாம் விளையாட்டே.

*19.* கற்பனையும் கபடமாக இருப்பதும், காணாது ஒன்றை மறைப்பதும், பாம்பைப் பிடித்தாட்டுவதும், சாதனையாய்ப் பேசுவதும் எல்லாம் விளையாட்டே.

*20.* நம்பியவருக்கு ஆசை வரப் பேசுதல், பிறகு நட்டாற்றில் கைவிடுதல், வயிற்றுக்கு உணவு தேடல், கடன் கொடுத்தவரைக் கெடுத்தல் ஆகிய யாவும் விளையாட்டே ஆகும்.

விளக்கம்: நட்டாற்றில் கை விடுதல் - நம்பியவருக்கு மோசம் செய்தல்.

இச்சையால் மயங்குவதும் விளையாட்டே - அதை
இயல்பாய் மதிப்பதுவும் விளையாட்டே
பிச்சையெடுத்து உண்பதுவும் விளையாட்டே - பொல்லாப்
போய்போ லலைவதுவும் விளையாட்டே. 21

முத்தி யறியாததும் விளையாட்டே - மேலாம்
மோட்சங் கருதாததும் விளையாட்டே
பத்திகொள் ளாததுவும் விளையாட்டே - மனம்
பாழிற் செலுத்தினதும் விளையாட்டே. 22

கேடு வருவதுவும் விளையாட்டே - எதற்கும்
கெம்பீரம் பேசுவதும் விளையாட்டே
பாடு வருவதும் விளையாட்டே - மனப்
பற்றுதலாய் நிற்காததும் விளையாட்டே. 23

பாசவினை போக்காததும் விளையாட்டே - பெண்
பாவாயென்று அழைப்பதும் விளையாட்டே
நேசமாய்த் தேடுவதுவும் விளையாட்டே - காணாமல்
நிமிட நேர மென்பதுவும் விளையாட்டே. 24

**21.** ஆசையால் மயங்குவதும், அதைத் தம் இயல்பாக நினைப்பதும், பிச்சை எடுத்து உண்பதும், பேய் போல் அலைவதும் எல்லாம் விளையாட்டே.

**22.** முத்தியை அறியாதிருப்பதும், மோட்சத்தை நினையா திருப்பதும், பத்தி கொள்ளாததும், மனத்தைப் பாழான வழிகளில் செலுத்தியதும் எல்லாம் விளையாட்டே.

**23.** கெடுதி வருவதும், எதற்கும் கலங்காது பேசுவதும், துன்பம் வருவதும், மனம் பற்றாமல் நிற்பதும் எல்லாம் விளையாட்டே.

**24.** பந்த பாசத்தையும், ஊழ்வினையையும் போக்கா ததும், பெண்ணைப் பதுமையாய் ஆசையுடன் அழைப் பதும், நேசம் தேடுவதும், நிமிஷ நேரம் காணாது மறை வதும் எல்லாம் விளையாட்டே.

நித்திரையிற் சொக்குவதும் விளையாட்டே - அதில்
நினைவுதடு மாறுவதும் விளையாட்டே
சித்தியடை யாததுவும் விளையாட்டே - ஞானம்
சிந்தியா திருப்பதுவும் விளையாட்டே. 25

சொற்பனமுண் டாவதுவும் விளையாட்டே - மனம்
சொக்கா திருப்பதுவும் விளையாட்டே

விற்பனங்கண் டறிவதும் விளையாட்டே - வந்த
விதமறி யாததுவும் விளையாட்டே. 26

பகலிரவு என்பதுவும் விளையாட்டே - இகப்
பயனடைந் திருத்தலும் விளையாட்டே
சகவாழ்விற் சிக்குவதும் விளையாட்டே - யோக
சாதன மறியாததும் விளையாட்டே. 27

புத்திமா னென்பதுவும் விளையாட்டே - இப்
பூதலத்தோர் ஏத்துவதும் விளையாட்டே
வெற்றி யடைவதுவும் விளையாட்டே - நான்
வீரனென்று சொல்வதுவும் விளையாட்டே. 28

*25.* நித்திரையில் மயங்குவதும், அஃபோது நினைவு தடுமாறுவதும், சித்தி பெறாததும், சிந்திக்காமல் இருப்பதும் எல்லாம் விளையாட்டே.

*26.* கனவு வருவதும், மனம் விரும்பாதிருப்பதுவும், திறங்கள் கண்டறிவதும், வந்த விதத்தை அறியாதிருப்பதும் விளையாட்டே.

*27.* பகலும் இரவுமாக வருவதும், இவ்வுலகப் பயனை அடைந்திருப்பதும், உலக வாழ்வில் சிக்குவதுவும், யோக சாதனம் அறியாதிருப்பதும் எல்லாம் விளையாட்டே.

*28.* அறிவுடையனாய் இருப்பதும், உலகினர் புகழ்வதும், வெற்றி பெறுவதும், தன்னை வீரன் என்று சொல்லிக் கொள்வதும் எல்லாம் விளையாட்டே.

தவநிலை தோணாததும் விளையாட்டே - ஞானத்
தத்துவந் தெரியாததும் விளையாட்டே
பவமது போக்காததும் விளையாட்டே - ஏக
பரவெளி காணாததும் விளையாட்டே. 29

யோகந் தெரியாததும் விளையாட்டே - அதன்
உண்மைதனைக் காணாததும் விளையாட்டே
பாகம் அறியாததும் விளையாட்டே - இகப்
பற்றறுக்காது இருப்பதுவும் விளையாட்டே. 30

பெரியோரைக் காணாததும் விளையாட்டே - கண்டு
பேரின்பஞ் சாராததும் விளையாட்டே
தெரியாது இருந்ததுவும் விளையாட்டே - சிவ
தேகநிலை பாராததும் விளையாட்டே. 31

அஞ்ஞானம்உட் கொண்டதுவும் விளையாட்டே - பேர்
அறிவால் தெரியாததும் விளையாட்டே
மெய்ஞ்ஞானங் காணாததும் விளையாட்டே - இந்த
மேதினியே போதுமெனல் விளையாட்டே. 32

**29.** தவநிலையை அறிய முடியாததும், ஞானத் தத்துவம் தோன்றாததும், பிறப்பை மாற்றாததும், பர வெளியைக் காணாததும் விளையாட்டே.

**30.** யோகத்தைத் தெரியாதிருப்பதும், அதன் உண்மை யைக் காணாமல் இருப்பதும், தமக்குச் சொந்தமானது எது என்று அறியாததும், இவ்வுலகப் பற்றை நீக்காதிருப்பதும் விளையாட்டே.

**31.** பெரியோரைச் சேராததும், அதனால் பேரின்பம் அடையாததும், எதுவும் தெரியாமலிருப்பதும், சிவனின் தேகமாய்த் தன்னைப் பாராதிருப்பதும் விளையாட்டே.

**32.** அறியாமையை வளர்த்ததும், பேரறிவால் பயனை அடைவது தெரியாதிருத்தலும், மெய்ஞ்ஞானம் காணாமல் இருப்பதும், இவ்வுலகமே போதுமெனத் தெரிவதும் எல்லாம் விளையாட்டே.

பின்வருபவை இச்சித்தரின் வேறு வகைப் பாடல்கள் ஆகும்.

## கண்ணிகள்

ஆதியான மூலத்தில்
அமர்ந்திருந்த சோதிதான்
வாதியானோன் கண்டறிய
வாய்க்குமிது மந்திரம். 33

சுக்குச்சுக்கு வெள்ளைக்கல்
சுண்ணாம்பு வெள்ளைக்கல்
காசுக்சு இரண்டுகல்
கருணைக்கிழங்கடா கருணைக்கிழங்கடா. 34

குடுகுடு ஆனைக்கல்
கோமானுக்கும் ஆனைக்கல்
தேசதேச வாசக்கல்
தெக்குநல்ல சீமைக்கல். 35

பக்குவம் ஆகாமுன்
பார்த்தெடுத்துக் கொண்டபின்
சுக்குச்சுண் ணாம்புக்கல்
சோதிக்கல் சோதிக்கல். 36

**33.** ஆதியாகிய மூலாதாரத்தில் சோதியாக அமர்ந்திருந்ததை நாம் கண்டு அறிய வாய்க்கும் இது மந்திரம் ஆகும்.

**34.** சுக்கு வெள்ளைக்கல் சுண்ணாம்புக்கல் இவை மந்திரமல்ல. மூலாதாரத்தை உணர்ந்தால் இவை கூட மந்திரமாகும் என்றார். கடவுள் கருணையால் அடியில் உள்ளதை அறிக என்பது கருணைக்கிழங்கு எனப்பட்டது.

**35.** இதுவும் மேற்பாட்டின் கருத்தில் கூறப்பட்டதாகும்.

**36.** சுண்ணாம்பு பக்குவம் ஆகாதபோது எடுத்தாலும் அது சோதிக்கல் ஆவது மூலாதாரத்தை அறியும் சிறப்பை

அறிவிக்கிறது. (அதாவது பக்குமில்லாதவரும் மூலத்தை அறிந்தால் சோதியை அறிவர் என்பதாம்)

வாகடதோகட மதுரக்கல்
வைப்புச்சுண் ணாம்புக்கல்
பாகுடன் செய்தால்
பசுமைக்கல் பசுமைக்கல். 37

மேலாஞ்சாதி பாரடா
வெட்டவெளியைத் தேரடா
நாலாஞ்சாதி ஆகாது
நமக்குப் பருப்பு வேகாது. 38

தாய்போலு மாகுமே
தங்கைபோலு மாகுமே
சேய்போலு மாகுமே
திரும்பப் பெண்டீ ராகுமே. 39

வாலையான சிறுபெண்ணாம்
வயதுவந்த தோர்பெண்ணாம்
பாலைமங்கை தானடா
பருவம்வந்த வழலைதான். 40

37. மதுரமான கல்லைப் பாசத்துடன் செய்தால் பசுமைக் கல்லாகும். இப்படி மூலம் உணர்ந்து பக்குவமும் கண்டால் சித்தியாகும் என அறிக.

(வாகடம் - கால்நடை மருத்துவம்)

38. மேல் பகுதியைப் பார். வெட்டவெளியை ஆய்ந்திடு. சாதி வேறுபாடு கருதினால் சித்தியடைதல் கிட்டாது.

39. பெண்டிர் தாய் போன்றும், தங்கை போன்றும், குழந்தை போன்றும் நினைக்கத்தக்கவராம்.

***40.*** வாலை என்ற சிறுபெண்ணாம். அவள் வயதுக்கு வந்த கன்னிப் பெண்ணாம். மங்கைப் பருவமும் உள்ளவளாம், மேலும் பருவம் கண்டவளாம். (பலவழிகளில் தெரிவாள் என உணர்க)

(வழலை - பாதரசம். ஒரு வகைப் பாம்பு. இது வெள்வழலை, கருவழலை எனப்படும். பாதரசத்தை வழலை என்பது சித்தர் மறைபொருள்)

வழலைவாங்கிக் கொள்ளடா
மருந்துசூடன் போடடா
குழவியர்க்கு உணர்வதாகக்
கொடுத்ததைநீ வாங்கடா. 41

வாங்கின மூலத்தையே
மருந்துபோட்டு வைப்பையே
தூங்கிடாமற் சேநீர்கொண்டு
சுருக்கினில்உப்பு ஆக்கடா. 42

நீறுநீ ரெடுத்துமே
இரண்டையும் ஒன்றுஆக்கியே
சீறுடனே காய்ச்சியே
செய்ததொரு உப்படா. 43

கோவானூர் தன்னிலே
கொழுந்துபோல் முளைத்ததை
ஏகாலிகள் போகுமுன்
எடுத்துவந்து காய்ச்சடா. 44

***41.*** வழலையுடன் சூடத்தை மருந்தாகச் சேர். சிறு பிள்ளைக்கும் உணருமாறு விளக்குக. (இது மருத்துவக் குறிப்புடன் கூறப்பட்டது)

***42.*** இதுவும் மருத்துவக் குறிப்புடையது. மூலம் - கிழங்கு - இதில் சேநீர் போடுதல் என்பது எதையும்

பக்குவமாக்கும் முறையாகும். அப்படி மூலாதாரத்தை அறிந்து மந்திரம் சொல்லிப் பற்று நீக்கித் தியானிப்பதே சேநீர் சேர்ப்பதாகும். இதனால் யோகம் சித்திக்கும் என்பதாம். (சேநீர் போடுதல் - மருந்தைப் பக்குவம் செய்யும் முறை)

**43.** நீறிய நீரெடுத்து - நீறிய நீர் = ஆவியாக்கியது, அதையும் நீரையும் இணைத்து மீண்டும் காய்ச்சி அதில் உள்ள உப்பை எடுத்தல் என்ற மருத்துவக் குறிப்பில் யோக முயற்சியையும் இப்படிச் செய்க என்பதாம்.

**44.** கோவனூரில் கொழுந்தாக முளைத்த மூலிகையைச் சலவை செய்வோர் எடுத்துப் போகுமுன் கொண்டு வந்து காய்ச்சுக. (இதுவும் மருத்துவ முயற்சிபோல் யோக முயற்சியும் புடம் போடக் கூறியதாம்)

காய்ச்சியும் பெருத்துநீ
கஞ்சிஉப்பு சேர்த்துநீ
மாட்சிமையாய் மல்லிகை
மலர்ந்தது போல்ஆமடா. 45

ஆதியுப்பும் அந்தவுப்பும்
இந்துவுப் பெடுத்துநீ
சோதியுப்பும் ஆச்சடா
சுருக்கமிது தானடா. 46

கண்டறிந்து கொள்ளடா
கணக்கறிந்து விள்ளடா
கொண்டறிந்து தள்ளடா
குருவறிந்து கொள்ளடா. 47

சூதங்கட்ட லாகுமே
சொர்ணஉப்பு மாகுமே
வாதம் வாத மென்றறிந்த
வாதியேநீ பாரடா. 48

விட்டகுறை யானவன்
மேதினியில் வந்தவன்
தொட்டகுறைக் காரனுக்குத்
தோற்றுமே மெய்ஞ் ஞானமே. 49

45. காய்ச்சியபின் உப்பும் சேர்த்துவிட்டால் மல்லிகை போல் வெளுக்கும் என்றார். (இதுவும் மருத்துவமே).

46. ஆதிஉப்பும் அந்த உப்பு (முடிவு)ம் எடுத்து இந்து உப்பும் எடுத்து முப்பூ செய்க.

இது மருத்துவம். ஆதி உப்பு மூலாதாரம். அந்த உப்பு தலைமேல் உள்ளது. இனி மார்பு நடுப்பகுதி எல்லாம் இணைத்துக் கண்டால் சோதி தெரியும். இதுவே சுருக்க மாகும்.

47. உனக்குள் எல்லாம் கண்டுகொள். கணக்காய் எல்லாம் அறிந்துரை சொல்க. தேவையற்றவற்றை வெளியே தள்ளுக. குருவை அறிந்து கொள்க.

48. (சூதம் - பாதரசம்) பாதரசத்தைக் காட்டி விடலாம். தங்கம் போல் உப்பாகும் அது. இரசவாதம் என்று அலை பவனே இதை வந்து பாரும்.

49. விட்ட குறையால் உலகில் பிறந்தான். தொட்ட குறையால் மெய்ஞ்ஞானம் வெளிப்பட்டது.

விளக்கம்: விட்ட குறை பழைய பிறப்பின் பயன் தொட்ட குறை - குருவின் பரிசம். பரிசம் - தொடுதல்.

## வேறு

ஏகாந்தம் பழம்பழம்
எழுத்தில்லாதவன் தலைச்சுமை
பெண்டில்லாதவன் பெருவழி
பிள்ளையில்லாதவன் கைவீச்சு. 50

காய்த்தவாழை பூப்பூக்கும்
காயாதவாழை தானுமில்லை
பாய்ச்சின பயறு தலையெடுக்கும்
பாய்ச்சாத பயறு தானுமில்லை. 51

இறைத்தகிணறு தானூறும்
இறையாக்கிணறு தானுமில்லை
விதைவிதைத்தால் முளைதேறும்
விதையாநிலத்தி லொன்றுமில்லை 52

அழுதபிள்ளை பால்குடிக்கும்
அழுகாதபிள்ளைக்கு ஏதுமில்லை
உழுதநிலந்தான் பயிரேறும்
உழுகாதநிலத்தி லொன்றுமில்லை 53

ஆசையுளானுக்கு ரோசமில்லை
ஆசையிலானுக்கு ஒன்றுமில்லை.

(இது முடியாத கண்ணியாக உள்ளது).

50. தனித்திருப்பதால் உருவாகும் பலனிது. மந்திர எழுத்தறியாதவன் தலையில் உள்ள சத்திகள் சுமையாகவே இருக்கும். பெண்ணாகிய வாலையைத் தொழாதவன் பெருவழி செல்வது பிள்ளை இல்லாதவன் கை வீசி நடந்தது போல் குறையாகும்.

51. காய்க்கும் வாழைக்குத் தான் பூவுண்டு. காய்க்காத வாழைக்குப் பூவில்லை. நீர் பாய்ச்சினால் தெளித்த பயறு முளைக்கும். இல்லாவிட்டால் இல்லாது போகும்.

52. இறைத்த கிணறே மறுபடி நீர் ஊறும். இறைக்காத கிணற்றில் நீர் ஊறாது. விதைத்த நிலத்திலே தான் முளை தோன்றும். விளைக்காத இடத்தில் முளை இல்லை.

53. அழுத பிள்ளைக்குப் பால் கொடுப்பாள் தாய். அழாத பிள்ளைக்கு அது இல்லை. உழுத நிலத்தில் தான் பயிர் சிறக்கும். உழாத நிலத்தில் அது இல்லை. ஆசைப் பட்டவன் ரோசத்தைக் கொள்ள மாட்டான். ஆசையற்ற வனுக்கோ ஒன்றுமில்லை.

விளக்கம்: இம் மூன்று பாடல்களிலும், காரண காரியத்தால் தான் ஒன்று நிகழும். இது போல் யோக நினைவும் ஆசையும் வந்தால் அவனுக்கு அது மேலும் சிறக்கும். எனவே முயற்சி செய்க என்பது விளக்கப் பட்டது.

**கடேந்திர நாதர் என்ற விளையாட்டுச் சித்தர் பாடல்கள்**

மூலமும் உரையும் முற்றும்.

# 14. புண்ணாக்குச் சித்தர் பாடல்கள்

பாம்பாட்டிச் சித்தரின் சீடர் இவர். கர்நாடகத்தவர் என்று போகர் கூறுகிறார். ஆத்திமரத்தின் கீழ் மவுன யோகமாய் இருந்து அங்கேயே சமாதியானவர்.

பிராசாதயோகம் பயின்றதால் மனோன்மணி அம்மையைக் குறித்து ஞானம்மா என்றே அழைக்கிறார்.

## புண்ணாக்குச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

தேவிமனோன் மணியாள் திருப்பாதம் காணஎன்று
தாவித் திறந்தேனே - ஞானம்மா
சரணம் சரணம்என்றே. 1

அஞ்ஞான மும்கடந்து அறிவை மிகச்செலுத்தி
மெய்ஞ்ஞானம் கண்டுகொண்டால் - ஞானம்மா
விலையிலா ரத்தினமடி. 2

முட்டையி னுள்ளே முழுக்குஞ்சு இருப்பதுபோல்
சட்டையாம் தேகத்துள்ளே - ஞானம்மா
தான்உயிரும் நிற்பதடி. 3

விட்டகுறை வாராமல் மெய்ஞ்ஞானம் தேராமல்
தொட்டகுறை ஆனதினால் - ஞானம்மா
தோன்றுமெய்ஞ் ஞானமடி. 4

தம்முளம் அறியாமல் பரத்தைத் தெரியாமல்
சம்சாரம் மெய்யென்று - ஞானம்மா
சாகரத்திலே உழல்வார். 5

1. மனோன்மணியின் திருப்பாதம் அடைய வேண்டும் என்று சரணம் செய்வதால் உன் பாதங்களையே விடாது பற்றிக் கொண்டு உய்வு பெற்றேன் ஞானம்மா? (இதுவே வழி என்பதாம்)

2. அறியாமையை நீக்கி அறிவைப் பயன்படுத்தி உண்மையறிவைக் கண்டு கொள்ளலாம். அது விலை மதிக்க முடியாத இரத்தினமாகும்.

3. முட்டையினுள் முழுதுமாகிய குஞ்சு இருப்பது போல் சட்டை போன்ற இவ்வுடலுக்குள் உயிரும் முழுமை யாக உள்ளது.

4. விட்ட குறை தொட்ட குறைகளால் தடைப்படாமல், மெய்யறிவைத் தேடினால் அது உறுதியாகக் கிடைக்கும்.

5. தமது மனத்தை அறியாமல், உள்ளிருக்கும் பரத்தைத் தெரியாமல், சம்சார வாழ்வே நிலையென்று நினைப்பவர் அந்தக் கடலிலேயே விழுவர்; துன்புறுவர்.

இட்டர்க்கு உபதேசம் எந்நாளும் சொல்லிடலாம்
துட்டர்க்கு உபதேசம் - ஞானம்மா
சொன்னால் வரும்மோசம். 6

முத்தி பெறுவதற்கும் முதலாய் நினைத்தவர்க்கும்
நித்திரையும்விட்டு - ஞானம்மா
நினைவோடு இருக்கணுமே. 7

நினைவைக் கனவாக நீயெண்ணியே பார்க்கில்
சினமாய்வரும் எமனும் - ஞானம்மா
தெண்டனிட்டுப் போவானே. 8

யோக விளக்கொளியால் உண்மை தெரியாமல்
மோகம்எனும் குழியில் - ஞானம்மா
மூழ்கியே போவார்கள். 9

சாத்திரம் கற்றறியாத சாமியார் தானாகி
ஆத்திதேட நினைத்து - ஞானம்மா
அலைவார் வெகுகோடி. 10

6. யோகத்தைத் தெரிய விரும்புவோர்க்கு உபதேசம் என்றைக்கும் சொல்லி விடலாம். ஆனால் பிறர்க்குத் துன்பம் தருவோருக்கு உபதேசம் செய்தால் மோசம் தான் வரும்.

7. முத்தி பெறுவதற்குத் தம்மையே முதல்வனாக நினைத்து நித்திரையை விட்டு நினைத்தபடியே இருக்க வேண்டும். (முத்தி - மோட்சம்)

8. நினைவில். நடப்பதையும் கனவு போல் கருதினால் சினத்தோடு வரும் எமனும் உன்னை வணங்கி நிற்பான்.

9. யோக விளக்கத்தின் ஒளியால் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் மோகம் என்னும் குழியில் மூழ்கி விடுவர் பலர்.

10. சாத்திரமும் அறியாது சாமியார் வேடத்தில் திரிந்து தமக்குச் சொத்து (ஆத்தி) சேர்க்க நினைத்து அலைவர் பலர்.

பூச்சும் வெறும் பேச்சும் பூசையும் கைவீச்சும்
ஏச்சுக்கு இடந்தானே - ஞானம்மா
ஏதொன்றும் இல்லையடி. 11

கலத்தை அலங்கரித்துப் பெண்கள் தலைவிரித்து
கணக்கைத் தெரியாமல் - ஞானம்மா
கலங்கி அழுதாரடி. 12

மேளங்கள் போடுவதும் வெகுபேர்கள் கூடுவதும்
நாளை எண்ணாமலல்லோ - ஞானம்மா
நலிந்தே அழுவாரடி. 13

கோவணமும் இரவல் கொண்டதூலம் இரவல்
தேவமாதா இரவல் - ஞானம்மா
தெரியாதே அலைவாரே. 14

செத்தவரை மயானம் சேர்க்கும்வரையில் ஞானம்
உத்தமர்போலப் பேசி - ஞானம்மா
உலகில் திரிவாரடி. 15

*11.* வெளிவேடமாகிய பூச்சும், உண்மை கண்டவர் போல் பேசுவதும், பூசை செய்வதும், கைவீசும் அகங்காரமும் பிறர் ஏசுவதற்கு இடமாகுமல்லது வேறு பயன் இல்லையாம்.

*12.* நகைகளால் அலங்காரம் செய்து இருந்த பெண்கள் மரண காலம் தெரியாதவர். அது வந்த பின் தலை விரித்து அழுதனர்.

*13.* மேளமும் தாளமும் முழக்குவதும், பலரும் கூடுவதும் எல்லாம் மரண நாளை எண்ணாமல் செய்வதாம். அது வந்ததும் நலிவடைந்து அழுவார்கள்.

*14.* உடையும் அலங்காரமும் தேவரைப் புகழ்வதும் ஆகிய எல்லாம் சிலகாலமே. இது தெரியாமல் அலைகின் றனர். (இரவல் - சில காலத்துக்கு மட்டும் வரும் உதவி)

*15.* செத்த வீட்டில் அடக்கம் செய்யும் வரை, நிலையில்லா வாழ்வைப் பற்றியும் விதியைப் பற்றியும் ஞானம் வந்த உத்தமர் போல் பேசுவர். பிறகு முன்பு போல் எல்லாம் மறந்து திரிவர்.

காட்டில் இருந்தாலுங் கனக்கதவஞ் செய்தாலும்
காட்டில் குருவில்லாமல்- ஞானம்மா
கண்டறிதல் ஆகாதே. 16

நல்ல வெளிச்சமது ஞான வெளிச்சமது
இல்லா வெளிச்சமது- ஞானம்மா
ஈன வெளிச்சமடி. 17

சம்சாரம் என்றும் சாகர்மாம் என்றும்
இம்சை யடைவோர்கள்- ஞானம்மா
இருந்துபயன் ஆவதென்ன. 18

காத்தடைத்து வந்ததிது கசமாலப் பாண்டமிது
ஊத்தச் சடலமிது- ஞானம்மா
உப்பிலாப் பொய்க்கூடு. 19

அஞ்சுபேர்கூடி அரசாளவே தேடி
சஞ்சாரஞ் செய்ய- ஞானம்மா
தானமைத்த பொய்க்கூடே. 20

16. காட்டில் வாழ்ந்தாலும் அங்கு போய் நிறைய தவம் செய்தாலும் குரு இல்லாமல் மெய் நெறியைத் தாமாகக் கண்டறிய முடியாது.

17. நல்லதும், ஞானமானதும், வேறிடத்து இல்லாததும் ஆகிய வெளிச்சத்தை இறைவனே அருள் செய்வான்.

18. சம்சாரத்தில் வாழும்போது அதைச் சாகரம் (சமுத்திரம்) என்றே துன்பம் அடைவர். அதில் இச்சை கொண்டோர் அதனால் பயன் அடைவதில்லை.

19. காற்று அடைத்த பொருள், கசமாலமாகிய (அசுத்தப்) பாண்டம், நாற்றம் உடையது, உப்பில்லாத பொய்க் கூடு இந்த உடல் என அறிய வேண்டும்.

விளக்கம்: உப்பில்லாதது ம் குப்பையிலே என உணரச் செய்தார். கசுமாலம் என்ற இக்காலச் சென்னை வழக்குச் சொல் கொண்டு இச்சித்தர் மிகப் பிற்காலத்தில் வாழ்ந்தவர் என அறிக. (கசமலம் - கசுமலம் என்பது, அழுக்கு; தூய்மையற்றது)

20. ஐந்து புலன்கள் தேடி வந்து அரசாளவும், சஞ்சாரம் செய்யவும் தானே அமைத்த பொய்க்கூடே இந்த உடல் என்க.

# 15. கல்லுளிச் சித்தர் பாடல்

இவர் தம்முடைய சித்தினால் மலையையும் உளிபோல் சிதைத்தவர் என்பதால் கல்லுளிச் சித்தர் எனப் பெற்றனர் என்பர். அதனால் தான்

''கல்லுளிச் சித்தன் போனவழி காடுமேடு
எல்லாம் தவிடு பொடி''

என்ற பழமொழி வந்ததாகக் கூறுவர்.

## கல்லுளிச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

பிர்ம சொரூபத்தை நாடு உள்
கர்ம வினைஓட வழிதனைத் தேடு.

எட்டி பழுத்தாலும் என்ன? காசு
ஈயாத லோபிகள் வாழ்ந்தாலும் என்ன?
கட்டி வராகனிருந்து என்ன? அதைக்
காவல்கள் போட்டுநீ காத்திருந்து என்ன? 1

நீரிலாக் கிணறு இருந்தென்ன? மனம்
நேராய் நடவாத பிள்ளையிருந்து என்ன?
ஊரிலா ஆறிருந்து என்ன? நமக்கு
உதவி இல்லாத மனிதர் உறவிருந்து என்ன? 2

தவமது செய்தாலும் என்ன? நீ
சமத்தன் என்றேபே ரெடுத்தாலும் என்ன?
சிவபூசை செய்தாலும் என்ன? அரன்
சேவடியை மறவாமல் இருந்தாலும் என்ன? 3

(முதல் இரண்டடிகள் சந்தக் குறிப்பாகும்.)

பிரம்மத்தின் வடிவத்தை நாடுக. அதுவே செய்த கர்மங்களாகிய வினைகளை ஓடச் செய்யும். (உள் ஒளியே பிரம்ம சொரூபமாகும்.)

(பிரம்ம சொரூபம் - மேலான பரம்பொருளின் வடிவம்)

1. எட்டி (நச்சு மரம்) பழுத்துப் பயனில்லை. ஈயாத உலோபிகள் வாழ்ந்து என்ன பயன்? வராகன் அளவு கட்டிப் பொன் இருந்தும் பயன் என்ன? காவல் போட்டுக் காத்தும் பயன் இல்லை.

2. நீரில்லாத கிணறும், நடக்கத் தெரியாத பிள்ளையும், ஊர் வழியாக ஓடாத ஆறும், உதவாத மனிதர் உறவும் பயனற்றவை.

3. தவம் செய்தாலும், திறமைசாலி எனப் பெயர் எடுத் தாலும், சிவ பூசை செய்தாலும், திருவடியை மறவாமல் இருந்தும் கூடப் பயனுண்டோ?

காசிபோய் வந்தாலும் என்ன? பெரிய
கனக தண்டிகையேறித் திரிந்தாலும் என்ன?
வாசியைத் தெரிந்தாலும் என்ன? நாளும்
மகராசன் என்றுபேர் பெற்றாலும் என்ன? 4

புராணம் படித்தாலும் என்ன? இந்தப்
பூலோகம் தன்னில் மறைந்திருந்து என்ன?
திராசு நிலையாய் இருந்து என்ன? தினம்
சிவசிவா என்றே செபித்தாலும் என்ன? 5

வித்தைகள் பலபடித்து என்ன? நீ
மென்மேலுஞ் சாத்திரம் கற்றாலும் என்ன?
சித்துகள் தெரிந்தாலும் என்ன? நாளும்
சிறப்பாக வார்த்தை உரைத்தாலும் என்ன? 6

பெண்டாட்டி பிள்ளை இருந்து என்ன? முதிர்ந்த
பெரியோர்கள் பாதத்தைப் பூசித்தும் என்ன?
துண்டாகப் போயிருந் தென்ன? நீ
துலையாத கற்கோட்டை கட்டியிருந்து என்ன? 7

4. காசிக்குப் போய் வந்தாலும், பொன் பல்லக்கில் ஏறிவந்தாலும், பிராணயாமம் தெரிந்தாலும், மகராசன் என்ற பெயர் வந்தாலும் பயன் உண்டோ?

5. புராணம் படித்தாலும், பூவுலகில் மறைந்தே வாழ்ந்தாலும், தராசு போல் நடுநிலையில் இருந்தாலும், சிவசிவா என்று ஜெபித்தாலும் என்ன?

6. பலவித மந்திரங்கள் பயின்றாலும், மேலும் பல சாத்திரங்கள் கற்றாலும், சித்துகள் தெரிந்தாலும், சிறந்த வார்த்தைகள் சொன்னாலும் என்ன?

7. மனைவி, மக்கள் இருந்தாலும், பெரியோரைப் பாத பூசை செய்தாலும், தனித்து இருந்தாலும், அழியாத கல் கோட்டை கட்டியிருந்தாலும் என்ன!

மாடிமேல் வீடிருந்து என்ன? இந்த
வையகத் தோர்மெய்க்க வாழ்ந்தாலும் என்ன?
கூடிக் குலாவி இருந்த தென்ன? கையெடுத்துக்
கும்பிட்டுக் கூத்தாடித் திரிந்தாலும் என்ன? 8

தாய்தந்தை துணையிருந்து என்ன? உற்ற
சனங்களும் உபகாரமாய் இருந்த தென்ன?
நாய்போல் அலைந்தாலும் என்ன? வரும்
நமனுக்குத் தப்பி ஒழிந்தாலும் என்ன? 9

சரியை கடந்திடவும் வேணும் இந்தச்
சகத்தினுட மாயை ஒழித்திடவும் வேணும்.
கிரியையைப் பார்த்தறிய வேணும் மனவாக்குக்கு
எட்டாத சொரூபத்தைத் தெரிந்திட வேணும். 10

8. மாடி மேல் வீடிருந்தாலும், உலகினர் புகழ வாழ்ந் தாலும், பலருடனும் கூடி மகிழ்ந்து இருந்தாலும், கும்பிட்டுக் கூத்தாடித் திரிந்தாலும் பயன் இல்லை.

9. தாய் தந்தை துணை இருந்தும், பிறர் உதவியாக இருந்தும், நாய் போல் பலவிதமாக உழைத்தாலும், இயமனுக்கு தப்பி ஒழிந்தாலும் பயன் இல்லை.

10. சரியை எனும் வழியைக் கடந்திட வேண்டும், சகமாகிய மாயையை ஒழித்திட வேண்டும். கிரியை எனும் வழியைப் பார்த்து அறிய வேண்டும். கிடைக்காத பிரம்ம சொரூபம் தெரிய வேண்டும்.

யோகந் தெரிந்திட வேணும், உனக்கு
உண்டிமுதல் ஆனதைச் சுருக்கிட வேணும்,
பாகமது தெரியவே வேணும், குரு
பாதம்அதை மறவாமல் இருந்திட வேணும். 11

கொலைகளவு நீக்கிவிட வேணும் உலகில்
கொடியோன் எனும்பேரைப் போக்கிட வேணும்
புலைகளைத் தொலைத்துவிட வேணும் இன்று
பொல்லாத மாயையை விலக்கிட வேணும். 12

சோதியைக் கண்டு அறிய வேணும் வேதச்
சுடரெனும் தீபத்தைப் பார்த்தறிய வேணும்
ஆதிப்பிர் மந்தெரிய வேணும் அதை
அன்புடன் சாத்திரத் தால்தெரிய வேணும். 13

11. யோகமாகிய வழியைத் தெரிய வேண்டும். உணவு முதலியவற்றைச் சுருக்க வேண்டும். எது பக்குவம் எனத் தெரிய வேண்டும். குருவின் பாதத்தை மறவாமலிருக்க வேண்டும்.

12. கொலை, களவு ஆகிய பாபங்களை நீக்க வேண்டும். கொடியவன் எனும் பெயரைப் போக்க வேண்டும். புலால்

உணவைத் தவிர்க்க வேண்டும். மாயையை விலக்க வேண்டும்.

*13.* உடலுக்குள் உள்ள சோதியைக் கண்டு அறிய வேண்டும். சுடராகிய அத்தீபத்தைப் பார்த்து அறிய வேண்டும். ஆதியாகிய பிரம்மத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். அன்பாகிய சாத்திரத்தால் அதை அறிய வேண்டும்.

ஞானநிலை தெரியவே வேணும் இதில்
நால்வேத உண்மை தெரிந்திட வேணும்
மோனநிலை தெரியவே வேணும் யோக
முடிவான வத்துவை முன்தெரிய வேணும். 14

அட்டகரு மம்தெரிய வேணும் அதற்கு
ஆதார மானஆலை தெரிய வேணும்
திட்டமாய் வாசிநிலை வேணும் இதைத்
தெரிந்துகொண் டால்சித்தன் ஆகவே வேணும். 15

பந்தங் கடந்தவனே சித்தன் பாரில்
பஞ்சமா பாதகத்தை விட்டோனே பத்தன்
இந்தவிதந் தெரிந்தவனே சித்தன் அதில்
என்நிலைமை கண்டவனே சீவ முத்தன். 16

*14.* ஞானத்தின் நிலை தெரிய வேண்டும். நான்கு வேதங்களின் உண்மை தெரிய வேண்டும். மவுன நிலையை உணரவேண்டும். எல்லாவற்றுக்கும் முடிவாக உள்ள (கடவுளை) பொருளை முன்னதாகத் தெரியவேண்டும்.

*15.* எட்டுவிதக் கருமங்களும் தெரிய வேண்டும். (அட்ட கர்மம் மறைத்தல், வெளிப்படல், நிறுத்தல், வரவழைத்தல் முதலிய மந்திர சித்திகள்)

அதற்கு ஆதாரமான மிகப் பெரிய வடிவம் தெரிய வேண்டும். வாசியின் திட்டமான நிலைகள் தெரிய

வேண்டும். இவற்றைத் தெரிந்து கொண்டவன் சித்தன் ஆவான்.

*16.* பந்த பாசம் கடந்தவன், பஞ்சமாபாதகம் விட்டவன், பக்தன் இவற்றோடு எல்லா நிலையும் கண்டு தெளிந்த வனே சித்தனாம்.

(பஞ்சமா பாதகம் - பொய், கொலை, களவு, சூது, காமம் என்னும் ஐம்பெரும் குற்றச் செயல்கள்)

## ஆனந்தக் களிப்பு

பிர்ம சொரூபத்தை நாடு உன்
கர்ம வினையோட வழிதனைத் தேடு
மர்மம் தெரிவிக்கும் வீடு கண்டு
தர்ம நெறிமுறை தன்னில்நீ கூடு. 1

ஆதி பரம்பொருளைப் போற்றி என்தன்
ஆத்தாளின் பாதத்தை மனதினி லேற்றி
சோதிச் சுடரொளியை நோக்கி எங்கள்
தூய குருபதமதைச் சிரமீது ஆக்கி. 2

முக்தர்கள் தன்னைத் துதித்து மேலாம்
மோனத்தின் நிலையை மனத்தினில் ஏற்றி
சுத்த நிராமயங் கண்டு வேதச்
சுடரெனும் பொருளைஉன் னிதயத்துட் கொண்டு. 3

*1.* பிரம்ம வடிவாகிய உள் ஒளியை நாடு. அதனால் உன் கர்ம வினை ஓடும் வழியைத் தேடு. எளிதில் தெரியாது இருப்பது வீடு. அதைக் கண்டு தர்ம நெறியில் வாழ்ந்தால் இறைவனுடன் கூடலாம்.

*2.* ஆதியாகிய பரம்பொருளைப் போற்றி வாலையாகிய தாயின் பாதத்தை மனத்தில் வைத்து, ஒளியாகிய சோதியை மனத்தில் கருதி, தூய குரு பாதத்தைத் தலை மீது ஏந்தி,

3. முக்தி அடைந்தவர்களை மனத்தால் வணங்கி, மவுன நிலையைக் கைக்கொண்டு, சுத்தமான அருவத்தை உணர்ந்து சுடர் என்ற வேதப் பொருளை இதயத்தில் நினைத்து.

ஞான நிலை அறிய வேண்டி இந்த
ஞாலத்தில் ஆபாச வழிதனைத் தாண்டி
மோன நிலையினில் சேர்த்து ஆதி
முச்சுடர் ஆகிய தீபத்தைப் பார்த்து. 4

நித்தியா னந்தமெனத் தேர்ந்து சதா
நிர்மல மானதோர் பரவெளி சார்ந்து
பத்தியாய் வாழ்ந்திட வேணும் ஆசா
பாசத்தை நீக்கில்மெய்ஞ் ஞானமது தோணும். 5

தன்னையே தானறிந்தோன் சித்தன் வாசி
தனித்திருந் தேபழக்கம் உற்றோனே முத்தன்
உன்னைஉன் னாலறிவோன் சத்தன் ஞான
யோகநிலை தன்னையும் அறிந்தோனே முத்தன். 6

4. ஞான நிலையை அறிவதற்காக ஆபாச உலகியலைத் தாண்டி மவுனம் சேர்ந்து, மூன்று சுடராகிய தீபத்தை நெற்றியில் பார்த்து, (சூரிய சந்திர அக்கினி அல்லது நட்சத்திர ஒளி)

5. அழியாத ஆனந்தம் எது என்று தேர்ந்து கொண்டு மாசில்லாத பரவெளியை மனத்தில் பதித்து பக்தியோடு வாழ வேண்டும். அப்போது மெய்ஞ்ஞானம் தோன்றும்.

6. தன்னையே (ஆத்மா) தான் அறிந்தவன் சித்தன். பிராணாயாமத்தைத் தனித்திருந்து பழகினவன் முத்திக்கு உரியவன். உன்னை உன் அறிவால் உணர்பவன் சத்தன். ஞானயோகம் அறிந்தவனே முத்தி அடைபவன்.

விளக்கம்: சத்தியின் அருள் பெற்றவன் சத்தன்.

பவுரணை நாளதனி லேதான் வாசிப்
பழக்கமது செய்யஆ ரம்பிக்க வேதான்
நவநாதர் செய்முறைகள் இதுதான் கண்டு
நாட்டத்தைக் கொண்டு வழிபார்ப்பர் இதுதான். 7

வாசிப் பழக்கத்தை நாட்டு தீட்சை
மார்க்கப் படியே வழிகண்டு தீட்டு
பாசிப் பயறுஅன்னம் ஊட்டு தினம்
பத்திய மாகவே காலத்தை ஓட்டு. 8

பெண்போகத்து ஆசை வையாதே நல்ல
பிரணவ சொரூபத்தை நழுவ விடாதே
மண்பொன்மேல் இச்சை கொள்ளாதே பொல்லா
மாயையில் அகப்பட்டு நீயுழ லாதே. 9

7. பவுர்ணமி நாளில் யோகம் பயிலத் தொடங்குக. நவநாதர்கள் செய்த முறை இதுவே. அவர்கள் தம் கண்களாலேயே வழிகாண்பர்.

8. வாசியாகிய பிராணாயாமப் பழக்கத்தைத் தொடர்க. தீட்சையில் அறிந்த வழியே செல்க. பாசிப் பயறு கலந்த அன்னம் புசித்து வருக. தினம் பத்தியமாய் நடந்து வருக.

9. பெண் இன்பத்தில் ஆசை வைக்காதே. பிரணவத்தால் வரும் உள் ஒளியை நழுவ விடாதே. மண்ணின் மீதும் பொன்னின் மீதும் ஆசை கொள்ளாதே. கெட்ட மாயையில் அகப்பட்டுத் துன்பப்படாதே.

அட்டாங்க யோகமது செய்வாய் அதி
ஆனந்த நிலைகண்டு மோனத்தில் உய்வாய்
கட்டாக ஓர்நிலையில் நில்லு அந்தக்
கரணம் அடக்கியே மேலேறிச் செல்லு. 10

நந்திதன் கொலுவை விடாதே அந்த
நாட்டத்தை விட்டுநீ அலைந்து கெடாதே

அந்தணன் பீடத்தில் நீயே நின்று
ஆத்தாளைக் கண்டு பணிந்திடு வாயே. 11

தானாக மேலேஓர் வீடு கதவு
தான்சாத்தி இருக்கின்ற வழிதிறந்து ஓடு
மேனாட்டுக் கப்பலை ஓட்டு பாயை
விரித்துநீ மேல் தூக்கிச் சுக்கானைப் பூட்டு. 12

ஆதாரம் ஆறையும் பார்த்து உன்றன்
அறிவினுக்கு எட்டிய நங்கூரங் கோர்த்து
மாதா தெரிசனை அறிந்து அந்த
வழியிலே திட்டியின் வாசல் திறந்து. 13

*10.* எட்டுவகை யோகங்களையும் செய்க. மிகுந்த இன்பநிலை கண்டு மவுனம் செய்து உய்க. ஒரே எண்ணத்தில் இரு. மனத்தை அடக்கி மேல் உடம்பில் யோகம் செலுத்துக.

*11.* நந்தியாகிய (சிவம் என்றும் கொள்க.) குருவின் சபையை நினைக. அதை விட்டு வீணே அலையாதே. பிரமன் (அந்தணன்) இடமாகிய மூலாதாரத்தில் நின்று வாலைப் பெண்ணையும் கண்டு பணிக.

*12.* மேல் வீடாகிய சகஸ்ராரத்தின் (உச்சந்தலை) கதவைத் திறந்து உள்ளே செல்க. மேனாட்டுக் கப்பலைத் தலைக்கு மேல் அந்தரத்தில் செலுத்தும் யோகம் என்னும். பாயை அகல விரித்துச் சுக்கானாகிய மணிப்பூரகத்தை நிறுத்தி வை.

விளக்கம்: மேனாட்டுக் கப்பல் - மேல் செல்லும் யோக உணர்வு.

*13.* ஆறு ஆதாரங்களைப் பார்த்து, உன் அறிவால் அவற்றை நிலை நிறுத்தி, (நங்கூரம்) வாலை எனும் தாயைத் தரிசித்து, அவளைக் காணும் வழியில் உள்ள திட்டி வாசலைத் திறந்திடுக.

விளக்கம்: திட்டிவாசல் - சிறிய வாயில் - இது சுழு முனை நாடியின் சிறிய வாயில் என அறிக.

ஆறுதவ் வீட்டையும் கண்டு அங்கே
அவரவர் வாசஞ்செய் அருமையை விண்டு
தேறு வதைநீ வெளிவி டாதே நல்ல
திருவான மேல்வாசல் கண்டுபின்னி டாதே. 14

பாதைவழி ஏறியே செல்லு மயிர்ப்
பாலத்தின் வழியேபோய்ப் பட்சமாய் நில்லு
தாதை இருப்பிடம் பாரு யாரும்
சஞ்சாரம் இல்லாத தனித்திடஞ் சேரு. 15

மூலாதா ரத்தையும் பார்த்து நல்ல
முச்சந்தி வீதியின் வாசியைச் சேர்ந்து
நாலா விதங்களும் தெரிந்து அங்கே
நவகோணச் சக்கரத்து உண்மை அறிந்து. 16

சங்குத் தொனிகேட்கில் ஆகும் அந்தச்
சத்தமுங் கேட்கப் பயம்விலகிப் போகும்
எங்கும் நிராமயமாய்த் தோணும் மேலும்
இயல்பாக நாதத் தொனியங்கே காணும். 17

*14.* ஆறு ஆதாரங்களையும் கண்டு, அங்கங்கே இருக்கும் கடவுளரையும் அவர்களின் அரிய சத்தியையும் அறிக. அறிந்ததை வெளியில் சொல்லாதே. மேல் வாயிலாகிய உச்சந்தலைத் துவாரத்தில் போகாமல் தடைப்படாதே.

*15.* உரிய பாதையிலேயே செல்க. மயிர்ப்பாலம் வழியே (புருவமத்தி) போய் விடுக. சிவன் இருப்பிடமும் அறிக. யாரும் இல்லாத தனியிடத்தில் சேர்க.

*16.* மூலாதாரத்தையும் முச்சந்தியையும் வாசியாகிய பிராணாயாமம் சேரச் செய்க. நாலாவிதங்களும் தெரிந்து

அங்கே ஒன்பது கோணம் கொண்ட சக்கரத்தின் உண்மை அறிக.

விளக்கம்: சக்கரம் - ஸ்ரீசக்கரம்; முச்சந்தி - கண், மூக்கு, செவி என்னும் மூன்றும் சந்திக்கும் உட்பகுதி.

(நவகோணச் சக்கரம் - ஸ்ரீசக்கரம் என்பதில் ஒன்பது உள்ள ஆவரணங் களும் (வீதி) கோணச் சக்கரம் ஆகும். பூபுரம், 16 தாமரை, 8 தாமரை, 14 கோணம், வெளிப்பத்துக் கோணம், உள்பத்துக் கோணம், எண் கோணம், தனிமுக்கோணம், நடுவாகிய புள்ளிக் கோணம் என ஒன்பதாம்)

17. சங்கு ஒலி கேட்கலாம். கேட்டால் அச்சம் விலகும். எங்கும் அருவம் உருவம் போல் தோன்றும். அங்கே நாதத்தின் இனிய தொனி கேட்கும்.

சதுரகிரி உச்சிமீது ஏறி அதைத்
தானங்கே பார்த்துபிர மானந்தம் மீறி
இதுகயி லாசகிரி யென்று போற்றி
இனிமையாய் வழிதெரிந்து அவ்விடம் சென்று. 18

கருநெல்லிக் காட்டுக்குள் சென்றே உட்
கருவான தாமரைத் தடாகத்துள் நின்றே
பெருவாரித் தீர்த்தங்கள் ஆடி வாய்
பேசாமல் ஊமைபோல் மோனத்தை நாடி. 19

கருஞ்சாரை வெண்சாரை யோட அதைக்
கண்டு ஒடுங்கி வழிதனைத் தேடப்
பெரும்பாலும் அருவி செறிந்து வரப்
பிறங்கும்பிர மானந்த மிதுவென்று அறிந்து. 20

மூலக் கணேசனைக் கண்டு அவர்
முன்னின்று போற்றியே தெரிசித்துக் கொண்டு
கோலத் துடன்அங்கு இருந்தும் செல்லக்
குணமாகும் ஆனந்தப் பரவெளி பொருந்தும். 21

**18.** சதுர கிரியாகிய உச்சந்தலை மீது ஏறு. இதுவே பிரமானந்தமாகும். இது கைலாச கிரி என்றும் போற்றப் படும். இதற்குப் போகும் வழியை அறிந்து இனிதே செல்க.

விளக்கம்: சுழுமுனை நாடிவழியே உச்சந்தலை வரை செல்வதே சரியான வழியாகும். சதுரகிரி - உச்சந் தலை.

**19.** கருநெல்லிக் காடாகிய சகஸ்ராரத்தில் சென்று, அங்குள்ள தாமரைக் குளத்தில் நின்று, பலவிதத் தீர்த்தங் களும் அங்கேயே ஆடி மவுனமாய் இருந்திடுக.

விளக்கம்: கற்பகாலம் வாழச் செய்வதால் ஆயுள் நீடிக்கச் செய்யும் கருநெல்லிக் காடு என்றார். தாமரை - ஆயிரம் இதழ் கொண்டது. தீர்த்தம் - யோக சித்தியால் ஊறும் அமுதம்.

**20.** கடுஞ்சாரை, வெண் சாரை என்னும் நாடிகளைக் கண்டு அறிந்து, அவற்றில் சார்ந்து அமுதூறும் பகுதியே பிரமானந்தம் என அறிக.

**21.** மூலாதாரத்தில் கணேசனைப் பார்த்து வணங்கி, அங்கிருந்து சென்றால் நற்குண நிலமாகும் ஆனந்தப் பரவெளியை அடையலாம்.

சோதி சொரூபத்தைப் பார்த்து அதிற்
சொக்கியே நின்றிடத் தேகமும் வேர்த்து
ஆதி மகாலிங்கங் கண்டு அதில்
ஐம்புலன் ஒடுங்கியே ஆனந்தங் கொண்டு. 22

சுந்தர தெரிசனம் செய்து சிற்
சொரூப நிலையதனில் நின்றுநான் உய்ந்து
அந்தரத் தோர்களைப் போற்றி இது
ஆச்சரியம் என்றேதான் வாசியை ஏற்றி. 23

கண்டுகொண் டேன்சிற் பரத்தை ஞானக்
கண்கொண்டு பார்த்தறிந் தேன்அட் சரத்தை

விண்டுயான் சொல்லமுடி யாது இந்த
மேதினி யோர்க்குலெகு விற்கிடை யாது. 24

மனமானது அடங்கியே போச்சு இந்த
மாயையை விட்டுக் கரையேறல் ஆச்சு
சினமென்னுங் கோபம்அறுத் தாச்சு யோகம்
சித்திய தாகவே முத்தியும் ஆச்சு. 25

22. சோதியாகிய வடிவத்தைப் பார்த்து அதில் சொக்கி நின்றிடுக. அப்போது உடல் வியர்க்கும். நடு நாடியில் ஒளி ஏறுவதே மகாலிங்கம். அதையும் கண்டு ஐந்து புலன் களையும் ஒடுக்கி ஆனந்தம் கொள்க.

23. சிவசொரூபத்தைத் தரிசித்து, நானே அதுவாக இருக்கிறேன் என்று உணர்ந்து அந்தரத்தில் உள்ள உத்தி களை வணங்கி, இந்த வியப்புடன் பிராணாயாமத்தை ஏற்றுக.

24. சித்தத்தில் உதிக்கும் பரத்தைக் கண்டு கொண்டேன்; ஞானக்கண் பெற்று அதன் எழுத்தை அறிந்தேன். இதை வெளியில் சொல்ல முடியாது. உலகில் உள்ள சாதாரண மானவர்களுக்கு இது எளிதாகக் கிடைக்காது.

25. மனம் அடங்கிவிட்டது. இந்த மாயையை விட்டுக் கரையேறினேன். சினத்தை அறுத்துவிட்டேன். எனவே, யோகம் சித்தித்து முத்தியும் கிடைக்கும்.

ஆசையை ஒருநாளும் வேண்டேன் மேல்
ஆறு தலத்திலும் கண்டதைப் பூண்டேன்
ஓசை ஒளிக்குளே நின்றேன் அதை
உற்றுற்றுப் பார்த்துப்பின் அங்கங்குச் சென்றேன். 26

ஆயிரத்து எட்டிதழும் கண்டேன் கண்டு
அந்தந்த நிலையையும் மனத்தினிற் கொண்டேன்
நாயின் சொரூபத்துள் ஆச்சு இன்னும்
சகலபுவ னங்களும் பிண்டத்தில் ஆச்சு. 27

அஞ்ஞானம் என்பதும் போச்சு பர
மானந்த மென்பது அதுநிசப் பேச்சு
மெய்ஞ்ஞானம் என்பது பொய்யோ இந்த
மேதினி யோர்கள் அறியார்கள்ஐயோ. 28

இல்லறம் உள்ளதும் நாமே அதி
ஏற்கையா யிருந்தோர்க்குச் சாதனமாமே
நல்லறம் தேடியலை யாதே மேலாம்
நாதாந்த வெட்டவெளி யாயிருக்கும் போதே. 29

26. ஆசையை ஒருநாளும் விரும்பமாட்டேன்; ஆறு ஆதாரங்களில் கண்டதை அணிந்தேன்; ஓசையால் வரும் ஒளியில் ஒன்றினேன்; அதன் ஒளியால் அங்கெங்கும் சென்றேன்.

27. ஆயிரத்து எட்டிதழ்த் தாமரையையும் தலையில் பார்த்தேன்; அவ்வப்போது அவற்றை மனத்தில் பதித்தேன்; தாயின் வடிவத்தில் கலந்து எல்லா உலகங்களுக்கும் இந்த உடம்போடு சென்றேன். (அல்லது அவற்றை உடம்பிலேயே கண்டேன் என்பதுமாம்.)

28. அறியாமை அகன்றது. பரமானந்தம் வரும் என்பது உண்மையானது. மெய்ஞ்ஞானத்தைப் பொய் என்று கருதும் இந்த உலகினர்க்கு அது தெரியாது.

29. இல்லறத்தில் இருந்தாலும் இவ்வழியை நன்கு கைக் கொண்டோர்க்கு இது சாதனம் ஆகும். வேறு அறம் வேண்டாம். நாதாந்த வெட்டவெளி இருக்கும் போது வேறு தேவையில்லை.

(நாதாந்தம் - வேதா, அரிக்கீசம், விஷம், சூன்யம், விந்து, அர்த்த சந்திரன், நிரோதி, நாதம், நாதாந்தம் என்ற அடுக்கில் உள்ளது. உடம்பில் உள்ள நாதம் பரவி முடியும் போது அணு மயமாவதை நாதாந்தம் என்பர்)

மோன நிலைகண்டு தேறு பர
முத்திக்கு வித்தான கருத்தில் நின்றேறு
ஞான நிலையதுவும் கிட்டும் பூவில்
நாடி இருக்கலாம் வெகுகால மட்டும். 30

சுழிமுனை திறக்கும்வழி பாரு அந்தச்
சூட்சாதி சூட்சத்தைக் கண்டதின் சீரு
வழியுடன் சுந்தரர் நூறே சொல்லும்
மார்க்கத்தின் வழியாகச் சென்றுநீ தேறே. 31

மச்சரும் எண்ணூறிற் சதமாய்க் கொஞ்சம்
வாய்விண்டு சொல்லினர் தெரியவே பதமாய்
இச்சை ஒழித்துநீ பாரு அதனால்
இகபர இரண்டையும் காணவெகு சீரு. 32

தீட்சையின் மார்க்கமும் தெரிய குரு
தேசிகன் இருநூறில் வழிதுறை அரிய
மாட்சிமை யாக உரைத்தார் அதை
வாங்கித் திருமூலர் குகைக்குள் மறைந்தார். 33

*30.* மவுனநிலையை யோகமாக்கித் தெளிக. முத்தி பெறுவதே முடிவு என்ற கருத்திலேயே இரு. ஞான நிலையும் கிடைக்கும். வெகுகாலம் இதில் நீடிக்கலாம்.

*31.* சுழுமுனை நாடியைத் திறக்கும் வழியைப் பார். (மூலாதாரத்தில் கும்பகப் பிராணாயாமம் செய்து இதைக் கருதுவதே வழி.) சூக்குமமாக உள்ள அதை அறிந்து அதனுடன் இணைக. சுந்தரர் கூறிய வழியாக நீ சென்று தேறுக.

*32.* மச்ச நாதரும் தாம் பாடிய எண்ணூறில் இதுவே சதம் என்று வெளிப்படக் கூறினார். ஆசையை விட்டு நீ பார். இதனால் இம்மை மறுமைகளைக் காணலாம்.

33. தீட்சையில் சொல்லிய வழியில் தேசிகனார் இரு நூறு பாடலில் கூறிய துறைகளில் விளக்கினார். இதையே திருமூலர் பெற்று யோகக் குகையினுள் சென்றார். (தேசிகன் - கடவுளாகிய குருநாதன்.)

சட்டமுனி கற்பவிதி நூறு அதனைத்
தான்பார்த்து நல்ல வழியினில் தேறு
வெட்டவெளி யாகவே தோணும் ரோமர்
விரித்துச்சொன் னாரரந்த ஐஞ்நூறிற் காணும். 34

செய்பாக மானதுவும் முன்னே கருவைத்
தெரிந்துகுரு முறையாகச் செய்வாய்நீ பின்னே
கைபாகத் துடன்செய்தால் ஞானம் கிட்டுங்
கடைத்தேறல் ஆம்இந்தத் திடத்துடன் மோனம். 35

பத்திய பாகங்கள் ஆக முறையாய்ப்
பாங்குடன் தானுண்பாய் நரைதிரை போக
முத்தி வழியைத் திறந்து பார்த்து
மோசங்கள் வாராமற் செய்வாய் சிறந்து. 36

34. சட்டைமுனி கற்பவிதி நூறும் பார்த்து நல்வழியில் தெளிக. வெட்ட வெளியாகத் தோணுவதை 'ரோமர்' ஐந்நூறு பாடல்களில் விரிவாகச் சொன்னதில் இது காணப்படும்.

35. முன்னே செய்து பழகியதை குரு மூலமாக வந்து பின்னர் நீ செய்கிறாய். இதைப் பெற்றபடி செய்தால் (கைபாகம்) ஞானம் கிட்டும். கடைத்தேறலாம். இதுவே திடமான மோனமாகும்.

36. பத்திய பாகங்களில் கூறிய பழைய முறைப்படி உண்ணுக. இதனால் நரை திரை போகும். முத்திக்குரிய வழியைத் திறந்து பார்த்து மோசம் வாராது செய்க.

பூலோக ஆசையைத் தள்ளு ஞானம்
போதிக்குங் குருகண்டு அடுத்துநீ கொள்ளு
சாலோக பதவியது கிட்டும் வேறே
சம்பத்து வேண்டுமோ இதுவந்த மட்டும். 37

யோக முறைகை விடாதே விட்டுவிட்டு
ஒன்றுந் தெரியாமல் நீயும் கெடாதே
பாகம தாகவே செய்வாய் பய
பத்தியா எப்போதுஞ் சரத்தினில் உய்வாய். 38

ஞான வழிகண்டு கூடு வரும்
நலமான முத்தி வழிதனைத் தேடு
மோன நிலையிலே நில்லு குரு
முத்திக்கு இடமான வழியிலே செல்லு. 39

*37.* பூலோகத்திலுள்ள ஆசைகளைத் தள்ளுக. ஞான குருவைக் கண்டு உபதேசம் பெறுக. இதனால் சாலோக பதவி கிட்டும். இதுவே செல்வம் ஆகும். (சாலோகம் - சிவனிருக்கும் உலகம்.)

*38.* யோக முறையைக் கைவிடாதே. விட்டால் நீயும் கெடுவாய். பரிபாகத்துடன் செய்க. பயபக்தியுடன் எப்போதும் சஞ்சாரத்தில் உய்வாயாக.

*39.* ஞானவழியைக் கண்டு கூடுக. மோனவழியிலேயே நின்றிடுக. நல்லமுத்தி வழியைத் தேடுக. முத்திக்குரிய வற்றில் செல்க.

வாழ்நாளை வீணில்வி டாதே கெட்ட
மாய வலைஅகப் பட்டுழ லாதே
பாழ்போகில் எதுவும் வாராதே பரி
பக்குவம் ஆகிடில் நீபின்னி டாதே 40

வாழ்நாளை வீணாக்காதே. மாயவலையில் அகப் படாதே. பாழான வழியில் சென்றால் எதுவும் வாராதே. பரிபக்குவமாகினால் நீ பின் தங்கமாட்டாய்.

தூக்கத்தில் ஆசைவை யாதே இது
சுகமெனக் காண்பித்து மயக்குமப் போதே
ஊக்கத்துடன் இருப் பாயே தூங்கி
உலகோர் சிரிக்க உடம்பெடுக் காதே. 41

தூக்கத்தில் சுகம் கண்டு அதை விரும்பாதே. ஊக்கத்துடன் இருப்பாயாக. உலகினர் சிரிக்கும்படி மறுபிறவி எடுக்காதே.

மீறித் திரிவதும் வீணே பரியாச
மேசெயும் வார்த்தைக்கு இடமது காணே
தேறித் தெளிவது பாரம் உன்றன்
சித்தம் அடக்கித் திரிவது சாரம். 42

இதை மீறித் திரிவதும் வீணாகும். தொடர்புக்கு உரிய வார்த்தைக்கு இடம் கொடுத்திடுக. இப்பாரத்தை உணர்ந்து தெளிவடைக. உன்னுடைய சித்தம் அடக்கித் திரிவது சாரமாகும்.

ஆணவத் தால்வரும் கேடு அதை
அறியாமல் நடப்பது சுணைகெட்ட மாடு
தாணுவின் பாதத்தை நாடு என்றும்
தன்தேகம் போகாமல் சற்பங்கள் தேடு. 43

ஆணவத்தால் கேடு வரும். உணர்வு கெட்ட மாடு போன்றவர் இதையறியார்கள். சிவனின் பாதத்தை நாடுக. (தாணு - சிவன்) தேகம் அழியாது கற்பகாலம் வரையில் வாழ்வதைத் தேடுக.

ஆசை மயக்கில்செல் லாதே நீ
அன்புடன் தெரிந்ததை வெளியில் சொல்லாதே
பாசத்து அகப்படாது நீயே ஞான
பரிபூர ணானந்த பதம்அடை வாயே. 44

ஆசையில் மயங்கிப் போகாதே. அன்பால் உணர்ந்ததை வெளியிடாதே. பாசத்தில் சிக்காதே. ஞான பரிபூரணனின் ஆனந்தமாகிய பாதத்தை அடைக.

பார்த்துத் தெரிந்துகொள் என்றே எனக்குப்
பட்சமாய்ப் போகரும் சொல்லினார் என்றே
ஆத்தும சுத்தியாய் நானே அவரை
அன்புடன் போற்றிப் பணிந்துகொண் டேனே. 45

பார்த்தே எல்லாம் தெரிக என்று பரிவாகப் போகரும் சொன்னார். நான் அதனை ஆத்ம சுத்தியாய் அன்புடன் பணிந்து ஏற்றுக் கொண்டேன்.

குருநாதன் என்னை மதித்து பேர்
கொடுத்தாரே கல்லுளி என்றே விதித்து
திருநாமம் பெற்றபின் நானே அவரை
தெரிசித்து யோகத்தின் சித்தி பெற்றேனே. 46

குருநாதராகிய போகரும் என்னை மதித்துக் 'கல்லுளி' என்று எனக்குப் பெயர் கொடுத்தார். பிறகும் நான் அவரைத் தரிசித்துச் சித்தியடைந்தேன்.

கல்லுளிச் சித்தன் என்றேதான் வாயால்
கனிந்துமே கூப்பிட்டார் சித்தர்க ளேதான்
சொல்லிய படியென்னைத் தானே எவரும்
சுட்டி அழைத்திடில் நேரில்வரு வேனே. 47

''சித்தர்களே, என் குருநாதர் என்னைக் கல்லுளிச் சித்தன் என்றே வாயால் கனிவோடு கூப்பிட்டார். அப்பெயரால் என்னைச் சுட்டி அழைத்தால் நான் நேரில் தோன்றுவேன்.''

என்னாலும் அறுபதோடு ஆறு நானும்
இயம்பினேன் சக்கரத்து இயல்பதின் கூறு
முன்னாலும் பின்னாலும் ஆய்ந்தே நீ
முக்கியம் இன்னதென மனதுக்குள் வாய்ந்தே. 48

என்னுடன் அறுபத்தாறு சீடர்களாம். இதில் நானும் சக்கரத்தின் இயல்பைக் கூறினேன். முன்னும் பின்னும் ஆராய்ந்து சொல்லிய இதை இன்றியமையாததாய் நீ மனத்தில் வைப்பாயாக.

சாத்திரம் எத்தனையோ கோடி சித்தர்
தான்சொன்ன வாத வயித்தியம் தேடி
சூத்திரம் பத்தொன்ப தாக யானும்
சொல்லிய நூல்தனை வழிதுறை யாக. 49

சாத்திரங்கள் பல கோடி. சித்தர்கள் கூறிய இரசவாதம், மருத்துவம் ஆகியவற்றை ஆராய்ந்து, பத்தொன்பது சூத்திரங்களாக நானும் கூறிய நூல் தன்னை வழிதுறை யாகப் பின்பற்றுக.

பார்த்துத் தெளிந்தவனே சித்தன் பரி
பக்குவ மாக அறிந்தோனே பத்தன்
நேர்த்தியாய் என்நூல்கற் றோனே அவன்
நீடுழி காலம்வரை யோகம் பெற்றேனே. 50

பலவும் பார்த்துத் தெளிவடைந்தவனே சித்தன். பக்குவத்தை அறிந்து உயர்வு அடைந்தவனே பக்தன். நேர்த்தியாய் என் நூலைக் கற்பவன் நீடுழிக் காலம் வரை யோகம் பெற்றவன் ஆவான்.

## கல்லுளிச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 16. கஞ்சமலைச் சித்தர் பாடல்கள் ·

கஞ்ச மலை என்றால் பொன் மலை. இது கைலாசத்திற்கே மிகுதியாக வழங்கும். எனவே இவரைக் கைலாய வழிச் சித்தர் எனலாம்.

## கஞ்சமலைச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### நூல்

பரிபூர ணானந்த போதம் - சிவ
பரப்பிர்ம மான சதாசிவ பாதம்.

உரிதாம் பரம்பொருளை உள்ளு - மாயம்
உற்ற பிரபஞ்ச மயக்கத்தைத் தள்ளு
அரிதான சிவநாமம் விள்ளு - சிவன்
அடியார்கள் பணிவிடை அன்பாகக் கொள்ளு. 1

துச்சமு சாரவி சாரம் - அற்பச்
சுகமது துக்கம தாம்வெகு கோரம்
நிச்சய மானவி சாரம் - ஞான
நிர்மல வேதாந்த சாரமே சாரம். 2

(முதல் இரண்டு அடிகள் சந்தக்குழிப்பாக உள்ளன) முழுமையும் பூரணமான ஆனந்தமாகிய அறிவு என்பது சிவமாகிய பரப்பிரம்மம் ஆகிய சதானந்தத்தின் பாதமாகும்.

1. பரம்பொருளையே நினைக. மாயத்தாலாகிய பிரபஞ்சத்தை நீக்குக. சிவ நாமத்ந்தயே சொல்லுக. சிவனடியார்களுக்குப் பணி செய்வதை அன்பாய்ச் செய்க.

2. நிலையில்லாதவற்றை விசாரித்து நிற்பது மிகச் சிறிய சுகம். அது துக்கமாகவே மாறி வெகு கோரமாய் ஆகும். நிலையான பொருள் பற்றி விசாரித்தல் ஞானமும் நிர்மலமும் தரும். வேதாந்தத்தின் சாரமே உயர்வுக்கு வழியாகும்.

கற்பனை யாகிய ஞாலம்- அந்தக்
கரணங்க ளாலே விளைந்த விசாலம்
சொற்பன மாம்இந்த்ர சாலம் - அன்று
தோன்றி விட்டாலது சூட்சானு கூலம். 3

அற்பம தானப்பிர பஞ்சம் - அது
அனுசரித் தாலே உனக்கிது கொஞ்சம்
நிற்பது அருள்மேவி நெஞ்சம் - அன்று
நிகரில்லை நிகரில்லை மெய்ஞ்ஞானம் பொஞ்சம். 4

ஆங்காரத் தால்வந்த கேடு - முதல்
ஆசையைக் கட்டோடே அப்பாலே போடு
தாங்காமல் ஆனந்த வீடு - அன்று
தாக்கும் மனோலயம் தானாகக் கூடு. 5

3. இந்த உலகம் கற்பனையானது. மனம் முதலிய அந்தக்கரணங்களால் இந்த விரிவான உலகை உணரலாம். நிகழ்காலம் முதலியன கனவு காண்பதாகிய இந்திர சாலமே யாகும். அதில் அறிவு தோன்றினால் அது சூக்குமமாகிய துணையாகும்.

4. பிரபஞ்சமே அற்பமானது தான். அதை எண்ணி உணர்வதால் அது சிறிது தெளியும். நெஞ்சமோ கடவுள் அருளுக்காகவே காத்துள்ளது. அதனால் மெய்ஞ்ஞானம் நிகரற்றதாக விளங்கும்.

5. ஆங்காரத்தால் வந்தது கெடுதி. ஆகவே முதலில் ஆசையை விடுக. அப்போது ஆனந்த வீடு உன் மனதில் பொருந்தித் தாக்கும்.

தத்துவக் குப்பைகள் ஏது - சித்தி
சாத்திர மான சடங்குகள் ஏது
பத்தி யுடன்மற வாது - குரு
பாதத்தைக் கண்டாற் தெரியும் அப்போது. 6

தூராதி தூரங்கள் இல்லை - அத்தைத்
தொட்டுப் பிடிக்க என்றால் வெகு தொல்லை,
காரண தேசிகன் சொல்லை - நம்பிக்
கருத்தில் நிறுத்தியும் காணலாம் எல்லை. 7

ஆணவத் தால்வந்த காயம் - அதில்
ஐவரி ருந்து தொழில்செய்யும் ஞாயம்
காணவ மாம்போகும் மாயம் - நன்றாய்க்
கைகண்ட சூத்திரம் சொன்னேன் உபாயம். 8

6. தத்துவமாகிய குவியல்கள் ஏது? சித்திக்கான சாத்திரம் சடங்கும் கூட ஏது? பத்தியுடன் குரு பாதத்தை மறவாமல் தொழுது வந்தால் எல்லாம் விளங்கும்.

7. தூர தூரமாகத் தெரிவதெல்லாம் உண்மையல்ல. அவற்றைத் தொட்டுப் பிடிப்பது என்றால் தொல்லை தான். அறிவு தரும் குருவின் (தேசிகன்) சொல்லை நம்பிக் கருத்தில் வைத்தால், அத்தூரங்கள் ஓர் எல்லையில் அகப் படுவதைக் காணலாம்.

8. ஆணவம் மறுபிறப்பையும் இந்த உடலையும் தந்தது. இவ்வுடலில் ஐந்து புலன்கள் இருந்து எல்லா வற்றையும் நடத்துகின்றன. இவற்றை அறிவால் காண நேர்ந்தால் மாயம் கழிந்து போகும். நல்ல சூத்திரத்தால் உபாயம் (வழி) சொன்னேன்.

மூடர் உறவு பிடியாதே - நாரி
மோக விகாரத் தால்நீ மடியாதே
ஆடம் பரம்படி யாதே - ஞான
அமுதம் இருக்க விஷம் குடியாதே. 9

தான்என்று வாது கூறாதே - பேசி
தர்க்கங்கள் இட்டுச்சள் என்று சீறாதே
ஊனென்ற பாசம் மாறாதே - போனால்
உன்னாணை உன்மனஞ் செத்துந் தீராதே. 10

வந்த பொருளைத் தள்ளாதே - நீயும்
வாரா ததற்கு வீணாசை கொள்ளாதே
சிந்தை வசமாய்த். துள்ளாதே - சும்மா
சித்திரம் போலிருந்து ஒன்றும் விள்ளாதே. 11

தேக பாச பவபந்தம் - அப்பொருள்
சிற்றின்ப மானது சிச்சீக் கந்தம்
பாகமது ஆனவே தாந்தம் - பொருள்
பாவித்துப் பார்க்கில் உனக்கிது சொந்தம். 12

*9.* அறிவில்லாதார் உறவைக் கொள்ளாதே. மங்கையர் மோகத்தால் மடியாதே. ஆடம்பரமாக இருக்காதே. ஞான மாகிய அமுது இருக்க நஞ்சைக் குடிக்காதே.

*10.* தான் என்று அகந்தையாய் வாதம் செய்யாதே. தர்க்கம் பேசிச் சண்டையால் சீறாதே. உடம்பின் பாசத்தை மறுக்காதே. உடம்பு போனால் உன் மேல் ஆணை உன் மனமும் செத்து விடும். எதுவும் தீர்வாகாது.

*11.* தானாக வந்த பொருளைத் தள்ளி விடாதே. கிடைக்காத ஒன்றுக்கு வீண் ஆசை கொள்ளாதே. சிந்தை வசமானதாகத் துள்ளாதே. சித்திரம் போல் இருந்து மவுனம் செய்க.

*12.* தேகத்துக்குரிய தொடர்புகள் பாவமான தொடர்பு தரும். அது சிற்றின்பமாகும். அது மிகச் சிறிய வாசனை யால் வந்ததாம். பாகம் செய்யப் பெற்ற வேதாந்தத்தைப் பொருளாகப் பாவித்து உணர்ந்தால் உன் சொந்தம் (ஆத்மா) உனக்கு விளங்கும்.

வஞ்சியர் ஆசை ஆகாதே - அந்த
மயக்கமானாற் கொஞ்ச மட்டிற் போகாதே
அஞ்சி யமன்கைச் சாகாதே - கெட்ட
ஆசா பாசமாம் நெருப்பில் வேகாதே. 13

கல்வி மயக்கங் கடந்து - எல்லாம்
கற்றோம்என்று எண்ணுங் கசட்டைத் தொலைத்து
சொல்வெப் பினாலே கிடந்து - இரு
சூட்சாதி சூட்சத்தில் ஆசை படர்ந்து. 14

ஓடித் திரியும் கருத்து - அதை
ஓடாமல் கூட்டிப் பிடித்துத் திருத்து
நாடிக் கொண்டு அம்பைப் பொருத்து - அந்த
நாதாந்த வெட்ட வெளிக்குள் இருத்து. 15

சாண்வயிற் றால்அலை யாதே - நிதம்
சஞ்சலப் பட்டுக் கொண்டே மலையாதே
ஆணவத் தால்உலை யாதே - உனக்கு
ஆனந்த முத்தி அதுநிலை யாதே. 16

*13.* பெண்கள் மீதான ஆசை வழியில் போகாதே. அந்த மயக்கம் எளிதில் மாறாது. எமன் கையில் அஞ்சிச் சாக நேரும். ஆசா பாசங்களை நெருப்பிலும் வேக வைக்க முடியாது.

*14.* கல்வியாகிய மயக்கத்தையும், எல்லாம் கற்று விட்டோம் என்ற கர்வத்தையும் தொலைத்து, நாதமாகிய வெப்பத்தில் இடா பிங்களா எனும் சூக்குமத்தில் ஆசை கொண்டு செல்க.

*15.* எங்கும் திரியும் கருத்தை ஓடாமல் கட்டி வைத்து அம்பு போல் நாதாந்த வெளியில் மனத்தைச் செலுத்து.

விளக்கம்: தலைக்கு மேல் ஆறு விரல் நாதாந்தம் ஆகும்.

*16.* சாண் வயிற்றுப் பசிக்காக அலையாதே. எதற் காகவும் மனம் வருந்தி நிற்காதே. ஆணவம் கொள்ளாதே. இதனால் முத்தி உனக்கு நிலைக்காது.

அபிமானி யாகிய சீவன் - அவன்
அஞ்ஞானத் தாலே அழிவுண்டு போவான்
தபம்நினைந்தால் போதம் சார்வான் - நிலை
சார்ந்துகொண் டால்சத்தி ரூபமும் ஆவான். 17

நற்குரு சொன்னதே சொல்லு - தம்பம்
நாட்ட மென்றால் வன்னி நிலையிலே நில்லு
தற்சம யங்களை விள்ளு - உண்டு
தன்மய மாகவே தானேநீ கொள்ளு. 18

துன்ப இன்பங்களைத் தொட்டு - அந்தத்
தொந்தங்கள் எல்லாந் துருசுஅறச் சுட்டு
பின்பு பாசத்தைக் கைவிட்டு - ஒன்று
பேசாமல் அந்தப் பெருமையை விட்டு. 19

பேச்சினால் என்னென்ன தோணும் - சும்மா
பேசப் பேசப் பிழைஅல்லோ
வாச்சுத லால்அம்பு பூணும் - நல்ல
மாசற்ற ஞான விசாரணை வேணும். 20

*17.* எதிலாவது பற்று மிகக் கொண்ட சீவன் அறியா மையால் அழியும். தவத்தை நினைத்தால் அறிவு வந்து சேரும். நல்ல நிலையை ஏற்றால் சத்தி வடிவமும் உண்டாகும். (ரூபம் - அருள்)

*18.* நல்ல குரு சொன்னதே சொல்லாகும். தீத்தம்பத்தை உடலுக்குள் நாட்ட வேண்டுமென்றால் குண்டலினி நிலையை விட்டுப் பிரியாது நில். நிலையான சமயத்தில் இருந்து கடவுள் மயமாகி நில்.

*19.* இன்ப துன்பங்கள் இரண்டையுமே சுட்டு நீக்குக. பிறகு பாசத்தையும் கை விட்டு மவுனத்தில் தன் பெருமையை விட்டு நீங்குக.

*20.* பேசிக் கொண்டே இருப்பதால் பிழைகள் தாம் உண்டாகும். வம்பும் உண்டாகும். மாசற்ற ஞானத்தைப் பற்றிய ஆராய்ச்சி தான் வேண்டும்.

(ஞான விசாரணை - மெய்யறிவைப் பற்றிய ஆராய்ச்சி)

அநித்திய மானது தேகம் - அதில்
ஆசையும் ஒன்றால் அடங்காது மோகம்
தனித்திருந் தால்அந்த போகம் - ஒன்று
தானாகி நிற்பது வேசிவ யோகம். 21

விரும்பாசைக்கு இடங்கள் கொடாதே - காய
வேதனைக் குள்ளேநீ கட்டுப் படாதே
திரும்பச் செனனம் எடாதே - குரு
தேசிகர் பாதத்தில் .அன்பு விடாதே. 22

கோடான கோடி தவங்கள் - அந்தக்
கோவிலைச் சுற்றிச் செபிக்குஞ் செபங்கள்
பாடான தல்லோ பவங்கள் - இது
பண்ணுமுன் நண்ணும் துன்ப அவலங்கள். 23

அந்தக் கரணவி லாசம் - அதை
யாராலும் தள்ளக்கூ டாது பிரயாசம்
தொந்தித்து நிற்பதே பாசம் - அதிற்
தோன்றாமற் தோன்றுஞ் சுயம்பிர காசம். 24

நாமசொ ரூபமே சித்தி - அதை
நாடித் தெளிந்துகொண்டால் அல்லோ முத்தி
நேம சொரூபமே வித்து - எங்கும்
நிச்சய மாகும் நிரந்தர வத்து. 25

21. இந்த உடல் நிலையானது இல்லை. அதில் ஆசை வந்தால் மோகம் அதிகமாகும். தனித்து மவுனமிருந்தால் அது இன்பம். பரம்பொருளுடன் ஒன்றி நிற்பதே சிவ யோகம்.

22. ஆசைக்கு இடம் தராதே. உடல் வேதனைக்குள் சிக்காதே. மறுபிறவி எடுக்காதே. குருவின் பாதத்தில் அன்பை விடாதே.

23. கோடித் தவங்கள், கோவிலைச் சுற்றிச் ஜெபிக்கும் ஜெபங்கள் ஆகிய இவற்றால் பரிகாரமாகாது. அவலங்களே மிஞ்சும்.

24. அந்தக் கரணங்களை விரித்தால் அதை யாரும் தடுக்க முடியாது. தொடர்பு விடாததே பாசம். ஆனால் அதனுள் சுயமான ஆன்ம ஒளியும் மறைந்திருக்கும்.

25. நாமத்தை இறை வடிவமாகக் காண்பது சித்திக்கு வழி. அதை நாடித் தெளிவு கொண்டால் முத்தி வரும். நியமங்களே இதற்கு விதையாகும். கடவுள் எங்கும் உறுதி யாய் நிலைத்திருப்பதை உணர்க.

## கஞ்சமலைச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 17. வகுளிநாதர் என்ற மௌனச் சித்தர் பாடல்

இவர் விவரம் தெரியவில்லை. இவர் பாடியனவாக 12 பாடல்களே உள்ளன.

## வகுளிநாதர் என்ற மௌனச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

### குறவஞ்சிப்பா

ஆதிபெருஞ் சோதிதனை அனுதினமும் நாடி
ஐயர்பதந் தேடிக்கொண்டு அருள்பெறவே பாடிச்
சோதியெனும் மனோன்மணியாள் அருளதனைப் பெற்றுச்
சுகருடைய பாதமதை மனந்தனிலே உற்று, 1

ஆங்காரம் தனையடக்கி அருள்நிலையை நோக்கி
அரியபுவ னங்களெல்லாம் அறிய மனதாக்கி
பாங்காகப் பெரியோர்கள் பாதமது பணிவோம்
பத்தியொடு யோகநிட்டை நித்தியமும் புரிவோம். 2

பேய்க்குணத்தைச் சுட்டல்லவோ பிரமநிலை கண்டோம்
பிரமபதி தான்கடந்து சுழிமுனையுள் கொண்டோம்.
நாய்போலே அலையாமல், நாமிருந்தோம் தவசில்
நல்லதொரு ஆங்காரம் அடக்கிமிகப் பவுசாய். 3

வஞ்சகமாம் வாழ்வைநம்பிச் சஞ்சலங்கள் அடையோம்
மகத்தான மகரிடிகள் பதங்காணச் சடையோம்
பஞ்சமா பாதகரை ஒருநாளும் பாரோம்
பாவவினை பற்றறுத்தோர் சிநேகிதங்கள் மறவோம். 4

1. ஆதியாகிய பெரிய சோதியை நாள்தோறும் நாடி, குருவின் பாதத்தைத் தேடி அருள் பெறவே துதித்து, சோதியாகிய மனோன்மணியின் அருளைப் பெறச் சுகமுனிவராகிய குருவை மனத்திலே நிறுத்தி,

2. அகங்காரத்தை அடக்கி, அருள்நிலையை வளர்த்துச் செல்வதற்கு அரிய உலகங்களில் செல்ல மனம் கொண்டு, பெரியோர் பாதத்தைப் பணிவோம்; பக்தி கொண்டு யோகத்தைத் தினமும் செய்து வருவோம்.

3. பேய்க்குணங்களை நீக்கினால் பிரம்ம நிலை காணலாம். பிரம்ம பதியாகிய மூலாதாரத்தைக் கடந்து சுழிமுனையுள் மனம் கொண்டோம். நாய் போல எங்கும் திரியாமல் தவத்தில் நாம் இருந்தோம்; அகங்காரத்தை நன்கு அடக்கி இருந்தோம்.

4. வஞ்சமாகிய வாழ்வை நம்பித் துன்பம் அடையோம். மகிமை கொண்ட ரிஷிகளின் திருவடி காணச் சோர்வின்றி முயல்வோம். பஞ்சமாபாதகம் செய்வோரை ஒருநாளும் சேரமாட்டோம். பாவ வினைகளின் பற்றுகளை அறுத்தவர் நட்பை மறக்கமாட்டோம்.

ஆயிரம்பேர் சித்தருடன் அனுதினமும் பாடி
ஆனந்தத் திருநடனம் ஆடுவோமே கூடி
தாயிஉமை மனோன்மணியாள் எனக்குச் சொன்னசித்தைத்
தானறிந்து நடந்து கொள்வோம் பெரியோரை அடுத்தே. 5

நிலையைக்கண்டு கொள்வதற்கு நினைந்துஉருகி வாடி
நிர்மலமாம் ஐயன்பதம் தினந்தினமுந் தேடி
கலைஅறிந்து வாசியையும் கட்டுடனே பிடித்தோம்
கனல் எழுப்பி மூலமதைச் சுகமுடனே படித்தோம். 6

ஊணுறக்கம் நீக்கியல்லோ யோகநிட்டை புரிந்தோம்
உற்றாரைப் பற்றறுத்து மலைக்குகையில் இருந்தோம்
காணுதற்கும் எட்டாத பரவெளியைக் கண்டோம்
கற்பமது சாப்பிட்டு உடல்வளர்த்துக் கொண்டோம். 7

தந்தைதாயார் கற்றமொடு தளர்ந்துஉற வாடோம்
தவநிலையைப் பெற்றுணராச் செய்கையைத் தேடோம்
விந்தையுடன் ஞானமதை மேன்பாடாய்த் தெரிந்தோம்
மேலான பரவெளியின் அருளதனை அறிந்தோம். 8

5. ஆயிரம் பேர்களான சித்தர்களைத் தினமும் பாடி ஆனந்த நடனம் ஆடுவோம்; யாவரும் சேர்ந்து பெரியோரைச் சேர்ந்து, தாயான உமையம்மையான மனோன்மணியாள் சொன்ன சித்தை நயமாக அறிந்து அப்படியே நடப்போம்.

6. ஐயன் நிலையை அறிந்து கொள்ளத் தினமும் நினைந்து உருகவேண்டும். நிர்மலமான குருவின் பாதத்தைத் தினமும் தேடவேண்டும். சந்திரகலை சூரியகலையறிந்து, பிராணாயாமம் செய்து, குண்டலினிக் கனலை எழுப்பி மூலாதாரத்தைச் சுகமாக உணர்வோம்.

7. உணவும் உறக்கமும் விட்டு யோக நிட்டையில் இருந்தோம்; உற்றாரை விட்டுப் பற்றுக்களை நீக்கி மலைக் குகைகளில் தவமிருந்தோம்; காணமுடியாத பரவெளியை யும் காண்போம்; கற்பமருந்து சாப்பிட்டு உடல் வளர்த்தோம்.

8. தாய் தந்தையரோடும் சுற்றத்தாரோடும் தளர்ச்சி யடைந்து உறவு கொள்ள மாட்டோம்; தவநிலைக்குப் புறம்பாகச் செயல்படோம்; ஞானத்தை மேம்பாடாய்த் தெரிந்தோம்; பரவெளியின் கருணையை அறிவோம்.

நாசிநுனி வழியதனில் நாட்டமதைத் தெரிந்தோம்
நல்லதொரு மூலவட்டம் சுழியை அறிந்தோம்
வாசியேற்ற வகையறிந்து ஆசைகளை அறுப்போம்
வையகத்தின் செய்கைதன்னை வழுவாமல் மறுப்போம். 9

சக்திசக்ர பீடமேறிச் சுத்தவெளியைக் கண்டோம்
சகலமும்பரவெளி என்று எண்ணி மனமதனில் கொண்டோம்
சித்திபெற்ற முத்தர்களை எத்தினமும் அறிவோம்
சீவகலை இன்னதென்று நாட்டமுடன் தெரிவோம். 10

தொண்ணுத்தாறு தத்துவத்து உரைத்தனகள் கொண்டோம்
துய்யபர வெளிதனிலே அய்யர்பதம் கண்டோம்
விண்ணுலகு இன்னதென்று அறிந்துகொண்டேன் யானே
மேலான பரவெளியின் ஒளியைக் கண்டுதானே. 11

நானென்ற ஆணவத்தை நயந்தறுத்து விடுத்தேன்
நன்மைபெற்றுக் குகைதனிலே வாழ்ந்திருக்க அடுத்தேன்
தானென்ற கருவமதைத் தணித்துவிட்டு வந்தோம்
தவமேதான் கதிஎன்று சரவழியில் உகந்தோம். 12

*9.* மூக்கு நுனி வழியாகப் புருவமத்தியை அடைந்தோம்; மூலாதாரத் தாமரையில் உள்ள சுழியை அறிந்தோம்; பிராணாயாமம் செய்யும் முறையறிந்து ஆசைகளை நீக்கிடுவோம்; உலகில் செய்யத் தக்கதைத் தவறாமல் செய்வோம்.

*10.* சக்தியின் சக்கரத்தை வழிபட்டுச் சுத்தவெளியைக் கண்டோம்; எல்லாம் பரவெளியில் அடக்கம் என்று எண்ணினோம்; சித்தி பெற்ற முக்தர்களைத் தினமும்

அறிவோம்; சீவகலை என்ன என்பதைக் கண்வழியே அறிவோம்.

*11.* தொண்ணூற்றாறு தத்துவங்களையும் அடக்கிக் கொண்டோம்; தூய்மையான பரவெளியில் தலைவரின் திருவடியைக் கண்டோம்; வானுலகம் எது என்று பர வெளியின் ஒளியால் அறிந்தோம்.

*12.* நான் என்னும் செருக்கை அறுத்தேன்; குகைக் குள்ளேயே நன்மை பெற்று வாழ்ந்தேன்; தான் என்னும் கர்வத்தையும் குறைத்து விட்டு, தவமே உரிய வழி என்று சஞ்சார வழியில் மகிழ்ந்தோம்.

## வகுளிநாதர் என்ற மௌனச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 18. ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர் பாடல்

இவரது இயற்பெயர் ஆதிநாதர். இவர் வேத உபநிஷத்துக் களின் கருத்தையே பாடியதால் வேதாந்தச் சித்தர் எனப் பட்டார். 32 பாடல்கள் இவருடையன.

## ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### கண்ணிகள்

ஆதிமத் யாந்தமதைக் கிளியே
அன்பாய் அறிவதற்குச்
சோதிச் சுடரொளியைக் கிளியே
தோத்திரம் செய்துகொள்ளே. 1

வாசாம கோசரத்தின் கிளியே
மார்க்கம் அறிந்துகொண்டு
நேசா அனுபவத்தில் கிளியே
நின்று தெளிவாயே. 2

அசல மூலமதிற் கிளியே
அந்தம் அறிவாயோ
விசனம் அற்றவிடம் கிளியே
மேவித் தெளிந்துகொள்ளே. 3

*1.* ஆதி, நடு, முடிவு ஆகியவற்றை அன்பாய் அறிவ தற்குச் சோதிச் சுடராய் (உள் ஒளி) இருப்பதைத் தோத்திரம் செய்து கொள், கிளியே!

2. கிளியே! பேசும் முயற்சிக்கு வாக்கு எழும் இடம் சார்ந்த வழி எல்லாம் (மூலாதாரம்) அறிந்து கொண்டு, நேசம் கொண்டு அனுபவிப்பாயாக.

3. கிளியே! மலை (தலை)யின் அடியாகிய மூலத்தில் உட்பகுதி (அந்தம்) அறிவாயோ? அதுவே துன்பம் இல்லாத இடம். அதை மேவித் தெளிவாயாக.

சுத்தபிர மத்தில்ஏகில் கிளியே
தோன்றிய சத்தி தன்னில்
வித்தாரம் உண்டான கிளியே
விபரம் அறிந்து கொள்ளே. 4

சத்தாதி வாக்காதி கிளியே
தனுகர ணங்கட்கு எல்லாம்
வித்தான மூலமதைக் கிளியே
மேவித் தெளிந்து கொள்ளே. 5

சத்தியில் உண்டான கிளியே
சதாசிவம் ஆன தென்று
நித்தியம் நீஅறிந்து கிளியே
நின்று தெளிவாயே. 6

அச்சிவ மானதிலே கிளியே
அண்டபிண் டங்களெல்லாம்
உச்சித மாய் உதித்தே கிளியே
உண்மை அறிந்துகொள்ளே. 7

4. கிளியே! சுத்த பிரம்மத்தில் ஏகினால், அதில் தோன்றிய சத்தியையும் அதில் உண்டான ஞானத்தையும் பற்றிய விவரத்தை அறிந்து கொள்.

5. கிளியே! சத்குணம், வாக்கு ஆகியவற்றுக்குத் தொடக்கமாகவும், உடல், கருவிகளுக்கு இருப்பிடமாகவும்

உள்ள மூலாதாரத்தில் உணர்வைச் செலுத்தித் தெளிந்து கொள்.

6. கிளியே! சத்தியில் மலர்ந்த சதாசிவத்தை நாள்தோறும் நீ அறிந்து தெளிவாயாக. (பராசத்தியே பிற கடவுள் தத்துவங்களுக்கும் மூலம் என்ற சாக்த கொள்கையைச் சொல்கிறார்)

7. கிளியே! எல்லா அண்டங்களும் அவற்றில் உண்டான பொருள்களும் சிவத்தில் தான் உதித்தன என்ற உண்மையை அறிந்து கொள்வாய்.

நாலு வகையோனி கிளியே
ஏழுவகைத் தோற்றத்
தாலும் மகரசரம் கிளியே
தத்துவம் உற்றதடி. 8

அகாரம்உகாரம் ரெண்டும் கிளியே
யகாரம் உருவாச்சு
சிகாரம் வந்தவிதம் கிளியே
தேறித் தெளிவாயே. 9

சத்துச்சித் தானந்தம் கிளியே
தத்துவஞ் சொல்லுகிறேன்
நித்தியா னந்தமதைக் கிளியே
வித்தாரம் செய்யுகிறேன் 10

சாமி அருள்வேணும் கிளியே
சாதனை நால்வேணும்
வாமி தயைவேணும் கிளியே
வத்தவனாக வேணும். 11

8. கிளியே! பிறப்பு வகையான நான்கும் (முட்டை, யோனி, விதை, வியர்வை), ஏழு வகையான (பிறந்து இறந்து மீண்டும் பிறக்கும் ஏழு வகையான) பிறவிகளும், நாக்கால் ஒலி எழுப்பும் தத்துவம் பெற்றனவாம்;

விளக்கம்: தாலு - நாக்கு, மகரசரம் - 'ம்' என்று குறைந்த ஒலியாவது எழுப்பும் தத்துவம்.

9. கிளியே! அகரம் உகரம் என்ற இரண்டுமே யகர மாகிய புருவமத்தியை உண்டாக்கின. சிகரம் - நடுமார்பு ஆகும். இது ஆகாசமாவதைத் தெளிந்து கொள்க.

விளக்கம்: ஓம் என்பது புருவ மத்தி வரை நீண்டதால் உண்டானது என்றார்.

10. சத் + சித் + ஆனந்தம் என்ற மூன்றுமே சதாசிவத் தத்துவமான, நாள்தோறுமான ஆனந்தத்தின் விவரம் சொல் கிறேன்.

11. இறையருள் வேண்டும். சாதிக்க வேண்டிய நான்கு இதழ்த் (மூலம்) தொடர்பு வேண்டும். சுவாமியாகிய பராசக்தியின் அருள் வேண்டும்.

விளக்கம்: வாமி - வாமம் ஆகிய இடப் பாகத்தில் இருப்பவள் ஆகிய பராசக்தி.

அஞ்சு பஞ்சகோசம் கிளியே
ஆராய்ந்து பார்க்கவேணும்
நெஞ்சந்தெளிய வேணும் கிளியே
நீயேநான் ஆகவேணும். 12

ஆசாபா சங்களையே கிளியே
லேசமும் எண்ணாதே
வாசனை மூன்றினாலே கிளியே
மோசமும் போகாதே. 13

மானாபி மானம் அற்று கிளியே
தானென்று அகமும்அற்று
நானப்பிர பஞ்சம்அற்று கிளியே
நாதமயத் தைப்பற்ற 14

பத்தரை மாற்றுத்தங்கம் கிளியே
சுத்த வெளியாகும்
எத்திசை பார்த்தாலும் கிளியே
தத்துவ மாயிருக்கும். 15

*12.* கிளியே! ஐந்துவிதக் கோசத்தை (அன்னமயம் முதலானவை) ஆராய்ந்து தான் பார்த்தறிய வேண்டும். நெஞ்சமாகிய நினைவு உள்ள இடத்தைத் தெளிந்து கொள்ள வேண்டும். நீயே நானாக வேண்டும்.

*13.* கிளியே! ஆசாபாசமான பற்றுகளை ஒரு சிறிதும் எண்ணாதே, மூன்று வித வாசனையில் மோசம் போகாதே. (மண், பெண், பொன் ஆசைகளால் வந்த வாசனையாம்)

*14.* கிளியே! மானமும் விருப்பமும் தான் என்னும் செருக்கும் இல்லாது, நானே பிரபஞ்சம் என்பதும் இன்றி நாதத்தைப் பற்றிக் கொள்க.

*15.* கிளியே! தூயதான பத்தரை மாற்றுத் தங்க நிறத்தில் சுத்த வெளி தோன்றும். எல்லாத் திசைகளிலும் தத்துவம் வெளிப்படும்.

மூலா தாரமுண்டு கிளியே
முக்கோண வட்டமுண்டு
வாலை கணேசனுண்டு கிளியே
வல்லபை சத்தியுண்டு 16

சுவாதிட் டானமுண்டு கிளியே
சுத்த பிரமாவுமுண்டு
உவாதினி வாதிக்கெல்லாம் கிளியே
உற்றவர் கண்டுகொள்ளே. 17

மேலே மணிப்பூரகம் கிளியே
விட்டுணுக்கு உற்றவிடம்

காலா தீதத்துக்கும் கிளியே
கருத்தர் அவர்தாமே. 18

பாரு மனாகிதத்தில் கிளியே
பார்வதி நாதர்அங்கே
சேரும்தலம் இதுவென்று கிளியே
தெரிசித்துக் கொள்வாயே. 19

*16.* கிளியே! மூலாதாரமும், அதன் நடுவே முக்கோண வட்டமும், வாலைப் பெண்ணும், கணபதியும் வல்லபை யான சத்தியும் உண்டு (இவை உடலடியில் உள்ளன)

*17.* கிளியே! சுவாதிட்டானமும், பிரம்மாவும், பிறைச் சந்திரனும் கண்டு கொள். (மூலாதாரத்துக்கு மேல் சிறுநீர்த் துளையில் இவை இருக்கும். அதைக் கருதிப் பார்க்கவும்)

*18.* கிளியே! இதற்கு மேல் உந்திச் சுழியில் (தொப்புள்) மணிப்பூரகம் இருக்கும். இது திருமால் இருக்குமிடம் எல்லாக் கலைகளும் மிகுந்திருக்கும் இடம். கருதுவதற் குரியவரும் அவரே.

*19.* கிளியே! பார்வதி கணவராகிய சிவம், மனம் தங்கு மிடமாகிய மார்பு நடுவில் (அநாகதம்) இருப்பார். இவர்கள் சேரும் இடங்கள் இவை என்று தெரிந்து கொள்க.

கண்டம் விசுத்தியல்லோ கிளியே
கஞ்சம் பதினாறு
அண்டபிண் டங்களெல்லாம் கிளியே
ஆஞ்ஞை மகேசனுக்கு 20

இரண்டு கண்நடுவே கிளியே
இருக்கும் மயேசுரனை
திரண்ட சிந்தையினால் கிளியே
தேறித் தெளிந்துகொள்ளே. 21

ஆயிரத்து எட்டிதழில் கிளியே
அமர்ந்த சதாசிவத்தை
நேயம தாகவேதான் கிளியே
நிதம்பணிந்து ஏற்றிக்கொள்ளே. 22

ஈதோர் குணமாச்சு கிளியே
இரண்டாம் குணந்தனையும்
மூதோர் மொழியெனவே கிளியே
முற்றிலும் எண்ணுவையே. 23

20. கிளியே! தொண்டைக் குழியில் இருப்பது விசுத்தி யாம். இது பதினாறு இதழ்த் தாமரை கொண்டது. அண்டங்கள் பிண்டங்களுக்கெல்லாம் ஆக்ஞை செய்பவன் (ஆணை இடுபவன்) மகேசனேயாவான். அவனுக்குரிய இடமது.

21. கிளியே! இருகண் நடுவான புருவ மத்தியில் மயேசுரன் இருப்பதைத் தெளிந்து கொள்.

22. கிளியே! தலைக்குள் ஆயிரத்து எட்டிதழ்த் தாமரையில் அமர்ந்த சதாசிவத்தை நேசமாய் நித்தமும் பணிந்து ஏற்பாயாக.

23. கிளியே! இதுவரை கூறியன ராஜஸ தாமச குணங் களுக்கும் உரியன என அறிக.

சாதனம் நாலுவகை கிளியே
சற்று நிதானமாய்
போதம் மிகுதியினால் கிளியே
புத்திஎன் றேஉணர்வாய். 24

சமாதி ஆறுகுணம் கிளியே
சாமா வகையம் அலவே
உமாம கேசனுக்கே கிளியே
உற்றதுஎன்றே தெளிவாய். 25

உற்ற சமந்தானும் கிளியே
ஒன்றவைக் கும்பின்னும்
மற்றுள தமகுணத்தைக் கிளியே
மாற்றல் அரிதுஅலவே. 26

விடல்சகித் தல்தனைக் கிளியே
மேன்மைய தாகக்கொண்டு
தொடர்ச மாதானம் கிளியே
தொந்தம் நமக்காமே. 27

சிரத்தை எப்பொருட்டும் கிளியே
தீவிரம் ஆக்குமதே
பரத்தைத் தானடையக் கிளியே
பற்றொன்றும் இல்லைகண்டாய். 28

24. கிளியே! இறைவனைக் காணச் சாதனம் நான்கு வகையாகும். அவற்றை நிதானித்துப் புத்தியில் ஏற்று உணர்க.

விளக்கம்: சரியை, கிரியை, யோகம், ஞானம் எனச் சாதனம் நான்கு ஆகும்.

25. கிளியே! சமாதி என்பது ஆறு வகையாகும். (பதஞ்சலி கூறுவனவாம்.) அவை எளிதில் உணர்வதற்கு அரியன. உமாமகேஸ்வரனுக்கு உரியன எனத் தெளிக.

(ஆறுவகைச் சமாதிகள் - தத்துவலய சமாதி, சவிகற்ப சமாதி, நிர்விகற்ப சமாதி, சஞ்சார சமாதி, ஆரூட சமாதி, மவுன சமாதி)

26. கிளியே! சமம் என்பது இறைவனுடன் ஒன்ற வைக்கும் தாமஸ குணத்தை மாற்றுவதுமாம்.

27. கிளியே! விடுதல், சகித்தல் என்ற நடவடிக்கைகளால் மேன்மை பெற்றுத் தொடர்ந்து சமமாக இருக்கும் தொடர்பும் அறிக.

28. கிளியே! எப்பொருள் இடத்திலும் சிரத்தை கொள் வதே தீவிரமாகும். பரம்பொருளைச் சென்று அடையப் பற்றுகள் இல்லாதிருக்க வேண்டும்.

பத்தியை விட்டுவிட்டுக் கிளியே
பாவனையைக் கடந்து
அத்துவி தானத்தைக் கிளியே
அனுபவித்து உய்வாயே. 29

பெண்ணாசை பொன்னாசை கிளியே
பூமியின் மீதாசை
மண்ணாசை எண்ணாதே கிளியே
வாசிஎன் னால்அறியே. 30

தேகம் தேகிரெண்டு கிளியே
தேகம்பொய் தேகிமெய்யே
மோகாந்தம் விட்டாக்கால் கிளியே
முத்தி யடைவாயே. 31

பாவ அபானம் அற்று கிளியே
பரத்தினுடன் பொருந்திச்
சுவானுபவந் தனிலே கிளியே
சொக்கிநீ வாழ்வாயே. 32

29. கிளியே! பத்தியை விடுத்துப் பாவனை செய்வதை யும் கடந்து, அத்துவிதமாய் (ஏகமாய்) இருப்பதை அனுபவிப்பாயாக. (கடவுளும் நாமும் இரண்டு இல்லாதபடி ஒன்றுதல் அத்துவிதமாகும்)

30. கிளியே! பொன், பெண், மண் ஆசைகளும், உலகாளும் ஆசையும் விட்டு விட்டுப் பிராணாயாமத்தால் என்னை அறிக.

31. கிளியே! உடல் என்பதும், உடலுக்குள் இருப்பது (உயிர், ஆத்மா) என்பதும் உண்டு. இவற்றில் உடல்

பொய் (அழிவது). ஆன்மா அழியாதது ஆகும். மோகத்தை முழுவதுமாக விட்டதும் முக்தியடையலாம்.

32. கிளியே! பாவித்தலும், அனுபவியாமையும் இல்லாமல் பரம்பொருளில் பொருந்திச் சுய அனுபவத்திலே ஒன்றி வாழ்வாயே.

விளக்கம்: அனுபவித்தலிலும் பாவித்தலிலும் அவன் என்றும், தான் என்றும் வேற்றுமை வருதலால் அதை நீக்குக என்றார்.

## ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 19. காரைச் சித்தர் பாடல்கள்

## கனக வைப்பு

மாளாத சக்தியடா மனித சக்தி
மலிவாகக் கிடைக்குதடா கணத்துக்கு உள்ளே
மீளாத மார்க்கமடா மின்னாத் தாளை
மேவியுனக்கு உட்காணும் வேதை மார்க்கம்
ஆளாக வென்றேனும் எப்போ தேனும்
அனைவர்க்கும் கிட்டுமடா ஞானப் பேறு
தூளாகக் காமத்தைத் துரத்தி விட்டே
துணையாகக் கம்பத்தே தூங்கு வாயே. 1

மனித சக்தி மாளாத பெரிய சக்தி. ஒரு கணம் உணர்வால் எளிதில் அதை அடையலாம். மின்னல் போலும் பராசக்தி உள்ளேயே காணும் மார்க்கம் மீளாதது ஆகும். ஆளாக வேண்டும் என்று எப்போதாவது நினைப்பவர்க்கு ஞானப் பேறு கிட்டும். காமத்தைத் தூளாகத் தூக்கி எறிந்து சுழு முனையாகிய தீப கம்பத்தை உணர்ந்து தியானம் செய்க.

தூங்குவாய்ச் சாமத்தே விழித்துக் கொள்ளு
தூங்காமல் தூங்கிவெறுந் தூக்கம் தள்ளு
நீங்காமல் நியமித்தே நிறைந்து நில்லு
நிலமான சாமத்தைச் சுத்தம் செய்தே
ஆங்காரச் சாதியெலாம் அகற்றிப் போடு
அன்பாக வாதித்தே விரட்டிப் போடு
பாங்காக ஆதித்தன் துணையாய் நிற்பான்
பண்பாகப் போதித்தேன் சாதிப்பாயே. 2

தூக்கம் கொண்டால் ஒரு சாமத்தில் எழக் கூடும். தூங்காமல் தூங்குதலாகிய வெறும் தூக்கத்தைத் தள்ளுக. வழிபாடு முறைகளில் சிறிதும் விலகாது நிற்பாயாக.

அகங்காரத்துடன் சேர்ந்த எல்லாவற்றையும் நீக்குக. அன்பாக வாதம் செய்து அப்புறப்படுத்துக. ஆதித்தன் (சூரியன்) துணையாக நிற்பான்.

விளக்கம்: தீவிரமாய் ஒன்றைச் செய்யும்போது வலது மூக்கில் (ஆதித்தன்) பிராணாயாமம் செய்வதைக் கூறினார்.

(ஆதித்தன் - சூரியன்; வலது மூக்கில் பிராணாயாமம் செய்வதை ஆதித்தன் துணையாக நிற்பான் என்றார்)

குப்பையிலே பூத்திருப்பாள் மின்மி னுக்கி
கோலத்தே பொன்மேனி கொண்டு நிற்பாள்
தர்ப்பையிலே சிவப்பான தழலைப் போல்வாள்
தனக்குள்ளே சர்ப்பந்தான் சரண்புக்கு ஆடும்
அர்ப்பையடா சகவாசம் அணைந்து தொட்டால்
அனைத்தையுமே யெரித்திடுவாள் சலித்துக் கொள்வாள்
கர்ப்பையிலே தான்பிரித்துக் கண்ணி வைத்தே
கணவாதம் செய்திட்டார் சித்தர் பல்லோர். 3

குப்பையில் உடலை மினுக்கச் செய்யும் குப்பை மேனியை உண்டவர்க்குப் பொன் மேனி தருவாள்; தர்ப்பையை வேள்வியில் எரிக்கும் போது சோதியாக இருப் பாள்; தனக்குள் பாம்பு சரண் புகுந்து ஆடும் (குண்டலினி சத்தியாம்). அவளுக்கு எல்லாம் அர்ப்பணம் செய். அவள் தொட்டால் எல்லாம் எரியும்; அவள் அனைத்தையும் அழிப்பாள்; அவளை மனத்தில் இருக்கச் செய்து கண நேரமும் பிரியாது வணங்கினார்கள் பல சித்தர்கள்.

(அர்ப்பை - அர்ப்பணம் செய்தல், அன்புடன் அளித்தல்)

சித்தர்மனம் மலர்ந்திட்டா லதுவே போதும்
வெத்துவெறும் விளையாட்டும் சித்தி யாகும்
துத்தியெனும் பணத்துத்தி யிலையின் சாற்றில்
துரிசு அறுத்துத் தவஞ்செய்வார் தவத்தின் போக்கில்

வித்திதெனும் விந்துவுடன் நாதங் கூட்டி
வேதமுழங் கிடஞான வீறு கொண்டே
துத்தமறத் தானொடுங்கத் தூய்மை பெற்ற
துப்புறவே சித்திக்குஆம் துறவு கோலே. 4

சித்தர் மனம் மகிழ்ந்தால் வெறும் விளையாட்டுக் கூட சித்தியாகிவிடும். துத்தி இலைச் சாற்றில் கிளிஞ்சலை (துத்தி)ப் புடமிட்டு அதன் குற்றம் நீக்கித் தவம் செய்வர் சித்தர். விதையானது (விந்து) தீபமும் நாதமும் காட்டி வேத வழியில் வீரம் கொண்டு சித்தர்கள் பல சித்தியும் பெறுவர்.

விளக்கம்: துத்தியைச் சித்தர்கள் பொன்னாக்குவர் என்பதாம். வித்து - பாதரசம். நாதம் - கந்தகம் என்றும் கொள்க. துரிசு - குற்றம்.

பயனில்லாச் சொல்லகற்றிப் பயனே கூறல்
பயனதையு மினிதான பழமாய்ச் செப்பல்
நயனில்லாக் கடுவழிக ளவைவிட்டு ஓடல்
நாட்டமெலாம் அருள்நாட்ட மாகக் கொள்ளல்
அயனில்லா தெவையுந்தா னாகக் காணல்
அத்துவிதத் தாலின்பச் சித்தம் பேணல்
இவையெல்லாம் அருங்குணமா மீசற்கு அன்பாம்
இடர்நீக்கிச் சுடர்காட்டும் நியமந் தானே. 5

பயனற்ற சொற்களை மாற்றிப் பயனையே கூறல், பயனையும் இனிதாய்ப் பழமாகச் செப்பல், நயமற்ற கடு வழிகளை விட்டு நீங்கல், பார்வையில் அருள் பார்வையே கொள்ளல், படைக்கப்படாத எதையும் தானாகக் காணல், பரம்பொருளும் ஆன்மாவும் பிரிக்க முடியாத ஒன்றே எனக் கொண்டு சித்தத்தைப் பேணல் ஆகிய இவை எல்லாம் இறைவனுக்குப் பிடித்த அரிய குணங்களாகும். இவை வந்தால் உள் ஒளியாகிய சுடர் காட்டும் நியமம் உண்டாகும். துன்பம் விலகும்.

சித்தரெலாம் உண்மைதனை மறைத்தா ரென்றே
செப்பிமனப் பால்குடிக்க வேண்டாம் சொன்னேன்
சித்தர்மொழி நூலதனைத் தொட்டபோதே
சித்தரெலாம் ஒற்றரெனச் சேர்ந்து நிற்பார்
சித்தமுறுங் குணநிறைவில் நாட்டம் கொள்வார்
சிறிது அழுக்கைக் கண்டாலும் விலகிப் போவார்
சித்தநிறை வுள்ளவர்க்கே சித்தி தோன்றும்
சித்தமிலார் வித்தையெலாம் சிரிப்பே கண்டீர்! 6

சித்தர்கள் எல்லாரும் உண்மைகளை மறைத்தார் என்று கற்பித்துக் கூற வேண்டாம். சித்தர்களின் நூல்களைக் கற்கக் கையால் எடுத்ததுமே எல்லாச் சித்தர்களும் ஒற்றர் போல் உம்மைச் சுற்றி நிற்பர். சித்தம் தொடர்பு உடைய குணம் நிறைவதில் நாட்டம் கொள்வர். சிறிதேனும் அழுக்கைக் கண்டாலும் விலகிப் போவர். சித்தம் நிறைவானவர்க்கே சித்தி தோன்றும். சித்தம் ஒன்றாதவரின் மந்திரம் சிரிப்புக்கே உரியதாம்.

(சித்தம் - மனம் அல்லது மனத்தில் தோன்றும் தூய அறிவு)

தேவாரம் வாசகந்தான் திகழக் கூட்டித்
திருவாயின் மொழியெல்லாம் உருவாய்ச் சேர்த்து
போவாரைப் போகாரைப் புலம்ப வைத்து
போக்கற்றார் தமக்குமொரு போக்குக் காட்டி
கோவாரம் பூவாரம் கொழிக்க விட்டு
கோலமுறச் செய்தாலும் குவல யத்தின்
பூபாரம் குறைத்திடுமோ குறைக்கொண் ணாது
புகன்றிட்டேன் அவள்போக்கைப் புகன்றிட் டேனே. 7

தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி எல்லாம் உருச் செய்து சேர்த்து வழிபடுபவரை அவ்வழியில் மட்டும் போகச் செய்யாது வேறு போக்குக் காட்டிடுவர். பலவித வழிபாடுகள் செய்தாலும் உலகில் பூபாரம் குறைந்திடாது.

விளக்கம்: கோவாரம் - கோ + ஆரம் - பசுவினிட மிருந்து கிடைக்கும் பால், தயிர், நெய், சாணம், கோமியம் (சிறுநீர்) ஆகியவை கொண்டு இறைவனைத் திருமுழுக்கு ஆட்டுதல். பூவாரம் - பூ + ஆரம் - மலர்களால் ஆகிய மாலைகளைச் சூட்டுதல்.

ஊறுசுவை யொளிநாற்றம் ஒலியே யென்ன
உலகத்தில் திரிந்து கடலிற் புக்கு
வீதிதிரை நுரைகுமிழி விளையாட்டு ஆர்ந்து
வினைவிதிகள் வினைவெறிகள் வேகம் தேய்ந்து
ஆறுவரக் குருவருளை யணைந்து பொங்கி
அண்டாண்ட சாரத்தை யறிந்து கொண்டே
சாறுகொள்ளச் சிந்தனையுங் குவிந்து நிற்கும்
சகஜநிலை யேயோக சமாதி கண்டீர். 8

சுவை, ஒளி, ஊறு, நாற்றம், ஒலி என்ற ஐந்து புலன் களும் உடலில் பதிந்து சம்சாரக் கடலில் அமிழ்வதால் இவை பலவிதப் பாதிப்படைந்தன. ஆறு ஆதாரம் அறியக் குருவருளை எண்ணி, அண்டங்களின் சாரத்தையும் அறிந்து கொண்டு, சகஜமான நிலையில் யோக சமாதி காண்பீராக.

(ஊறு - தொடு உணர்வு. நாற்றம் - மணம்; வாசனை)

சிந்தித்தால் அதுபாவம் சிணுங்கி னாலோ
சேருவது காமமடா தங்கித் தங்கிச்
சந்தித்தால் சங்கமடா சங்க மத்தில்
சாருமடா சங்கடங்கள் சங்கி பங்கி
வந்தித்தால் வாதமடா வீண்வி வாதம்
வாகான மோகமடா மங்கிப் பொங்கி
நிந்தித்தால் நாசமடா நினைவுப் புந்தி
நிலையமடா மாயைதான் மயக்குந்தானே. 9

பேறு பல சிந்தித்தால் அது பாவமாம். தயங்கினால் காமமே வந்து சேரும். சங்கடங்கள் பலவும் வந்து சேரும். வீண் விவாதம் கூடும். மோகம் உயரும். எனவே நல் வழியை நிந்திப்பது நாசமே தரும். மாயையால் மயக்கமே உண்டாகும்.

(பேறு - நல்வாய்ப்பு; பாக்கியம்)

வருத்தித்தான் சொல்வதிலென் வலுவுண் டாமோ
வருத்துவதாற் பலங்குறையும் மௌனம் போகும்
அருந்தித்தான் பருகிடுவான் ருசியைக் காணான்
அமுதப்பால் குடித்தவனே அமர னாவான்
துருந்தித்தான் பசியறிவான் வாணி யாளை
சோபையுறுஞ் சேணியனை விலக்கி யப்பால்
பொருந்தித்தான் திருந்தினவன் பொருந்தி நிற்கும்
பொக்கமதே யாசனமாம் யோகங் கண்டீர். 10

திரும்பத் திரும்பச் சொல்வதால் வலிவு இல்லை. இதனால் மவுனம் குறையும். அருந்துவோர் பலரும் அதன் சுவையைக் காணார். அமுதாகிய பால் குடித்தவனே அமரனாவான். விடுபட்டதும் பசியறிவான். கலை மகளின் ஒளி பெற்றவனை விலக்கி வந்து ஆசனமாம் மார்க்கத்தில் யோகம் கொண்டீர் ஆகுக.

(பொக்கம் - நல்ல நெறி; மார்க்கம். வாணி - கலைமகள். சேணியன் - நெசவாளன்; இது ஒரு குலமுமாம்)

பாருலகில் ஆன்மாவின் ஞானம் தேடப்
பலநூல்கள் கற்றறிந்தும் தெளிவில் லாமல்
நேரியலும் நதியதன் நீர்குளியார் தேத்து
நெட்டிநீர் கசிந்திடுவார் நெறியைக் காணார்

சீரியலும் பற்றற்ற நீரைக் காணார்
தேக்கிவந்து சிதறியநீர்த் தேக்கம் உண்பார்
ஆரறிவார் அடடாடா அடடா டாடா
அடயோகத் தவநிலை அதனைத் தானே. 11

ஆன்ம ஞானம் பெறப் பல நூல் கற்றிருந்தும் தெளிவில்லை. நேராகச் செல்லும் நதியின் நீர் நெறியைக் காட்டாது. ஆனால் அதன் மேல் அட யோகம் புரிபவர் சித்தி பெறுவார். அதுவும் தவநிலையேயாம்.

(அடயோகம் - ஹடயோகம். நீரில் மிதத்தல், தீயில் நடத்தல், அந்தரத்தில் வீழாது இருத்தல் முதலிய செயற்கரிய செய்கைகள். இவை சித்திகள் எனவும் பெயர் பெறும்)

இல்லறமே நல்லறமாம் என்று சொன்னால்
இன்பமெனப் பள்ளியறைக்கு உள்ளா காதே
தொல்லறமே துறவறமே தனது வண்ணம்
துறந்திட்டார் பற்றறவே துறந்தி டாமல்
சொல்லறமே யுலகமெல்லாம் கண்ணின் ரூபம்
சொர்ணமய மாம்சொர்க்கம் சுகவை போகம்
கல்லறமே கனகமணிப் பூஷ ணங்கள்
கமலத்தைக் காத்திடுவான் பத்ம யோகி. 12

இல்லறமே நல்லறமாம் என்று சொன்னால், பள்ளியறைக்குள் இருத்தலே இன்பம் என்று இருந்து, பழைய அறமாகிய துறவறத்தில் பற்று இல்லாதவர் ஆனார். பற்று முழுதும் விடாமையால் உலகமெல்லாம் சொல் ஒளியில் அறம் கூறினார். சொர்க்கமே சுகபோகம். நவரத்தினக் கற்களாலும், தங்கத்தினாலும் செய்த நகைகள் பல பூண்டாலும் பயனின்று. எனவே ஆதாரக் கமலங்களைப் பத்ம யோகி எப்போதும் காத்திடுவான்.

(ஆதாரக் கமலம் - மூலாதாரம் முதல் பிரம்மரந்திரம் வரை யாவும் தாமரைகளாக உருவகம் செய்யப்பட்டுள்ளன. 4, 6, 10, 12, 16, 2, 1008

என ஏழு வகை இதழ்கள் ஒவ்வொரு தாமரைக்கும் உண்டு. பத்ம யோகி - ஆதாரத் தாமரைகளில் யோகம் கொண்டு உணர்வைத் திரளச் செய்தல்)

பெற்றவர்கள் தங்கடனைத் தீர்க்க வேண்டும்
உற்றவர்கள் உறுகதியைப் பார்க்க வேண்டும்
பற்றுவரவு அத்தனையு முடிக்க வேண்டும்
பற்றில்லாப் பாமரரைக் காக்க வேண்டும்
செற்றபுலன் பொறியடக்கிச் சேர வேண்டும்
சித்தமுறச் சிவபூஜை செய்யத் தானே
கற்றவர்க்கே பலயோகம் கனியும் பாரே
கல்லாதவர் யோகமெல்லாம் பொல்லா யோகம். 13

பெற்றோர் தம் கடமைகளைச் செய்து முடிக்க வேண்டும். உறவாய் வந்தவர்கள் செல்ல வேண்டிய கதியைக் காட்ட வேண்டும். முன்வினை பின்வினை ஆகிய கணக்கை முடிக்க வேண்டும். பற்றில்லாதவரைக் காக்க வேண்டும். புலன்களை அடக்கிச் சித்தத்தால் சிவபூசை செய்ய வேண்டும். இக்கல்வி கற்றவரே யோகியாவார் பிறரில்லையாம்.

யுகமாறிப் போச்சுதடா கலியு கத்தில்
யோகியவன் நிலைமாறிப் புரண்டு போவான்
சகமாறிப் போச்சுதடா சகத்தி லுள்ளோர்
தமைமறந்தார் பொருள்நினைத்தே தவிக்க லுற்றார்
அகமாறிப் போச்சுதடா காமம் கோபம்
அறுவகையாம் பேய்க்குணங்கள் அதிக மாச்சே
புகழ்மாறிப் போச்சுதடா மனிதற்கு உள்ளே
பூரணர்கள் மறைந்துள்ளா ரவரைக் காணே. 14

கலியுகத்தில் யோக நிலைகள் மாறின. எல்லாரும் பொருளாசையால் மாறிப் போயினர். காமம், கோபம் முதலிய தீய குணங்கள் ஆறும் அதிகமாயின. மனிதனுக்

குள்ள பூரணமான கடவுள் சக்திகள் மறைந்துள்ளன. அவரைக் கண்டு கொள்க.

(அறுவகைப் பேய்க் குணங்கள் - காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மார்ச்சரியம் என்பன)

காலநெறி யாதுரைப்பேன் கேளாய் கேளாய்
காணவரு மாயிரமாம் வருடத் துள்ளே
பாலமடா வானத்துக கேற்ப பாதை
பகனவெடி சுகனவெடி பண்ணு வார்கள்
சீலமுறும் வர்ணதர்மம் சிதைந்து போகும்
சீச்சீச்சீ வரன்முறைகள் மாறிப் போகும்
கோலமுறுங் குவலயமே சட்ட திட்டம்
கூறுமடா கொதிக்குமடா கோபம் தாபம். 15

கால நெறியைச் சொல்லக் கேள். ஆயிரமாம் ஆண்டில் வெடிகளால் வானத்தைப் பிளப்பர். வர்ணாசிரம தருமம் சிதையும். வரன்முறைகள் மாறும். சட்ட திட்டம் மாறி கோபதாபம் மிகும்.

(வர்ணாசிரம தர்மம் - பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் (அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்) என்னும் நான்கு வகையான பிரிவினரின் ஒழுக்க நெறிகள்)

தீராத புயல்களெல்லாம் தினமுண் டாகும்
தீக்கங்கு எரிமலைகள் சிரிப்புக் கூடும்
தேராத நோய்களெலாம் தினமுண் டாகும்
திசைகலங்கும் பூகம்பத் திறமே சாடும்
நேரான நெறியெல்லாம் நடுங்கி யோடும்
நெறியில்லா நெறியெல்லாம் நிறைந்து ஊடாடும்
போராகக் குருதிகொப் பளித்துப் பொங்கும்
புகையாகப் புவனவளம் புதைந்து போகும். 16

தீர்க்க முடியாத புயல்கள் தினமும் உண்டாகும். திசைகள் கலங்கிப் பூகம்பம் உண்டாகும். கொடிய நோய்கள் நாள்தோறும் பரவும். நேர் வழிகள் நடுங்கிச் சிதையும். வழியற்ற வழியெல்லாம் நிறைந்து ஊடாடும். போர்களால் இரத்தம் சிந்திப் பெருகும். புகை போலப் பூமியின் வளம் புதைந்து விடும்.

தெய்வமெலாம் விண்ணாடிப் போகும் போகும்
தீமையெலாம் மண்ணகத்தின் தெருக்கூத் தாகும்
உய்யுமுண்மை யுளத்துண்மை யோடிப் போகும்
உலகவுண்மை விஞ்ஞானம் கூடி வேகும்
ஐயமில்லை யெனஅகங்கா ரந்தான் துள்ளும்
ஐயையோ அகிலமெலாம் கள்ளம் கள்ளம்
துய்யநெறி காட்டிநின்றார் சித்தர் சித்தர்
தூலநெறி காட்டுகின்றார் எத்தர் எத்தர். 17

தெய்வங்கள் விண்ணை நாடித் திரும்பும். தீமைகள் தெருக் கூத்தாக நடக்கும். உண்மை உள்ளத்தில் உள்ளவை யாவும் ஓடிப் போகும். விஞ்ஞானம் மிகும். அகங்காரம் துள்ளும். உலகமெலாம் கள்ளமே ஓங்கும். எத்திப் பிழைப்போர் வேறு வழி காட்டுவர். சித்தர் நல்ல நெறி காட்டுகின்றனர்.

விஞ்ஞான விதியெல்லாம் வேகம் வேகம்
வேகமினல் தாமசத்தின் வித்தை வித்தை
அஞ்ஞான விதியெல்லாம் போகம் போகம்
அடடாடா கயிறு அறுந்த பொம்ம லாட்டம்
செய்ஞ்ஞானக் கதியெல்லா மரண வத்தின்
செயலன்றி வேறில்லை சென்மம் சென்மம்
மெய்யான விதியெல்லாம் யோகம் யோகம்
மின்னான சக்தியுடன் சாகம் சோகம். 18

விஞ்ஞான விதிகள் வேகமாக வளரும். தாமச குணத்தின் திறம் எங்கும் விளையும். போகங்களில் அஞ்ஞானமே விதியாகும். இது ஆட்டும் கயிறு அறுந்த பொம்மலாட்டம் போன்று கடவுள் அருளற்று யாவும் நிகழும். நடப்பன எல்லாம் மரணம் தரும் பொருளின் (வத்தின் - வஸ்தின்) செயலேயாம். பல பிறவிக்குக் காரணமாகும். மெய்யான விதியாவது யோகமே ஆகும். சத்தியுடன் செறிந்து சோகம் நீக்குக.

வித்தென்பான் முளையென்பான் மின்வீச்சு என்பான்
வெப்பென்பான் காந்தத்தின் கப்பே யென்பான்
வித்தையடா விண்ணெல்லாம் சுழலும் மார்க்கம்
விந்தையடா ஆகர்ஷண வியப்பே யென்பான்
வெத்தறிவாம் கனியறியான் மேல்தோல் உண்பான்
விஞ்ஞானி யவனறிவைப் பழிக்க வில்லை
சித்தறிவான் சத்தறிவான் சித்தன் சித்தன்
சித்தத் திலேசிருட்டிச் சித்தன் காண்பான். 19

வித்து, முளை, மின்னல் வீச்சு, வெப்பம், காந்தத்தின் சுழற்சி எனப் பல வித்தைகள் சொல்வர். இதனால் விண்ணே சுழல்வதாகும். இது ஆகர்ஷணத்தின் வியப்பு என்பர். பழத்தின் உட்சுவை அறியாது தோல் உண்பதான விஞ்ஞான மார்க்கத்தின் விதியறிவைப் பழிக்கவில்லை. சித்தத்தில் எல்லாம் உண்டாக்கி அழியாத நிலையைச் சித்தன் காட்டுவான்.

அடடாடா விஞ்ஞானி அறையக் கேளாய்
யாவைக்கும் காரணத்தை அறிவா யோநீ
அடடாடா அகிலாண்டக் கவர்ச்சி யேனோ?
அணுவுக்குள் மின்காந்தம் அமைந்த தேனோ?

கெடடாடா நேர்நிரையான் வின்க ளேனோ?
குவிந்திணைந்து பிரிந்து அயனம் ஏனோ?
விடடா யிவையெல்லாம் என்னே யென்னே!
விளக்கி டுவாய்க் களக்கமறச் சொன்னேன். 20

விஞ்ஞானி கூறுவதைக் கேள். யாவும் காரணம் தெரியுமோ என்பான். அகில அண்டங்களும் சென்று மற்றதைக் கவர்வதே என்பான். அணுவிற்குள் மின்காந்த சக்தி உள்ளது என்பான். நேர் நிரை என்று எதிர் எதிரான சக்தி என்பான். பிரிந்தும் சேர்ந்தும் அயன வீதி செல்லும் என்பான். இவையெல்லாம் விளக்கிடுக. களக்கமறச் சொன்னேன்.

(அயன வீதி - சூரியன் குளிர்காலத் தொடக்கத்தின் தென் திசைக்கு வருவது தட்சிணாயனம் என்றும், கோடை காலத் தொடக்கத்தில் வட திசைக்குப் போவது உத்தராயணம் என்றும் பேசப்படும். இவை அயன வீதிகள் என்பர். யோகத்திலும் சூரியன் போல் தலைப் பக்கம் உத்தராயண மாகவும், மூலாதாரப் பக்கம் தட்சிணாயனமாகவும் கூறுவர்)

வெத்துலக விதியெல்லாம் வெப்பம் தட்பம்
விஞ்ஞான விதியெல்லாம் சேர்ப்பும் கூர்ப்பும்
செத்துலக விதியெல்லாம் யாதம் கூதம்
சீவனுடல் விதியெல்லாம் காமம் கோபம்
சத்துலக விதியெல்லாம் சகசம் சாந்தம்
தான்தானாத் தன்மயமாத் தழைவே தாந்தம்
சித்துலக விதிசத்தி னோடு சித்தாய்ச்
சேரனந்தத்து ஆனந்தச் சீராம் வேராம். 21

வெறும் உலக விதி எல்லாம் வெப்பத்தாலும் குளிராலும் வரும். விஞ்ஞானத்தின் விதி சேர்வதாலும் சேர்ந்து அதிகமாகும், கூர்ப்பாலும் ஆகும். செத்தபின் உள்ள விதியெல்லாம் யாதம் கூதம், சீவனுடைய உடல்

விதி எல்லாம் காமம் கோபம், நிலைத்த உலக விதி எல்லாம் சகசமும் சாந்தமும், தான் தானாகும் தன் மயத்துக்குரிய விதி வேதாந்தம் (யோகம்). சித்துலக விதி சத்தியும் சித்துமாம். ஒப்பற்ற அளவிலா ஆனந்தங்கள் எல்லாம் சீரும் வேரும் ஆகும்.

(அனந்த ஆனந்தம் - அளவற்ற ஆனந்தம்; மகிழ்ச்சி. யாதம் கூதம் - யாதனா சரீரம் என்பர். யமலோகத்தில் துன்பத்தை அனுபவிக்கும் உடல்)

வேரறியா விளைவறியும் விஞ்ஞா னந்தான்
வேரறிந்தே விளையாடும் மெய்ஞ்ஞா னந்தான்
சார்பறியுஞ் செயலறியும் விஞ்ஞா னந்தான்
சார்ப்புதஞ் சாரமதே மெய்ஞ்ஞா னந்தான்
ஈரறியும் ஈர்மையெலாம் விஞ்ஞா னந்தான்
இருமையெலாம் ஒருமையுறல் மெய்ஞ்ஞா னந்தான்
பாரறியும் பேதநெறி விஞ்ஞா னந்தான்
பரமறியும் போதநெறி மெய்ஞ்ஞா னந்தான். 22

வேர் தெரியாமல் விளைவையறிவது விஞ்ஞானமாம். வேரை அறிந்து விளையாடுவது மெய்ஞ்ஞானமாகும். சார்பும் அதன் செயலும் அறிவது விஞ்ஞானமாம். சார்பின் சாரமே மெய்ஞ் ஞானமாகும். பேதம் அறிதல் விஞ்ஞானம் ஆகும். இரண்டையும் ஏகமாய்க் காண்பது மெய்ஞ் ஞான மாகும். பேத நெறி விஞ்ஞானம் அறியும் ஞானமாகிய போத நெறி மெய்ஞ்ஞானம் அறியும்.

(பேதம் - வேறுபாடு. போதம் நெறி - மெய்ஞ்ஞானம் ஆகிய நெறி)

காமத்தை விட்டிடடா கலகத்தை வெட்டிடடா
கருநொச்சிக் கவசத்தில் காமினியைக் கட்டிடடா
ஊமைக்கும் அத்தையடா உலகோர்க்கு நத்தையடா
உரையெல்லாம் மித்தையடா உனக்கவளே
வித்தையடா

சாமத்தைக் கண்டிடடா தாமத்தை வென்றிடடா
சகலத்தை யுந்தழுவும் சத்தியத்தில் நின்றிடடா
வாமத்தி யருளாலே வாதத்தி லேவெற்றி
மண்ணெல்லாம் பொன்னாகும் மார்க்கத்தைக்
கண்டிடடா. 23

காமத்தை விடுக. கலகத்தை வெட்டி நிறுத்துக. கருநொச்சிக் கவசம் செய்து காமம் முழுவதைக் கட்டிடு. ஊமைக்கும் உறவாகும், உலகினர்க்கு விருப்பம் கொண்டவராம். சாமத்தை (செயலின் மற்றொரு பக்கத்தை)க் கண்டிடுக. தர்மத்தைச் சிறப்பாக்குக. எல்லாவற்றையும் ஈர்க்கும் சத்தியத்தில் நிலையாக நிற்க. வாமத்தி (பராசக்தி) அருளால் வாதத்தில் வெற்றி பெற்று மண்ணையும் பொன்னாக்கும் மார்க்கத்தைக் காண்பாயாக.

மூலத்தின் கனலதனை மூட்டி மூட்டி
மூதண்ட முப்பூவின் பாத்தி ரத்தில்
கீலத்தின் கீழ்நெல்லிச் சாற்றைக் காய்ச்சிக்
கிறிகொண்ட சூதத்தில் நாதம் வாங்கிச்
சாலத்தான் நீர்மேலே நெருப்பைப் போட்டே
சாரத்தான் மலைதாங்கிக் குள்ளே யோட்டி
ஆலத்தா னமுதைத்தான் விழுதை நாட்டி
ஆறத்தா னமரத்தா னனைத்து மாமே. 24

மூலத்தில் உள்ள குண்டலினி நெருப்பை மூச்சுக் காற்றால் மூட்டி, மூதண்டத்தில் (தலையில்) உள்ள முப்பூ (சூரிய சந்திர விண்மீன்) ஆகும் நாடியில் கலந்து கீழா நெல்லி சாற்றைக் காய்ச்சி, பாதரசத்தில் (கந்தகத்தை) கலக்கி, தந்திரமாக நீரில் நெருப்பைப் போட்டு, தலையான மலையைத் தாங்கும் உடலுக்குள் உள்ள அமுதைத் திரட்டி ஆறுவித ஆதாரத்தாலும் எல்லாம் செய்க.

(மூதண்டம் - மிகப் பழமையான பேருலகம் (தலை) சூதம் - பாதரசம். நாதம் - கந்தகம்)

வெப்பெல்லாம் தீர்ந்துவிடும் வித்தை கண்டாய்
வினையெல்லாம் போக்கிவிடும் விறலே கண்டாய்
அப்பப்பா நவகோடி லிங்கம் தோன்றும்
அவற்றின்மேல் ஆடுகின்றாள் அன்னை யன்னை
துப்பெல்லாம் துரிசெல்லாம் சுத்தி சுத்தி
சொக்குமடா கைலாசச் சொக்க லிங்கம்
கப்பெல்லாம் நீங்குமடா காம தேனு
கறக்குமடா காயத்ரிக் கனிவாம் க்ஷீரம். 25

வெப்பு நோய் நீக்கும் மந்திரம் கண்டாய். வினைகளைப் போக்கும் ஆற்றல் கண்டாய். அப்பப்பா ஒன்பது கோடி லிங்கமும் தோன்றும். அவைகளின் மேல் பராசத்தி ஆடுகின்றாள். மாசுகள் யாவும் விலகிச் சுத்தமாயின், கைலாசத்தில் உள்ள சிவன் மயங்கச் செய்வான். கற்பங்கள் பல கழியும். காமதேனுவும் கறக்கும். காயத்திரியின் கனிவான அமுதம் கிட்டும்.

திருவான சேறையடா பஞ்ச சாரம்
திகழ்தெய் வமுஞ்சாரம் தேவி சாரம்
உருவான க்ஷேத்திரமும் சாரம் சாரம்
உற்றதொரு புஷ்கரணி அதுவும் சாரம்
கருவான மானமதுவும் சாரம் சாரம்
கண்ணான சாரமதைக் கண்டேன் கண்டேன்
குருவான பலசாரக் கோப்பும் கண்டேன்
கோக்கனக மாம்சாரக் கொதிப்புங் கண்டேன். 26

திருவான சேர்ப்பினால் பஞ்ச கோசங்களின் சாரம் உண்டாகும். தெய்வத்தின் சாரமும் தேவியின் சாரமும் கிடைக்கும். உண்டான உடம்பும் (சேத்திரம்) அவற்றின்

சாரமே. இவ்வுடம்பில் உள்ள தீர்த்தங்களும் அவற்றின் சாரமே. கருவாகிய கனவும் சாரமாகும். அதைக் கருத்தால் கண்டேன். குருவுக்குப் பல சார்புகள் கோத்திருப்பதையும் கண்டேன். தங்கச் சிறப்பின் கொதிப்பும் கண்டேன்.

சாரைக்கோட் டைக்குள்ளே சாரம் சாரம்
சார்ந்தநவி சாரக்கற் பூரம் பூரம்
கூரைக்கோட் டைக்குள்ளே கோரம் கோரம்
கொள்ளாமற் சிவயோனிக்கு உள்ளாம் வீரம்
வீரைக்கோட் டைக்குள்ளே விந்துப் பூவை
வேதாந்த முப்பூவாய் விண்ணாம் தீரம்
காரைக்கோட் டைக்குள்ளே வந்த சித்தன்
கரையாட யண்டாண்டம் பூண்ட பத்தன். 27

கோட்டை போலும் இவ்வுடலின் சாரமும், இது பற்றிய விசாரமும் (ஆய்வும்), கற்பூரம் போல் உள்ளொளி தருவ தாம். கூரை முடிந்த (தலை மயிர்) கோட்டைக்குள் பலவித கோரங்கள் உண்டு. அவற்றை ஏற்காமல் சிவ யோனியால் வீரம் உள்ளதாகும். விந்துவை வேதாந்த முப்பூவாய் விண்ணில் காண்க. காரைக் கோட்டை எனும் பகுதியில் வந்த சித்தன் கரை கடந்த அண்டங்கள் பல கண்ட பக்த னாவான். (இவர் ஊர் காரைக் கோட்டையாகலாம்)

பத்தனடா சித்தனடா பரம யோகி
பார்பிழைக்க வேயிந்நூல் பகருகிறேன்
பித்தனடா பித்தியவள் சித்தத்தாலே
பேயன்யான் பேத்தலிவைப் பேணிப் பார்ப்பீர்
வித்தனடா வேதனடா வேதாந்தத்தின்
வித்தையுறும் வேதையெலாம் விரிவாச் சொன்னேன்
இத்ததையில் இந்நூலைப் போலே யில்லை
இதுகண்டார் வாதமுடன் வேதை கண்டார். 28

பரம யோகியே பக்தனும் சித்தனுமாவான். இவ்வுலகம் பிழைக்கவே இந்த நூல் சொல்கிறேன். பித்தனாகிய சிவனும் பித்தியாகிய உமையும் சேர்ந்து சித்தத்தைக் கவர்வர். வித்தை எல்லாம் வேதாந்தக் கருத்தாவதை விரிவாகச் சொன்னேன்.

இதுபோல் யாரும் சொன்னதில்லை. இதைப் படித்தவர் வேதையும் வாதமும் அறிவர் என்க.

(வேதை - வேதாந்தக் கருத்துகள். வாதம் - சொற்போர் புரிதல்)

## காரைச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 20. சதோக நாதர் என்ற யோகச் சித்தர் பாடல்

இவர் நவ நாதர்களில் இரண்டாம் சித்தர். 42 பாடல்கள் இவர் பாடியவை.

## சதோக நாதர் என்ற யோகச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### கண்ணிகள்

அக்கரங்கள் தோன்ற அருள்கொடுக்கும் பூரணிஎன்
பக்கம் இருந்து பல்கலையும் சொல்வாளே. 1

வாலை அபிராமி மாரிதிரி சூலிஅருள்
பாலை எனக்கருளும் பார்வதியின் தாள்போற்றி. 2

அம்பிகைமால் சோதரி என்னாத்தாள் திருப்பாதம்
கும்பிட்டு ஞானக் குயிற்கண்ணி கூறுவனே. 3

ஓங்கார வட்டமதின் உட்பொருள்கள் ஓர்ந்தறப்பின்
நீங்காத ஆசை நிலைக்குமோ மாங்குயிலே. 4

இயம்பும் இடைகலைக்கும் இன்பதாம் பிங்கலைக்கும்
சுயமாம் சுழிமுனையுந் தோற்றுமடி மாங்குயிலே. 5

ஆன்மா பரத்தோடு அமருந் திருக்கூத்தை
நான்வாயி னாலே நவில்வனோ மாங்குயிலே. 6

*1.* எனக்குள் எழுத்துக்கள் தோன்ற அருள் தரும் பூரணி என் பக்கம் இருந்து பல கலையும் சொல்வாள். பூரணி - எங்கும் நிறைந்துள்ள இறைவி.

2. வாலை, அபிராமி, மாரி, திரிசூலி, அருள் புரியும் வாலை, எனக்கருளும் பார்வதியின் திருவடிகள் போற்றி.

3. அம்பிகை, திருமாலின் சகோதரி, என் தாய் ஆகிய பராசக்தியின் திருப்பாதம் கும்பிட்ட ஞானத்தைக் குயில் கண்ணிகளாகக் கூறுவேன்.

4. மாங்குயிலே! ஓங்கார வட்டத்தின் உட்பொருளை (ஒளி நிறத்தை) ஆராய்ந்த பின், உலகின் மேல் இருந்த நீங்காத ஆசை நிலைக்குமோ? (குயிலை அழைத்துக் கூறுவதால் இப்பாடல்கள் குயில் கண்ணியாம்)

5. இடைகலை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளும் மனத்தில் தோன்றும் உணர்வால் அகப்படும் என உணர்க.

6. குயிலே! ஆத்மா பரம்பொருளுடன் கூடி நடனம் ஆடுவதை என் வாயால் கூற முடியுமோ?

அஞ்செழுத்தைக் கண்டுஅதன் உண்மையும் தெரிந்து
வஞ்சகங்கள் அற்று மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே. 7

சூரியனும் சந்திரனும் தோன்றும் இடைநின்றே
பூரித்து அனந்த போகமுற்றேன் மாங்குயிலே. 8

ஊமையெழுத் தாலேதான் ஓங்கார மாகினதைச்
சீமையிலுள் ளோர்கள் தெரிவரோ மாங்குயிலே. 9

முப்பாழும் தாண்டி முடிவின் இடந்தாண்டி
அப்பாழும் தாண்டின் அறிவுளதோ மாங்குயிலே. 10

அட்டாங்க யோகம் அறிந்து தெரிந்தபின்பு
வெட்டவெளி யுண்மை விளங்குமே மாங்குயிலே. 11

ஆறாதா ரத்தில் அறிவை மிகச்செலுத்திச்
சீராய்த்தவ சிருந்து சிக்கறுத்தோம் மாங்குயிலே. 12

7. குயிலே! திருஐந்தெழுத்தையும் தெரிந்து (தீட்சை பெற்று), அதன் உண்மையும் தெரிந்து, வஞ்சமின்றி மகிழ்ந்திருந்தேன்.

(தீட்சை பெறுதல் - ஞான உபதேசம் பெறுதல்)

8. குயிலே! சூரிய சந்திர நாடிகள் தோன்றும் இடத்தில் நின்று பூரித்து எண்ணற்ற போகம் அடைந்தேன்.

9. ஊமை எழுத்தால் ஓங்காரம் உண்டானது. இதைச் சீமையில் (உடலுக்கு வெளியே என்பர்) உள்ளவர் அறிவாரோ? உணர்பவரே அறிவார்.

10. குயிலே! முப்பாழும் கடந்து, முடிவும் கடந்து, அதற்கு அப்பால் உள்ளதும் கடந்து அறிவு செயல் படுமோ.

11. குயிலே! அட்டாங்க யோகம் பயின்று முடித்தால் வெட்ட வெளியின் உண்மை விளங்கும்.

12. குயிலே! ஆறு யோக ஆதாரத்திலும் அறிவை மிகவும் செலுத்தி, சிறந்த தவம் இருந்து சிக்கை அறுத்தோம்.

(சிக்கு - மனக் குழப்பங்கள்)

துர்க்குணத்தைச் சுட்டறுத்துச் சூக்ம நிலைதெரிந்து
நற்குணத்தோடு எண்டிசையும் நானிருந்தேன் மாங்குயிலே. 13

அல்லலெல்லாம் நீக்கி அறிவைஅறி வால்அறிந்து
வல்லசித்தன் என்றே மகிழ்வுற்றேன் மாங்குயிலே. 14

ஆனந்தம் பொங்கி அறிவே மயமான
ஞானம் அறிந்து நலமுற்றேன் மாங்குயிலே. 15

மெய்ப்பொருளைக் கண்டுடனே வேதாந்த வீடடைந்த
வைப்பதனில் ஒன்றி மகிழ்ந்திருந்தேன் மாங்குயிலே. 16

நாதாந்த உண்மை நடுவுஅறியா மாந்தருக்கு
வேதாந்தப் பேச்சதுவும் வேண்டுமோ மாங்குயிலே. 17

நித்திரையும் விட்டு நினைவைஅறி விற்செலுத்தி
சித்தியெலாம் பெற்றுத் தெளிவுற்றேன் மாங்குயிலே. 18

*13.* குயிலே! தீய குணத்தை நீக்கி, சூக்கும நிலைகளை அறிந்து, நற்குணம் கொண்டு எண் திசையும் நானிருந்தேன்.

*14.* குயிலே! அல்லல் எல்லாம் நீக்கி, நம் அறிவை இறையறிவால் அறிந்து வல்ல சித்தன் என்றே மகிழ் வுற்றேன்.

*15.* குயிலே! ஆனந்தம் மிகுந்து ஞானத்தை அறிந்து நலம் பெற்றேன்.

*16.* குயிலே! மெய்ப் பொருளைக் கண்டு உடனே வேதாந்தம் கூறும் வீட்டை அடைந்து அந்த வாழ்வில் (வைப்பு) சென்று மகிழ்ந்திருந்தேன்.

*17.* குயிலே! நாதாந்த உண்மையின் நடுவை அறியாத மனிதருக்கு வேதாந்தப் பேச்சும் வேண்டுமோ?

(வேதாந்தம் - யோகம் செய்யும் மரபு)

*18.* உறக்கத்தை விட்டு நினைவை அறிவில் செலுத்தி சித்தியெல்லாம் அடைந்து தெளிவுற்றேன்.

பேச்சொடுங்கி நின்ற பிரமநிலை யைஅறிந்தோர்
ஏச்சுக்கு இடமற்று இருப்பார்காண் மாங்குயிலே. 19

காணாப் பொருளதனைக் கண்டுபிரமா னந்தமுற்று
வீணாள் ஒழித்துமுத்தி வீடடைந்தேன் மாங்குயிலே. 20

அருள்வெளியி னுட்பொருளை ஆராய மோனக்
குருமொழியை அன்றியில்லை கோதையெனும்
மாங்குயிலே. 21

அத்துவிதம் தன்னை அதுவதுவாய்க் காண்பதற்குத்
தத்பதத்தைக் காட்டித் தருவாயே மாங்குயிலே. 22

நம்பி உனைப்பணிந்து நாடோறும்பூ சிப்பதற்குத்
தொம்பத்தை என்று துலக்குவாய் மாங்குயிலே. 23

நிசிபகலென் றெண்ணாது ஞேயஞா னத்தால்
அசிபதத்தை நீயென் றருள்செய்வாய் மாங்குயிலே. 24

*19*. மவுனத்தில் இருக்கும் பிரம்ம நிலையை அறிந்தவர்கள் ஏச்சுக்கு இடம் இன்றி இருப்பர்.

*20*. காணாப் பொருளாகிய பிரம்மத்தைக் கண்டு பிரம்மானந்தம் பெற்று வாழ்வை வீணாக்காது இருந்து வீட்டை அடைந்தேன்.

*21*. குயிலே! அருளாகிய உட்பொருளை ஆராய மவுன குருவின் மொழி தவிர வேறு வழியில்லை என உணர்க.

*22*. குயிலே! அத்துவிதத்தில் பரம்பொருளைக் காண்பதற்குத் 'தத்' என்னும் சொல்லின் உண்மையைக் காட்டித் தருக.

('தத்வமஸி' - அது நீயாகிறாய்)

*23*. குயிலே! உன்னை நம்பிப் பணி செய்து நாள் தோறும் வழிபடுவதற்கு 'த்வம்' (நீ) எனும் சொல்லின் பொருளை விளக்குவாயாக. (த்வம் - இது வடசொல். இதற்கு 'நீ' என்பது பொருள்)

*24*. குயிலே! இரவு பகல் என்று எண்ணாது அன்பு ஞானத்தால் 'அஸி' என்னும் சொல்லை அருள்வாயாக.

(இது யஜுர் வேதத்தின் மகாவாக்கியம். (தத்வமஸி) தத் - அது (கடவுள்), த்வம் - நீ (ஆத்மா), அஸி - ஒன்றானாய். இது குருவுபதேசிக்கும் வாக்கியம் என்பர்)

நித்தநித்தம் என்னுளத்தில் நீஇருப்பது உண்மை எனில்
தத்துவம் சிற்பொருளைத் தந்தருள்செய் மாங்குயிலே. 25

சுத்த நிராமயத்தின் தோற்றத்தி னால்உதித்த
வத்துவெலாஞ் சுத்தமயம் அன்றோ மாங்குயிலே. 26

தேறாப் பொருள்அனைத்துந் தேறித் தெளிவதற்கு
மாறாநின் இன்பமது வாய்க்குமோ மாங்குயிலே. 27

அசரசரத்தின் உற்ற அண்டபிண்டம் பல்லுயிரும்
நசிதம்எனக் கண்டறிந்து நின்றேன்நான் மாங்குயிலே. 28

பாசபந்தம் விட்டுப் பரகதிஎன் றேயிருந்தால்
பேசஒண்ணாப் பிரமம் பிறக்குமே மாங்குயிலே. 29

அந்தக்கர ணத்தை அடக்கிப் பரவெளியைச்
சொந்தமென நம்பித் துதிப்பாய்நீ மாங்குயிலே. 30

25. குயிலே! நாள்தோறும் என் உள்ளத்தில் நீ இருப்பது உண்மை என்றால், தத்துவமாகிய சித்பொருளை எனக்குத் தந்தருள்க.

26. குயிலே! உருவமற்றதாயினும் உருவத்தால் வெளிப்படும் அப்பொருள் சுத்த மயமேயாம்.

(நிராமயம் - உருவம் அற்றது. வத்து - பொருள்)

27. குயிலே! தேறாத பொருளைத் தேறித் தெளிந்திட மாறாத உன் இன்பம் வாய்க்குமோ?

28. குயிலே! இயங்குதல், இயங்காதிருத்தல் (அசரம் சரம்) என்ற இரண்டுடன் அண்டமும், அதில் உள்ள பிண்டங்களும் (பொருள்களும்), பல உயிர்களும் எல்லாம் ஒரு காலத்தில் ஒடுங்கும் என நான் அறிந்தேன்.

29. குயிலே! பந்த பாசத்தை நீக்கிப் பரமே கதி என்று இருந்தால் பேச ஒண்ணாத மவுன நிலை உண்டாகும்.

30. குயிலே! அந்தக்கரணங்கள் நான்கையும் அடக்கி (ஒன்றாக்கி)ப் பரவெளியை உனது சொந்தமாக நம்பித் துதிப்பாய் குயிலே.

சுத்தப் பிரமத்தின் தொடர்புவழி யேகாணில்
முத்தியைத் தேட முழிப்பாயோ மாங்குயிலே. 31

எக்கனியை யும்பறித்து ஏக்கமறச் சாப்பிடலாம்
கைக்கனியே பிரமமெனக் கண்டுதேர் மாங்குயிலே. 32

துர்க்கந்தத்தால் எடுத்த தூலமிது பொய்யெனநீ
நற்கந்த மானசுக ஞானம்அறி மாங்குயிலே. 33

வெட்ட வெளியதனில் மெய்ப்பொருளைக் கண்டபின்பு
பட்டப் பகல்தீபப் பார்வையேன் மாங்குயிலே? 34

எங்கும் நிறைந்துநின்ற ஏகபர வத்துவினை
அங்கைநெல் லிக்கனிபோல் யாணறிந்தேன் மாங்குயிலே. 35

சத்தாகிச் சித்தாகித் தாபரமுந் தானாகி
வித்தாகி வந்த விதம்தெரிவாய் மாங்குயிலே. 36

31. குயிலே! சுத்தப் பிரம்மத்தின் தொடர்பு வழியே கண்டால் முத்தி எளிதாகும்.

32. குயிலே! எக்கனியையும் பறித்து உண்ணலாம். கைக்கனியாகிய பிரம்மத்தைக் கண்டு தேர்வாயாக.

33. குயிலே! பழைய தீய வாசனையால் எடுத்த இந்தத் தூல உடல், பொய் என்று நல்ல வாசனையாகிய சுக ஞானத்தால் அறிக. (துர்க்கந்தம் - பழைய தீவினை என்னும் வாசனை)

34. குயிலே! வெட்ட வெளியில் மெய்ப் பொருளைக் கண்ட பிறகு, பட்டப் பகலில் தீபத்தைப் பார்த்தது போன்ற பழைய உணர்வு நீங்கும்.

35. குயிலே! எல்லா இடங்களிலும் ஏகமாகப் பரவி நின்ற பொருளை உள்ளங் கையில் உள்ள நெல்லிக் கனி போல் அறிந்தேன்.

36. குயிலே! சத்தாகவும், சித்தாகவும், பரமாகவும் தான் ஒரு பொருளே ஆகி, எல்லாவற்றுக்கும் காரணமானதாய் இருப்பதைத் தெரிக.

அருவாய் உருவாகி அண்டர் அண்டந்தானாய்க்
கருவாகி வந்த கணக்கறிவாய் மாங்குயிலே. 37

ஆதிசகத் தென்றும் அனாதி மகத்தென்றும்
சோதிச் சுயவடிவாய்த் தோன்றுமே மாங்குயிலே. 38

பார்க்குள் ஆகாயமதைப் பார்த்துப்பார்த்து எல்லைகண்டு
யார்க்கும் சொல்ளிதே ஆய்ந்திடுவாய் மாங்குயிலே. 39

அண்டத் துள்ளே அனாதி பரவெளியைக்
கண்டறிந்து கொண்டேன் கவலைவிட்டேன் மாங்குயிலே. 40

அணுவுக்கு அணுவாய் அருட்சோதி என்றகுரு
மணியாய் விளங்கும் மகிமைஅறி மாங்குயிலே. 41

பற்றற்று நின்றே பரவெளியைக் கண்டேன்நான்
வற்றற்றல் ஆசை மறந்திருந்தேன் மாங்குயிலே. 42

37. குயிலே! அருவமாகவும், உருவமாகவும், அண்டங்களும், அண்டங்களில் உள்ளவைகளும் தானே ஆகி, எல்லாவற்றுக்கும் அடிப்படையான கணக்கை அறிவாயாக.

38. ஆதி 'சகத்' என்றும், அனாதியாய் இருப்பது 'மகத்' (மிகப் பெரிது) என்றும் சோதிச் சுய வடிவமாகத் தோன்றும்.

39. குயிலே! பார்க்கும் ஆகாயத்தைப் பார்த்துப் பார்த்து அதன் எல்லை கண்டு யாருக்கும் சொல்ல அரிதாகியதை எளிதாய் ஆய்வாயாக.

40. குயிலே! அண்டத்திற்குள் அனாதியான பர வெளியைக் கண்டு அறிந்து கொண்டேன். கவலையை விட்டேன்.

41. குயிலே! அணுவிற்குள் அணுவாய், அருளாகிய சோதி என்ற குருமணியாய், பரம்பொருள் விளங்கும் மகிமையை நீ அறிக.

42. குயிலே! நான் உலகப் பற்றை இழந்து நின்று பரவெளியைக் கண்டேன்; ஆசை எல்லாம் மறந்து நின்றேன்.

## சதோகநாதர் என்ற யோகச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 21. காயக்கப்பல்

பாடியவர் பெயர் தெரியாமல் பாடல் கருத்தையே தலைப்பாகக் கொண்டது இப்பகுதி.

உடம்பை (காயம்) ஒரு கப்பலாக்கி, யோகத்தைப் பயணமாக இது கூறுகிறது.

## காயக்கப்பல் பாடல்கள்

### மூலமும் உரையும்

ஏலேலோ ஏகரதம் சர்வரதம்
பிரமரதம் ஏலேலோ ஏலலிலோ.

பஞ்சபூதப் பலகை கப்பலாய்ச் சேர்த்து
பாங்கான ஓங்குமரம் பாய்மரம் கட்டி
நெஞ்சு மனம்புத்தி ஆங்காரம் சித்தம்
மானாபி மானங் கயிறாகச் சேர்த்து
ஐந்தெழுத்தைக் கட்டி சரக்காக ஏற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கான் இருத்தி
நெஞ்சு கடாட்சத்தால் சீனிப்பாய் தூக்கி
சிவனுடைய திருப்பொருளைச் சிந்தையில் நினைந்து
தஞ்சலான வெள்ளத்தில் தானே அகண்டரதம் போகுதடா
ஏலேலோ ஏலேலோ.

(ஏலேலோ என்பது தானும் பிறரும் பாடுவதற்குக் குறிப்புக் கொடுக்கும் சந்தச் சொல் ஆகும்)

முதலடிகளில் உடலைப் புகழ்கிறார். இது தனி ரதம் எங்கும் செல்லும் ரதம், பிரம்மம் குடி இருக்கும் ரதம் ஆகும்.

(பஞ்சபூதம்......... அண்ட ரதம் போகுதடா)

பஞ்ச பூதங்களாகிய பலகைகளைக் கப்பலாகச் சேர்த்து, பாங்கான ஓங்கு மரமாக்கி அதைப் பாய் மரமாகவும் கட்டி, மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கு அந்தக் கரணங்களையும் மானம் அபிமானம் (விருப்பம், பற்று) ஆகியவற்றையும் கயிறாகச் சேர்த்து, ஐந்தெழுத்தையும் கப்பல் சரக்காக ஏற்றி, ஐம்புலன்களால் திசை திருப்பும் சுக்கான் இயங்கச் செய்து, நெஞ்சத்தில் தோன்றிய கடாட்சத்தால் இனிய பாயும் தொடுத்து, சிவனின் திருப் பொருளைச் சிந்தையில் நினைந்து, மிகுந்த வெள்ளத்தில் தானே மிதந்து அண்டங்கள் தோறும் போகும் உடலாகிய ரதம் (கப்பலாகப் போகுதடா) ஏலேலோ ஏலேலோ.

(கடாட்சம் - கருணைப் பார்வை)

களவையுங் கேள்வையுந் தள்ளுடா தள்ளு
கருணைக் கடலிலே தள்ளுடா கப்பல்
நிர்குணந் தன்னிலே தள்ளுடா தள்ளு
நிறைந்த பரிபூரணத்தால் தள்ளுடா கப்பல்
மூக்கணை மூன்றையுந் தள்ளுடா தள்ளு
முப்பாழுக்கு அப்பாலே தள்ளுடா கப்பல்
திக்கு திசையெங்கும் தள்ளுடா தள்ளு
திருமந்திரஞ் சொல்லி தள்ளுடா கப்பல்
பக்கமுடன் கீழ்மேலும் தள்ளுடா தள்ளு
பரவெளிக்கு அப்பாலே போகுதடா கப்பல் ஏலேலோ
ஏலேலோ. 2

(களவை...... ஏலேலோ)

களவையும் கேள்வியுற்றவையும் தள்ளி விடு. கப்பலைக் கருணைக் கடலில் தள்ளு. நன்னெறியில் தள்ளு. எங்கு மாய் நிறைந்த பரிபூரணத்தால் தள்ளு. மூக்கில் நெருங்கும்

இடா, பிங்களா, சுழுமுனை நாடிகள் மூன்றையும் தள்ளு. முப்பாழுக்கும் அப்பால் தள்ளு. திக்குத் திசை எங்கும் தள்ளு. திருமந்திரத்தை ஓதியே தள்ளு. பக்கவாட்டிலும் கீழ் மேலுமாகத் தள்ளு. பரவெளிக்கும் அப்பால் போகுதடா உடல் ஆகிய கப்பல் ஏலேலோ ஏலேலோ!

தந்தைதாய் சுற்றமும் சகலமும் மறந்து
தாரம் சகோதரம் தானதும் மறந்து
பந்தமும் நேசமும் பாசமும் மறந்து
பதினாலு லோகம் தனையும் மறந்து
இந்திரியங்கள் இரட்சித்த கப்பலில் ஏறி
ஏகாந்த மானதொரு கடலிலே தள்ளி
அந்திர மானவெளி அருளானந்த வெள்ளத்தில்
அழுந்து தையோ கப்பல் ஏலேலோ ஏலேலோ

பெற்றோர், சுற்றத்தார் ஆகியோர் யாவரையும் மறந்து, மனைவி, உடன்பிறப்பு, தான் என எல்லாம் மறந்து, பந்தம், பாசம், நேசம் மறந்து, பதினான்காகிய உலகுகளும் மறந்து, இந்திரியங்கள் உணர்த்திய கப்பலில் ஏறி, ஏகாந்த மான கடலிலே தள்ளி, தனித்த வெளியில் அருள் ஆனந்த வெள்ளத்தில் அழுந்துகிறது இக்கப்பல். ஏலேலோ ஏலேலோ!

(சகோதரம் - உடன்பிறந்தார். பந்தம் - தொடர்பு; கட்டு. ஏகாந்தம் - தனிமையான இடம்)

## காயக்கப்பல் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 22. உரோமரிஷி ஞானம்

பதினெண்சித்தர்களில் இவர் ஒருவர். இவரின் குருநாதர் புசுண்ட முனிவர் என்பர். இவர் பெயருக்குக் காரணம் தெரியவில்லை. முதல் பாட்டில் இவர் காரணம் கூறுவது போலிருந்தாலும் தெளிவாகத் தெரியவில்லை. *13* பாடல்கள் இவர் பெயரில் உள்ளன.

## உரோமரிஷி ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும்

### எண்சீர் விருத்தம்

மூலவட்ட மானகுரு பாதங் காப்பு;
முத்திக்கு வித்தான முதலே காப்பு;
மேலவட்ட மானபரப் பிரமங் காப்பு
வேதாந்தங் கடந்துநின்ற மெய்யே காப்பு;
காலவட்டந் தங்கிமதி யமுதப் பாலைக்
கண்டுபசி யாற்றிமனக் கவடு நீக்கி
ஞாவட்டம் சித்தாடும் பெரியோர் பாதம்
நம்பினதால் உரோம னென்பேர் நாயன் தானே. 1

மூலாதாரப் பகுதியும் குரு பாதமாகும் எனது நூலைக் காக்க. முத்திக்கு வித்தாகிய இறைவனாகிய முதல்வனும், தலைக்கு மேல் உள்ள பகுதியில் வெளிப்படும் பரப் பிரம்மமும், (தலைக்கு மேல் சுடராக விளங்கும் பகுதியாம் என் நூலைக் காக்க.

வேத முடிவுக்கு அப்பாலும் விளங்கும் மெய்ப்பொருள் காக்க. காலத்தைக் காட்டும் சூரிய சந்திரர் இயக்கத்துக்குட்

பட்ட மதி மண்டலத்தில் ஊறும் அமுதமாகிய பாலை உண்டு, ஞானப் பசியாறி, மனக் கவலை நீங்கி, இவ்வுலகில் சித்தினால் பல சாதனை செய்யும் பெரியோர் பாதங்களை வணங்கியதாலும் நம்பியதாலும் உரோமன் என்று இந்த நாயேனை அழைப்பர். இது கடவுள் வாழ்த்து. நூல் நன்கு முடிவுறவும் தன் பெயர் கூறவும் பயன் கொண்டார்.

(வேடு - கவலை. ஞால வட்டம் - தலைக்கு மேல் உள்ள பகுதியில் வெளிப்படும் பரப்பிரம்மம்)

கண்ணாடி சிலமூடித் தனுப்பி னாலே
கருவதனை அறியாமல் மாண்டு போனான்
விண்ணாடிப் பாராத குற்றம் குற்றம்
வெறுமண்ணாய்ப் போச்சுதுஅவன் வித்தை யெல்லாம்
ஒண்ணான மவுனமென்றே யோகம் விட்டால்
ஒருபோதுஞ் சித்தியில்லை! வாதந் தானும்
பெண்ணார்தம் ஆசைதன்னை விட்டு வந்தால்
பேரின்ப முத்திவழி பேசு வேனே. 2

கண்களை மூடியும், மூடாதும் நுழையச் செய்யும் யோக முயற்சியால் பயனின்றிப் பலர் மாண்டு போயினர். விண்ணை (வெளியை) நாடிப் பார்க்காதது அவர்கள் குற்ற மாகும். இதனால் அவர்கள் வித்தைகள் வெறும் மண்ணாய்ப் போயின. (வித்தை - அறிவு, திறம், மந்திரம் முதலியவாம்)

மவுனத்தை மட்டும் கைக் கொண்டு, யோகத்தை விட்டு விட்டால் ஒரு பொழுதும் வெற்றியில்லை. பெண் ஆசை விட்டு வந்தால் தான் ரச வாதம் என்பது சித்தி யாகும். (ரசவாதம் - தங்கம் செய்தல்) மேலும் பேரின்ப முத்திக்கு வழியுமாகும்.

(இரசவாதம் - தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகம் ஆக்குதல்)

பேசுவேன் இடைகலையே சந்த்ர காந்தம்;
பிங்கலைதான் ஆதித்தன்ஆதி யாச்சு;
நேசமதாய் நடுவிருந்த சுடர்தான் நீங்கி
நீங்காமல் ஒன்றானா லதுதான் முத்தி;
காதலாய்ப் பார்த்தோர்க்கிங் கிதுதான் மோட்சம்;
காணாத பேர்க்கென்ன காம தேகம்
சோதனையாய் இடைகலையில் ஏற வாங்கிச்
சுழுமுனையில் கும்பித்துச் சொக்கு வீரே. 3

இடைகலை நாடி சந்திர சக்தியை ஈர்க்கும் (இதுவே சந்திர காந்தம் என்றார்). பிங்களா நாடி சூரிய சக்தியை ஈர்க்கும். இவற்றின் நடுவே நாம் அன்பு கொள்ளுமாறு நிற்கும் சுடர்தான் சுழுமுனை நாடியாகும். (இவை இரண்டையும் விட்டுத் தனித்திருப்பதால் நீங்கி என்றார்)

இந்த நடு நாடியை விட்டு விலகாமல் அதனுடன் ஒன்றினால் அதுவே முத்தி தரும்.

பக்தியுடையவர்க்கும் இதுவே மோட்சம் ஆகும். இதைக் காணாதவர்களின் உடல் காமத்துக்கு மட்டுமே பயனாகும். இதைச் சோதிக்க இடைகலை நாடியில் மூச்சு ஏறுமாறு பிராணாயாமம் செய்து, சுழுமுனையில் அதை ஏறச் செய்து, உடனே கும்பகம் (மூச்சை அடக்கல்) செய்து தியானத்தில் ஈடுபடுவீராக.

(சொக்குதல் - விரும்பி ஈடுபடுதல். சந்திர காந்தம் - சந்திர சக்தியை ஈர்க்கும் இடை கலை நாடி; இடா என்னும் நாடி. சூரிய காந்தம் - பிங்களா நாடி சூரிய சக்தியை ஈர்க்கும். கும்பித்தல் - கும்பகம் செய்தல்; மூச்சை அடக்குதல்)

வாங்கியந்தப் பன்னிரண்டி னுள்ளே ரேசி
வன்னிநின்ற விடுமல்லோ சூர்யன் வாழ்க்கை?
ஓங்கியிந்த இரண்டிடமும் அறிந்தோன் யோகி
உற்றபர மடிதானே பதினா றாகும்;

தாங்கிநின்ற காலடிதான் பன்னி ரண்டு;
சார்வான பதினாறில் மெள்ள வாங்கி
ஏங்கினதைப் பன்னிரண்டில் நிறுத்தி யூதி
எழுந்தபுரி யட்டம் அடங் கிற்றுப் பாரே. 4

இப்படிச் சுழுமுனையில் காற்றை வாங்கிப் பன்னிரண்டு விரல் நீளம் மூச்சை இழுப்பீராக. (ரேசித்தல் - மூச்சை உள் வாங்கல். மூச்சுக் குழல் நீளம் 12 விரல்) இதனால் சூரிய நாடியில் குண்டலினி ஏறாது, சந்திர நாடி (இடைகலை)யில் மட்டும் ஏறும்.

இடாவின் ஏற்றமும், பிங்கலையின் இறக்கமும் உணர்ந்தவன் யோகியாவான். கடவுள் திருவடி 16 விரல் (மூக்கிலிருந்து மூச்சுக் குழல் வரை 16 விரல்) ஒரே செயலானால் பரமன் அடியில் உணர்வு வரும். மீண்டும் 12 விரல் தூரமான காற்றுக் குழலில் மெல்ல மெல்ல காற்றை விடுவித்தால் அது கடவுள் பாதத்தைத் தாங்கிய இடமாகும். ஆக இப்படிப் பிராணாயாமம் செய்து பழகினால் புரியட்டகமான எட்டு ஆதார உறுப்புக்களும் வசமாகும்.

பாரையா குதிரைமட்டம் பாய்ச்சல் போச்சு
பரப்பிலே விடுக்காதே சத்தம் தன்னை;
நேரையா இரண்டிதழின் நடுவே வைத்து
நிறைந்தசதா சிவனாரைத் தியானம் பண்ணு;
கூரையா அங்குலந்தான் நாலுஞ் சென்றால்
குறிக்குள்ளே தானடக்கிக் கொண்ட தையா!
ஆரையா உனக்கீடு சொல்லப் போறேன்
அருமையுள்ள என்மகனென்று அழைக்க லாமே. 5

குதிரையாகிய மூச்சுப் பயிற்சி குறைந்தால் யோக உணர்வு எங்கும் பாய்ந்து பரவுதல் குறையும். ஆகவே எங்கும் உன் நினைவைச் சிதற விடாதே. இரண்டு இதழின் நடுவே (மவுனத்தில்) சதாசிவனைத் தியானம் செய்.

ஓரங்குலம் அடங்கினாலும் முயற்சியை மேம்படுத்தலாம். அப்போது உனக்கு ஈடு யாருமில்லை. என் அருமை மகன் ஆவாய். (தனக்கு நிகராக யோகம் செய்வதால் மகன் என்றார்)

அழைப்பதுவும் நல்லபிள்ளை யானால் நன்றே!
ஆகாத சீடர்களைச் சேர்த்தல் தோடம்;
பிழைப்பதற்கு வழிசொன்னால் பார்க்க மாட்டான்
பெண்டாட்டி மனங் குளிரப் பேசும் மாடு;
உழைப்பதற்குச் செனனமெடுத் தானே யல்லால்
உதவிதனக் கெவ்வளவு முண்டோ இல்லை;
இளப்பமிவன் பேச்சையடிக் கடிதா னாகும்
ஏதுக்குச் சொல்லுகிறோம் இனிமேல் தானே. 6

நல்ல பிள்ளைகளாவாரை அழைப்பதே நலம். ஆகாத சீடர்களைச் சேர்ப்பது குற்றமாகும். பிழைக்கும் (உய்தி யடையும்) வழி சொன்னால் அதைக் கேளாது மனைவி மனம் குளிருமாறு காமத்தில் திளைப்பவன் விலங்கு உணர்வு உடையவன் ஆவான். உழைப்பதற்கே இப்பிறவி சரியானது தவிர, அவனை உயர்த்திடும் உதவிக்கு முயல வில்லை. இவனைப் பற்றிப் பேசுவது இளக்காரம் ஆகும். ஏன் பேசுகிறோம் என்று வருந்தச் செய்யும்.

மேலென்ன இருக்கையிலும் நடக்கும் போதும்
வேறுரையால் சாரங்கள் விடாமல் ஏற்று
நாலென்ன எட்டென்ன வெல்லா மொன்று
நலமான அட்டாங்கம் அப்பிய சித்துக்
காலென்னப் பிராணாய முன்னே செய்யில்
கணக்காகப் பூரகங்கும் பகமே நாலு
கோலென்ன ரேசகந்தா னொன்று மூன்று
குறையாமற் சரபீசங் கூட்டித் தீரே. 7

அமர்ந்திருக்கும் போதும், நடக்கும் போதும் இந்த மூச்சுப் பயிற்சியில் கவனம் செய்வது நலம். வெற்றுப் பேச்சைக் கை விடுக. இதனால் சாரம் வீணாகும். நால் இதழ்த் தாமரை (மூலாதாரம்) எட்டிதழ்த் தாமரை (தலை உச்சி) இவைகளைப் பற்றிக் கவலைப்படாது எட்டுப் பகுதியான யோகத்தைப் பயிற்சி செய்க. இழுத்தல், அடக்கல், வெளியேற்றல் என்பவை (ரேசகம், கும்பகம், பூரகம்) அளவுப்படி செய்து மெல்ல மெல்ல அளவை மிகுத்துக் கொள்க. (1 மடங்கு இழுத்து நான்கு மடங்கு அடக்கி இரு மடங்கு விட்டுப் பழகுக. இதைக் குறைத்தே தொடக்கத்தில் செய்வது நலம்)

(ரேசகம் - மூச்சுப் பயிற்சி செய்யும்போது மூச்சை இழுத்தல் ரேசகம் எனப்படும். மூச்சை அடக்குதல் கும்பகம் ஆகும். மூச்சை வெளியேற்றுதல் பூரகம். இம்மூன்றும் சரியை, கிரியை, யோக மார்க்கம் ஆகும். எதிலும் பிழை இல்லாமல் இருப்பது ஞான மார்க்கமாகும்)

கூட்டியே பழகினபின் சரபீ சத்தில்
குறையாமல் சாதித்தால் பிரம ரந்த்ரம்
காட்டுவிக்கு மல்லால்விழிக் குறியி னாலே
கண்மூக்கு மத்தியிலே கண்டு பாரு;
மூட்டுவிக்கு மாதார மாறுந் தானே
மூலவட்டக் கணபதிநான் முகத் தோன் மாயன்
தாட்டிகமா மணிப்பூரங் கையன் வட்டந்
தணலான ருத்திரனுந் தணலு மாமே. 8

இப்படிக் கூட்டி (அட்சர பீஜத்தில் - சரபீசத்தில்) மந்திர எழுத்துக்களும் குறையாமல் சாதனை செய்தால் 1008 இதழ்த் தாமரையான பிரம்மரந்திரம் எனும் சகஸ்ராரப் பகுதி உச்சித் தலைக்குள் தென்படும். அல்லது கண், மூக்கு, இடைப் பகுதியில் இரு காதுத் துளை வழியே மன உணர்வைச் செலுத்தி அங்கே இருக்கும் சோதியைக்

காண்க. ஆறு ஆதாரங்களும் இப்பயிற்சியை ஊக்கப்படுத்தும். மூல வட்டத்தில் உள்ள கணபதி, பிரமன், சுவாதிட்டானத்துத் திருமால், மணிப்பூரகத்து உருத்திரன் ஆகியோர் உதவியால் குண்டலினி நெருப்பு வெளிப்படும் என்க.

(சரபீசம் - அட்சர பீஜம். பிரம்மரந்திரம் - தலையில் உள்ள சகஸ்ராரம் என்னும் பகுதி. மூலவட்டம் - மூலாதாரமாகிய வட்டம்)

தணலாகும் விசுத்தியறு கோண வட்டஞ்
சதாசிவனார் வட்டமல்லோ குருபீ டந்தான்
மனையான பதியினிலே குறித்துப் பார்க்க
மத்யமுதல் கரிகொண்டு தூங்குந் தூங்கும்
கனலேறிக் கொண்டிருந்தா லெல்லா முண்டு
காற்றைவெளி விட்டக்கால் கருமந் தீதான்
புனலூறும் வழிப்பாதை யிந்த மார்க்கம்
பொல்லாத துரோகிக்குப் பொய்யா மன்றே? 9

ஏறும் குண்டலினி நெருப்பு அறுகோணமாகிய அநாகதம், விசுத்தி ஆகியவற்றில் ஏறிச் சதாசிவ பீடம் ஏறலாம். புருவ மத்தியாகிய குரு பீடமும் ஏறலாம். மூலா தாரத்தையும் ஆறு ஆதாரங்களையும் (மனை) இப்படித் தியானம் செய்தால் குண்டலினி ஏற ஏறத் தியானமும் சிறக்கும். இந்த நெருப்பு மேலும் மேலும் சுடராகவும் சோதியாகவும் மேல் ஏறினால் எல்லாம் நடக்கும்.

பிராணாயாமத்தைச் சரியாகச் செய்யாது காற்றை வெளியே விட்டு விட்டால், குண்டலினி நெருப்பு வெறும் உடம்புச் சூடாக மட்டுமே இருந்து நீங்கும். இப்பாதை வழி யாகவே அமுதமும் ஊறி ஒழுகும். பொல்லாத, ஒழுக்க மற்ற, தீயருக்கு (துரோகி) இது பொய்யாகி விடும்.

(சதாசிவ பீடம் - இது உடம்பில் உள்ள கடவுள் நிலையாகும். இதைப் புருவ மத்தியில் உணர்வர். குரு பீடம் - புருவ மத்தி)

செலுத்துவதும் உண்ணாக்கில் அண்ணாக்கு ஐயா!
சென்றேறிப் பிடரிவழித் தியானந் தோன்றும்;
வலுத்ததடா நாலுமுனக் கமுத மாச்சு;
மவுனமென்ற நிருவி கற்ப வாழ்க்கை யாச்சு;
சொலித்திருக்கும் பன்னிரண்டி லிருத்தி யூது
சோடசமாம் சந்த்ரகலை தேய்ந்து போச்சு;
பலித்ததடா யோகசித்தி ஞான சித்தி
பருவமாய் நாடிவைத்துப் பழக்கம் பண்ணே. 10

மனத்தைச் செலுத்துவது அண்ணத்தில் உள்ள உள் நாக்கில் ஆகும். இதன் பின் பிடரி வழியாகத் தியானம் உண்டாகும். நாலும் (மூலாதாரம்) வலிமையற்று அமுதம் உண்டாக்க வழியாகும். மவுனம் எனும் நிர்விகற்ப சமாதியும் இதனால் வரும். பன்னிரண்டு தாமரை நடுவே ஒளியை உணர்ந்து பிராணாயாமம் செய்க. 16 கலைகள் கொண்ட சந்திர நாடியில் அக்கலைகள் குறையத் தொடங்கும். இதனால் யோக சித்தி உண்டாகும். ஞான சித்தியும் உண்டாகும். இதற்கான (பருவம்) காலம் உணர்ந்து பழக்கிக் கொள்க.

மூடாமல் சிறுமனப் பாடம் பண்ணி
முழுவதுமவன் வந்ததுபோல் பிரசங் கித்து
வீடேதிங்கு உடலேது யோக மேது
வீண்பேச்சாச் சொல்லியல்லோ மாண்டு போனார்?
காடேறி மலையேறி நதிக ளாடிக்
காய்கிழங்கு சருகுதின்று காமத் தீயால்
சூடேறி மாண்டவர்கள் கோடா கோடி
சொருபமுத்தி பெற்றவர்கள் சுருக்க மாச்சே. 11

மனத்தில் கடவுளின் திருவடிகளையும், அவர் வடிவத்தையும் தானே வந்தது போல் பாவனை செய்து

வந்தால் சொரூப முத்தியே கிடைக்கும். அதை விட்டு வீடுபேறு, உடலில் கோயில், யோகம் முதலியன வீண் பேச்சே. காட்டில் சென்று, மலையில் ஏறி, நதிகளில் மூழ்கி, காய், கிழங்கு, சருகு தின்று, காமத் தீயில் சூடேறி மாண்டவர்கள் கோடிக் கணக்கினர் என அறிக.

(சொரூப முத்தி - முத்தி தரும் கடவுள் வடிவமாகுதல்)

சொருபமுத்திக்கு அடையாளம் ஏதென் றக்கால்
சுடர்போலக் காணுமடா தூல தேகம்;
அருபமுத்தி யிடமல்லோ பிரம ஞானம்
அபராட்ச மென்றுசொல்லுஞ் சிரவ ணந்தான்
பருபதத்தை அசைப்பனெனச் சிற்றெ றும்பின்
பழங்கதைபோ லாச்சுதிந்த யோகம் விட்டால்
வெறுங்கடத்தில் ஈப்புகுந்த வாறுபோல
வேதாந்தம் அறியாத மிலேச்சர் தாமே. 12

சொரூப முக்திக்கு ஏது அடையாளம் என்றால் இந்தத் தூல உடம்பு சுடர் போல் ஒளி உடம்பாகத் தோன்றும். பிரம்ம ஞானத்தில் கூட அரூப முத்தியே உண்டு. சாகாத் திருநாமம் ஓதும் சிரவணத்தால் பர உச்சத்திற்குக் கொண்டு செல்லாது, மலையைச் சிற்றெறும்பு அசைப்பது போல் இந்த யோகத்தால் உடல் ஒளியுடல் ஆகச் செய்யலாம். இதை விட்டால் வெறும் குடத்தில் ஈ புகுந்து கெட்டது போல் வேதாந்தம் அறியாத மிலேச்சரே ஆவர்.

(மிலேச்சர் - நாகரிகமில்லாதவர். சொரூப முத்தி - முத்தி தரும் கடவுள் வடிவமாகுதல். சிரவணம் - நினைவு கூறும் பகுதி)

ஓமென்ற கெட்டபுத்தி மாணா கேளே;
உலகத்தில் மானிடர்க்காம் ஆண்டு நூறே;
ஆமென்ற இருபத்தோ ராயி ரத்தோடு
அறுநூறு சுவாசமல்லோ ஒருநா ளைக்குப்

போமென்று போனதனால் நாள்கு றைந்து
போச்சுதுபோ காவிட்டால் போவ தில்லை;
தாமொன்று நினைக்கையிலே தெய்வம் ஒன்று
தானினைந்த தன்மையல்லோ விதிகள் தாமே? 13

மந்திர உச்சாடனம் மட்டுமே போதுமென்ற சீடனே, கேள். மனிதர்க்கு வயது நூறுதான். அதில் ஒரு நாளைக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு மூச்சாகும். இச்சுவாச எண்ணிக்கை பிராணாயாமத்தாலே குறையும் போது அதற்கு ஏற்ப ஆயுளும் கூடும். வேறு வகையால் இது நடக்காது. நாம் ஒன்றை முடிவு செய்தால் தெய்வமொன்றை நமக்கு மாறாக நினைக்கும் என்ற தன்மை போல், விதியால் பலரும் வாடுகின்றனர்.

## உரோமரிஷி ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 23. தடங்கண் சித்தர் பாடல்கள்

## தங்கப்பா

அதிவெடி முழக்கி முரசுகள் முடுக்கி
அலறிடும் உடுக்கைகள் துடிப்ப
விதிர்விதிர் குரலால் வெற்றுரை அலப்பி
வீணிலோர் கல்லினைச் சுமந்தே
குதிகுதி என்று தெருவெலாம் குதிப்பார்
குனிந்துவீழ்ந்து உருகுவர் மாக்கள்
இதுகொலோ சமயம்? இதுகொலோ சமயம்?
எண்ணவும் வெள்குமென் நெஞ்சே! 1

வெடிகளை முழக்கி, முரசுகள் முடுக்கி, உடுக்கைகளை இயக்கி, விதிர்ப்புறும் குரலால் வெற்றுரை சொல்லி, வீணாக ஒரு கற் சிலையைத் தூக்கிக் கொண்டு, 'குதிகுதி' என்று குதித்து, தெருவெல்லாம் இப்படிக் குதித்து குனிந்து வீழ்வர், உருகுவர், இதுதான் சமயமா? இதுதான் வழிபாடா? என்று நினைத்தாலே என் மனம் வெட்கமடைகிறது.

அருவருப் பூட்டும் ஐந்தலை, நாற்கை
ஆனைபோல் வயிறுமுன் துருத்தும்
உருவினை இறைவன் எனப்பெயர் கூறி
உருள்பெருந் தோளில் அமர்த்தி
இருபது நூறு மூடர்கள் கூடி
இழுப்பதும் தரைவிழுந் தெழலும்
தெருவெலாம் நிகழும்; அதுகொலோ சமயம்?
தீங்குகண் டுழலுமென் நெஞ்சே! 2

ஐந்து தலையும், நான்கு கையும், ஆனை வயிறுமாக, அருவருப்பாக இருக்கும் உருவங்களை இறைவன் என்றே

பெயர் சொல்லி, உருளும் தமது தோள்களில் அத் தெய்வ உருவங்களை அமர்த்தி, இருபதும் நூறும் ஆகிய மூடர்கள் கூடி இழுப்பதும், வணங்கியபடித் தரையில் விழுவதும், தெருக்கள் தோறும் இவை நிகழும், இதுவோ சமயம் என்று இத்தீய முறைகள் கண்டு என் நெஞ்சம் வருந்தும்.

எண்ணெயால், நீரால், பிசுபிசுக்கு ஏறி
இருண்டுபுன் னாற்றமே விளைக்கும்
திண்ணிய கற்குத் திகழ்நகை பூட்டித்
தெரியல்கள் பலப்பல சார்த்திக்
கண்ணினைக் கரிக்கும் கரும்புகை கிளப்பிக்
கருமனப் பார்ப்புசெய் விரகுக்கு
எண்ணிலா மாக்கள் அடி,மிதி படுவர்
இதுகொலோ, இதுகொலோ சமயம்? 3

எண்ணெயாலும், நீராலும் மஞ்சனம் செய்து, நாற்றம் எடுக்கும் வலிய அந்தக் கற்சிலைக்கு நகைகள் அணிவித்து, மாலைகள் பலவும் தொடுத்து, கண்ணைக் கரிக்கும்படிக் கரும்புகை கிளப்பி, இருண்ட மனம் கொண்ட பார்ப்பனர் செய்யும் இச்செய்கைகளுக்குப் பலரும் கூடி மிதிபடுவதும் அடிபடுவதும் ஆக நிற்பர். இதுவோ சமயம்?

(புன்னாற்றம் - புன்மை + நாற்றம் - தீய நாற்றம்)

அழகிய உடல்மேல் சாம்பலைப் பூசி
அருவருப் பாக்கலும், மகளிர்
கொழுவிய குழலை மொட்டையாய் மழித்துக்
குரங்கெனத் தோன்றலும், அறியா
மழலையர் கையினுள் காவடி கொடுத்து
மலையின்மேல் ஏற்றலும், இவைதாம்
வழிபடு முறையோ? இதுகொலோ சமயம்?
மடமைகண் டிரங்குமென் நெஞ்சே. 4

அழகிய உடல்கள் மேல் சாம்பலைப் பூசி அருவருக்கச் செய்வதும், மகளிரின் தழைத்த கூந்தலை மொட்டையாய் மழித்துக் குரங்கு மாதிரி தோன்றுதலும், அறியாத மழலைப் பிள்ளைகள் கையில் காவடி கொடுத்து மலை மேல் ஏறச் செய்தலும், இவை தாம் வழிபடும் முறையோ? இதுவோ சமயம்? என்று மடமையைக் கண்டு என் நெஞ்சம் வருந்தும்.

நீட்டிய பல்லும் சினமடி வாயும்
நிலைத்தவோர் கல்லுரு முன்னே
கூட்டமாய் மோதிக் குடிவெறித் தவர்போல்
குதிப்பர்தீ வளர்த்ததில் மிதிப்பார்
ஆட்டினைத் துடிக்க வெட்டிவீழ்த் திடுவார்
ஆங்கதன் உதிரமும் குடிப்பார்
காட்டில் வாழ்காலக் கூத்துகொல் சமயம்?
கண்ணிலார்க்கு இரங்குமென் நெஞ்சே! 5

நீண்டு காட்சி தரும் பல்லும், சினத்தோடு மடித்த வாயும் கொண்ட ஒரு கற்சிலை முன்னர் குடிவெறி கொண்டவர் போல் கூடிக் குதிப்பர், தீ வளர்த்து அதில் மிதிப்பர், ஆட்டைத் துடிதுடிக்க வெட்டுவர், அதன் இரத்தத்தைக் குடிப்பர். காட்டில் வாழும் நாகரிகமற்ற இக்கூத்து சமயமா? இப்படிக் கண்ணிலாதவர்க்கு என் நெஞ்சம் இரக்கப்படும்.

உடுக்கையை அடித்தே ஒருவன்முன் செல்வான்
ஒருவன்தீச் சட்டியும் கொள்வான்
எடுத்ததோர் தட்டில் பாம்புருத் தாங்கி
இல்தொறும் சென்றுமுன் நிற்பார்
நடுக்கொடும் தொழுவார் நங்கையர், சிறுவர்,
நல்குவர் காணிக்கை பலவும்
கொடுத்தநீறு அணிவார் இதுகொலோ சமயம்?
குருடருக்கு இரங்குமென் நெஞ்சே! 6

உடுக்கையை அடித்தபடி ஒருவன் முன்னே செல்வான். ஒருவன் தீச்சட்டி எடுத்துப் போவான். ஒரு தட்டில் பாம்பு உருவை வைத்து வீடுதோறும் ஒருவன் சென்று முன் நிற்பான். உடல் நடுங்குமாறு தொழுவார்கள் பெண்கள். சிறுவரும் காணிக்கை தருவர். இதுவோ சமயம் என்று என் நெஞ்சம் இந்த அறிவுக் கண் இல்லாதவர்க்காக வருந்தும்.

வேப்பிலைக் கொத்தும், விரிதலை மயிரும்
வெவ்விதின் மடித்திடு வாயும்
கூப்பிய கையும் கொண்டவள் ஒருத்தி
குரங்கென ஆடுவள் குதிப்பாள்
நாற்புறம் நின்றே வணங்குவர் மாக்கள்
நற்குறி கேட்டிட நிற்பார்
காப்பதோ வாழ்வை? இதுகொலோ சமயம்?
கண்ணிலார்க்கு இரங்குமென் நெஞ்சே! 7

வேப்பிலைக் கொத்தும், விரிந்த தலை மயிரும், மடித்த கொடிய வாயும், கூப்பிய கையும் கொண்ட பெண் ஒருத்தி குரங்கு போல் ஆடுவாள், குதிப்பாள். அவளை நான்கு பக்கமும் நின்று வணங்குவர், நல்ல குறிகள் கேட்பர். இது வாழ்வைக் காக்குமோ? இதுவா சமயம்? என்று என் நெஞ்சம் கண் கெட்டவர்க்காக வருந்தும்.

தாய்மொழி பேணார், நாட்டினை நினையார்,
தம்கிளை, நண்பருங் கிரங்கார்,
தூய்நல் அன்பால் உயிர்க்கெலாம் நெகிழார்,
துடிப்புறும் ஏழையர்க் கருளார்,
போய்மலை ஏறி வெறுங்கருங் கற்கே
பொன்முடி, முத்தணி புனைவார்
ஏய்ந்தபுன் மடமை இதுகொலோ சமயம்?
ஏழையர்க்கு இரங்குமென் நெஞ்சே! 8

தாய்மொழியைக் கைக் கொள்ளார், நாட்டை நினைத்துப் பாரார், தம் உறவுக்கும் நட்புக்கும் இரங்க மாட்டார்கள், பிற உயிர்களிடத்தில் அன்பு கொண்டு நெகிழ மாட்டார். துடிக்கும் ஏழைகளுக்கு அருள் செய்ய மாட்டார். மலைகளில் ஏறி கற்சிலைக்குப் பொன் முடி சூடுவர், முத்தணி பூட்டுவார்கள், இந்த அற்பத்தனம் பொருந்திய அறியாமைச் செயல்கள் எல்லாம் சமயம் ஆகுமா? அந்த அறிவற்றவர்களுக்காக என் மனம் வருந்தும்.

பாலிலாச் சேய்கள், பசி,பணி யாளர்
பல்துயர் பெருகுமிந் நாட்டில்
பாலொடு தயிர்,நெய், கனி,சுவைப் பாகு
பருப்புநல் அடிசிலின் திரளை
நூலணி வார்தம் நொய்யையே நிரப்ப
நுழைத்தகல் உருவின் முன் படைத்தே
சாலவும் மகிழ்வார் இதுகொலோ சமயம்?
சழக்கினுக்கு அழலுமென் நெஞ்சே! 9

பாலில்லாத குழந்தைகள், பசியுள்ளவர், பணியாளர்கள், பல துயரம் உள்ளவர் எனப் பெருகும் இந்த நாட்டில் பால், தயிர், நெய், கனி, சுவைப் பாகு, பருப்பு, நல்ல பொங்கல் முதலிய குவியல்களை, நூலணிவார் (பார்ப்பனர்) வயிறு நிரப்ப இக்கல் உருவத்தின் முன் படைத்து மிகவும் மகிழ்வர். இது சமயமாகுமா? இந்தத் தீய செயலைக் கண்டு வருந்தும் என் நெஞ்சு!

அன்பிலார் உயிர்கட்கு அளியிலார்; தூய்மை
அகத்திலார்; ஒழுக்கமுமில்லார்;
வன்பினால் பிறரை வருத்துவர்; எனினும்
வகைபெற உடம்பெலாம் பூசி

முன்தொழு கையர்; முறைகளில் தவறார்
முழுகுவார் துறைதொறும் சென்றே!
நன்றுகொல் முரண்பாடு! இதுகொலோ சமயம்?
நடலையர்க்கு உடையுமென் நெஞ்சே! 10

அன்பில்லாதார், இரக்கம் இல்லாதார், மனம் தூய்மை இல்லாதார், ஒழுக்கம் இல்லாதார், வலிமையால் பிறரை வருத்துபவர், உடம்பெலாம் திருநீறும் சந்தனமும் வேறு பலவும் பூசி முன்னால் தொழும் கையினர், தவறாமல் தீர்த்தம் ஆடுவார். இது பெரிய முரண்பாடு அன்றோ? இதுவா சமயம்? நடைப் பிணமாய் இருப்பவர்க்காக என் மனம் வருந்துகிறது.

மெய்யுணர்வு எய்தித் தனைமுதல் உணர்ந்து
மெய்ம்மைகள் விளங்குதல் வேண்டும்
பொய்மிகு புலன்கள் கடந்து பேருண்மை
புரிதலே இறையுணர்வு அன்றோ!
செய்கையால், வழக்கால், அச்சத்தால், மடத்தால்
செய்பொருள் இறைஎனத் தொழுவார்?
உய்வரோ இவர்தாம்? இதுகொலோ சமயம்?
உணர்விலார்க்கு உழலுமென் நெஞ்சே! 11

மெய்உணர்வால் முதலில் தன்னை உணர்ந்து மெய்ம்மையெல்லாம் விளங்கிக் கொள்ள வேண்டும். பொய்யான புலன்களைக் கடந்து பேருண்மையைப் புரிந்து கொள்ளலே இறையுணர்வாம். செய்கையால், வழக்கத்தால், அச்சத்தால், அறியாமையால் செய்யும் செயலை இறை வணக்கம் கொள்ளும் இவர்கள் உய்ய மாட்டார்கள். இதுவா சமயம்? உணர்வில்லாத இவர்களுக்கு என் நெஞ்சம் வருந்தும்.

## தடங்கண் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 24. பட்டினத்துச் சித்தர் ஞானம்

## காப்பு - நேரிசை வெண்பா

நண்பான நெஞ்சுக்கே ஞானத்தால் நல்லபுத்தி
வெண்பாவாய் நூறும் விளம்பவே - பண்பாக்
ககனப் பதமுறவக் கன்ம மருகக்
ககனகதிர் வேல்முருகன் காப்பு. 1

நெஞ்சுடனே தான்புலம்பி நீலநிறத் தாளீன்ற
குஞ்சரத்தை ஆதரித்துக் கும்பிட்டால் - கஞ்சமுடன்
காமமுதல் மும்மலத்தின் கட்டறுத்து ஞானமுடன்
பூமிதனில் வாழ்வரெப் போதும். 2

எப்போது இறைவன் எழுத்தைவிட்டுத் தப்புவோம்
எப்போது எழுத்திரண்டை ஏத்துவோம் - எப்போது
காமன் வலையறுப்போம் காரொளியைக் கண்டுநெஞ்சே
ஏமன்வலை அறுப்ப தென்று. 3

*1.* நட்பு முறையில் நெஞ்சுக்கு ஞானத்தால் நல்லறிவு தர, வெண்பா நூறும் சொல்வதற்கு முன்பாகவே, வானில் உள்ள பதவி பெறவும் இருவினைகள் மயங்கவும் கதிர் வேல் முருகன் காக்க வேண்டுகிறேன்.

2. நீலநிறப் பார்வதி பெற்ற யானையை அன்புடன் நெஞ்சு புலம்பிக் கும்பிட்டால், பலவித ஆசை, பற்று ஆகியன நீக்கி, மும்மலத்தின் கட்டை அறுத்துப் பூமியில் ஞானத்தோடு எப்போதும் வாழ்வர்.

3. இறைவன் திருநாமமாகிய திரு ஐந்தெழுத்தை ஓதி மாயப் பிறப்பிலிருந்து எப்போது தப்புவோம்? ஓம் எனும் எழுத்தை எப்போது வணங்கிப் போற்றுவோம்? மன்மதன் வீசும் காம வலையை அறுப்பது எப்போது? சூரிய

ஒளியைக் கண்டு கருப்பு நீலமாம் இயமனின் வலையை எப்போது அறுத்திடுவோம்?

என்றும் பயமறவே ஈரெழுத்தும் ஓரெழுத்தாய்
நின்றசிவ லிங்கத்தை நெஞ்சேகேள் - உண்டுறங்கித்
தேசமெல்லாம் நின்றசைந்த தீயெழுத்தே லிங்கங்காண்
ஆசைவிந்தே ஆவுடை யாள். 4

ஆவுடையா ளோடிருந்தேன் அருளானந் தம்பெறவே
கோவுடையாள் நின்றதினம் கூடிய - பூவுடையாள்
கட்டழகி யைத்தான் கடந்து பெருவெளியில்
இட்டமுடன் நெஞ்சே இரு. 5

இருவினைக்கு உளாகாதே என்னுடைமை எண்ணாதே
பெருகு சினங்கொண்டு பிணத்தாதே - மருவுமலக்
கள்ளமெலாம் விட்டுக் கரைந்து கரைந்துருகி
உள்ளுணர்ந்து நெஞ்சேபார் ஒன்று. 6

ஒன்றும் அறியாதே ஓடி அலையாதே
சென்று மயங்கித் திரியாதே - நின்ற
நிலைபிரியா தேநெடிய னெஞ்சே கொடிய
புலைவினையும் மாற்றும் பொருள். 7

4. என்றும் பயமில்லாதிருக்க 'ஓம்' எனும் ஈரெழுத்தை ஓர் எழுத்தாக ஓதுவோம். நெஞ்சே! சிவலிங்கமாக நிற்பது எது என்று கேள். உண்டாலும் உறங்கினாலும் உடம்பு முழுதும் பரவிய ஒளியைத் தூண்டும் எழுத்தே 'ஓம்' என்பதாகும். அத்தீ நடுநாடியில் தூணாக நிற்பது லிங்கமாகும். உடம்பில் விந்துவாகப் பரவிய ஒளியே ஆவுடையாள் ஆகும்.

5. நெஞ்சே! ஆவுடையாளுடன் நான் இருந்தேன். (ஆவுடையாள் ஆதாரத் தாமரைகள்) அருளானந்தம் பெற

சிவனுடன் அவள் கூடும் நாளில் (பங்குனி உத்திரம்) அக் கட்டழகியை விடுத்து, உச்சந்தலைப் பெருவழியில் விருப் புடன் இருப்பாயாக.

6. இருவினைகளால் தாக்கப்படாமல், பொருளில் பற்றில்லாமல், சினம் கொண்டு சச்சரவு செய்யாது, மருவும் கள்ளம், மலம் யாவும் கரைந்து கரைந்து வெளியாகுமாறு உருகி, நெஞ்சே உள்ளுணர்ந்து பார்.

7. நெஞ்சே! ஒன்றையும் அறியாது ஓடி அலையாது, குழம்பித் திரியாது, நின்ற நிலையிலிருந்து பிரியாமல், நிற்பதே புலைவினையையும் மாற்றும் வழியாகும்.

(கொலை உணர்வு - புலைவினை)

பொருளுடைமை நம்பாதே பொய்வாழ்வை நத்தாதே
இருளுறவை நம்பி இராதே - பொருளுறவு
கொண்டறிவி னாலே குறித்து வெளியதனைக்
கண்டுபிடித் தேறுநெஞ்சே காற்று. 8

காற்றுடனே சேர்ந்து கனலுருவைக் கண்டவழி
மாற்றி இனிப்பிறக்க வாராதே - ஏற்றபடி
ஓடி அலையாதே ஓங்காரத் துள்ளொளியை
நாடியிருப் போம்மனமே நாம். 9

நானென தென்றுவினை நாடி அலையாதே
தானவனே யென்று தரியாய்நீ - என்மனமே
வீணாவல் கொள்ளாதே மேலாம் பழம்பொருளைக்
காணாவல் கொள்ளாய் கருத்து. 10

கருத்து வேறாகாதே கண்டிடத்து ஓடாதே
விரித்துப் பலவேடம் மேவாய் - பெருத்ததொரு
சஞ்சலத்தை விட்டுச் சலமறிந்து காண்மனமே
அஞ்செழுத் தாலொன் பது. 11

*8.* நெஞ்சே! பொருட் செல்வத்தையும், பொய் வாழ்வையும், மயக்கம் தரும் உறவையும், நம்பாதே. நற் பொருளை அறியும் அறிவினால் குறிக்கொண்டு, வெளியை மனத்தால் தியானித்து, பிராணாயாமம் செய்தபடி நடுநாடி வழியாக மேலே ஏறுக.

(வெளி - உச்சந் தலைக்கு மேலே உள்ள இடம். நடுநாடி - சுழுமுனை நாடி.)

*9.* மனமே! மூச்சு வழியே சேர்ந்து குண்டலினி நெருப்பைக் கண்டு, இனிப் பிறக்காமல் இருக்கும் வழியைக் காண். இதற்கு ஒரே வழி ஓம் என்ற ஒலியை நடுநாடி வழியாக உச்சந்தலையை நோக்கி நாடுக.

*10.* என் மனமே! நான் என்றும், எனது என்றும் கர்ம வினைகளை நாடி அலையாது, தலைவனே என்று தயங் காமல், வீணாவல் கொள்ளாது, மேலாகிய பழம் பொருளைக் காண ஆவல் கொள்க. கருத்துடன் கொள்க.

*11.* மனமே! கருத்து வேறுபட்டுச் சச்சரவு கொள்ளாதே. கண்ட இடத்தில் ஓடித் திரியாதே. பல வேடங்கள் போடாதே. பெரும்சஞ்சலத்தைக் கைவிட்டு, போகும் வழியறிந்து, ஐந்து எழுத்தால் ஒன்பது துவாரமும் அடைபட நின்று ஓடுக.

ஒன்பது வாய்க்கூட்டை உறுதிஎன்று நம்பாதே
ஐம்புல னேயென் றணுகாதே - இன்பமுடன்
சிற்பரத்தி னுள்ளே தெளிந்தபர மாணந்தத்து
உட்பொருளே மெய்யென் றுணர். 12

மெய்யுணர்ந்து பாராமல் விரிந்தகன்று போகாதே
அய்யன் திருவிளையாட்டா நெஞ்சே - செய்யதோர்
ஆணெழுத்தும் பெண்ணெழுத்து மாகி நடுநின்ற
காணும் பொருளுரைக்குங் கல். 13

கல்லான நெஞ்சே கவலைக் கருத்தாகிப்
பொல்லாப் பவக்கடலில் போகாதே - எல்லாம்
சலக்குமிழி யென்றுநினை செம்பொன்னம் பலத்தைக்
கலக்கமறப் பார்த்தே கரை. 14

கரைதெரியா இன்பக் கடலில் மூழ்காதே
வரைகடந்த வாழ்வைநத் தாதே - உரையிறந்த
ஓசைவிந்து வேமனமே உற்றசபை யாலறிந்து
நேசமுள்ள பாக்கியத்தில் நில். 15

*12.* ஒன்பது வாசல்களையும் உறுதி என்று நம்பாதே. ஐம்புலன் வழியே செல்லாதே. இன்பம் என்பது சித்தத்தில் வரும் பரம்பொருளால் தெளியும் பரம ஆனந்தமே மெய் என்று உணர்க.

(ஒன்பது துவாரம் - ஒன்பது வாசல்கள்)

*13.* நெஞ்சமே! உண்மையை உணராமல் வெளியேறாதே. இறைவன் திருவிளையாட்டாக ஆண் எழுத்தும், பெண் எழுத்துமாகி நடுநிற்கும் பொருளை உணர்ந்திடக் கற்பாயாக.

(அ-ஆண் எழுத்து, உ-பெண் எழுத்து, ம் - அலி எழுத்து. இவையே ஓம் ஆகும்)

*14.* கல்மனமே! கருத்தில் கவலை கொண்டு, பொல்லாத பிறவி என்னும் கடலில் போகாதே. எல்லாம் நீர்க்குமிழியாக அழியும் பொருள் என்று நினைக. செம்பொன்னம்பலத்தைக் கலங்காமல் பார்த்து அழைத்திடுக. (பவம் - பிறவி)

*15.* கரை தெரியாத சிற்றின்பக் கடலில் மூழ்காதே. வரையறை அற்ற வாழ்வை விரும்பாதே. சொல் கடந்த நாதம் விந்து என்பனவற்றை மனமாகிய சபையில் அறிந்து நேசமுடன் பாக்கிய வழியில் நில். (யோகமே பாக்கிய வழியாம்)

பாக்கியத்தைக் கண்டு பரிந்து மகிழாதே
தாக்கும்இடி வந்தால் சலியாதே - நோக்குமே
ஒருத்தன் திருவிளையாட் டென்றுஉணர நெஞ்சே
கருத்தாலே நின்று கருது. 16

கருதாதே மங்கையர் காமவலைக்கு ஏங்கி
உருகாதே நெஞ்சே ஒருவன் - இருகாலைக்
காத்தயர்ந்து சேர்த்துக் கனலைக்கண் காட்டினகண்
போற்றிப்பார் ஒத்தநல் பொன். 17

பொன்னாசை மண்ணாசை பூங்குழலா ராசையெனச்
சொன்னாசை யென்றறிந்து சோராதே - எந்நாளும்
ஈசன் அமைத்தாங்கு இருக்குங்காண் ஐம்மூன்றும்
பாசமது நெஞ்சே பரிந்து. 18

பரிந்து திரியாதே பார்வினைக்கும் அஞ்சாதே
அறிந்துருகிச் சிந்தித் தலையேல் - வருந்தி
நடந்துசித்ர நாடியிலே நாதமறி நெஞ்சே
உடைந்திடு முன்னே உடம்பு. 19

*16.* நெஞ்சே! பாக்கியத்தைக் கண்டு உடனே மகிழ்ந்தி டாதே. இடிபோல் தடை வந்து தாக்கினாலும், தளராதே. ஒருவன் (கடவுள்) திருவிளையாட்டைக் காண்பதே நோக்கம் என்று கருத்தால் கருதிப் பார்ப்பாயாக.

*17.* நெஞ்சே! மங்கையர் காமவலைக்கு ஏங்கி நிற்காதே; இன்புற உருகாதே. இரு காற்றையும் பேணிக் குண்டலினி நெருப்பைக் கண்ணால் காட்டியபின் அதையே போற்றி இருப்பதே பொன் ஒளி பெறும் வழியாம்.

*18.* நெஞ்சே! மண், பெண், பொன் ஆகிய மூன்று ஆசைகளையும் விரும்பிச் சோர்வடையாதே. எந்நாளும் ஈசன் யார் யார்க்கென இந்த ஆசைகளை அமைத்தானோ அவர் அவர்க்கே அவை கிடைக்கும் என்று உணர்க.

*19.* நெஞ்சே! எப்பொருளையும் விரும்பி அலையாதே. உலகத் தொழில்களுக்காக அஞ்சாதே. பலவற்றையும் சிந்தித்து அலையாதே. அதற்குப் பதில் சித்திர நாடியில் நாதத்தை அறிந்திடு. இப்படி அறியும் போதே முன்னதாக உடம்பு உணர்வு இற்றுப் போகும்.

உடம்பழிந்த பின்மனமே ஒன்றுங் கிடையாது
உடம்பழியு முன்கண்டு உணராதே - உடம்பிற்
கருநிறத்தைச் சேர்ந்து கருமலச் சிற்று அற்றுப்
பருகு கலைமதியப் பால். 20

பாலிக்கும் தோல்தனத்தை பாராதே மங்கையர்கள்
காலிடுக்கை நத்திக் கரையாதே - கோலெடுத்து
வீர மறலி இவருமுன் வினையறுக்கும்
பாரவழி இன்னருளைப் பார். 21

பார்த்த இடமெல்லாம் பரமென் றிருமனமே
காற்றனல்மண் நீர்வெளியாம் கண்டவெல்லாம் - மாத்திரண்ட
ஐம்புலனும் நில்லா ஆசைகளும் நில்லாவே
என்புடலும் நில்லாது இனி. 22

இனியசுகம் ஐம்புலனென்று எண்ணாதே நெஞ்சே
இனிய சுகமற வாதே - இனியசுகம்
கண்டதெல்லாம் எவ்வுலகு காணாத இவ்வுலகில்
நின்றதோ நில்லா ததோ. 23

*20.* மனமே! உடம்பு அழிந்தால் எதுவும் இங்கு இயற்ற முடியாது. அதற்கு முன் கண்டு உணராமல் உடம்பில் கருநிறமான (நீலம்) பெண்ணைச் சேர்ந்து கரிய மலம் சிறிதுமின்று யோகப் பாலை (அமுதத்தை) உண்பாயாக.

(சிற்று அற்று - சிறிது அளவும் இல்லாமல்)

21. மங்கையர் உடலும் மார்பகமும் பெண்குறியும் விரும்பித் தளராதே. இயமன் வந்து உன் வாழ்வை முடிக்கும் முன்பே இறையருளை விரும்பிப் பார். (மறலி - இயமன்)

22. மனமே! உலகில் பார்க்கும் இடமெல்லாம் பரம் பொருள் இருப்பதாக உணர்க. ஐந்து பூதங்களும், ஐந்து புலன்களும், ஆசைகளும் நிலையாக நிற்க மாட்டா என அறிக.

23. நெஞ்சே! ஐம்புலனும் இனிய சுகம் தரும் என்று எண்ணாதே. உண்மையான இனிய சுகத்தை மறவாதே. எவ்வுலகும் காணாத இனிய சுகம் நிலைத்த பொருளால் வருமா நிலையற்றதால் வருமா என அறிக.

நில்லாமல் ஓடுகின்ற நெஞ்சே நிலையில்லா
எல்லாம் பகையா யிருக்குங்காண் - பொல்லாக்
கருக்குழியி லேபிறந்த கன்மவினை யானால்
திருக்கறுக்க வேணும் தினம். 24

தினந்தினைப்போ தாகிலுந்தான் தீதறநில் லாமல்
இனம்பிரிந்த மான்போல் இருந்தாய் - தினந்தினமும்
ஓங்காரத் துள்ளொளியை உற்றுணர்ந்த நீமனமே
ஆங்கார அச்சம் அறு. 25

அச்சத்தால் ஐம்புலனும் ஆங்காரத் தால்மேய்ந்த
கச்சத்தான் நிச்சயமாய்க் கள்ளதோ - மெச்சத்தான்
அண்டமெல்லாம் ஊடுருவ ஆகாச முங்கடந்து
நின்ற நிலைதான் நிலை. 26

நிலையறிந்து நில்லாமல் நீபாவி நெஞ்சே
அலைமதிபோ லேதினமும் ஆனாய் - கலையறிந்து
மாரனையுங் கூற்றினையும் மாபுரத்தை யும்புகைத்த
வீரனையும் தேட விரும்பு. 27

24. நெஞ்சே! நிலையற்றவை எல்லாம் நமக்குப் பகையே ஆகும். கருக்குழியில் கிடந்து பிறந்தது கன்ம வினையால் என்றால் அதை முழுமையாக நீக்க வேண்டும்.

25. மனமே! நாள்தோறும் தினை அளவு நேரமாவது தீதில்லாமல் இருக்காமல் இனத்தை விட்டுப் பிரிந்த மான் போலக் கலக்கமாய் இருந்தாய். நீ நாள்தோறும் ஓங்கார ஒலியின் உள்ளே உண்டாகும் ஒளியை உற்று உணர்ந்து, ஆங்காரமும் அச்சமும் இல்லாதே இரு.

26. ஐம்புலன்களும் அச்சத்தாலும், அகங்காரத்தாலும் சிறுகும் கள்ளத்தனமாய் நம்மைக் குழப்பும். யாவரும் மெச்சிட அண்ட வெளி எல்லாம் ஊடுருவி, ஆகாசத்தை யும் தாண்டி நிற்கும் நிலைதான் நிலையானது ஆகும்.

27. நெஞ்சே! நிலையறிந்து நில்லாமல் நீ அலையும் நிலவு போல் ஆனாய். பாவனையால் மன்மதனையும், இயமனையும், முப்புரத்தையும் எரித்துத் தண்டித்த சிவனையே நாடி இருப்பாயாக.

விரும்பித் தனித்தனியே மெய்யுணரா தேமா
இரும்புண்ட நீர்போல ஏகும் - கரும்பதனைத்
தின்றாலல் லோதெரியும் நெஞ்சேநின் ஐம்புலனை
வென்றாலல் லோவெளிச்ச மாம். 28

வெளிச்சமில்லா வீடே விளக்கேற் றினதாக்
களிசிறந்து நின்றதைக்கா நெஞ்சே - வெளிச்சமற
தொண்ணூற் றறுதத் துவமொன்றாய்த் தோன்றுங்காண்
எண்ணிலிவை காணாது இருட்டு. 29

இருட்டனைய மாய்கையா லெவ்வுலகுந் தாய
பொருள்தனையே மூடு ஐம்புலனால் - திருட்டுமன
வண்டருடன் கூடாதே வாழ்மனமே நாமிருவோர்
கண்டுகொள்வோம் காணா தது. 30

காணா ததைக்கண்டால் கண்டதெல்லாங் காணாது
வீணாவல் கொண்டுள் மெலியாதே - நாணாதே
இந்திரியத் தோடு பிணங்காதே பாவிநெஞ்சே
செஞ்சொல்மறை அக்கரத்தைத் தேடு. 31

28. நெஞ்சே! விருப்பத்துடன் தனித்தனியே உண்மையை உணராது கரிய இரும்பு உண்ட நீர் ஆவியாகி மறைதல் போல் மறைகின்றாய். கரும்பைத் தின்றதும் சுவை அறிதல் போல முயன்றாலே பலன் கிடைக்கும். ஐந்து புலன்களையும் வென்றால்தான் அறியாமை இருள் நீங்கும்.

29. நெஞ்சே! வெளிச்சமில்லாத வீட்டில் விளக்கை ஏற்றியது போல் களிப்படையும் நெஞ்சைக் காப்பாற்றுக. அறியாமையால் வெளிப்படாத 96 தத்துவங்களும் மெய்யறிவினால் வெளிப்பட்த் தெரியும் என உணர்க

30. மனமே! இருட்டுப் போன்ற மாயை எவ்வுலகிலும் பரவி உள்ளதால், எல்லாப் பொருள்களின் உண்மையையும் ஐம்புலன்கள் மறைத்து விடுகின்றன. கள்ளத்தனமாய் வாழும் மற்றைய கயவர்களுடன் கூட்டுறவு கொள்ளாதே.

(வண்டன் - தீய கயவர்கள்)

31. நெஞ்சே! காணாததைக் கண்டால் கண்டதெல்லாம் காணாது போகும். ஆகவே வீண் ஆவல் கொண்டு மெலியாதே. நாணப்படாதே. இந்திரியத்தோடு முரண் படாதே. வேதத்தில் கூறிய ஓங்காரத்தைத் தேடு.

தேடினா லைந்துதிரு வக்கரத்தைச் சென்றுவெளி
நாடினால் நெஞ்சே நலம்பெறலாம் - வாடியே
பொல்லாப் புவிகாணப் போகமதை நம்பாதே
எல்லாம் வெயில்மஞ் சளே. 32

மஞ்சனைய கூந்தல் மடவாரைக் கண்டுருகும்
பஞ்சமல நெஞ்சே பகரக்கேள் - மஞ்சள்

மயங்காணும் இந்தவுடல் மாயவாழ் வெல்லாம்
அயன்காண் அழிசூத் திரம். 33

சூத்திரத்தா லாடும் சுழுமுனையைத் தான்திறந்து
பார்த்திருந்தால் வாராது பாவமெல்லாம் - சூத்திரத்தைப்
பாராம லேயிருந்து பாவிமன மேபிறக்க
வாராம லேயிருக்க வா. 34

வாசி தனைப்பிடித்து வண்கனலோ டேசேர்த்துச்
சீசீ யெனவே திரியாமல் - மாசி
இருளா னதைச்சேர்த்து இருந்தாயே நெஞ்சே
பொருளா னதைமறந்து போட்டு. 35

32. திரு ஐந்தெழுத்தை விரும்பினாலும், மனத்தால் வெளியை நாடினாலும் நன்மையே பெறலாம். வருந்திச் சென்று பொல்லாத உலகத்தைக் காணச் சிற்றின்பத்தை நம்பாதே. எல்லாம் மஞ்சள் பூசிய அழகு வெயிலில் மினுக்குவதேயாகும்.

33. மேகம் போன்ற கூந்தலை உடைய பெண்களைக் கண்டு உருகும் ஐந்து மலங்கள் நிறைந்த நெஞ்சமே! நான் சொல்வதைக் கேள்! இவ்வுடல் மாயவே மஞ்சளில் மயக்கத்தைப் பிரம்மன் ஒரு சூத்திரமாகச் செய்தான் என உணர்க. (அயன் - படைப்புக் கடவுளான பிரம்மன்)

34. உடலில் சூத்திரம் (நூல்) போல் ஆடும் நடுநாடியாம் சுழுமுனையை உணர்ந்து அதன் உள்ளே பாவித்துக் கண்டால் பாவம் தொடராது. பாவி மனமே! இப்படிக் காணாமல் இருந்தால் பிறவி வரும். அதைத் தடுத்துக் கொள்ள வருவாயாக.

35. வாசியால் குண்டலினி நெருப்பை உடம்பில் கண்டு திரியாமல், மாசுள்ள இருளாகவே இருக்கும் நெஞ்சே பொருளானது எது என்று அறிந்து கொள்வாயாக.

போட்டுவிக்கும் பொல்லாப் புழுச்சொரியும் நாய்விடக்கே
கூட்டங் குலைந்து குலைந்திடுமுன் - காட்டிடில்
தாழ்வுறாய் நெஞ்சே தராதர மாயெங்கும்
மூழ்வா னதையுயிர்போம் முன். 36

முன்னே யயனெழுதும் மூன்றுவினை கண்டுழன்று
பின்னும் தெரியலையோ பேய்மனமே - தன்னை
அறியா திருந்தால் அவனறி வானோ
குறியான புத்தியென்றே கொள். 37

கொள்கைக்குட் பட்டுக் குடிகேட ரோடிருந்து
கள்ளக் கருத்தால் கருதாதே - மெள்ளமெள்ள
ஆய்ந்தாய்ந்து பார்த்துநீ ஆறாறுக்கு அப்பாலே
தேர்ந் தாய்ந்து பார்த்துத் தெளி. 38

தெளிந்தநீர் பட்டமுதம் சேர்ந்தால் தெளியா
தெளிந்தநீர் காட்டா தவைபோல் - தெளிந்தால்
சகலப் பொருள்தோற்றும் தாழ்வுறா தொன்றும்
பகலிரவில் லாத பதி. 39

**36.** நெஞ்சே! பிணமான பின்னர் நாய்க்கும் நரிக்கும் உணவாகக் கூடிய இவ்வுடலை விட்டு உயிரும் பிரிவதற்கு முன் தராதரம் அறிந்து நல்வழியே செல்க.

**37.** பேய் போன்ற மனமே! பிரமன் மூன்று வின்னை களையும் பிறப்பில் இணைப்பான். அது பிறகே தெரிய வரும். தன்னை அறிந்தால் தடுக்கலாம். இல்லாவிட்டால் அவன் அறிவானோ? ஆகவே புத்தியில் குறித்துக் கொள்க.

**38.** குடிகெடுக்கும் நயவஞ்சகரோடு சேர்ந்து கொண்டு அவர்களின் கள்ளக் கருத்துக்கு உன் உள்ளத்தைப் பறி கொடுக்காதே. நன்கு ஆராய்ந்து 36 தத்துவங்களுக்கும் அப்பால் மெல்லத் தேர்வாய் ஆய்ந்து தெளிவாயாக.

39. தெளிவாய் அமுதம் சேர்ந்தால் பிறகு தெளிய வேண்டாம். தெளிவை அது காட்டாது. தெளிவானால் எல்லாப் பொருள்களையும் தெரியச் செய்யும். இரவும், பகலும் இல்லாத சிவலோகமே என்றும் தாழ்வடையாது என்பதனை அறிந்து கொள்.

பதிபசுபா சங்களையும் பற்றி யுருவப்
பதிதனிலே தங்கிப் பலரும் - கதிபெறவே
வீணாமோ நெஞ்சேகேள் வேதாந்தத் துட்பொருளைக்
காணா மலாமோ கணக்கு. 40

கணக்கறியா மாயக் கருவிகர ணாதிப்
பிணக்கறியா மற்பேதை நெஞ்சே - இணக்கம்
அறிந்திணங்க வேணும் அருள்வெளியின் உள்ளே
செறிந்தவிந்து நாதத்தைச் சேர். 41

சேராதே மாய்கைதனை சேர்ந்து கருக்குழியைப்
பாராதே நெஞ்சே பதையாதே - சீரான
சித்திரத்தைப் பார்த்துத் தினமேஅச் சித்திரத்தில்
உத்திரத்தைக் கொள்ளாய் உகந்து. 42

உகந்து உகந்து நெஞ்சமே ஓரெழுத்தி னாலே
அகந்தனையே சுத்தி பண்ணி பாய்ந்து - முகந்து
குடியாம லாமோ குலவுமல மான
மிடியா னதுதீர வேண்டி. 43

40. பதி, பசு, பாசம் இவற்றை முழுதுணர்ந்து, பதியில் (கடவுளில்) தங்கிப் பலரும் மோட்சம் பெறலாம். அது இல்லாது வீணாகலாமோ? நெஞ்சமே கேள். வேதாந்தத்தின் உட்பொருளைக் காணாமல் எந்த முடிவும் இல்லை. அதுவே சரி.

41. மாயக்கருவி, கரணம் ஆகியவற்றின் பிணக்கை அறியாதிருக்கும் அறிவற்ற நெஞ்சே! இறை அனுபவத்தில்

ஐக்கியமாகும் நிலையை உணரவேண்டும். ஆகவே விந்து நாதத்தை உடலின் இருப்பறிந்து காண்க.

**42.** நெஞ்சே! மரணத்தைச் சேராதே. கருக்குழியில் மீண்டும் பிறக்காதே. பிறகு பதைக்காதே. சிறப்பு மிக்க சித்திரத்தைப் பார்ப்பது போல் தியானத்தில் கண்டு அதையே வழியாகவும் கொள்.

**43.** நெஞ்சமே! உகந்து உகந்து ஓங்காரமாகிய ஓர் எழுத்தால் மனத்தை தூய்மைப்படுத்துக. தாகம் மிகுந்தால் கையால் முகந்து நீரைக் குடிக்காமல் இருக்க முடியுமோ? அது போல் மனத்தையும் தூய்மை செய்க.

வேண்டுந் திரவியமும் மேலுயர்ந்த பள்ளியெல்லாம்
ஆண்ட திரைநாடும் அம்பலமும் - மாண்டுபெருங்
காடுயர்ந்தா ரேமனமே கண்டாயோ மாயனயன்
தேடரிய ஈசன் செயல். 44

செயமகா நெஞ்சே திருட்டுமலக் கோட்டை
பயமறவே வெட்டிப் பரப்பி - நயமான
வாசியினால் சுட்ட மதிமயங்கக் கண்டிருப்போம்
பேசியநாம் பேசாம லே. 45

பேசாத ஞானப் பெருமைக் கிடப்பதுதான்
ஆசாபா சங்களில்லா தார்க்கல்லோ - கூசாமல்
தேசமெல்லாம் ஓடித் திரிகின்றா யேமனமே
ஆசாபா சங்களும்நீ யாய். 46

பாசங் களைந்து பதியி லிருந்துகொண்டு
பேசரிய காலைப் பிடித்திருக்க - நேசமுடன்
நாமிரு வர்கூடி நாதாந்த ஞானத்தைத்
தாமொருவ னாயிருக்கத் தங்கு. 47

**44.** நெஞ்சே! வேண்டுமளவுக்குப் பொருட் செல்வம் உயர்ந்து, (கோயிலாகிய) பள்ளியெல்லாம் ஆண்டு, கூத்தாடும்

அம்பலமும் ஆண்டு, பிறகு சுடுகாட்டிற்கும் சென்றார். அவரே திருமாலும், பிரமனும் அறியாத சிவன் ஆவார்.

45. மனமே! வஞ்சமான மலங்கள் கொண்ட கோட்டையைப் பிளந்து பரப்பி, விரும்பும் பிராணாயாமத்தால் மதியும் மயங்குமாறு கண்டிருப்போம். மவுனத்தையும் இதனுடன் கைக்கொள்வோம்.

(மலக் கோட்டை - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களால் சூழப்பட்ட உடல். வாசி - பிராணாயாமம்; மூச்சுப் பயிற்சி செய்தல்)

46. மவுனத்தின் பெருமை தெரிந்ததே. இது ஆசாபாசம் இல்லாதவர்க்கே நடக்கும். ஆகவே மனமே, நீ கூச்சமில்லாது ஆசாபாசத்தோடேயே திரிகிறாய். அதை விடுக.

47. பாசத்தை நீக்கி உரிய இடத்தில் இருந்து, பிராணாயாமம் (கால்) செய்து கொண்டு, நேசமுடன் இருநாடிகளுக்கு நடுவிலான ஒரு நாடியாய் (சுழுமுனை நாடியாய்) நீ தங்கி இரு.

(கால் - பிராணாயாமம் என்னும் மூச்சுக் காற்று)

தங்கு நெடுவளையில் சகலங் களுங்கடந்து
எங்குநான் தானா யிருக்காமல் - மங்கு
கருவானாய் நெஞ்சே கரிக்கால தூதன்
வருவானே யென்ன வகை. 48

என்னவகை செய்வோம் எமதூதன் வந்தக்கால்
பின்னையென ஒட்டானே பேய்நெஞ்சே - சொன்ன
படியேகேள் தூதன் பரிந்துவரு முன்னே
அடிதேடிக் கொண்டே அவர். 49

அமரும் மனம்புத்தி யாங்கார மேசித்
தமரும் பொழுதும் வேறானோர் - அமரும்
கோவென் றுரைத்தநமன் கொண்டுபோம் போதறிவு
வாவென்றால் நெஞ்சேவா ராது. 50

வாராது நெஞ்சே மயக்கம் வருமுன்னே
வேரா னதைப்பிடித்து மேலேறிப் - பாராமல்
பொய்யிலே நில்லாதே புத்திகெடா தேயிருந்தால்
மெய்யிலே நின்றறிவோம் மெய். 51

48. நெஞ்சே! மூலாதாரம் என்னும் நெடுவளையி லிருந்து எல்லாப் பகுதிகளையும் கடந்து, எங்கும் நானாகவே நிறைந்து நிற்காமல், இருந்ததால் மறுபடியும் கருவில் சேர்ந்தாய். மீண்டும் காலன் (இயமன்) உயிரை எடுக்க வருவானே என்ன செய்வது?

49. இயமதூதன் வந்தால் என்ன செய்வது? பிறகு வரலாம் என நீங்கானே! ஆகவே நெஞ்சே இயமதூதன் வருமுன் அடியைத் தேடி முயற்சி செய்க.

50. நெஞ்சே! மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்ற நான்கும் இயமன் வரும்போது நம்மிடம் சேரா. அறிவே வா என்று அப்போது அழைத்தாலும் வராது.

51. நெஞ்சே! மரணம் வருவதற்கு முன் வேரானதைப் பிடித்து மேல் ஏறிப் பாராமல் பொய்யானவற்றை நம்பி அதிலேயே நிற்காதே மெய்யிலேயே நிற்பாயாக.

மெய்யாறு வீடுகளாய் மேலாம் படைவீடாய்
ஐயாறு மாதம் அறுபதாய் - மெய்யாகக்
கண்டதெல்லாம் நானேகாண் காணா ததைத்தேடிக்
கண்டுருகி நெஞ்சே கனி. 52

கனியருந்த மாட்டாமல் காயருந்து கின்றாய்
கனிருசிபோ லாகுமோ காய்தான் - இனியதுகேள்
நானும் நீயும் கனிகாண் நடுவிருந்த தேருசிகாண்
தேனும் பாலும்போல் சிவன். 53

சிவதலங்க ளைத்தேடிச் சீயெழுத்த றுத்துச்
சிவதலங்க ளைத்தேடிச் சேரா - தவதவங்கள்

பண்ணாதே நெஞ்சேகேள் பாரவினை வந்தக்கால்
எண்ணாதே அஞ்சியேங்கா தே. 54

ஏங்காதே நெஞ்சேகேள் எவ்வினைகள் வந்தாலும்
ஏங்காதே சற்றும் இளைக்காதே - தாங்காமல்
கொண்டவனும் செத்தவனும் கூட்டத்தா னும்வந்தான்
இன்றுகுறித் துண்மையிதென் றெண். 55

52. நெஞ்சே! உடம்பில் ஆதாரவீடுகள் ஆறு, மேலே தலையில் படைவீடாம் முப்பது அல்லது அறுபது மாதம் பயிற்சி செய்ய, மெய்யாய் அனைத்தையும் காணலாம். காணாததையும் காண நீ உருகிக் கனிக.

53. கனி இருக்க அதை விட்டுக் காயை அருந்துகிறாய். (கனி - நல்வழி, காய் - தவறான வழி) கனியின் சுவை போல் காய் சுவைக்காது. இனிய வழியைக் கேள். நானும் நீயும் நடுவிலிருந்து கனியை உண்டு, சிவன் தேனாகவும், பாலாகவும் இனிப்பதைக் காண்போம்.

54. நெஞ்சே! சிவத்தலங்களைத் தேடி, 'சி' என்னும் எழுத்தைத் தனியே சொல்லுக. அதுவன்றிச் சிவத்தலங் களில் பலிக்காத தவம் செய்வது வீண். வினை முதிர்ந்தால் அப்போது அஞ்சிப் பயனில்லை. (சிவாய என்பதில் 'சி' என்பது சிவன் எழுத்து)

55. வெவ்வினைகள் வந்தாலும் நெஞ்சே ஏங்காதே! கேள். சற்றும் தளராதே! சாகச் செய்யும் இயமனும், கூடுவ தற்கு உரிய கடவுளும் வந்தான் என்பதை உண்மை எனக் குறிக்க வேண்டும் என்று எண்ணுக.

எண்ணரிய நெஞ்சே இனியநற் பாலதனை
அன்னந்தண் ணீர்நீக்கி யேயிருந்து - தன்மைபோல்
தனைக் களைந்து தூயவெளி யூடுருவாய்
இன்பங் களைச்சேர்ந் திரு. 56

சேர்ந்திருவோ ரும்பாலும் தேனும்போ லேகலந்து
வார்ந்ததிலே யுள்ளுருசி வாங்காமல் - போங்காலம்
வைத்தமறக் காலன் வருவானே வந்தக்கால்
ஏய்த்திடுவான் நெஞ்சே எவன். 57

எவனிருந்து நெஞ்சே எதிர்ப்பாரு முண்டோ
கவனமற நின்று கருதின் - புவனமெல்லாம்
வித்துயிரெல் லாங்கழண்டு விண்ணடைந்த தேமனமே
மற்றுடலை உண்கிறதே மண். 58

மண்ணெழுந்தும் நீரெழுந்தும் வாய்வெழுந்தும் தீயெழுந்தும்
விண்ணெழுந்துங் கூடிஒரு வீடாகி - நண்ணரிய
மாயமெல்லாம் உண்டாக்கி வைத்தான் காண்நெஞ்சேஇக்
காயமெல்லாம் நானாக் கரு? 59

56. நெஞ்சே! பாலில் கலந்த நீரை நீக்கிப் பாலை மட்டும் அருந்தும் அன்னப் பறவை போலத் துன்பங்களைக் களைந்து தூயவெளி வழியாக ஊடுருவி இன்பத்தைச் சேர்வாயாக.

57. நெஞ்சே! பாலும், தேனும் போலக் கடவுளும், நானும் கலந்து இருந்தாலும் யோகத்தில் வெற்றி பெறா விட்டால் உயிர்போகும் காலத்தில் இயமன் வருவான். அப்போது நம்மை ஆதரிப்பவர் யார்?

58. நெஞ்சே! கவனித்து நோக்கும் போது, ஊழிக் காலத்தில் உயிர்கள் உடலிலிருந்து நீங்கி விண்ணை அடைகின்றன. மண் உடல்களைத் தின்னுகிறது. இதை யார் மாற்ற முடியும்? (யோகத்தால் மட்டுமே மாற்றலாம்)

59. நெஞ்சே! நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகிய ஐந்து பூதங்களும் ஒன்றாய்க் கலந்து, உடல் எனும் வீடாகி, பெற வியலாத மாயமெல்லாம் பெய்து (உடலை) அமைத்தான். இதற்கு நான் காரணமாக முடியுமா?

கருவழிந்தால் வித்தையில்லாக் காரணம்போல் நெஞ்சே
கருவழிந்த தெல்லாமும் கண்டதெல்லாம் - கருதித்
திரியாதே நெஞ்சே சிவன்செயலே யல்லால்
மரியாரில் லாதக்கால் வந்து. 60

வந்ததுவும் நாதாந்த வாதனைக்கண் டேவணங்கித்
தந்திரமாய்ச் சென்று தரியாமல் - அந்தரத்தில்
விட்டபட்டம் போலலைந்து வெவ்வினையி னால்மனமே
தட்டுகெட்டுப் போகாதே தான். 61

தானந் தவமுயற்சி தாளாண்மை யோடுநெஞ்சே
வானம் பிளந்து வழிகூடின் - நானுமதில்
நீயும் ஒருநிழலில் நின்றங்கு இளைப்பாறி
தோயுமதி தானே தொடங்கு. 62

தொடங்கு வினையறுத்து சுற்றமெலா நீத்தே
அடங்கு மிடத்தில் அடங்காமல் - கிடந்து
பறந்தெடுத்த குஞ்சாய் பதைத்தாய் மனமே
அரும்புசரத் தம்மத னடி. 63

*60.* நெஞ்சே! வித்து இல்லாது கரு உண்டாகாது. இக் காரண காரியம் போல், கரு அழிந்தாலும் இக்காரணம் இல்லாதே போக வேண்டும். ஆகவே காணப்படும் எல்லாமே சிவன் செயலே ஆகும். ஆகவே (மரித்தல்) சாதல் இல்லாத ஒரு காலம் தானாக வருவதில்லை.

*61.* மனமே! நாதாந்தத்தின் மேல் செய்யும் முயற்சியை வணங்கிப் பெறுவாயாக (தந்திரம் - ஆகமம்) என்பதே ஆகமம். அதைக் கைவிட்டு அந்தரத்தில் கைவிடப் பட்ட பட்டம் போல் அலைந்து திரிந்து உன் நிலை கெட்டுப் போகாதே. (வினை வசத்தில் அகப்படாதே.)

(வாதனை - முயற்சி. தந்திரம் - ஆகமத்தில் கூறப்படும் நெறி முறை)

62. நெஞ்சே! தானம் செய்தல், தவத்தை முயன்று கடைப்பிடித்தல் ஆகியவற்றால் சிவலோகம் தானே வழி காட்டும். அங்கே நீயும், நானும் எதிர்ப்பட்டு ஒரு மர நிழலில் நின்று இளைப்பாறிச் செல்லலாம்.

63. மனமே! செய்யும் செயலைச் செம்மையாகச் செய்து, சுற்றத்தை விட்டு மனம் அடங்கும் இடத்தில் அடங்காமல் பறந்த குஞ்சாகப் பதைபதைத்தாய். காமத்தை விடு. (குஞ்சு பறக்க நினைத்தால் முழுதும் முடியாது. மனித முயற்சி இப்படிப்பட்டது. எனவே யோகம் பயில்க என்பதாம்)

மதனசரத் தால்மனமே வையம் மயங்கி
விதனத் துறலால் வேறில்லை - மதனாலே
தத்துச் சுகத்தைநத்தித் தானலைய வேண்டாங்காண்
மெத்தச் சுகத்தை வெறுத்து. 64

வெறுத்துவெருக் கொண்டதுபோல் வீணிலே நெஞ்சே
பொறுத்த மயக்கிற்போ காதே - குறித்தெடுத்துத்
தேடியே வாசிதனைச் சேர்ந்து கலந்தபொருள்
கூடினா லாமே குணம். 65

குணங்கள் பலவிதமாய்க் கொள்ளாதே நெஞ்சே
வணங்குங் குணமாக வந்து - வணங்கியே
மண்டலமெ லாங்கடந்து மாவீட்டை நீதிறந்து
கண்டெடுத்துக் கொள்வாய் கனம். 66

கனதனத்து மாதர் கழிகாதல் கொண்டே
வினையார் நகைக்குருக வேண்டா - தினமனமே
சோதித்தா னல்லால் சுபகா ரியமாகப்
போதித்தால் கொள்விலையோ புத்தி. 67

64. மனமே! மன்மதன் அம்பால் உலகில் மயக்கம் அடைந்து துன்பப்படுவது தவிர வேறு வழியில்லை.

காமத்தை இன்பமாகக் கருதி அலையாதே, அதை ஒழித்து விலகுக.

65. நெஞ்சே! வெருவுதல் கொண்டு வீண் செய்கையில் மயங்கிப் போகாமல் குறிக்கோளுடன் பிராணாயாமம் செய்து இறைவனுடன் கூடுதலே நலமாகும்.

66. நெஞ்சே! பலவிதமான குணங்களில் ஆட்படாதே. வணக்கமாக இருக்கும் குணத்தையே விரும்பு. யோகத்தால் எல்லா மண்டலங்களையும் கடந்து பெரிய வீட்டைத் திறந்து பெரும் பயனைக் கண்டு கொள்க.

(மண்டலம் - உடம்பில் உள்ள பிரம மண்டலம், விஷ்ணு மண்டலம், உருத்திர மண்டலம் என்னும் மூன்று மண்டலங்கள்)

67. மனமே! கனமான மார்பு கொண்ட மாதர் மேல் நாள்தோறும் விருப்பம் கொண்டு அவர்கள் சிரிப்பாகிய வினைவசத்திற்கு ஏங்க வேண்டாம். இது உன்னைச் சோதிக்கும் காரியமன்றி உனக்கு நன்மை செய்வது இல்லை என அறிக.

புத்திதரும் வித்தைதரும் பொல்லாப்பில் லாமல்நெஞ்சே
சித்திமுத்தி பேரின்பம் சேர்ந்திடலாம் - நித்தநித்தம்
தானந்த மானதொரு சற்குருவோடே பழகி
ஆனந்தம் உண்டிருந்தக் கால். 68

கால்வழிச் சென்று கருப்பைக் குழிக்குக்கீழ்
மூலமற்ற நல்வழியே மூழ்கின்றி - மாலை
இருட்டறுத்துப் போடாமல் என்பாவி நெஞ்சே
திருட்டுவித்தை செய்கிறாய் சென்று. 69

சென்று சிவனடியில் சேர்ந்த பெரும்பாம்பு
ஒன்றுமிக வாசியைத்தான் ஒட்டாமல் - நன்றாய்
நிலையாக நில்லாது அலைவாய் மனமே
அலைவாயி னில்துரும்ப தாய். 70

தாய்தந்தை பெண்டுபிள்ளை தானென் றிரங்கிநித்தம்
காய்பறிக்கி றாயே கனியிருக்க - தாய்தந்தை
எத்தனை பேர் பெற்றாரோ என் மனமே நாமுந்தான்
எத்தனை பேரைப்பெற்றோம் இங்கு. 71

68. நெஞ்சே! நாள்தோறும் தானே முடிவாகிய சற்குரு வுடன் யோகத்தில் பழகி ஆனந்தம் கொண்டிருந்தால் நல்ல அறிவும், (மந்திர) வித்தை, பொல்லாப்பு ஒழிதல் ஆகியனவும் சித்தியும், முத்தியும் உண்டாகும்.

69. நெஞ்சே! கருப்பைக் குழிக்குக் கீழே மூலமல்லாத வழியில் மூழ்கி மயக்கத்தைத் தரும் அறியாமை என்னும் இருளை அறுத்து எறிக. நெஞ்சே! அது திருட்டு வித்தையே ஆகும்.

(கால்வழி - இங்கு இடக்கர் அடக்கலாகப் பெண்ணுடன் மேற் கொள்ளும் புணர்ச்சியைக் குறித்தது)

70. சிவனடியில் குண்டலினிப் பாம்பு சேருமாறு பிராணாயாமம் செய்யாமல், நிலையற்று அலைந்தால் மறுபிறப்பிலும் அலையில் துரும்பாய் அலைவாய் நீ.

71. மனமே! தாய், தந்தை, மனைவி, குழந்தை, தான் என்று நாள்தோறும் இரங்கிக் கனியை விட்டுக் காயைப் பறிக்கிறோம். அத் தாய் தந்தையர் நம்மைப் போல் எத்தனையோ பேர்களைப் பெற்றனர். நாமும் எவ்வளவோ பேர்களைப் பெற்றோம். பிறவி தோறும் இவை நடந்தனவே. ஆகவே மாறுக.

இங்குஅங்குமாய் மனமே ஈடழிய வேண்டாங்காண்
அங்கம் பொருளா அறிந்துகொண்டு - எங்குமெங்கும்
நாமேசிவமாக நாடினால் ஞானமொழி
தாமே அருளைத் தரும். 72

அருளில்லா தார்க்கும் அருளறிவங்கு ஆமோ
அருளறிவு தானே ஆனந்தம் - அருளறிவு
தேடுவதும் கூடுவதும் சிந்தையா னந்தமுடன்
நாடுவதும் தானறி வினால். 73

நாடிலெழுத்து ஆறும் நடுவெழுத்து ஈரைந்தும்
ஓடி னொருபதினாறு ஆகுமோ - ஓடாய்நீ
ஓரெழுத்தைக் கண்டுறங்கி உன்னோ டுறங்கிநெஞ்சே
ஓரெழுத்தி லேசென் றுரை. 74

உறைகலத்தி னாய்போல உள்ளமல மெல்லாம்
அறுத்தடைந்து நெஞ்சே அறுதி - நிறைத்துப்
புளியம் பழத்தோடு போலிருக்க வேண்டும்
கலியழியுங் காலத்துக் கே. 75

72. மனமே! இங்கும் அங்குமாய் ஈடழிதல் வேண்டாம். நம் உடலையே முதலீடாய்க் கொண்டு, எங்கெங்கும் நாமே சிவமாக இருப்பதாய் உணர்ந்தால் இந்த ஞான மொழியே அருளை நமக்குத் தரும்.

73. அருளால் வரும் அறிவே இன்பம் தரும். இங்கு அருள்பெறாதவர் அருளால் வரும் அறிவையும் பெற மாட்டார்கள். இப்படி அறிவு தேடுவதும், நாடுவதும் சிந்தையில் ஆனந்தத்துடன் நம் அறிவாலேயே முயல வேண்டும்.

74. நெஞ்சே! ஆறு எழுத்து ஆதாரங்களில் உள்ள எழுத்துக்கள் இதழில் உள்ளன. நடுவெழுத்து ஆதாரத் தாமரையின் நடுவில் உள்ளது, பத்து இதழ் மணிப்பூரகமும் பதினாறு இதழ் விசுத்தியும் ஒரே நேர்க்கோட்டில் வருமாறு உடலின் நடுவே ஓம் என்னும் எழுத்தையே தியானம் செய்து மேல் ஏறுவாயாக.

(உறக்கம் - தியானம். பதினாறு இதழ் - விசுத்தி என்னும் ஆதாரம்)

75. நெஞ்சே! உறையூற்றிய கலத்தில் பால் தயிராக மாறுவது போல மலமெல்லாம் நீக்கி விடுக. புளியம் பழத்தின் ஓடு பழுத்த பின் புளியுடன் ஒட்டாது விடுபட்டு நிற்பது போன்று உலகப் பற்றுக்களில் ஒட்டாமல் இருப்பா யாக. கலி (வினை) அழியும் காலத்தில் இதுவே சரியாகும்.

காலங் கழித்துக் கடைவாயில் பாலுறுமுன்
வேலங் கனைய விழிமடவார் - ஏலக்
குழியில்வைத்து மாரடித்துக் கூப்பிடுமுன் மாய்கைக்
கழியெடுத்துப் போடுமுன்கண் ணால். 76

கண்ணாலே ஞானம் கருதாமல் நெஞ்சேநீ
எண்ணாத மாய்கையெல்லாம் எண்ணுகிறாய் - நண்ணாய்
கேள்
பார்க்கவேண் டுந்தனையும் பத்தரை மாற்றுத்தங்கம்
ஆக்கப்போ காதோஉன் னால். 77

உன்னாலே நெஞ்சமே ஊழ்வினை வந்தாலும்
எந்நாளும் பாம்பின்வாய்த் தேரைபோல் - முன்னால்
அம்புபட்டுப் போகாதே ஆனந்த மெய்விளக்கு
நம்பி துணைக்குமுற்றும் நம்பு. 78

நம்பினான் தன்னை நடுவணையி லேயிருந்து
கும்பிடா தார்க்குங் குறையுண்டே - நம்பிப்
பளிங்கொளிபோல் நெஞ்சே பரந்திடலாம் எங்கும்
விளங்கனலோ டேசேருமே. 79

76. மரணகாலத்தில் வாயில் பால் விடுவதற்கு வரும் பெண்கள் மார்பில் அடித்து அழுவதற்கு முன்பாக மரணத்தை மாற்றும் வழியை ஆராய்ந்து பார்.

77. நெஞ்சே! கண்ணால் கண்டு உணர்வது போல் ஞானம் பெறுவதை முயலாமல், மரணத்தையே கருதிச்

செல்கிறாய். பத்தரை மாற்றுத் தங்கம் போல் உரிய வழியில் கலப்பின்றிச் செல்க.

78. நெஞ்சே! ஊழ்வினையால் முடிவு வந்தாலும் பாம்பின் வாய்த் தேரை (தவளை) உறுதியாக அழிவது போல், நாமும் மரணத்தின் வாயிலில் மார்பில் அம்புபட்ட புண்ணோடு செல்வதாய் இருக்கும்போது, கடவுளே துணை என்பதை முழுதும் நம்புக.

79. நெஞ்சே! நம்பிய கடவுளை நடுவிலிருந்து கும்பிடாத வர்க்கே குறையுண்டாம். நம்பியவர்க்குப் பளிங்கில் ஒளி பரவுதல் போல் எங்கும் பரவலாம். விளக்கமான குண்டலி யின் ஒளியிலும் சேரலாம்.

ஏமன்வரு முன்நெஞ்சே எவ்வினையுமே வென்று
சாம நடுவதனில் சார்ந்ததிலே - சேமமுடன்
காலனையும் வென்றுசிவ காமனையும் வென்றுபின்பு
பாலிக்க லாமதுநாம் பார். 80

பாரயனும் மாலும் பரவவரு ருத்திரனும்
காரனைய வாரணத்தைத் தான்கண்டு - சீராய
நக்கத் திடைநடுவே நற்ககன பொற்பதியில்
சொற்கன கத்தற்பதியில் தோன்று. 81

தோன்றுமே யெல்லாச் சுகமுற்றதில் மனமே
தோன்றுமே ஆனந்தச் சுந்தரர்பின் - தோன்றுமே
அட்சரச் சுருக்கினொடும் அக்கரப் பெருக்கமுடன்
உச்சரித் துரைக்கிறவுண் மை. 82

உண்மை யிதுகாண் ஒளியிருந்த வீடதுகாண்
உண்மை சிவனிருக்கும் ஊருகாண் - உண்மை
கருமை ஒளியேழ் கதியுள் பதங்கள்
மருவுதங்கி நீவருந்து மாறு. 83

80. நெஞ்சே! இயமன் வரும் முன்பு எல்லா வினைகளையும் நீக்கி எல்லாச் சாமத்திலும் இயமனை வென்று, மன்மதனையும் வென்று பிறகு அருள் பெறலாம். அந்நெறியை ஆராய்ந்து காண்க.

81. பிரமன், திருமால், உருத்திரன் ஆகியோர் மூவரும் தடைசெய்யாதிருக்க, யானை முகனான விநாயகனை வணங்கி, முதலில் வானில் உள்ள பொன்நகரில் கடவுள் இருக்கும் இடத்தில் தோன்றுக.

82. மனமே! மந்திரத்தைச் சுருக்கியோ விரித்தோ உரைக்கும் திட முயற்சியால், ஆனந்த வடிவமாகிய கடவுளிடம் சென்று ஆனந்தம் பெற்றுத் தோன்றுக.

83. நம்பாதவர்க்கு இவ்வுலகம், இவ்வாழ்வு யாவும் ஒளியற்ற வீடாகும். உண்மையில் சுகம் என்பது சிவன் இருக்கும் உலகமே. இல்லாதபோது எழுவகைப் பிறவியுள் நீ வருந்த நேரும்.

வருந்தும் பொழுதுகாண் மாயையாய் நெஞ்சே
வருந்தும் குணமாக வந்து - வருந்தும்
இருவினை தொடக்கறும் ஏழ்வகைப் பிறப்பாம்
கருமலத் திருக்கறுங் காண். 84

காண்மனமே சத்திசிவம் ஒன்றான காரணத்தைக்
காண்மனமே மாலயனுங் காணரிதைக் - காண்மனமே
செம்பொன்னி னம்பலத்துள் சேருஞ்செஞ் சொல்லென்னும்
அம்பலத்தில் ஆடுநட னம். 85

நடனமது பார்மனமே நயனத் திடையே
நடனமது நாலாம் பதங்காண் - நடனம்
பதிமதிவித் தாய்மனமே பலகதிவித் தாயெனவே
அதிவிதசித் தாந்தம் ஆடும். 86

ஆடும் பதிமனமே அம்பலத்தைச் சுட்டுநடம்
ஆடும் பரமகுரு ஆனந்தம் - ஆடுகின்ற
கூத்தனை கூற்றிற்ற கூத்தபிரா னைச்சுற்றம்
நீத்தவனைச் சித்தம்வைத்து நில். 87

84. நெஞ்சே! கடவுளை அடைய விரும்புக. அதற்காக வருந்துக. நெஞ்சே அப்போதே இருவினைகளும் அறும். ஏழ்வகைப் பிறப்பும் அறும். கரிய மலத்தின் குழப்பங் களைத் தீர்க்கும்.

85. மனமே! சத்தியும், சிவமும் ஓர் உருவமாய் இருக்கும் காரணத்தையும், திருமாலும், பிரமனும் அவரை அறியாததை யும் காண்க. செம்பொன் அம்பலம் நோக்கிச் செல்லும் நம் மந்திர ஓசையே சிவன் நடனமாகத் தோன்றும் (செம் பொன்னின் அம்பலம் - உடம்பில் உள்ள சிற்றம் பலத்தைக் கூறினார்)

86. மனமே! கண்களின் நடுவே புருவமத்தியிலும் சிவனின் நடனத்தைக் காணலாம். இது நாலாம் பதமாகிய துரிய உணர்வாகும். (துரியம் - தூங்காது தூங்கும் தியான நிலை) இறைவன் இருப்பிடம் செல்லும் பலவித வழிகளும் உண்டாயினும் சித்தத்தின் வழியே செல்வதாம். நாலாம் பதம் என்பது சிவசாயுச்சமும் ஆகும்.

87. சிவன் நடனமாடும் இடம் நமது மனமே ஆகும். அதை உணர்வதே பரமகுரு தரும் ஆனந்தம். ஆடும் கூத்தப் பிரானை, இயமனையே உதைத்தவனை உன் சுற்றத்தை விடுவித்து உன் சித்தத்தில் வைத்திருப்பாயாக.

நில்லு நிலவரமாய் நேசமுடனே பதியில்
நில்லு பிறவியற நீநெஞ்சே - நில்லு
கனல்மதியும் கார்மிடறும் கதிரும் மதியும்
புனலொடு செஞ்சடையும் போற்றி. 88

போற்றித் தினம்மனமே பொல்லாக் குலங்கள் விட்டுக்
காற்றுங் கனலுங் கருத்துஒன்றாய்ப் - பார்த்தறிவால்
சுத்தமலப் பித்தையற்றுச் சுற்றஒழி சுற்றிலுற்றுச்
சத்தமறிந் துற்றதிலே தங்கு. 89

தங்குநீ சென்று சதாசிவத்திலே மனமே
மங்குங் கருக்குழிக்குள் வாராமல் - தங்கும்
கருவும் புனலும் கதியும் கெதியும்
விதியும் திருத்தான வெளி. 90

வெளியில் வெளியாகி விண்ணவன் தானாய்
வெளியி லொளியா யிருக்க - வெளியிற்
கரியுரித்துப் போர்த்தவனைக் கார்மதிசெற் றானைக்
கருவறுத்துப் பார்த்தலே காண். 91

*88.* நெஞ்சே! நேசம் கொண்ட நிலவரத்துடன் நிற்பா யாக. சிவன் ஆடிடும் மனமாகிய இடத்தில் மூன்று பிறவியை அறுத்திடுக. சிவன் தலையில் உள்ள சந்திரன், கரிய கண்டம், கையில் நெருப்பு, கங்கை முதலியவற்றை இடா பிங்களா நாடிகளில் உணர்வு கொண்டு நினைக.

*89.* மனமே! சிவனைத் தினமும் போற்றுக. குலம் முதலிய பேதங்களை விடுக. காற்றும் (மார்பு), கனலும் (மூலாதாரம்) ஆகியவற்றை ஒரே நேர்க்கோட்டில் பார்த்து, மலத்தை நீக்கி, உடலில் ஓசை கேட்டு, அங்கேயே உணர்வு செலுத்தி நிற்க.

*90.* மனமே! சதாசிவத்தில் பற்றுக் கொள்க. அதுவே கருவில் பிறக்காதிருக்க வழியாம். போகும் கருத்தும், வழியும் திருத்தமான வெளியே ஆகும்.

*91.* வெளியில் தானும் ஒரு வெளியாக ஒன்றி, ஒளியுடன் இருந்தால் யானையை உரித்துப் போர்த்தவனும், மதியைத் தேய்த்தவனும் ஆகிய இறைவனை முழுதுமாகப் பார்க்கலாம்.

காணு மனமே கரிகால னைவதைத்துக்
காணும் உலகமெல்லாம் காணுருவாய் - தாணு
மனவிரக மானபுலி மன்றுள் நடனப்
பணவரவின் உற்ற பாதம். 92

பாதத்தான் அஞ்செழுத் தான்பரமன் சிங்க
நாதத்தா னென்று நெஞ்சே நன்றாகப் - போதத்தான்
ஆரணத்தி னோடடைந்து அண்டமெல்லாம் சுட்டதிரு
நீறணிந்து கொண்டிரு நித்தம். 93

நித்தனாய் நிர்மலனாய் நின்றுலகம் மூன்றுரைக்கும்
கர்த்தனாய் அஞ்செழுத்தின் காரணமாய்ப் - பெற்ற
குருவினிரு பாதங் குளிர நினைநீ
தருமதுபற் றாமனமே தான். 94

தானவனா காவிட்டால் சண்டாள னிற்றடிவான்
தானவனு மங்கே தரிக்கொட்டான் - மானார்
கலங்கும் கலவிக் கருத்திற்றால் தான்கொடுப்பான்
இலங்கும் அடிதேர் நெஞ்சே. 95

நெஞ்சே உனக்கு நிலவரமாய்ச் சொன்னவெலாம்
எஞ்சாவென் சொல்லென் றிகழாதே - நெஞ்சே
கருத்திச்சை தள்ளிக் கருதென்று செப்பின்
கருத்திச்சை தள்ளு கருத்துள். 96

*92.* மனமே! யானையையும், காலனையும் வதைத்து உலகப் பொருள் முழுதுமாகக் காணப்படும் சிவன், புலிக் கால் முனிவர் தரிசித்த புலியூர் அம்பலத்தில் குண்டலினிப் பாம்பின் மேல் பட்ட பாதம் உடையவனாம்.

(புலிக்கால் முனிவர் - 'வியாக்கிர பாதர்' என்னும் முனிவர். இவரது வேண்டுகோளுக்கு இணங்க, *சிவன் தில்லைச் சிற்றம்பலத்தில்* நடனம் ஆடினார்)

**93.** நெஞ்சே! சிவன் அஞ்செழுத்தைப் பாதமாக உடையவன். சிங்க நாதமாகத் தோன்றுவான். இதனை நன்றாக அறிவாய். வேதத்தோடு ஒன்றி எல்லா அண்டத்தையும் சுட்டதாகிய அவனுடைய திருநீற்றை அணிந்து நில். (சிவன் பிரபஞ்சங்களைச் சுட்டு அந்தச் சாம்பலையே திருநீறாக அணிந்துள்ளதாய்ப் புராணம் கூறும்)

**94.** அழியாதவன், மலமற்றவன், மூவகை உலகிற்கும் காரணமானவன், ஐந்தெழுத்திற்கும் காரணமாய் உள்ளவன். இவனே குரு இவன் பாதத்தைக் குளிர நினைத்திடுக. மனமே அப்பாதங்களையே பற்றி நிற்க.

**95.** நெஞ்சே! தானே அவன் என நினையாத ஒருவன், சண்டாளனால் வதைக்கப்படுவான். காமம் நீங்கினால் தன் திருவடியை அவ்விறைவன் தருவான்.

**96.** நெஞ்சே! நிலையானவையாகச் சொன்னவை எல்லாம் பொருளல்ல என்று இகழாமல், கருத்தில் ஆசையை நீக்கி இறைவனைக் கருதுக.

உள்ளிருந்து நெஞ்சே உலாவுஞ் சிவகுருவை
வெள்ளெருக்கின் பூச்சூடும் வேணியனை - உள்ளே
மனமுருகப் பார்த்தால் மலைசிலையா கச்சென்றால்
உனதறிவால் பார்த்துநீ ஓது. 97

ஓதுநீ நெஞ்சேகேள் ஓரெழுத்து மந்திரத்தால்
ஆதியாய் எங்கும் அமர்ந்தானை - ஓதில்
கடிய மிடியும் கடிய பிணியும்
கடிய வணுகாமல் காக்கும். 98

காக்குந் தினமே கடிப் பிறப்பறுத்து
காக்கும் பலபிணிநோய் காட்டாமல் - நோக்குமந்தி
வந்து பகல்வெளியில் வாராத மன்மதனை
உந்து மதையுணர்ந்தில் வாழ். 99

வாழுநீ நெஞ்சே மயங்கித் திரியாதே
ஏழெழுத்துக்கு அப்பா லிருப்பானை - ஏழை
வருத்தந்தீர்த் தன்பன் மனமதனில் தங்கு
பருத்தரத்தி னத்தைப் பணி. 100

பணிந்து துதிமனமே பல்லுயிர்கட்கு எல்லாம்
அணுவிலணு வாகியிருந் தானைத் - துணிவாய்ப்
பிறவா திருக்கவும் பேரின்ப வாழ்வைத்
திறமாக நம்பிச் செலுத்து. 101

97. நெஞ்சே! சிவனாகிய குரு நமக்குள் இருந்து உலாவுகிறான். வெள்ளெருக்கம் பூவைச் சூடுபவன் அவன். சிலை போல் ஒரே எண்ணத்துடன் தலையாகிய கயிலை மலைக்குச் சென்றால் உன் அறிவால் அவனைக் காணலாம்.

98. நெஞ்சே! ஆதியாய் எங்கும் அமர்ந்திருக்கும் கடவுளை ஓம் என்னும் மந்திரத்தால் ஓதினால் வறுமையும், நோயும், அணுகாமல் காக்கலாம்.

99. தினமும் நீக்குவன நீக்கிப் பிறப்பை அறுத்துப் பிணிகளும் வாராமல் ஓம் எனும் மந்திரத்தை அந்தி, சந்திகளில் ஓதினால் மன்மதனை வாராமல் தவிர்க்கலாம்.

100. வாழ வேண்டிய மனமே! மயக்கத்தால் திரியாதே. ஏழு எழுத்துக்கும் அப்பால் (ஏழு தாமரை ஆதாரம்) இருப்பவனை, ஏழைப் பங்காளனை, பெரிய மாணிக்கமாய் ஒளிர்பவனைப் பணிக.

101. மனமே! பல உயிர்களிலும் அணுவிற்கு அணுவாய் இருந்தவனை, பிறப்பு அறுக்கவும் பேரின்ப வீடு பெறவும், திறமாக நம்பிக் கைகொண்டு தினமும் துதித்திடுக.

## பட்டினத்துச் சித்தர் ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 25. கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் பாடல்

இவரைப் பற்றிய விவரம் தெரியவில்லை. முன் நூறு பின் நூறு என 200 பாடல்கள் பாடியுள்ளார். நவநாதர்களில் ஒருவர் இவர்.

## கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் பாடல்கள்

மூலமும் உரையும்

### முன் ஞானம் நூறு

அகண்டபரி பூரணமாம் உமையாள் பாதம்
அப்புறத்தே நின்றதோர் ஐயர் பாதம்
புகன்றுநின்ற கணேசனொடு நாதாள் பாதம்
புகழ்பெரிய வாக்குடைய வாணி பாதம்
நிகன்றெனவே யெனையாண்ட குருவின் பாதம்
நிறைநிறையாய்ச் சொரூபத்தில் நின்றோர் பாதம்
முகன்றெனையீன் றெடுத்தசின் மயத்தின் பாதம்
மூவுலகும் மெச்சுதற்குக் காப்புத் தானே. 1

எங்கும் பரவிய உமாதேவியின் பாதம். அதை அடுத்து அப்படி நின்ற சிவனார் பாதம். கணேசர் நாதாள், கலை வாணி, குரு சொரூபத்தில் நின்றோர், சின்மயம் ஆகியோர் பாதங்கள் என் நூலை மெச்சும்படி காப்பாராக.

(நாதாள் - நாதர்கள். பரிபூரணம் - எங்கும் நீக்கம்அற நிறைந்திருக்கும் பொருள்)

தாங்கிநின்ற சரியையிலே நின்றுசடம் வீழில்
　　தப்பாது கிரியையுள்ளே சாரப் பண்ணும்
வாங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தானால்
　　மகத்தான வுடலெடுத்து யோகம் பண்ணும்
ஓங்கிநின்ற கிரியைவிட்டு விழுந்த தானால்
　　உத்தமனே! உயர்ந்துநின்ற ஞானந் தோற்றும்
பாங்கில்நின்ற அச்சென்மம் மவுன முத்தி
　　பரிவாக வாய்ந்தவர்கள் அறிந்து கொள்ளே. 2

ஒரு பிறவியில் சரியை நெறியில் வாழ்ந்தோர் மறு பிறவியில் கிரியை நெறியைப் பற்றுவர். அடுத்த பிறவியில் யோகநெறி கொள்வர், பிறகு ஞான நெறி பற்றுவர். அவர்கள் மவுனத்தால் முத்தியைப் பரிவாக அடைவர் என அறிக.

அறிந்திருந்த நான்குக்கும் விக்கினம் உண்டாம்
　　அப்பனே! ஆகாமியஞ் சித்தி னோடே
மறிந்துநின்ற பிராரத்தந் தோயத் தோடு
　　மகத்தான நாலுக்கும் விக்கினம் அச்சு;
பிரிந்துநின்ற நாலினாற் செய்வதென்ன?
　　பேரான வறுமையொடு கிலேசந் துக்கஞ்
செறிந்துநின்ற பெண்பொன்னால் மண்ணி னாலே
　　சேத்துமத்தில் ஈப்போலத் தியங்கு வாரே. 3

மேற்கூறிய நான்கு மார்க்கத்திற்கும் விக்கினம் (தடை) உண்டு. ஆகாமியம், பிராரத்தம் முதலிய அவரவர் கர்மங் களுக்கு ஏற்ப விக்கினம் உண்டு. (வினைகளின் தொகுப்பு சஞ்சிதம், பிறப்பதற்குக் காரணம் அனுபவம் பிராரத்தம், பிறந்தபின் புதிதாகச் செய்வன ஆகாமியம்) வறுமை, துக்கம், மனக் கவலை, பெண் ஆசை, பொன்னாசை, மண் ஆசை இவற்றால் சளியில் சிக்கிய ஈயைப் போல் மீள முடியாது தயங்குவர். (விக்கினம் - இடையூறு, தடை.

சஞ்சிதம் - வினையின் தொகுப்பு. பிராரத்தம் - பிறப்ப தற்குக் காரணமாக விளங்கும் அனுபவம். ஆகாமியம் - பிறந்த பின் புதிதாகச் செய்வன. கிலேசம் - மனக் கவலை. சேத்துமம் - சிலேத்துமம், பசி.)

தியங்கினார் கொர்ச்சித்துத் துரத்துச் சண்ணுஞ்
சீறியர் மிலேச்சரையே சகத்தி னுள்ளே
மயங்கினார் நாலுபா தத்தி னுள்ளும்
மனஞ்செவ்வை யாவதெப்போ தறிவ தெப்போ?
தயங்கினா ருலகத்திற் கோடி பேர்கள்;
சாவதும் பிறப்பதுங்கா வடிபோ லாச்சு;
துயங்கினார் துயரத்தால் ஞானம் போச்சு;
சுடுகாட்டில் அறிவதுபோல் சுத்தப் பாழே. 4

கருமங்கள் கர்ச்சித்துத் துரத்தும். சிறியோர், மிலேச்சர் முதலியோர் மேற்கூறிய நான்கு பாதங்கள் அறிவது எப்போது? மனம் செம்மையாவது எப்போது? இதுபோல் கோடி பேர் தயங்கினர். இதனால் சாவதும் பிறப்பதும் காவடி போல் மேலும் கீழுமாய் வந்து சேரும். சுடுகாடு போம் போது ஞானம் பெறமுடியுமா? எல்லாம் பாழே. (எனவே யோக மார்க்கம் சிறப்பு என்றார். மிலேச்சர் - தாழ்ந்தவர், இழிந்தவர். நான்கு பாதங்கள் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகள்)

பாழான மாய்கைசென் றொழிவ தெப்போ?
பரந்தமனஞ் செவ்வையாய் வருவ தெப்போ?
வாளான விழியுடைய பெண்ணைச் சேரும்
மயக்கமற்று நிற்பதெப்போ? மனமே ஐயோ!
காழான வுலகமத னாசை யெல்லாங்
கருவறுத்து நிற்பதெப்போ? கருதி நின்ற
கோளான கருவிவிட்டு மேலே நோக்கிக்
கூடுவதும் ஏதென்றால் மூலம் பாரே. 5

பாழான மரணம் எப்போது மாயும்? மனம் செம்மை யுறுவது எப்போது? பெண் போகமற்றிருப்பது எப்போது? உலகின் ஆசைகள் முழுவதையும் நீக்கி நிற்பது எப்போது? கருதிய கொள்கையை விட்டு எப்போது கூடுவது? எனவே மூலத்தைப் பார்.

மூலமதி லாறுதலங் கீழே தள்ளி
முதிர்ந்துநின்ற மேலாறும் எடுத்து நோக்கிக்
கோலமுடன் உன்மனையைத் தாண்டி யேறிக்
கொடியதொரு ஞானசக்திக் குள்ளே மைந்தா!
பாலமென்ற கேசரியாம் மவுனத்து ஊன்றிப்
பராபரமாம் மந்திரத்தில் ஞானம் முற்றிக்
காலமொடு பிறப்பிறப்புங் கடந்து போகுங்
கைவிட்ட சூத்திரம்போல் சடமும் ஆங்கே. 6

மூலாதாரத்துடன் ஆறு ஆதாரங்களையும் உணர்வால் ஏறி, உச்சந் தலையில் உள்ள ஆறு படிகளையும் (நாதம், நாதாந்தம், சக்தி, வியாபினி, சன்மனை, உன் மனை என ஆறாம்) மனத்தால் போக்கி, உடல் உணர்விலிருந்து மேலே தாண்டி, ஞான சக்திக்குள் நின்று, கேசரி யோகத்துடன் மவுனம் சாதித்து, பராபரத்தின் மந்திரத்தில் (ஓம்) ஞானம் பெற்றால் பிறப்பு, இறப்பு, காலம் ஆகியவை கடந்து போகும்.

(மேல் ஆறு - உச்சந் தலையில் உள்ள ஆறு படிகள். அவை நாதம், நாதாந்தம், சக்தி, வியாபினி, சன்மனை, உன்மனை என்பவை. கேசரி யோகம் - ஒரு கண்ணை மூடி, மறு கண்ணால் மூக்கு நுனியைப் பார்ப்பது)

ஓங்கார முதற்கொண்டைந் தெழுத்தோ டாறும்
உற்றுநின்ற பஞ்சகர்த்தா ளிருந்தி டாறும்
ஆங்காரம் ஆணவம்நா னெனலும் போனால்
அப்பவலோ அகாரமுத லுகாரங் காணும்

பாங்கான மகாரமொடு விந்துநாதம்
பரவியதன் மேல்நிற்கும் பராப ரந்தான்
வாங்கான மவுனத்தைப் பற்றி யேறு
மருவிநின்று கிரியைத்தான் ஒத்துக் காணே. 7

ஓம் இருக்கும் மூலாதாரமும், அதன் மேல் ஐந்து ஆதாரமும், அவற்றின் ஐந்து காவல் தெய்வமும் என்று நின்றிடாமல், ஆணவமும் (நான் என்னும் உணர்வு) போனால் அ, உ, ம் எனும் ஓசைக்குரிய இடங்கள் தென் படும். விந்து, நாதம் ஆகிய இரண்டும் புலப்படும். அவற்றைத் தாண்டி மவுனம் கைக்கொள்ள இன்பம் சிறக்கும். மலை போல் அசையாது செய்க.

ஒத்துநின்ற ஓங்காரம் மண்ணை யுண்ணும்
உருவியந்த மண்சென்று சலத்தை யுண்ணும்
பத்திநின்ற சலமதுதான் தீயை யுண்ணும்;
பாங்கான தீச்சென்று காலை யுண்ணும்;
வெத்திநின்ற கால்சென்று விண்ணை யுண்ணும்;
விழுந்ததப்பா சடமென வேதாந்தப் பேச்சு;
முத்திகண்டு கூடுவதும் எந்தக் காலம்?
மூடரே மதுவையுண்டு மேல்பா ரீரே. 8

ஓங்காரம் ஓத ஓத நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஆதாரங்களை ஒன்றில் ஒன்று அடங்கும்படிச் செய்யும். இது வேதாந்தம். இதன்படி முத்திகண்டு கூடுவது எளிதில் கிடைக்காது. எனவே யோக அமுதம் உண்க. (சலம் - நீர். சடம் - உயிரற்ற உடம்பு)

பாரப்பா அகாரமுத லுகாரங் கொள்ளும்;
பாங்கான உகாரமது மகாரம் கொள்ளும்;
நேரப்பா மகாரமது விந்து கொள்ளும்;
நேரான விந்துவது நாதம் கொள்ளும்;

சேரப்பா நாதமுற்றுச் சத்தி கொள்ளும்;
சேர்ந்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்;
ஆரப்பா சிவந்தன்னைப் பரந்தான் கொள்ளும்;
அப்பரத்தைக் கொண்டவிடம் அறிந்தே யுன்னே. 9

அகரம் உகரத்தையும், இவை மகரத்தையும், இவை மூன்றும் விந்துவையும், இவை நாதத்தையும் தனக்குள் அடக்கிப் பின் சத்தியைக் கொண்டு சிவத்துள் அடங்கும். சக்தி சிவத்தைப் பரமாகிய பிரம்மம் அடக்கும். ஆகையால் அப்பரம் இருக்குமிடத்தை அறிவாயாக.

உன்னிநின்ற மூலமுத லாறும் பார்த்தே
உருகிநின்ற சுழுமுனையை யறிந்த பின்பு
மன்னிநின்ற மதிமேல்சாம் பவியைக் கண்டு
மருவிநின்று மனமுறைந்து தேர்ந்த பின்பு,
பன்னிநின்ற இவ்வளவும் யோக மார்க்கம்;
பகலிரவும் அற்றவிடம் ஞான மார்க்கம்;
கன்னிநின்ற விடங்கண்டா லவனே ஞானி
காட்டுவான் கேசரியைக் காட்டு வானே. 10

மூலாதாரம் முதல் ஆறு ஆதாரங்களும், சுழுமுனை நாடியும் கண்டு, இடாநாடியில் சாம்பவி முத்திரையைக் கொண்டு மனத்தை உறையச் செய்தல் யோக மார்க்க மாகும். பகலிரவு இல்லாத இடமாகிய ஞானமார்க்கமும் இதுவே. வாலைப் பெண் நிற்கும் மூலாதாரத்தை உணர்பவன் ஞானியாவான். அவன் கேசரி யோகம் காட்டுவான்.

காட்டுவாள் கிரியுன்னை மேலே யேற்றிக்
கைவிட்டால் கிரியைத் தான் கீழே தள்வாள்
மூட்டுவாள் குளிகைவிட்டால் கணத்துக் குள்ளே
மூதண்ட புவிகடந்து தெளிவுங் காணும்

ஆட்டுவாள் அண்டரண்ட மாலை பூண்டாள்
ஆதிவத்து அனாதிவத்து இரண்டும் ஒன்றே
ஊட்டுவாள் நிர்க்குணத்தி ணமிர்தவல்லி
உயர்ந்துநின்ற ஞானசத்தி யுறவு தானே. 11

வாலைப் பெண் தலையான மலையில் ஏற்றி விடுவாள்; இதைக் கைக்கொள்ளாதவரைக் கீழே தள்ளுவாள்; குளிகையைச் சாப்பிட்டு ஒரு கணநேரத்தில் இப்பெரிய உலகைக் கடந்து செல்வதுபோல் உணர வைப்பாள். அவள் அண்டங்களையும், அவற்றில் வாழ்பவரையும் மாலையாக முடித்து அணிந்தவள்.

உறவென்னத் தாளைவிட உறவு முண்டோ?
உலுத்தரையோ வாமத்தைத் தூடிப் பார்கள்
குறைவென்ன திரோதாயி சமயந் தோறுங்
கூடியல்லோ மாயவலை கூட்டி யாட்டி
மறவென்ன ஞானமென்ன மங்கித் தள்ளி
மகத்தான சமுசார வலையிற் போட்டாள்
நிறவென்ன வாமத்தால் ஞான மாச்சு
நின்றவனே சிவயோகி வாசி பாரே. 12

அவளின்றி யாரும் யாருக்கும் உறவில்லை. திரோதானம் என்னும் மறைப்புச் சக்தி எல்லாச் சமயத்தாரையும் மாயையால் கட்டி ஆட்டுகிறாள். அவள் மறதியில் தள்ளி, ஞானத்தை நீக்கி, சம்சார வலையில் போட்டாள். இதனால் ஞானமார்க்கத்தில் நின்றவனே சிவ யோகியாவான்.

வாசியென்றும் மவுனமென்றும் இரண்டும் வித்தை
மகத்தான சாம்பவிகே சரியும் ரண்டு
தேசி யென்றால் யோகத்துக்கு ஆதி வித்தை
திரமான மவுனமென்றால் ஞான வித்தை

மாசியென்ற மனமுடைத்தா லிரண்டு மாகா;
மருவிநின்றே அறிவறிந்தா லிரண்டு மாகும்;
தூசியென்ற வெளியல்லோ அண்ட வீதி
சொக்காமல் கிரிகொண்டே ஆக்கி யேறே. 13

வாசியாகிய பிராணாயாமம், மவுனம் என்ற வித்தைகள் இரண்டும் சாம்பவி முத்திரையில் கலக்கும். வாசி ஆதியாம் மவுனம் ஞானமயம் ஆகும். மனம் உடைந்தால் இரு வழியும் ஆகும். அறிவால் இரண்டையும் ஆக்கலாம்.

ஆக்கிநின்ற பரிசத்தால் கொசுவி றந்த
தாச்சரியம் ரூபத்தில் வண்டி றந்த
பாக்கிநின்ற மணியொலியால் மானி றந்த
பாழான வுரிசையினால் மீனி றந்த
தாக்கிநின்ற கெந்தியினா லெறும்பு சென்று
சாதகமாய் மாண்டதிந்த ஐந்தும் பாரு;
பாக்கிநின்ற இந்திரிய விடயத் துள்ளே
பாழான மனஞ்சிக்கிப் படுகு வாரே. 14

இந்தப் போகத்தின் போது தலைமேல் கொசுக் கூட்டம் இருப்பதுபோல் ஒளிச்சுடரின் பரிசம் தெரியும். வண்டு ஒலி, மணி ஒலி, மீன் துவளல் போல் உணர்வு அல்லது வரிசையாக எறும்பு ஊர்வது போலும் உணர்வுகளால் இதன் பரிசம் முழுதும் உணரலாம்.

வாரான வுலகத்தில் மனிதர் கோடி
மருவிநின்றே யுண்டுடுத்துச் சையோ கித்துத்
தாரான கசதுரக ரதங்க ளேறிச்
சகலரத்ன பூடணங்கள் தரித்து விம்மி
மாரான வாழ்வடைந்தோர் இறந்தார் ஐயா!
மாண்டவர்கள் வெகுகோடி மாய வாழ்க்கை
கூரான சிவபோக ஞானம் வந்தால்
கூடழிந்து போகாது கூடு கூடே. 15

இவ்வுலகில் கோடிக்கணக்கான மனிதர்கள், உண்டு, உடுத்து, கலவி செய்து, யானை, குதிரை, தேர் என ஊர்ந்து, எல்லா நவமணிகளாலும் ஆகிய நகைகள் தரித்து மகிழ்ந்து வாழ்ந்தவர்கள் யாவரும் ஒவ்வொரு காலத்தில் இறந்துதான் போனார்கள். இந்த மாய வாழ்வுக்கு மாறாக, சிவபோக ஞானம் வந்தால் உடல் அழியாது. ஆகவே யோகம் செய்க.

கூடுவதம் பரமோகே சரமோ என்னில்
கூர்மையுள்ள வானோவ தீதமோ என்னில்
ஆடுவதாச் சரியநின் மலமோ என்னில்
அருமையுள்ள நிர்க்குணமோ நிரஞ்சனமோ என்னில்
பாடுவது பதங்கடந்த பூரணமோ என்னில்
பகலிரவு மற்றிடமோ பராபரமோ என்னில்
ஊடுவதெங் கேபின்னை யெங்கு மில்லை
உம்மென்றா லூமமெள்ள மோகங் காணே. 16

அம்பரம், கேசரம், வானம், அதற்கும் அதீதம், நின்மலம், நிர்க்குணம், நிரஞ்சனம், பலவித மோட்சப் பதங்கள், பூரணம், பகலிரவு இல்லாத இடம், பராபரம், இப்படிப் பல விதமாகக் கூறப்படுவதில் எங்கே சென்று கூடுவது என்றால் எங்குமில்லை. மவுனமாக இருப்பதால் எல்லாம் தானே வரும். அதை விரும்புக.

மோகமென்ற உரலுக்குள் மனந்தான் சிக்கி
முசியாம லிடிப்பதற்குஐம் பொறியுங் கோல்தான்
பாகமென்ற கோபம் வந்தே யுருவாய் நின்று
பதையாமற் சண்ணிச்சே யுலக மெல்லாந்
தாகமென்ற ஞானம்வந் தென்ன செய்யும்?
சண்டாள இந்திரியச் சார்பி னாலே
வேகமென்ற மனலகரி யைத்தான் கொண்டு
விண்ணுக்கு ளேநிற்க வெளியாய்ப் போமே. 17

மோக உரலில் மனத்தைச் சிக்க வைத்து ஐம்பொறிகள் என்னும் உலக்கையால் கோபம் நின்று குத்துப்படுவது இவ் வுலக வழக்கம். இந்த நிலையில் ஞானம் வருவதில்லை. மோசம் செய்யும் இந்திரியங்களைச் சாராமல் வேகம் கொண்டு மனத்தின் இன்ப உணர்வால் வீறு கொண்டு விண்ணிற்குள் நின்று வெளியை உற்று நோக்குவதாம்.

(மன லகரி - மனத்தில் தோன்றும் இன்ப உணர்வு)

வெளியேது வெளிக்குள்ளே வெளியங் கேது?
வேதாந்த வெளிகடந்த வொளியங் கேது?
அளியேதவ் வளிகடந்த அண்ட மேது?
அப்புறத்தே தோற்றுகின்ற சோதி யேது?
நெளியேது நினைவேதுநிர்க் குணந்தா னேது?
நேரான பூரணத்தின் நாத மேது?
சுழியேது? சுழியடக்குஞ் சூட்ச மேது?
தோற்றுமப்பா வானத்தை யொத்துப் பாரே. 18

வெளியும் அது கடந்த மற்ற வெளியும் என்பன இல்லை. வேதாந்தம் கடந்த ஒளியும் இல்லை. காற்று இல்லாத உடலின் முயற்சியும் இல்லை. எல்லாவற்றுக்கும் உள் தோன்றாது, அவற்றுக்கு அப்பால் தோன்றும் சோதி எது? வேறு நினைவுகளும் நிர்க்குண நிலையடைதலும் இல்லை. பூர்ணத்துக்கான நாதம் தனியே ஏதுமில்லை. இவற்றை அழிவதோ, அடக்குவதோ இல்லை. தலைக்கு மேலான வான்வெளியை உற்றுப்பார். எல்லாம் விளங்கும்.

ஒத்துநின்ற சரியையொடு கிரியை ரண்டும்
உறவாதி செய்தவம்பா நன்றாய்க் கேளு;
பத்திநின்ற யோகமுதல் ஞானம் ரண்டும்
பாங்காகச் சித்தருக்கே அடுத்த வாறே

அந்திநின்ற ஆகாம்யசஞ் சிதபிரா ரத்வம்
ஆருக்கு மடுக்குமென்றால் யோகம் எய்தி
முத்திநின்ற ஞானத்திற் புகுந்தோர்க்கு ஐயா
மூன்றுமிலை பிரபஞ்ஷம் முழுதும் போச்சே. 19

சரியை, கிரியை என்ற இருவழிகளும் முன்பிறவிச் சார்பால் வருமென்பர். யோகம், ஞானம் ஆகிய இரண்டும் சித்தர்களுக்குத் தாமே வரும். ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் வினைகள் மூன்றும் ஞானம் பெற்ற வர்க்கு இடையூறாக வருவதில்லை. பிரபஞ்சம் முழுதும் ஞானத்தால் கலப்பதால் யாவும் அவரை விட்டு அகலும்.

போச்சென்பர் முக்காலம் பிறகே நின்று
புரிமுருக்குப் போலேறிப் புணர்ந்து கொல்லும்
ஆச்சப்பா காலமென்ன வென்று சொல்லி
அவரவர்கள் சபஞ்செய்வா ரறிந்த மட்டும்;
நீச்சப்பா அகாலவெள்ளம் கடப்பா ரென்றால்
நேரான ஞானியல்லோ கடந்து நின்றார்
மூச்சப்பா அற்றிடத்தைப் பாரு பாரு
மூட்டுவிக்கு முகிடந்தான் ஞானத் தீயே. 20

முக்காலமும் இல்லாமல் போகும் என்பர். ஆனால் பிறகு நம்மை கயிற்றுப்புரி போல் முருக்கிக் கொண்டு வந்து சேரும். காலம் பார்த்து ஜெபம் செய்வார்கள், அகால வெள்ளத்தை அதனால் கடக்கலாம் என்பர். நேரே ஞானம் பெற்றவரே அப்படிக் கடக்க முடியும். மூச்சு சென்று அடங்கி இல்லாமல் போகும் இடத்தை அறிந்து பார். ஞானம் தீயாய் முடுகும்.

தீக்குள்ளே வெந்துநின்ற பற்பம் போலச்
செகசால முதற்கொண்டு காலம் போகும்;
தீக்குள்ளே விழுந்தெழுந்த நெய்யைப் போலச்
சிறப்பான ஞானமது திரண்டே யேறும்;

தீக்குள்ளே காட்டமொடு கோலுங் கூடித்
திரண்டாற்போற் கருவியெல்லாம் கணத்தில மாளும்;
தீக்குள்ளே பராபரந்தா னிருந்த தாயின்
செகமெல்லாம் வித்தையென்று தெளிந்து போமே.21

தீயின் நடுவில் எரிந்து நிற்கும் பஸ்பம் (பற்பம்) போல, இவ்வுலகு தோன்றிய காலம் முதல் யாவும் போகும். தீயில் நெய் உருகுவது போல் ஞானம் சிறப்பாகத் திரண்டு விடும். தீயில் விறகுகள் சிறு கோல்கள் வெந்து சாம்பல் ஆவது போல் உடல் கருவியெல்லாம் ஒரு நொடியில் மாண்டு போகும். தீயினுள் பரம்பொருள் இருக்குமாயின், உலகம் யாவும் நாம் அறியத் தகுந்ததாய்த் தெளிவுபெறும்.

தெளிந்தவிடங் கண்டாரார் சித்தர் யோகி
செகமெல்லாம் நானென்பார் திருட்டுஞானம்
ஒளிந்துவிட முனைந்ததால்கே சரிக்குள் நிற்பாள்
உற்றுப்பார் மகாரம்வைத்தே யூகி யூதே
அளிந்தவிடம் நிர்க்குணந்தா னதிலே கேளு;
ஆச்சரிய மகாரமென்ற துண்ட துண்டு;
களிந்தவிடம் நிராகார மொன்று மில்லைக்
காட்டுந்தா ரறிவுகொண்டே யுற்றுக் காணே. 22

அப்படித் தெளியும் இடம் அறிபவர் சித்தர் யோகர் ஆவர். உலகம் யாவும் நானே என்பர், மறைவாக வரும் ஞானத்தால் கேசரியோகத்திற்குள் வாலைப் பெண் நிற்பாள். மகாரத்தை அங்கே முடிவாக்கி (தலையில்) யூகித்து மூச்சுப் பயிற்சி செய்க. அது சென்று செறியும் இடமே நிர்க்குண மாகும். ஆச்சரியமாக ஆகாரத்திலும் (வயிற்றுப்பகுதி) இப்படி யூதினால், நிராகாரம் ஒன்றுமில்லை. அறிவால் இதையறிக.

(நிராகாரம் - நிர் + ஆகாரம் - உருவம் இல்லாதது)

உற்றுநின்றே உலகத்தோர் ஞானம் பார்த்தே
ஊணுக்குக் கிடையாமல் புரட்டுப் பேசிப்
பற்றுகின்ற மோகத்தாற் பெண்ணைக் கூடிப்
பரந்துநின்ற திரோதாயி தலையிற் சிக்கிக்
கொத்துகின்ற விடங்காண்பார் கண்ணை மூடிக்
கும்மென்றே யிருளாகு மறிவும் பொய்யாம்
மற்றுநின்ற லகரியினால் கொண்டே யேற
மாட்டார்கள் அறுசமய மாடு தானே. 23

ஞானம் தேடி உலகினர் அலைவர். உணவுக்கும் வழி இல்லாத போது புரட்டுப் பேசுவார்கள். மோகத்தால் பெண் போகம் கொள்வர். திரோதான சத்தியிடம் சிக்குவர். கொத்தும் நஞ்சு கொள்வர். கண்ணை மூடியதும் இருள் எங்கும் இருப்பதாகக் கருதுவது பொய்யாம். ஆறு சமயவாதிகளும் மனத்தினால் இன்ப அனுபவம் கொண்டு யோகத்தில் மேல் ஏறமாட்டார்கள். (இழிவினால் அவர்களை மாடு எனத் திட்டினார்)

சமயமெல்லாஞ் சக்தியுண்டு சிவமும் உண்டு;
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளி னார்கள்;
சமயமெல்லாம் வேதாந்தசித் தாந்த முண்டு
சாதகத்தைப் பாராமல் தயங்கி னார்கள்;
சமயமெல்லாம் நாதமுண்டு விந்து முண்டு;
காக்காமற் கெட்டார்க ளுலகத் தோர்கள்
சமயமெல்லாம் அம்பரமாம் ஞான முண்டு
தாயைவிட்ட பாவத்தால் தவறிப்போச்சே. 24

எல்லாச் சமயத்திலும் சத்தியும், சிவமும் உண்டு. சண்டாளர்கள் இதைப் பிரித்தனர். எல்லாச் சமயத்திலும் வேதாந்த சித்தாந்தம் உண்டு. இவற்றில் எது சாதகமாகும் என அறியாது தயங்கினர். எல்லாச் சமயத்திலும் நாதமும் விந்தும் உண்டு. அவற்றைக் கலக்காமல் கெட்டனர்

உலகினர். எல்லாச் சமயத்தும் அம்பரமாக (மேல் உயர்வாக) ஞானம் உண்டு. ஆனால் தாயான வாலையைக் கை விட்டதால் தவறிப் போயினர்.

போச்சப்பா ஆறாறும் பானத் தாலே
புத்தியுள்ளோர் பானத்தாற் கண்டா ரையா!
ஆச்சப்பா வாமமென்ன நிசித மென்பார்
அதன்குணமோ திரோதாயி யனுட்டா னந்தான்!
ஓச்சப்பா நாதாக்கள் ரிடிகள் சித்தர்
உயர்ந்தவரைக் கண்டவர்பா னத்தா லன்றோ?
காய்ச்சமரம் பட்டதென்ன வேரற் றாற்போல்
கசடரென்ற அறுசமயங் கேட்டே பாங்கே. 25

முப்பத்தாறு தத்துவங்களும் அனுபவத்தால் அறிவு உடையார்க்கு விளங்கும் (பானம் - அனுபவம்) வாமம் நிசிதம் எனப் பெயர் கூறுவர். மறைப்புச் சத்தியால் அவை அடைபட்டன. அனுட்டித்தால் விளங்கும். நாதர்கள், ரிஷிகள், சித்தர்கள் யாவரும் அனுபவத்தால் இவற்றை அறிந்தவரே ஆவர். காய்த்த மரம் வேரற்றுப் பட்டதுபோல் அறுசமய மக்கள் வீணாக அழிந்தனர்.

பாங்கான குண்டலிக்குள் மூல மொன்று;
பாரப்பா கண்டத்தில் மூல மொன்று;
போங்கான புருவமைய மூல மொன்று;
புகழான விந்துவிலே மூல மொன்று;
வாங்கான சத்தியிலே மூல மொன்று;
மருவிநின்ற பராபரத்தில் மூல மொன்று
தேங்காம லிவையாறுங் கண்ட ஞானி
சேர்ந்துநின்ற மும்மூல யோகி யாமே. 26

குண்டலினி தோன்றும் மூலம் ஒன்று. தொண்டைக் குழியில் தோன்றும் மூலம் ஒன்று. புருவ மத்தியில்

தோன்றும் மூலம் ஒன்று ஆன இவை மூன்றும் உடம்பின் ஆதாரத்துடன் உள்ளவை. நாத நாதாந்தத்தில் இணைந்த விந்துவில் ஒரு மூலம் (இது தலைக்குமேல் ஆறு விரல் நடுவில் உள்ளது) அதற்கு மேல் உள்ளது சத்தி. அதில் மறுமூலமாம் இறுதியில் 16 விரல் தலையிலிருந்து உயரே உள்ள இடம் மனோன்மணியாகிய பராபர இடம். இது மூன்றாம் மூலமாம். (இவை மூன்றும் அந்தரத்தில் உடம்பின் ஆதாரமின்றி இருப்பனவாம்) இந்த ஆறு மூலமும் அறிந்து உணர்ந்த ஞானி நிராதாரமும் மூலமும் உணர்ந்த யோகி யாவான்.

ஆமப்பா நகாரமுதல் யகாரம் நிற்கும்
அவ்வளவும் யோகத்தின் மூல மாச்சு;
தாமப்பா அகாரமுதல் உகாரந் தொட்டுச்
சாதகமாய் மகாரவரை ஞான மூலம்
ஓமப்பா திசைநாத மவுனத்திற் காணும்
உற்றேற வுற்றேற அகண்ட வீதி
காமப்பா லுண்டக்கால் யோக சித்தி
கடுங்கானற் பாலுண்ட ஞான மாச்சே. 27

நமசிவாய என்பது முறையே மூலம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் வரிசையாக நிற்கும். அவையும் யோகத்திற்கு மூலம் எனவே பெறும். அஉம் என்பன நம் வயிறு, மார்பு, புருவ மத்தி ஆகிய மூன்றிலும் இருப்பது ஞான மூலமாகும். ஓம் என்னும் பிரணவத்தை ஓத ஓத உடம்பின் எல்லாத் திசைகளிலும் ஒளியும் உணர்வும் பரந்து ஆகாய வீதியிலும் பரவும். விரும்பும் யோக அமுதம் உண்பதே யோக சித்தி ஆகும். அதுவே வாலையின் தாய்ப்பாலாகிய ஞானம் ஆகும்.

ஆச்சிந்த வரிசைவிட்டே யுலக ஆசான்
ஆதி அந்த மொன்றுரவி மதிதா னென்பான்;
மூச்சற்ற இடங்காட்டத் தெரியா நின்று
முன்னேது பின்னேது சாங்க மென்பான்;
வாச்சிந்த மயக்கத்தா லுலகோர் கேட்டார்
மதுவைவிட்டே றியல்லோவை யத்தோர் கேட்டார்
ஓச்சிந்த விதமறிந்தோன் யோக ஞானி
உம்மென்று ஆகுமென்ற நாத மாமே. 28

இவ்வரிசையில் இவ்வுலகத்தின் முதல் குருவே ஆதி அந்தம் ஆவான். அவனால் சூரிய சந்திரர் வந்தனர். இதை அறியாதார் மூச்சு அடங்கும் இடம் எது எனத் தெரியாது நிற்பர். இந்தக் குழப்பம் தீர்ந்தால் உலகினரும் அவற்றை அறிவர். யோக மதுவை அனுபவித்தே ஓசை கேட்பர். இதை இப்படி அறிபவன் யோகம் தெரிந்த ஞானி. உம் என்று மவுனியாக இருப்பதும் நாதமேயாகும்.

நாதமப்பா யோகத்தி லைந்து நாதம்
நலமான மவுனத்தி லைந்து நாதம்
வேதமப்பா கடந்திடத்தே சுத்த நாதம்
வெட்டவெளிக் குள்ளேயொரு நாதமுண்டு
போதமப்பா கடந்திடத்தே யந்த நாதம்
புகழாகச் சேவித்து நிற்கு மென்றும்
காதமப்பா தூரமல்ல அந்தோ அந்தோ!
கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்துகாணே. 29

யோகத்தில் ஐந்து நாதமென்பது ஐம்பூதங்கள் தொடர் பானவை அவை. மவுனத்திலும் அந்த ஐந்து நாதங்கள் உண்டு. வேதமாகிய உடம்பு கடக்கும்போது சுத்த நாதம் உண்டாகும். வெட்டவெளிக்குள்ளும் ஒரு நாதம் உண்டு. அறிவுநிலை கடந்த பின் அந்த நாதம் உணர்வுக்கு வரும்.

கண்ணிமைக்குள்ளும் விண்ணுக்குள்ளும் அந்த நாதம் கலந்தே உள்ளது.

(ஐந்து நாதங்கள் - நிலம், நீர், காற்று, நெருப்பு, வானம் என்னும் ஐம்பெரும் பூதங்களுடன் தொடர்பு கொண்ட இனிய ஒலிகள்)

விண்ணேது வெளியேது ஒளியங் கேது?
விரைந்திந்த மூன்றுமங்கே சரிதான் ஆச்சு;
கண்ணேது காதேது மூக்கு அங்கு ஏது?
கண்டிப்பாய்க் கண்டவெல்லாம் அழிந்து போச்சே
ஒண்ணிரண் டேதுசம ரசந்தா னேது
உற்றுப்பார் வெட்டவெளி யொன்றுமில்லை;
எண்ணேது நினைவேதிங் கறிவுமேது?
ஏகமாய்க் கலந்துதித்தி யிடத்தைக் காணே. 30

உருவமான யாவும் வெறும் வெளியிலிருந்தே தோன்றி மீண்டும் வெளியாகவே ஆகின்றன. அந்த வெளியே பிரம்மம். ஒளி, விண், காது, கண், மூக்கு, நினைவு, அறிவு யாவும் உற்றுப் பார்க்க வெளியில் அலை அடங்குவதும் அறிக.

உத்திகொண்டு ஞானநூல் பார்த்துப் பார்த்தே
உலகத்தோர் ஞானமெல்லாம் வந்த தென்று
பத்திகொண்டே அலைவார்கள் விண்ணைப் பாரார்
பாழான மனத்தையங்கே நிறுத்த மாட்டார்
முத்திகண்ட இடமெங்கே யென்று காணார்
மூச்சற்று நின்றிடத்தை நோக்கிப் பாரார்
சித்திகண்டால் சித்திகொண்டு செய்ய மாட்டார்
சேர்ந்துமதா யிருக்கறியார் திருடர் தானே. 31

ஞானநூல் பார்த்தே உலகில் ஞானம் வந்தது என்று கூறுவர். அவர்கள் விண்ணைப் பார்ப்பதில்லை. அதில் மனத்தை நிறுத்தி ஆராய்வதில்லை. மூத்திக்குரிய இடமும்

காணார். மூச்சு நின்று மாறும் இடத்தையும் அறிய மாட்டார்கள். சித்தியால் சித்தியடையத் தெரியாத மனிதரே இவர். (வெட்டவெளியிலிருந்தே ஞானமும் உண்டாகிறது என்பதாம்)

தானென்ற ஆணவத்தை நீக்க மாட்டார்
சண்டாள கோபத்தைத் தள்ள மாட்டார்
ஊனென்ற சுகபோகம் ஒழிக்க மாட்டார்
உற்றுநின்ற சையோகம் விடுக்க மாட்டார்
பானென்ற ஞானவெள்ள முண்ண மாட்டார்
பதறாமல் மவுனத்தே யிருக்க மாட்டார்
வானென்ற பொருளென்ன எளிதோ மைந்தா!
மகத்தான மனமடங்க எய்யுங் காணே. 32

தான் எனத் தடித்து நிற்கும் ஆணவத்தை நீக்க மாட்டார்கள்; கொடிய கோபத்தைத் தள்ளி வைக்க மாட்டார்கள். உடம்பின் சுகத்தை ஒழிக்க மாட்டார்கள்; கலவியை விட மாட்டார்கள். ஞான தீர்த்தத்தை உண்ண மாட்டார்கள். வானில் உள்ள பரம் எளிதில் அடையத் தக்கதோ? மனம் அடங்கும் போது அது வந்து நம்மைச் சேரும் என அறிக.

(சையோகம் - கலவி; புணர்ச்சி)

காணிந்த வுலகத்தில் மாயக் கூத்தும்
கண்மூக்குச் செவியோடிந் திரியக் கூத்தும்
பூணந்த வாசியினால் வறுமைக் கூத்தும்
புகழான செனனமொடு மரணக் கூத்தும்
ஆணிந்த அண்டமெல்லாம் படைத்த கூத்தும்
ஆங்காரம் மனம்புத்தி யான கூத்தும்
தோணிந்தப் படிபடைத்த பரமே யையா!
சொற்பெரிய பூரணமே யென்று கூவே. 33

மாயையால் இந்த உலகம் இயங்குவதும், ஐந்து இந்திரியங்கள் ஞானத்துக்குத் தரப்பட்டதும், பிராணாயாமம் இல்லாவிட்டால் ஏதும் உயர்வில்லை என்பதும், பிறப்பு இறப்பு என்ற மாறாத நிலையும், பல அண்டங்களைப் படைத்ததும், அகங்காரமே மனம் புத்தி, சித்தமென விரிந்ததும், உண்டாக்கியது பரம்பொருளே. அதுவே பரிபூரணம். (இவற்றைச் செய்வதைக் கூத்து என்று கூறுவது மரபு)

கூவையிலே யாத்தாளைத் தொழுது கூவக்
குறையாத கருணையினால் திரும்பிப் பார்த்துத்
தாவையிலே மதலையைத்தான் தாய்தான் சென்று
சார்வாக எடுத்துப்போ முன்னை மைந்தா!
தேவையிலே யெடுத்தணைத்தே யுயிரை வைப்பாள்
செகசால மாடுகிற திருட்டுத் தாய்தான்
பாவையிலே மனஞ்சென்று பரவா விட்டால்
பாராது போலிருப்பாள் பாரு பாரே. 34

மேற்பாட்டில் விரித்தவற்றை எண்ணும்போது வாலையைத் தொழுது எண்ணுக. அப்போது கருணையால் உன்னைப் பார்ப்பாள்; குழந்தையைத் தாய் எடுத்துப் போவது போல் உன்னை ஏற்பாள்; உனக்கு உயிர் கொடுப்பாள். இந்த ஜகத்தைச் சாலத்தால் ஆளும் அந்தத் தாய் உன்னைத் திருத்துவாள். பெண் காமம் இல்லா விட்டால் பாராது போல் வாலைப் பெண் இருந்தாலும் உன்மீது அன்பே கொள்வாள்.

பாரப்பா செகமனைத்தும் அண்ட மெல்லாம்
பாங்கான சூழ்ச்சியில்வைத் திருந்த கன்னி
நேரப்பா இவளைவிட்டு யோகம் பார்த்தேன்
நேராக அண்டத்தில் ஞானம் பார்த்தேன்

சேரப்பா சுத்தவிழல் மனமோ பேயாம்
செகசாலக் கூத்தைவிட்டுத் தெளிய மாட்டார்
ஆரப்பா அவளை விட்டு ஞானங் கண்டோர்
அலைக்கழிக்கும் ஆசையென்ற பாம்பு தானே. 35

உலகங்கள் எல்லாவற்றையும் சூழ்ச்சியால் கட்டியாளும் இந்தப் பெண்ணை (வாலை) விட்டு விட்டு யோகமும், ஞானமும் பார்த்தால் அது விழலே ஆகும். (வீணாகும்) மனம் பேயாகும். அவளை விட்டு யாரும் ஞானத்தை அடைய முடியாது. ஆசையாகிய பாம்பு ஆட்டி வைக்கும்.

பாம்பையல்லோ ஆபரணம் பூண்ட ஈசன்
பரிவாக மதியோடு கொன்றை சூடிப்
பாம்பையல்லோ முந்நூலாய்ப் போட்ட கூத்தன்
பாங்கான கரியுரித்த பாணி பாணி
பாம்பையல்லோ கங்கணமாய்த் தரித்துக் கொண்டு
பரியுழுவைத் தோலுடுத்துப் பாதந் தூக்கிப்
பாம்பையல்லோ மனைக்குமோ திரமாய்ப் போட்டு
பாரென்றே அகண்டத்தி லாடி னாரே. 36

சிவபெருமான் பாம்பை ஆபரணமாக அணிந்தான்; நிலவும் கொன்றையும் சூடினான்; பாம்பையே முப்புரி (பூணூல்) நூலாய் அணிந்தான்; யானையைத் தன் கையாலேயே உரித்தான்; கங்கணமாகவும் பாம்பையே அணிந்துள்ளான்; புலித்தோலை உரித்து உடுத்து, அருளாகிய பாதத்தைத் தூக்கி அண்டத்தில் ஆடுகிறான். அவனது மோதிரமாய்ப் பாம்பு உள்ளது.

பாம்பு - குண்டலினி, யானை - அகங்காரம், புலி - தீய எண்ணம், மதி = அமுதம், கொன்றை - மங்கலம் என்ற குறிப்புக்களால் யோகத்தை இறைவன் ஆதரிப்பது அறிக.

ஆடினதோர் கூத்தெல்லாம் ஆத்தாள் மெச்சி
அண்டையிலே யழைத்தானை யிருத்திக் கொண்டாள்
நாடினதோ ரவளருகி லரனு மெய்வான்
நாமறியோ மவனவளு மொன்றே யொன்றே
ஊடினதோ ரிடமெங்கே? ஒலிகேட் பெங்கே?
ஒன்றாகக் காணுகிற நடன மெங்கே?
கூடினதோ ரகண்டத்தின் சோதி யெங்கே?
கூசாமல் மவுனத்திற் கூடிக் காணே. 37

இறைவன் கூத்தாடுவதைப் பராசக்தி பாராட்டினாள்; அவனுடன் நெருங்கினாள். இறைவனும் அவளை நெருங்கினான். (அர்த்தநாரி) மங்கை ஒரு பாகனாய் இருக்கிறான். கூத்தை உணரும் இடம் எங்கே? ஒலியும் உள்ளுக்குள் கேட்பது எங்கே? நடனம் முழுதும் ஒன்றாகக் காணுவது எங்கே? அகண்டமான வெளி முழுதும் பரவிய சோதி எங்கே? எல்லாம் மவுனத்தால் கூடி உணரலாம்.

## மெய்ஞ்ஞான குரு

காணப்பா மகாரவரை நாத வோசை
கன்னிக்குப் பீடமடா மவுன ஞானம்
ஊணப்பா வூணப்பா நாதத் தோடே
ஒருமுனையா யொருவழியா யொன்றா யோடும்
தோணப்பா தோற்றுவதங்கு ஒன்று மில்லை
சுத்தவெளி ரவிகோடி சூழ வன்னி
ஆணப்பா மாகோடி கண்கொள் ளாதே
ஆச்சரிய மதிகமென்ற மகாரங் காணே. 38

மகரம் (ம்) முடியும் (புருவமத்தி) வரை நாத ஓசை தொடரும், கன்னி பீடமாகிய மூலாதாரத்தில் மனத்தால் ஞானம் பெற ஊன்றி நாதத்தைப் பற்றிச் செல்க. அது திரண்டு மேல் ஏறும். அது தவிர வேறு எதுவும்

தோன்றாது. சுத்தவெளியில் கோடி சூரியப் பிரகாசம் சூழ வரும். கோடிக்கண்களாலும் இந்த ஒளியைக் காண முடியாது. இந்த வியப்போடு மகரத்தில் உணர்வு கொள்க.

மகாரமல் லோமுந்தி யாசான் சுட்டி
வழிகாட்டும் முறைமையது ஞான மார்க்கம்
மகாரமல்லோ அடங்கியந்த நாதந் தாண்டி
மருவிநின்ற இடமல்லோ கேசரி மைந்தா
மகாரமென்ன மேலெழுத்தே யென்பார் மாண்பார்
மாட்டுவதை முன்றெழுத்த தென்று காணார்
மகாரமென்ன மகாரவித்தை யதீத வித்தை
வாய்திறந்து பேசாதே மௌன மாமே. 39

மகாரம் நிற்கும் (புருவமத்தி) இடத்தைக் குரு முதலில் சுட்டி ஞானமார்க்கத்துக்கு வழி காட்டுவார். மகாரம் அடங்கியதும் நாதம் மேலும் போகும். (உச்சரிப்புக்குத் துணையாகும் ஓசையே நாதம்.) இந்த நாதம் முடியும் இடமே ஒளி பெறுமிடமாம் (கேசரி). மகாரத்தை மேல் எழுத்து என்ற குறிப்பால் கூறுவர். இதிலே அ+உ+ம் என்ற மூன்றும் கூடும் என உணரார். மகாரமே அதீதமாகும். அதனால் வாய் திறந்து உச்சரிக்காமல் மவுனமாய்ச் செய்க என்பதாம்.

மௌனவித்தை யாதெனில்மூன் றெழுத்தே யென்பார்
மாட்டுகிற இனங்காணார் மார்க்கங் காணார்
மௌனவித்தை யாவதென் வாய்மூட வென்பார்
மாடுமுதற் குதிரையினா லாவதென்ன?
மௌனவித்தை கேட்டார்கூட் டுறவு காணார்
வாய்மூடி வழியோடே நாதங் கேளார்
மௌனவித்தை ஆசான்தான் தூண்டிக் காட்டில்
மணிமுதலாய்த் திசைநாதங் கேட்குந் தானே. 40

மவுனத்துக்குரிய மந்திரமும் (வித்தை) மூன்றெழுத்தே ஆகும். (வயிறு, மார்பு, புருவமத்தி ஆகிய இடங்களை மவுனமாய் நோக்கி உணர்வதே இங்கு மந்திரமாம்) இப்படிச் சேர்க்கும் வழியை யாவரும் அறியார். வெறுமையாய் வாய்மூடல் மட்டுமே மவுனமென்று இந்த மவுனத்தைக் கேட்டோர் இதனுடன் கூடும் உறவை அறியார். வாய் மூடியே இந்த வழியில் உடம்பில் எழும் நாதத்தைப் பலர் கேட்பதில்லை. மவுனத்தை உரைக்கும் குரு தூண்டினால் மணி, ஒலி முதலிய பத்து நாதங்களும் கேட்கலாம்.

(திசை நாதம் - பத்து நாதம். மௌன வித்தை - வயிறு, மார்பு, புருவ மத்தி ஆகிய இடங்களை மவுனமாய் நோக்கி உணர்தலாகிய 'அ+உ+ம் (ஓம்)' என்னும் மூன்றெழுத்து மந்திரம்)

கேட்கையிலே மதியினிட மமிர்தஞ் சிந்துங்
கெடியான துவாதசமுங் கடந்து தோன்றும்
வாழ்க்கையிலே யாசையறும் நினைவும் போகும்
வாரிதிபோ லண்ணாக்கில் அமிர்த மோடும்
தாக்கையிலே ரவிகோடி காந்தி காணும்
சச்சிதா னந்தவொளி தானே தோன்றும்
மூட்கையிலே மேலமிர்த லகரி மீறும்
மூன்றுகமும் கணமாகு மூட்டிப் பாரே. 41

இந்த உபதேசத்தை தசநாதத்தைக் கேட்கும் போதே யோகத்தால் உண்டாகும் அமிர்தம் சிந்தும். துவாதசாந்தம் ஆகிய நிராதாரம் கடந்து போவது தோன்றும். கடல் போல் அண்ணாக்கில் அமிர்தம் சுரக்கும். கோடி சூரிய ஒளி தெரியும். சச்சித் ஆனந்தமாகிய பரவெளியும் தானே தோன்றும், அமிர்தச் சுவையுடன் மூன்று யுகமும் ஒரு நொடியில் தெளிவாய்த் தெரியும்.

(மூன்று யுகங்கள் - திரேதா யுகம், திரேதா யுகம், துவாபர யுகம்; நான்காவது யுகம் கலியுகம்)

மூட்டையிலே யுலககிரி கொண்டு மூட்டு
முதிர்ந்தபின்பு விண்ணுள்கிரி வந்து காக்கும்
கூட்டையிலே மகாரத்தை யறிந்து கூட்டும்
கும்மென்ற நாதத்தில் கூடி யேறும்
மாட்டையிலே யறிவோடு மனத்தை மாட்டும்
மறுகாலும் நாதத்தைக் கூர்ந்து கேளே
ஓட்டையிலே யொருவழியா யோடிற் றானால்
உத்தமனே யச்சின்ன முத்தி யையா! 42

பிராணாயாமத்தைச் செய்யும் போது தலையுச்சியை நினைத்துச் சிந்தனை செய்க. இது முதிர்ந்தால் விண்ணில் உள்ள உணர்வு காவலுக்கு வரும். இரண்டையும் கூட்டும் போது மகார (புருவ மத்தி)த்தை நினைத்துக் கூட்டுக. அப்போது நாதத்தில் உணர்வு 'கும்' என்று ஏறும். வேறு ஒன்றில் இணைத்தால் மனத்தையும் சேர்த்து மாட்டி நாதத்தை மறுபடியும் உற்று நோக்குக. தலை உச்சியில் உள்ள சிறு துளை வழியே நாதம் ஓடுவது உணர்வுக்கு வருமானால், உத்தமனே அதுவே முத்திக்கு அறிகுறியாம்.

## ஏறுகிற துறை

ஐயனே! குருவான அகண்ட மூர்த்தி!
அதிதமென்ற ஞானமெல்லாம் அருளிச் செய்தார்;
மெய்யனே! ஏறுகிற சாத கஞ்சொல்
வேதாந்த லட்சியத்தை விளங்கச் சொல்லு
துய்யனே! நிலைதோறும் எழுத்தைச் சொல்லு
சொற்பெரிய பிராணாய சூட்சஞ் சொல்லு
தையனே! தையமென்ற நிர்த்தஞ் சொல்லு
சாதகமாய் லட்சியத்தைச் சாற்றி டாயே. 43

குருவாகிய பெரிய பொருளே! ஐயனே! ஆதீதம் எனப்படும் ஞானம் எல்லாம் அருளினாய். யோகத்தில் உடலில் ஏறுமுகப் பயிற்சியைச் சொல். வேதாந்தத்தின்

குறிக்கோளாகிய யோகத்தை விளக்கிக் கூறுக. ஒவ்வொரு படியிலும் உச்சரிக்கும் எழுத்துக்களைச் சொல். பிரணா யாமச் சூக்கும வழிகளைச் சொல். யோக உணர்வினால் நாம் செய்யும் பயிற்சியை விளக்குக.

(யோக ஆதாரத்தில் இதழ் தோறும் எழுத்துகள் உண்டு. அந்தக் கமலங்களின் நடுவில் எழுத்துக்கள் உண்டு என அறிக. தாமரை முதல் ஐந்திற்கும் பஞ்சபூத விதை எழுத்துக்கள் வரும். 50 தாமரை, ஆக்ஞா ஆகியவற்றில் வட மொழி எழுத்துக்கள் யாவும் வரும். அதீதம் - ஞானம்)

சாற்றிடென்று கேட்டமா ணாக்க னேகேள்;
சந்தோட மாச்சுதிப்போ சார்பு சொல்வேன்;
ஏற்றமென்ற மூலத்தில் வாசி வைத்தே
எளிதாகப் பிராணாயம் பண்ணித் தேறி
ஆற்றுமென்ற குண்டலிக்குள் நடனங் கண்டால்
ஆதித்தன் கோடியைப்போல் காந்தி காணும்
மாற்றுமென்ற கண்டத்தி லங்கென்று ஊணு
வாய்திறக்க வொட்டாது வழிசெய் வாயே. 44

வினவிய மாணவனே! கேள். மகிழ்ச்சி. மூலாதாரத்தில் பிரணாயாமத்தைத் தொடக்கி முடிக்க வேண்டும். தொடக்கத்தில் எளிதாக இதைச் செய்து பழக வேண்டும். குண்டலினி நெருப்புச் சுடர் விட்டுப் புறப்படும்போது அதுவே நடனமாகும். இது கோடி சூரியப் பிரகாசமாகும். கண்டத்தில் தொடங்கும் தாமரை இதழில் 'அம்' என்று முதல் இதழில் தொடங்கி, வலமாக மற்ற எழுத்துக்கள் முதல் பதினாறையும் குறிக்க வேண்டும். இதை வாய் திறந்து சொல்ல வேண்டாம்.

வழியோடே நின்றுரைத்துப் பழக்க மாகி
மனோன்மணியாம் புருவமையத் தூடே சென்றே
ஒளியோடே மவுனத்தை யோட்டி யூதாய்;
உத்தமனே! சாம்பவியைக் கண்டு கொள்வாய்;

நெளிவாபோ யிவ்வளவும் யோக மார்க்கம்
நின்றவனே சிவயோகி நினைவாய்க் கேளு;
தெளிவோடே விந்துவென்ற குருப தத்தில்
தேக்கப்பா மவுனத்தைத் தாரை யாமே. 45

இவவாறு எல்லாத் தாமரை இதழ்களிலும் மேலிருந்து கீழாக வருக. பின் கீழிருந்து லம், வம், ரம், யம், ஹம் என்று பஞ்சபூத மந்திரங்களைக் கீழ் மேலாகச் சொல்லி ஏறுக. பின் புருவ மையத்தின் மீதிலுள்ள மூன்று எழுத்துக்கள் செய்க. புருவ மையம் வழியாகத் தலை மீதில் ஏறி மனோன்மணி இருக்குமிடம் வரை செல்க. (இது தலைக்கு மேல் 18 விரல் உயரம்) பின் சாம்பவி முத்திரை கொள். இது யோக மார்க்கமாகும். இதைச் செய்பவன் சிவயோகி யாவான். புருவமத்திக்கு மேல் இருபாதம் குருவுக்கு உரியது. அங்கே நினைவை வைத்து மவுனம் செய்தால் அமிர்ததாரை உண்டாகும்.

(பஞ்சபூத மந்திரங்கள் - லம், வம், ரம், யம், ஹம் என்பவை)

ஆமப்பா விந்துரவி மதியோர் கூடி
ஆச்சரியங் கண்கூசி மயக்க மாகி
ஓமப்பா நாதத்திற் செவிடு பட்டே
ஊமையெனும் எழுத்துடைய வுருவங் காணும்
தாமப்பா சத்தியிலே வன்னி யோடு
சதகோடி ரவிமதியும் ஒவ்வா ஒவ்வா
வாமப்பா லுண்டவர்க்கித் தனையுங் காணும்
வாய்பேசா ஞானிக்கு மாயந் தானே. 46

விந்துவாகிய குண்டலினி தீவண்ணம், சூரியச் சுடர், நிலவு ஒளி ஆகியன கூடிக் கண் கூசுமளவு மயக்கமாகி 'ஓம்' என்னும் இடைவிடாத நாதத்தை மவுனமாக எழுப்புக. இந்த விந்துவாகிய சத்தியில் குண்டலியுடன் யாவும் கூடியதால் சதகோடி சூரிய சந்திரர்களுக்கு

ஒப்பாகாத ஒளியுண்டாகும். வாமமாகிய இடது பக்கத்தின் அமிர்தம் உண்டவர்க்கு இத்துணையும் தெரியும். வாய் பேசாத மவுன ஞானிக்கு இவை யாவும் மாயத்தால் விளைவதாகும்.

தானென்ற சிவத்துக்குள் மௌனஞ் சென்றால்
சதகோடி நவகோடி வன்னிரவி சோமன்
பானென்ற பரத்தின்கீழ் முப்பாழ் உண்டு
பார்மகனே அகாரமொன் றுகார மொன்று
வானென்ற மகாரமொன்று முப்பா ழாக
வழங்கிற்றே அதனொளியைச் சொல்லப் போகா
தேனென்ற மொழியுடைய மனனந் தத்தைத்
தேவிபத மென்றகே சரிதான் காணே. 47

ஆதியானதைச் சிவமாகக் கொண்டு மவுன யோகம் கொண்டால் சதகோடி நவகோடி அளவு சோதிச்சுடர் உண்டு. சூரிய சந்திரர்களின் இந்த ஒளியின் கீழ் முப்பாழ் உண்டு. அகரம், உகரம், மகரம் என்னும் மூன்று எழுத் துள்ள இடமே முப்பாழ் என்க. இவை சூக்குமம் ஆகும். அதன் ஒளியைச் சொல்ல முடியாது. மனத்தின் முடிவு எல்லையில் தேவியின் திருவடி என்பது கேசரி யோகத்தால் உணரலாகும்.

போதை கொள்ளும்போது மூக்கு நுனியில் மரத்துப் போன வரும். இதனால் இது ஆத்ம உணர்வுக்குரியது ஆகும். இதன் மேல் மனம் செலுத்துவதே கேசரி யோக மாகும்.

காணிந்தக் கேசரத்தின் தாயின் காந்தி
கண்கொள்ளா விண்கொள்ளா கரையுங் கொள்ளா
ஆணிந்தப் பரையென்பார் அம்பரந்தா னென்பார்
அவளுக்குள் மவுனமுண் டறிவாய் பாரார்

ஊணிந்த மௌனத்தை நிட்களமாய்ப் போவார்
ஓகோகோ அம்பரத்தி லேதோ வேதோ
தோணிந்தப் படியிருந்தால் லயத்தின் நேர்மை
சொல்லரிதாம் அப்புறத்தே சோதி தானே. 48

இப்பகுதியில் உள்ள வாலைத் தாயின் குண்டலினி ஒளி கண்ணும் விண்ணும் கொள்ளாதது; கரை காண முடியாதது. இதைப் பரை என்றும் விண் படரும் செயல் என்றும் கூறுவர். அவளை மவுனத்தால் உணர்க. உருவம் ஒன்றும் காணாத மவுனச் செய்கை கொள்க. இது வான் மீதும் படரும் ஒளியாகும். இப்படி இதை மனத்தில் உணருமாறு (லயம்) செய்தால், உலகிற்கும் அப்புறத்தில் சோதியாய் இருக்கும்.

(பரை - பராசக்தி)

சோதியென்று பராபத்தி லறுவகை யுண்டு
சொல்லையிலே கேட்டிருப்போம் சொல்லிக் காணோம்
ஆதியென்ற மூலகுரு பேரால் மைந்தா
ஆண்பிள்ளைச் சிங்கமென்ற கொங்க ணர்கேள்
வாதியென்றா லவர்வாதி ஞானவாதி
மகத்தான குளிகையிட்ட சித்தன் வாதி
பேதியென்றால் மேருப்போ லேயும் பண்ணும்
பெருவாதி ரசவாதி பேருள் ளோனே. 49

சோதி என்ற பராபரத்தில் அறுவகை உண்டு. குண்டலினியே பராசக்தி வழியாகப் பராபரம் ஆகிய கடவுள் சோதிதான். இது விரிக்க விரிக்கப் பூரணமாய்ப் பெருகும். இது ஆறு யோக ஆதாரங்களிலும் சிறிது சிறிதாகத் தோன்றும். ஞானவாதி, குளிகை கண்ட சித்தன் வாதி, பெரிய வாதி, ரசவாதி எனப் பலருண்டு. (வாதம் செய்பவன் வாதி, ரசத்தில் பல பிரிவு செய்பவன், குளிகை (மருந்து) யில் பல பிரிவு செய்பவனும் வாதியே ஆவான்)

பேருள்ள கொங்கணர்தாம் குளிகை யிட்டுப்
பேரான பூரணத்தி லறுவரை கண்டார்
ஆருள்ளா ருலகத்தில் வரைகுரு சொல்ல
ஆச்சரியஞ் சித்தருக்குக் கீர்த்தி வைத்தார்
நேருள்ள ரிடிகளொடு முனிவ ரையா
நேராகச் சமாதியிலே கண்டோ ருண்டு
தாருள்ள சலத்தோடுஞ் சென்றா ரில்லை
சமர்த்தான மனத்தினிடச் சத்தி தானே. 50

கொங்கணர் செய்த குளிகை (மாத்திரை)யைத் தின்று யோகம் செய்து பூரணமாகிய குண்டலினி ஆறு ஆதாரங் களிலும் ஏறிவரக் கண்டனர். இது போல் வரையறை செய்து உணர்த்தும் குரு யாருமில்லை. இப்படிக் கொங்கணர் செய்த வாதம் புகழ் வாய்ந்ததாகும். ரிஷிகள், முனிவர் ஆகியோருக்குச் சமமாக இவர்கள் நேராகச் சமாதி யோகம் செய்வர். இதை வஞ்சகமாகச் செய்யவில்லை. மனத்தின் சாமர்த்தியத்தால் செய்தனர்.

விளக்கம்: (இந்தக் குளிகை உலக நினைவு, ஆசை, காமம் ஆகியவற்றில் நெகிழ விடாது. யோகத்தில் மூழ்கி இருக்கச் செய்யும். கோரக்கர்தான் கஞ்சா செடியைக் கண்டு பிடித்தவர். எனவே இக்குளிகையில் ஓரளவு கஞ்சாவும் கலந்திருக்கலாம். குளிகை - மாத்திரை)

சத்தியுள்ள வாசனையாங் குரங்கு கேளு
தாண்டியல்லோ இந்திரியக் கொம்புக் குள்ளே
பத்தியுள்ளே யலைத்தடித்துப் பேய்க்கூத் தாக்கிப்
பாங்கான மனத்தையல்லோ சின்னம் பண்ணி
முத்தியுள்ள வாசலுக்கே யேறொட் டாது
முழுமோசச் சனியனப்பா ஞானத் துக்குக்
கொத்தியுள்ள வாசனையை யடக்கிப் பார்த்தால்
குருடனுக்கும் ஞானவழி கூடுங் காணே. 51

சென்ற பிறவியின் வாசனை (பழக்கத் தொடர்பு) வந்து மனத்தைக் குரங்காக்கி, இந்திரிய மரக்கிளைகளில் ஏறிப் பத்தியில் சேராது பேய்க் கூத்து ஆடும். இது முத்தி பெறும் வாசல் வழியை நாடச் செய்யாது. ஞானம் பெறுவதற்கும் தடை (சனி) யாய் இருக்கும். கொத்தாக வரும் வாசனைகளை அடக்கிவிட முடியுமானால், குருடனுக்கும் ஞானத்தின் வழி கைகூடும். (இதைத் தான் கொங்கணர் குளிகை செய்தது என்க)

கூடுவதும் எப்படியோ ஞான மூர்த்தி!
குரங்கைவிட்டே அகலுகிற வழியைச் சொல்க:
நாடுவது முலகத்து வாதம் வந்தால்
நன்மனமுண் டானால்சாத் திரத்திற் சொல்வார்
ஊடுவது சாதுசங்கம் வேதாந் தம்பார்
உத்தமனே வாசனையாங் குரங்கு போகும்;
ஆடுவது தொய்தவா சனையி லேற்றும்
அப்படியே யுலகத்தி லனேகம் பேரே. 52

ஞானமூர்த்தி! இந்த யோகத்தைச் சேர்வது எப்படி? மனத்தைக் குரங்காக்காமல் விலக்கும் வழி எது? உலகத்தில் வாது செய்து நல்மனத்தைப் பெற்றால் பெறலாம் என்று சாத்திரங்களில் சொல்வர். சாதுசங்கம் வேதாந்தம் என்று கூறுவர். குரங்கான மனம் போகும் என்பர். ஆனால் இது மேலும் பல வாசனைகளில் ஏற்றுவதன்றி மனத்தை மாற்றாது. இப்படி அநேகர் கழிந்தனர் என்க. (சாது சங்கம் - துறவிகளின் கூட்டம்)

பேரான வுலகத்தில் ஞான முற்றும்
பேசாம லருகிருந்த இடத்தில் மைந்தா!
வாரான மோதத்தி லிங்க மாகும்
வாதிக்கு மேருவுக்கும் நடுவே கோடி

காரான காமத்தால் பாண்டி லிங்கம்
கைவிட்ட சமாதியினால் சுந்தர லிங்கந்
தாரான மலைதோறும் பூமி தோறுஞ்
சாற்றரிது சாற்றரிது சார்ந்து பாரே. 53

உலகத்தில் மவுனத்தால் ஞானம் முழுமை பெறும். இதனால் கீழிருந்து மேலாக உடல் நடுவே தீபத் தம்ப மாகிய லிங்கம் தோன்றும். இப்படி வாதி மனம் இருக்கும் கீழ்ப்பகுதிக்கும் மேலே தலைமையாகிய மேரு மலைக்கும் நடுவே இருப்பதை விருப்புடன் கீழ் மேலாகக் காண்பதைப் பாண்டி லிங்கம் என்பர். சமாதியில் இது உடலுக்கும் அப்பாலும் செல்வதனைக் காண்பதால் சுந்தர லிங்கம் என்பர். உலக வியாபகம் ஆகும்போது ஒவ்வொரு மலை யிலும், பூமியிலும் இயற்கையாய் இருக்கும் பரஞ்சோதியும் காண்பது சொல்லவியலாத அனுபவமாகும்.

பாரப்பா சுயம்பில்வந்து பிட்சை யேற்றால்
பலித்ததப்பா ஞானசித்தி மவுன சித்தி;
நேரப்பா வொன்பது பேர் இவருள் ஆறு
நிகராகப் பெலிகொண்டோர் நீடு மூவர்
காரப்பா விண்ணையென்றால் சாவார் கர்த்தார்
காத்தாலே ஞானசித்தி கலந்து கூடும்;
ஊரப்பா வாதியைப்போல் நீங்கள் கெட்ட
உலுத்தரென்பார் சித்தர்கள்தாம் உரைத்தி டீரே. 54

சுயமாகிய ஆத்ம உணர்வுடன் இந்தக் குண்டலினி நெருப்பை வாலையிடம் பிச்சையாகப் பெற்றால் ஞான சித்தி, மவுனசித்தி இரண்டும் கிட்டும். இதில் ஒன்பது பேர் வருவார்கள். (ஆறு ஆதாரங்கள், உள்நாக்காகிய இந்திர யோனி, உச்சந்தலைப் புழை (துளை), உச்சிக்கு மேல் 18 விரல் உயரமுடிவு மனோன்மணி ஆக ஒன்பதாம்.) ஆறு

ஆதாரமும் கவிழ்ந்த நிலை மாறி நிமிர்வர். பிற மூவர்களும் உலகில் சார்வார். இதனால் ஞான சித்தி முழுதும் கிட்டும். பிற நூலோர் இப்படிச் சித்தர் செய்வதைக் குறை சொல்வர்.

உரைக்கவல்லோ ராசயோகம் வைத்தா னீசன்?
உண்டுடுத்துத் திரிவதற்கோ சொன்னா னையன்?
மறைக்கவா சனைலகிரி கொள்ளு மென்றான்
மகத்தான தெட்சணா மூர்த்தி யாசான்
நிறைக்கவல்லோ யோகமுதல் ஞானஞ் சொன்னான்
நிற்கவிட மற்றநிர் மலமாஞ் சோதி
இறைக்கவல்லோ வூறினதோர் கேணி யைப்போல்
எடுக்கெடுக்க வெழும்பும்வா சனைதான் காணே. 55

ஈசன் ராஜயோகத்தைச் செய்யுமாறு நம்மைப் படைத்தான். உண்டு, உடுத்து இன்பம் பெறுவதற்குப் படைக்கவில்லை. பூர்வவாசனையும், போதைப் பொருளும் இந்த ஞான மார்க்கத்தை மறைக்கும் என்று தட்சிணாமூர்த்தி சொன்னான் (குரு) அவனே யோகம் ஞானம் நிறையச் சொன்னான். எங்கும் நீக்கமின்றி நிர்மலமான சோதி இருக்கும். இந்த யோகப் பயிற்சியால் ஊற்றுக் கேணியில் இறைக்க இறைக்க நீர் ஊறுவது போல் வாசனை வெளியேறும்.

எழும்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி;
ஏகாமல் வாசனையை யடித்தோன் சித்தன்
எழும்பாமல் கருவிகளை யிருக்கச் சாடி
இருத்தினவன் சிவயோகி வாத யோகி;
எழும்பாம லடிப்பதற்குச் சூட்சஞ் சொல்வேன்;
என்மக்காள்! மவுனத்தே யிருந்தாற் போகும்;
எழும்பாமல் வாசனைதான் போச்சு தானால்
ஏதுமில்லை சுத்தவெளி யிருளும் போச்சே. 56

பூர்வ வாசனை எழும்பாது தடுத்தவன் ஞானி தோன்றாமல் அடக்கியவன் சித்தன். இந்திரியங்களை அடக்கி இது எழும்பாது காத்தவன் சிவயோகி; வாத யோகியாவான். எழும்பாதிருக்க சூக்குமம் சொல்கிறேன். மவுன யோகமே அதைப் போக்கும். இப்படி வாசனை தோன்றாமல் போனால் எதுவும் தடையில்லை. சுத்தமான வெளியாக எல்லாம் மறைந்து காணும்.

விளக்கம்: சுத்தவெளி - படைக்கப்பட்ட முழுதும் காணாது வெளியாயிருப்பதாம் இது ஞானத்தின் உச்சமாகும். பூர்வ வாசனை - முற்பிறவி பற்றிய நினைவு.

போச்சென்றே இருக்கிறதோர் ஞானத் துக்குப்
புகழான வல்லமைதா னென்ன மைந்தா!
வாச்சென்ற அகண்டத்துள் வரைக ளாறு
மருவினால் சடத்தோடே யவனே சித்தன்;
நீச்சென்ற வரைப்பார்த்து வாரேன் மக்காள்
நில்லுங்கோள் குகையினுள்ளே யென்று சொல்லித்
தோச்சென்ற பூரணத்திற் சொக்கி நின்ற
சுந்தரா னந்தன்வந்து தொழுதிட் டானே. 57

வாசனையை நீக்கும் ஞானம் பெறும் வல்லமை எது என்றால் மைந்தா! அகண்டமான பரவெளியில் ஆறு அத்துவாக்கள் (வழிகள்) யாவற்றையும் தழுவிப் போனால் இவ்வுடலுடனேயே அவன் சித்தனாவான். இப்படி நீங்கும் வழியைக் கண்டு வரும் வரை, உடலாகிய குகையிலேயே இருங்கள் என்பது கூறிப் போன குரு சுந்தரானந்தன் வெளிப்பட்டான். (அத்துவாக்கள் - வழிகள்)

தொழுதுகொண்டு பதம்பிடித்து அகண்டத் துள்ளே
சொக்குகிறோ மென்றுசொன்ன சுந்தரமே ஐயா!
விழுதுகொண்ட ஆலைப்போல் நெட்டிட் டேறி
வெளிகடந்தே ஆறுகலங் கண்டு வாரேன்;

முழுதுகண்டா னென்பிள்ளை யென்று கீர்த்தி
மூட்டிவைப்பேன் சித்தத்தில் கோபம் வேண்டா
பழுதுகொண்டு வருகிறேன் திரும்பா விட்டால்
பராபரத்தில் லயிச்சிடுவேன் பண்பு பாரே. 58

வந்த அவனைத் தொழுது அவன் திருவடி பற்றி, இப்பிரபஞ்சத்தில் இயங்கி வயமாகிறோம் என்றான். அதுவே அழகாகும். விழுதுகள் கொண்ட ஆலமரம் போல் பரம்பொருள் தன்னை அடையும் வழிகளை விழுதுகளாக விட்டுள்ளது. அவற்றைப் பற்றி ஏறி வெளியையும் கடந்தால், ஆறுவகையான உலகங்களையும் காணலாம். என் பிள்ளையாகிய நீயும் இப்படி முழுதும் கண்டாய் என்று புகழை வளர்ப்பேன். எக்காலத்தும் கோபப்பட வேண்டாம். இப்படித் திருத்தம் கொள்ளாவிடில் அதுவே பழுதாகும். திருந்தினால் பராபரத்தில் ஐக்கியம் ஆவேன்.

பாரப்பா அகண்டவெளி சுத்தக் கானல்
பார்ப்பதற்கோ அங்கொன்று மிடமே யில்லை;
நேரப்பா ரவிகோடி வன்னி கோடி
நேரான மதிகோடி கண்ணோ கூசும்
ஆரப்பா அளவிட்டோர் கண்டோர் வீதி
அதற்குள்ளே செல்லரிது மைந்தா போபோ:
காரப்பா குகையொன்று பட்டங்கட்டிக்
கடுங்குளிகைச் சோடிட்டுக் கலந்திட் டேனே. 59

அகண்டமாகிய பிரபஞ்ச வெளி எந்தப் பொருளும் பார்ப்பதற்கு இல்லாது சுத்தமாய்க் கானல் போல் இருக்கும். (கானல் - கடற்கரைத் திடல்) சூரிய சந்திர சோதிகள் கோடிக்கணக்காய் வந்து கண்ணைக் கூசச் செய்யும். அவற்றை முழுதும் கண்டோரும் அளந்து பார்த்தோரும் இல்லை. ஆகவே குகையான இந்த உடலில் யோகக் குளிகை கலந்திருப்பாயாக.

கலந்திட்டேன் ஒருவரையில் நாத வோசை
கண்கொள்ளா வெளிக்குள்ளே கலக்கம்ஆச்சு:
சலந்திட்டேன் மறுவரையி லிடியோ கோடி
கண்கெட்டேன் மதிகெட்டேன் காதுங் கெட்டேன்:
..........................................................................
கலந்திட்டேன் மூவரையிற் காந்திக் குள்ளே
கடுகவந்தேன் கொங்கணரை யழைத்திட் டீரே. 60

நாத ஓசையை ஒரு மலையிலிருந்து கேட்டேன்; கலந்தேன்; கண்கொள்ளாத ஒளிக்குள்ளே கலந்தேன்; இன்னொரு மலையில் இடி மின்னல் கோடி கண்டேன். கண்ணும், மதியும், காதும் இவை காண்பதால் சக்தி இருக்கு மளவுக்குச் சென்றன. மும்மூர்த்திகளையும் இச்சுடருக்குள் கண்டு விரைந்து வந்து கொங்கணரை அழைத்திடுவோம், வாரீர்.

அழையுமென்ற சொற்கேட்டுச் சுந்த ரானந்
தன்கணத்திற் கொங்கணரை யதிசீக் கிரத்தில்
விழைவுடனே யோடிவந்து தெண்ட னிட்டு
விரைவுடனே கொங்கணர்தா னிக்க ணத்தில்
அழையுமென்றா ரெங்களையர் உங்க ளைத்தான்
ஆச்சரியஞ் சொல்லுதற்கே யடியேன் வந்தேன்
அழையுமென்ற சீடனுக்குப் பின்னே வந்தே
அடியேன்தான் வந்ததென்று பணிந்திட் டாரே. 61

இக்குரல் கேட்டுக் குரு சுந்தரானந்தன் கொங்கணரை மிக விரைவில் வந்து வணங்கினான். கொங்கணரும் அப்போதே எங்கள் குருவை அழைத்து விசாரித்தார். எம் ஆசிரியர் உங்களை வியப்புறக் கூறியதால் வந்தேன். அப்படி அழைக்கவும் மற்றச் சீடரும் பணிந்தார்.

விளக்கம்: சித்தினால் கொங்கணரை மீண்டும் இங்கு அழைத்ததாகக் கொள்க.

பணிந்திட்ட கொங்கணரை வாரி மோந்து
பராபரமே நிர்க்குணமே பண்புள் ளோனே!
அணிந்திட்ட அறுவரையிற் சொக்கிச் சென்ற
ஆதியென்ற பராபரமே ஐயா ஐயா!
மணியிட்ட சிலம்பொலியைக் கேட்ட மூர்த்தி
மார்க்கத்தை யெப்படித்தா னேறி னீரோ
கணியிட்ட நிர்மலா மனத்தி னாலே
கைலாய தேகமென்ன தங்க மாச்சு. 62

எல்லாரும் பணிந்த கொங்கணரை வாரித் தழுவி மோந்து "நீயே பராபரம் நிர்குணப் பண்பினன்" என்றனர். ஆறுவரையில் சொக்கிய கடவுளே நீதான் ஐயா. மணி ஓசை, சிலம்போசை உடலில் கேட்டவர் நீரே. இந்த யோக மார்க்கத்தை எப்படி ஏறிக் கடந்தீரோ? நிர்மலமான உடல், மனத்தில் கைலாய தேகமாய் (ஒளியுடம்பு) தங்க நிறமேனி யாச்சு என்றார்.

(ஆறு வரை - மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கள்)

ஆச்சப்பா அப்படியே வரணு மென்றே
ஆசைகொண்டே யிருக்கவழைத் தனுப்பு வித்தீர்:
வாச்சப்பா மனுவொன்ற வடியே னுக்கு
மைந்தன்மேல் கடாட்சத்தால் சொல்ல வேணும்
ஓச்சப்பா கொங்கணரே யுபசார மென்ன
ஓங்கினதை யுரைக்கின்றேன் கேளு கேளு:
காச்சப்பா வுலகத்தி லெடுத்த தேகம்
கைலாயச் சட்டையாங் கருவைச் சொல்லே. 63

நானும் வரவேண்டுமென்றிருந்த விருப்பப்படி அழைத்தீர். சீடன்மேல் அன்பு கொண்டதால் இதைச் சொல்ல வேண்டும். கொங்கணரின் உபசாரமாகக் கூறுகிறேன். கேள். இந்த உலகில் எடுத்த உடல் காய்ந்து (எரிந்து) விட்டது. கைலாயத்தையே சட்டையாக (ஒளிஉடம்பாக)

ஆக்கிவிட்டது என்றார். இவர் பெயர்க்காரணமும் இதில் விளங்கும்)

கருவென்ன வொன்றுமில்லை மேரு நேரே
காணப்பா ஈசானங் கைலா யமாச்சே;
உருவென்ன வெடுத்துகை லாய தேகம்
உத்தமனே நிராகார ஞான சித்தி
குருவென்ன நிர்க்குணத்தின் மவுனத் துள்ளே
குவிந்துரைத்த பெருமையின் கைலாய மாச்சே;
அருவென்ன மகாரவித்தை முட்டிக் கொண்டு
ஆதிவித்தை கற்பமது வுண்டு பாரே. 64

இவற்றுக்குக் கருவாக ஏதுமில்லை. மேருவை (தலைக்கு மேல் 18 விரல்) இங்கிருந்தே மனத்தால் கண்டால் ஈசானம், கைலாசம் எல்லாம் அதுவே ஆகும்.

உருவின்மேல் சட்டையாகக் கைலாய தேகம் வரும். இது நிராகார (உருவமற்ற) ஞான சித்தியால் நிர்குண மவுனத்தால் வந்த விளைவாகும். மகாரம் உள் இடத்திற்கு மேல் கற்பமாக (வழியாக) வந்து தோன்றும்.

பாரப்பா சூதமுண்டு மவுனந் தாக்கப்
பளிச்சென்ற ஏழுசட்டை பண்ணாய்ப் போதும்
நேரப்பா அச்சடங்கை லாய தேகம்
நிமிடத்தே சித்தியாமுன் னினைவுக்கு ஐயா
ஆரப்பா உனைப்போல நினைத்த அண்ணல்
அரிதரிது கூடாகி மூடர் பேரால்
சேரப்பா சொல்லிவிட் டேனென்ற பேச்சுச்
செப்புமுன்னே கைலாயம் உற்றுப் பாரே. 65

மவுனத்தால் நாடிப்பழக்கம் (சூதம்) உண்டாகும். ஏழுவித நிறச்சட்டை உடலில் தோன்றும். அதுவே கைலாய தேகமாகும். ஒரு நிமிடத்தில் இந்தச் சித்தியை நினைவால்

பெறலாம். உன்னைப் போல் நினைத்து அதையே பயிற்சி யாகச் செய்வோர் இல்லை. எனவே கைலாயம் முழுதும் மனத்தால் கருதிப் பார்.

விளக்கம்: பிரம்மாண்ட கைலாயமும் உடலில் தோன்றும் தலை உச்சியும் கொள்க. சூதம் - நாடிப் பழக்கம்.

உற்றுநின்ற பலநூலைப் பார்த்துப் பார்த்தே
உரையாவே தாந்தசித் தாந்த மென்று
பற்றிநின்ற பரவசத்தா னென்றே உன்னிப்
பாராம லலைந்துகெட்டார் அனந்தங் கோடி:
முற்றிநின்ற விடமெங்கே ஞான மெங்கே?
..........................................................................
கொற்றி நின்ற மேல்மூலத் துரியம் எங்கே?
கூடுவார் மெய்ஞ்ஞானக் குறைவி தாமே. 66

பலவித நூல்களையும் பார்த்துப் பார்த்து, அவை கூறும் வேதாந்தம், சித்தாந்தம் என்ற பிரிவு வகைகளையும் பார்த்து, பரவசத்தால் யோகம் மூலம் அடையலாம் என்பதை ஊன்றி நோக்காது, பலகோடி பேர் கெட்டனர். அவர் கூறும் ஞானம் எங்கே தோன்றி எங்கே முடிந்தது? மேல் மூலத்தின் உச்சி பற்றி அவர்களுக்குத் தெரியுமா? இவர்களுக்கு மெய்ஞ்ஞானம் குறைவு ஆகையால் கெட்டனர் என்க.

குறைவேது வாசனையாந் தொய்தத் தோடு
கூடவல்லோ மெய்ஞ்ஞானம் புனைந்து நிற்கும்;
மறைவேது மறையதனின் அந்த மேது?
மறைவற்று நின்றதொரு வெளியங் கேது?
துறையேது துறைக்குள்ளே சோதி யேது?
சூட்டியிருந்த விவரமெல்லாம் ஞானந் தோற்றும்
அறையேது? அல்லவென்று சமுசா ரத்துள்
அழுத்துமப்பா தொய்தத்தி னாண்மை தானே. 67

குறைவான வாசனை போல் துவைதம் உண்டாகும். (கடவுளும் நாமும் வேறு என்பது தொய்தம்) அதனுடன் இணைந்து ஒன்றானால் மெய்ஞ்ஞானம் புனையும். மறையோ, வேதமோ, அதன் முடிவோ, நீண்ட வெளியோ, தொடங்கும் இடம் எது? அத் தொடங்கும் இடத்திலேயே தோன்றும் சோதியோ? இந்த விவரங்கள் சூட்டியபடி ஞானம் உண்டாகும். அறை எதுவென்று அவர்கள் கூற வில்லை. பிறந்து, இறந்து, வளரும் சம்சாரத்தில் துவைதம் தன் வலிமையால் எம்மை அங்கே வீழ்த்திவிடும்.

ஆண்மையென்றால் தொய்தத்தி ணாண்மை யல்லோ
அகண்டமுத லண்டமெல்லாம் ஞானந் தோற்றும்
மாண்மையென்றால் வாய்ப்பேச்சாம் ஞானி வாயில்
மண்ணையள்ளிக் கூறுகொண்டு மலங்கப் பார்த்துக்
கேண்மைகொண்டே யுலகெல்லாங் கெடுத்தே ஆட்டிக்
கெடியான பெண்ணுபொன் னாணி னாலே
தான்மையென்ற பிறப்பிறப்பை மீறப் பாய்ந்து
சண்டாளக் கோபத்தைத் தள்ளு தள்ளு. 68

பெருவலிமையில் எல்லாம் பெரிது துவைதத்தின் வலிமையே. அகண்டமாகிய பிரபஞ்சம் முதல் தனித்த அண்டம் வரை எங்கும் ஞானம் வெளிப்படும். வாயால் பேசும் வெறும் பேச்சால் மாய்தல் (மாண்மை) தான் வரும்.

ஆகவே மண் பூதமாகிய மூலாதாரத்தில் பலகூறு கொண்டு, எல்லா அண்டங்களையும் (உடலின் உறுப்புக்கள்) விட்டு நீங்கி, கெட்டியாய் இருக்கும் வாலைப் பெண்ணுடன் பொன் நிறமும் ஆண்மையும் பெற்று, சம்சாரமாகிய பிறந்து இறப்பதையும் நீக்க வேண்டுமாயின் கோபத்தை முதலில் நீக்குக. தொய்தம் - துவைதம்; கடவுளும் ஆன்மாவும் வெவ்வேறு என்று நினைப்பது.

தள்ளுகின்ற வுறுப்பு வந்தால் கருவைக் கேளு;
சாதகமாய்க் குண்டலிக்குள் வாசி வைத்துத்
தெள்ளுகிற பிராணாயம் பண்ணித் தீரும்
திரண்டொலியுஞ் சிலம்பொலியுங் காணும் காணும்;
நள்ளுகிற கண்டத்தே யங்கென்று ஊணும்
நலம்பெரிய புருவமையந் திறந்து போகும்
அள்ளுகிற கனிபோலே யமிர்தம் வீழும்
அப்பொழுது காயசித்தி யறிந்து கொள்ளே. 69

ஓர் உறுப்பின் தளர்ச்சிக்கு அது உண்டான கருவே காரணமாகும். ஆகவே குண்டலினி நெருப்பை வளர்க்கும் சாதகத்தில் பிராணாயாமம் செய். இதனால் பலவித ஒலிக ளோடு சிலம்பொலியும் கேட்கும். கண்டத்தில் 16 தாமரை யில் கீழ், வலப்பக்கத்து முதல் இதழில் 'ஓம்' என்று மனத்தால் சொல்லி, எல்லா இதழ்களிலும் உணர்வு தேக்கவே அது புருவமையத்தைத் திறக்கச் செய்யும். கனியைப் பறிப்பது போல அமிர்தம் ஊறும். அப்போது தான் காயசித்தி உண்டாகும்.

அறிந்திந்த மதியான விந்து விட்டும்
அப்பனே யோகமிதே யறிந்து கொள்ளு;
பரிந்திந்த விந்துமுதல் நாதஞ் சித்தி
பாங்கான சிவத்தோடு பரந்தான் கேளு;
அறிந்திந்தப் பராபரத்தோ டாறு கேளு
அப்பனே மவுனத்தைத் தூக்கிக் கொண்டால்
செறிந்து நின்ற ஞானத்தின் யோக மாச்சு;
செயல்தம்ப மவுனத்தைச் சென்று காணே. 70

விந்துவாகிய ஒளியே மதிக்கத் தக்கது. ஆகவே யோகத்தை அறிந்து கொள். மூலாதாரம் முதல் தலை உச்சி முடிய விந்துவும் (ஒளி) நாதமும் (ஒலி) உடம்பிற்குள் பலவாக நாடிகளில் புகுந்து மேல் ஏறுகிறது. இவற்றை

அறிந்து வயமானால் சிவத்தோடும், பராபரத்தோடும் இணையலாம். இப்படி இணைய ஆறு ஆதாரமும் பரமாகக் காட்சி தரும். இப்போது மவுனத்தை மேற்கொண்டால் அதுவே ஞானயோகம் ஆகும். செயலாம் அக்கினித் தம்பத்தை மவுனத்தோடு உணர்க.

காணப்பா பராபரத்தின் மேலே யாறு
கைவிட்ட அகண்ட முநிர்க் குணத்தா னொன்று
பூணப்பா நிர்க்குணந்தான் நிராகா ரந்தான்
புகழான நிர்மலந்தான் போதத் தந்தம்
தோணப்பா விவையாறுங் காணப் போகச்
சொல்லுகிற வார்த்தையென்றால் கேட்டி ருப்போம்
ஊணப்பா சடம்விட்டே அறிவு விட்டே
உற்று நின்ற அண்டத்தே யறித்து கொள்ளே. 71

பராபரத்தோடு ஒன்றிய ஆறு ஆதாரமும் அகண்டத்தில் உள்ளன. நிர்க்குணம், நிராகாரம் (உருவின்மை), நிர்மலம் ஆகிய மூன்றும் (போதாந்தம்) ஞானத்தின் முடிவாகும். இவைகளை உணர்ந்து, எல்லா உயிர்கள் பேசுவதும் கேட்டு, சடமாகிய உடல் உணர்வை நீக்கி, அறிவு (மனம்) செயற்படுவதை நிறுத்தி வெறும் வெளியான பேரண்டத்தை அறிந்து கொள். (நிர்க்குணம் - எத்தகைய குணமும் இல்லாமை. நிர்மலம் - எத்தகைய குற்றமும் இல்லாமை)

அறிந்துகொள்ளு மதியளவு பிண்டத் துள்ளே
அப்பனே யாறுதலம் அறிந்து காணும்;
அறிந்துகொள்ளு விந்துவின்மேல் பரத்தின் மட்டும்
அறிவுக்குள் சக்கரந்தா னப்பா கேளு;
அறிந்துகொள்ளு பரத்தின்மேல் போதம் மட்டும்
ஆதார நிர்மலத்தின் வரைக ளாறும்
அறிந்துகொள்ளு மேலாறுங் காணப் போகா
ஆச்சரியம் கொங்கணரை விட்டுக் காணே. 72

பிண்டமாகிய இந்த உடலில் ஆறு யோக ஆதாரமும் அறிந்து கொள். விந்து முடியும் இடம் பரம் இருக்கும் இடம் என அறிக. இதை அறிவாகிய சக்கரத்தால் கடக்க வேண்டும். பரத்தின் மேல் ஞானம் இருப்பதை அறிக. நிர்மலமாக இருப்பன அந்த ஆறு ஆதாரமும் என்று அறிக. தலைக்கு மேலுள்ள ஆறு நிலைகள் உடனே அறிய இயலா. கொங்கணரால் இந்த ஆச்சரியம் உணர்க. (அவர் முடிவை ஏற்பது அவரால் அறிவதாம்)

காணப்பா தசதீட்சை கடந்த பின்பு
கைவிட்ட சூத்திரத்தை ஆசான் காட்ட
ஊணப்பா அதுமவுனம் மற்ற தெல்லாம்
உரவார்த்தை அகாரமுத லுகார மென்பார்
வீணப்பா சிரமேல்வே தாந்தக் காட்சி
விரைந்ததிலே யும்மென்றே ஊணென் பார்கள்
பூணப்பா வும்மென்ற நாத மாமோ
போக்கறியான் சொல்லுகிற ஞானந் தானே. 73

பத்துவித தீட்சைகளும் முடிந்த பிறகும் இத்தொடர்பு எதுவெனக் குருநாதன் காட்ட, அப்போது மவுனத்தைக் கைக்கொள்க. மற்ற வார்த்தைகள் உரத்துக்காகப் பேசப் பெறுவனவே. அகரம், உகரம், தலைமேல் வேதாந்தம், அதிலே 'உம்' என்று மனம் செலுத்துக என்பார்கள் - 'உம்' என்பது நாதமாகி விடாது. அது போக்கு அறியா தவன் சொல்லும் ஞானமாகும் எனக் கைவிடுக. தச தீட்சை - பத்துவித தீட்சைகள்.

தானென்ற இடங்காட்டி நாதங் காட்டிச்
சாற்றுகிற மவுனத்தின் சார்பு காட்டி
வானென்ற வெளியோடறு தலமுங் காட்டி
வாய்மூடின் ஆதிக்க வகையும் காட்டி

ஊனென்ற வுடம்பைவிட்டுக் கேசரியுங் காட்டி
ஊமைநின்ற இடங்காட்டி யுரைக்கப் பண்ணிக்
கோனென்ற குருவெனும்வாய் பேச லாமோ
குறும்பரே குருசொல்ல விரண்டு மாமே. 74

ஆத்மா இருக்கும் இடம், நாதம், மவுனச் சார்பு, வானில் கலக்கும் ஆறு ஆதாரம், வாய் மூடினதால் வரும் ஆதிக்கம், உடம்பு உணர்வு, கேசரி யோகம், ஊமை (மகரம்) எழுத்து நிற்கும் இடம், இவைகளை எப்படிச் சொல்வது என்ற எல்லாம் விளக்கிக் காட்டிய குருவின் முன், வேறு ஒன்று கேட்டு வாய் திறக்க வேண்டாம். குரு சொல்லி விட்டால் விளக்கமும் ஆயிற்று. தீட்சையும் ஆயிற்று என அறிக.

ஆமிந்த வுலகத்தோர் ஞான வீதி
அறிந்தேறிக் கூடுவதும் அரிது மெத்த
ஓமிந்தக் குண்டலியைத் தொட்ட ரற்ற
ஊதுவது கடினமெத்த யோக மார்க்கம்
வாமிந்த வாமத்தே நின்று கொண்டு
மகத்தான பானமுண்ண வாய்க்கும் ரண்டும்
சோமிந்தச் சடைவைத்துச் சின்மயம் காட்டும்
சொற்பெரிய பூரணந்தான் சொன்ன வாறே. 75

ஞானத்தின் வழிகள் யாவும் அறிந்து யோகத்தில் சேர்வது இந்த உலகினர்க்கு அரியதாகும். குண்டலினியை அறிந்து அது மூண்டெழுமாறு பிராணாயாமம் செய்வதும் கடினமாகும். இந்த இடது பக்கத்து நின்று (வாமம்) வாலையால் அமுதுண்டு யோகமும், ஞானமும் வாய்க்கப் பெறுவது இயலும். சடையில் வைத்த சந்திரனால் சின்மயம் காட்டும் பெரிய பூரணத்தை நான் சொல்லியது இவ்வாறே ஆகும்.

வாறான குருவினுடை வாழ்க்கை கேளு
மகத்தான சடையின்மேல் மதியுஞ் சூட்டித்
தாறான நெற்றியிலே தீயை வைத்துச்
சர்ப்பமல்லோ ஆபரண மாகப் பூண்டு
வீறான கரித்துகிலை மேலே போர்த்து
விளக்கியதோர் புலித்தோலை யிடையிற் கட்டிக்
கூறான சுடுகாட்டிற் குடியு மாகிக்
கொள்கின்றார் பலியெடுக்கக் கொள்கின் றாரே. 76

உலகம் முழுதுக்கும் குருவானவர் வாழ்வைக் கேள். விரிசடையில் நிலவை வைத்து, நெற்றியிலே கண்ணாக நெருப்பை வைத்து, நாகங்களை அணிகலன்களாகப் பூட்டி, யானைத் தோலை உடலின் மேல் போர்த்தி, புலித் தோலை இடுப்பில் கட்டி, சுடுகாட்டில் குடியும் கொண்டு, வீடுதோறும் மண்டை ஓட்டில் பிச்சை எடுக்கும் அவர் (சிவன்) நம்மை ஆட்கொள்ளுகிறார்.

பலியெடுத்த குருவினிட வாம பாகம்
பகிர்ந்துநின்ற என்தாயின் பரிசு கேளு;
பொலியெடுத்த அட்டமா சித்தி நிற்கப்
புகழ்பெரிய ரத்னவகை யாரம் பூண்டு
நலிவில்லா யோகாப்பி யாசஞ் செய்து
நண்ணுமிரு பதச்சேவை காண்ப தற்கே
ஒலியெடுத்த நவகோடி தேவர் சித்தர்
ஒன்றாகக் கணநாதர் போற்று வாரே. 77

குருவினுடைய இடது பாகத்தில் பகிர்ந்து நிற்கும் என் தாயின் பரிசைக் கேள். அட்டமா சித்திகளைப் பொலிவாகக் கொண்டு, நவரத்தின மாலைகள் சூட்டி, நலிவில்லாத யோகப் பயிற்சியைச் செய்து, நம்மை ஆளும் திருவடிகளை நவகோடி தேவர், சித்தர், கணநாதர் ஒன்றாய்க் கூடிப் போற்றுவர்.

அறிந்துகொள் என்தாயே துரைப்பெண் ணப்பா!
அப்பனோ எருதேறும் ஏழை யேழை
அறிந்துகொள் இவளைமுன்னே யையா வைத்தே
ஆதரித்துக் கேட்டதெல்லாம் அருளிச் செய்வாள்
அறிந்துகொள் அகண்டத்தே ஞான சக்தி
ஆத்தாளைப் பூசித்தால் அறுப ஈவாள்
அறிந்துகொள் சடமெல்லா மவளே யாச்சே
அப்பனுக்கு மெலும்போடு நரம்பி ரண்டே. 78

என் தாயே தலைமையான பெண் என அறிக. அப்பனோ காளையில் ஏறும் ஏழையாவான். இவளை எதற்கும் முன்னதாக அறிக. விரும்பிய எல்லாம் அருளு வாள். இப்பிரபஞ்சத்தின் ஞானசக்தி இவளே. தாயாகிய அவளைப் பூசித்தால் அறுபது சித்திகளும் தருவாள். சடமாகிய உடம்பு அவளே என்று அறிக. நம் எலும்பும் நரம்பும் அப்பாவின் (சிவன்) கூறாகும்.

இரண்டான வாயுவினி லொன்று சத்தி
ஈராகச் சிவமேது பிராண வாயு
ஒன்றாக நாடிநின்றால் சுழுமுனை யாச்சு
யோகமுமாம் ஞானமுமா முற்றே யேறு
தண்டான சுழுமுனைதா னடுவில் நிற்குஞ்
சாதகமா யிதற்குள்முக் கிரந்தி யுண்டு
நன்றான சுழுமுனையிற் பிராண னேறில்
நாதாந்த யோகமிது நாடிக் காணே. 79

இருவகை மூச்சுகளில் ஒன்று சத்தி, மற்றது சிவம். பிராணவாயு சுழுமுனையில் நடுவாக நாடி நிற்கும். இவை உணரவே யோகமும், ஞானமும் கைவந்ததாம். நடுநாடி யான சுழுமுனையில் மூன்று முடிச்சுகள் உள்ளன. பிராண வாயு இந்த நடுநாடியில் ஏறுமாயின் நாதாந்த யோகம் இது என அறிக.

காணப்பா நெஞ்சினுள்ளே பிராண யோகங்
கண்டுகொள்ளு தாமரையில் நூல்போ லாடும்;
ஊணப்பா அதிலிரட்டி யபான வாயு
உற்றுநின்றி ரண்டையுநீ கண்டா யானால்
பூணப்பா இதற்குள்ளே ஞான யோகம்
புசுண்டருக்குச் சித்திகை லாய தேகம்
தோணப்பா நவகோடி மானா கண்டார்
சுகயோக மாவது இந்தத் துறையு மாமே. 80

நெஞ்சிற்குள் பிராணயோகம் கண்டுகொள். தாமரைத் தண்டின் மெல்லிய நூல்போல் இரண்டு நாடிகளில் மனத்தை ஊன்றுக. இதைக் கண்டால் ஞான யோகம் இரண்டும் கண்டதாயிற்று. இதனால் புசுண்டர் கைலாய தேகம் (ஒளியுடல்) பெற்றார். ஒன்பது கோடி பேர்களும் இதைக் கண்டவராவர். சுகமாக யோகம் பயிலும் துறை இதுவே யாகும்.

ஆமப்பா ஆசைவிடக் கருவைச் சொல்வேன்
அறிந்துகொண்டே அறிவாலே நின்று பாரு;
சேமப்பா திரோதாயி யாரென் றக்கால்
செகமெலாம் பெண்ணான வுருத்தா னப்பா!
ஓமப்பா பொன்மண்வா சனையி னாசை
ஒற்றிநின்ற இந்திரிய மயக்கத் தாசை
நாமப்பா வென்றுசொன்ன ஆண்மை யாசை
நல்வினைக்குந் தீவினைக்கும் வித்து மாச்சே. 81

ஆசையை விடுவதே அடிப்படை என்று அறிக. அறிந்தபின் அறிவால் சிந்தனைசெய். மறைப்பு எனும் திரோதாயி எது என்றால் எல்லாப் பெண்ணுமாகிய உருவமே. பொன்னாசை மண்ணாசையால் இந்திரியங்கள் மயங்கும். இதனால் நல்வினை, தீவினை இரண்டுக்கும் விதை போட்டதாகவே ஆகும்.

வித்துக்குள் பாவமென்ன புண்ய மென்ன
வெகுகோடி புண்ணியத்தால் புருட சன்மம்
புத்துக்குள் வெகுகோடி பாவ புண்யம்
பாழான பெண்செனன மெடுத்த வாறு
கொத்துக்கு ளிவையறிந்து பாவ மான
குழிக்குள்ளே வீழ்ந்தாரே கோடி யையோ!
எத்துக்கு ளிவையறிந்து வேறாய் நின்றே
இகழ்ந்தவனே மெய்ஞ்ஞான ஈச னாமே. 82

பல கோடி புண்ணியத்தால் ஆண் பிறவியும், பல கோடி பாபத்தால் பெண் பிறவியும் தோன்றுகின்றன என்பதனை யறிந்தும் பல கோடியினர் பாவக் குழியில் விழுந்தனர். இவைகளை அறிந்து தனித்து நின்று இகழ்ந்தவன் மெய்ஞ்ஞான ஈசனாவான்.

விளக்கம்: துறவுக் கொள்கைக்காகப் பெண்களை இழித்துக் கூறியது என்க. பெண்களும் யோகத்தால் முத்தியடைய முடியும் என்பதே சாத்திரம்.

பூரணமே யகண்டமே யகத்தி னந்தம்
பொங்கிநின்ற நிர்க்குணமே யென்னை யீன்ற
காரணமே யலகிற்பெண் ணாசை போலக்
கலந்துநின்ற சுகமில்லை கருதிக் கொண்டேன்
ஆரணமே யதீதத்தில் சுகந்தா னென்ன
அப்பவே சொல்லுகிறே னறிந்து கொள்ளு;
காரணமாங் குவிமுலையா ளாசை விட்டால்
மகத்தான மூவுலகும் விடுக்கும் நேரே. 83

பூரணப் பொருளே! பிரபஞ்ச விரிவே! மனத்தின் இறுதிமுனையே! நிர்க்குணமே! என்னைப் பெற்ற காரணப் பொருளே! உலகில் பெண்ணாசை தரும் இன்பத்துக்கு ஈடு இல்லை. ஆனால் துரியத்திற்குச் செல்லும் அதீத முயற்சியால் வரும் சுகம் பெண் சுகத்தை விடப் பெரியதே ஆகும்.

ஆகவே உடலுக்குக் காரணமான பெண் ஆசையை விட்டால் மூவுலகும் நேரே தோன்றும்.

நேரான பெண்ணாசை நீங்கிற் றானால்
நிலையான திரோதாயி மாய்கை போச்சு
தூரான வேதாந்த வெளியிற் சொல்வார்
சும்மென்ற சகஞ்சொல்வார் யோகி யல்லர்
வாராய்நீ யென்மகனே பெண்ணாற் சிக்கி
மகத்தான ரிடிகள்சித்தர் கோடி கெட்டார்;
தாரான சித்தரொடு பஞ்ச கர்த்தாள்
தயங்கி நின்று படும்பாடு சாற்று வேனே. 84

பெண் மீதான ஆசை நீங்கினால் திரோதாயி எனும் மறைப்புச் சத்தியும் போய்விடும். வேதாந்த வெளியில் செல்ல நேரும். ரிஷிகள் சித்தர் கோடிக்கணக்கில் பெண் மாயையில் சிக்கியே மாண்டார். சித்தர்களோடு அவர்கள் உடலில் உள்ள கடவுள் தத்துவம் ஐந்தும் மயங்கி வீணாகி விட்டன. அதை மேலும் கூறுவேன்.

சாற்றுவேன் வீதிபடு குழிதா னுண்டு
தன்மேலே புல்லோடு செடியு மூடி
மாற்றுவேன் வீதியிலே நடந்தோன் வீழ்ந்த
வாறொக்கும் பெண்ணான மாயக் கூபம்
ஆற்றுவே னென்றாலும் ஆற்றப் போகா
அரகரா பெண்ணரவு கடித்த தானால்
போற்றுவே னென்றாலும் பொல்லாக் காமம்
பொறிவிட்ட நெய்போலப் பொங்கும் பாரே. 85

வீதியில் படுகுழி இருப்பது போல் யோகமார்க்கத்திலும் உண்டு. நம் மீது செடி, கொடி மூடிவிடுமாறு விழ நேரும். பெண்ணாசை என்ற மாயக் கூடத்தால் அதனை அகற்றவும் ஆகாது. பெண் எனும் ஆசைப் பாம்பு

கடித்தால், போற்றிக் காக்கவும் ஆகாது. ஒரு நெருப்புப் பொறியில் நெய் பட்டுப் பரவியது போல் பொங்கும்.

பொங்குகின்ற காமமென்ன? சிவத்தின் கூறு;
பொல்லாத ஆசையென்ன? மாலின் கூறு.
மங்குகின்ற மோகமென்ன? மகேசன் கூறு;
மருவியந்த மூன்றாலு முலகம் பாழாய்த்
தங்குகின்ற யோகம்போய் ஞானம் பாழாய்ச்
சமாதியெல்லாம் இந்திரியச் சார மூடித்
தொங்குகின்ற மோட்சத்தின் தரைபோ லாகச்
சூனியமாய் ஞானமெல்லாந் தோற்றும் ஆறே. 86

காமம் சிவத்தின் கூறு. ஆசை திருமாலின் கூறு. மோகம் மகேசன் கூறு. இம் மூன்றாலும் உலகம் பாழாகும். யோகமும், ஞானமும் போய் விடும். இந்திரியங்களை முழுதும் மூடினாலும் இயலாது. மோட்சம் செல்லாமல் அதன் தரையில் அயர்வதா என்று கொள்க. சூனியமாய் ஞானம் தோன்றட்டும்.

மாறான பெண்ணாசை விட்டே னென்பார்;
மருவியவள் தனிப்பட்டால் சரணஞ் செய்வார்
தாறான சயனத்திற் பெண்தான் சொல்லில்
சதாசிவனால் முடியாது; மற்றோ ரேது?
கூறான விந்துவிடக் கோப மோகங்
குறியழிக்கும் நினைவழிக்குங் கூட்டைக் கொல்லும்
வீறான விந்துவுக்கு மேலே நின்று
விருதுபெற்ற மௌனியல்லோ வெட்டி னாரே. 87

மாற்றம் தரும் பெண்ணாசையை விட்டேன் என்பர். ஆனால் விரும்பியவள் தனியே வந்தால் அவளின் காலில் விழுவர். படுக்கையிலும் அவர்களை நீக்கி நிற்பது சதா சிவத்தாலும் ஆகாது. பிறர் எம்மாத்திரம்? விந்துவை

விட்டால் கோபம், மோகம், நினைவு, குறிக்கோள் யோகம் ஆகிய எல்லாவற்றையும் அழிக்கும். விந்துவை விடாது நின்றவரே அதைக் கடந்தவராவார்.

வெட்டினார் மௌனியந்த விந்துப் பாம்பை
வேதாந்த மென்றதொரு வாளி னாலே
தட்டினார் மாய்கையைத்தான் சண்ணிக் கீழே
சச்சிதா னந்தவெள்ளச் சார்பி னாலே;
ஒட்டினா ரொட்டினநிர்க் குணத்தின் மட்டும்
உத்தமனே யதுவல்லோ ஞான வீதி?
தெட்டினார் தெட்டினார் சகல ரெல்லாம்
செகசால வித்தையென்று தெளிந்து பாரே. 88

மௌனியாய் இருந்து யோகமாகிய (வேதாந்தம்) வாளால் விந்து எனும் பாம்பு வெளியேறாது வெட்டினார் ஆகலாம். சச்சிதானந்தத்தை உணரும் வெள்ளப் பெருக்கால் விந்து வெளியாகாது காக்கலாம். நிர்க்குணமாயிருப்பதாலும் இந்த ஞானம் பெறலாம். சகலர் என்னும் சாதாரண மனிதர்கள் செகசால வித்தை இது என்று மயங்கினராம்.

தெளிவதுதா னெளிதல்ல வாய்ப்பேச் சல்ல;
சிங்காரப் பெண்கண்டால் ஞானம் போச்சு
அழிவதுதான் சடலத்துக்கே யடுத்த கூறாம்
அதரமுண்டு கூடுது போக மென்பார்
கழிவதுதான் காலேது வாசி யேது
கைவிட்ட மைதுனத்திற் கலப்ப தேது?
ஒழிவதுதா னெந்நாளோ வென்று லோகர்
ஒருகோடி மாண்டார்க ளூன்றிக் காணே. 89

யோகத் தெளிவு என்பது எளிதுமன்று. வாய்ப் பேச்சும் அன்று. அழகிய பெண்ணை விரும்பினால் ஞானம் போய் விடும். உடலுக்கும் அதனால் அழிவு உண்டாகும். பெண்

வாயில் அமுது உண்டால் இன்பம் என்பர். ஆனால் பிராணனும் பிராண வாயு முயற்சியும் இல்லாது போகும். இந்த நிலை என்று ஒழியுமோ என்று உலகில் பலர் மாண்டனர்.

காணப்பா பிறப்பிறப்புப் பெண்ணா லாச்சு;
கைகடந்த மாயமெல்லாம் பெண்ணா லாச்சு;
பூணப்பா இந்திரியம் பெண்ணா லாச்சு;
புகழ்பெரிய வாசனையும் பெண்ணா லாச்சு;
தோணப்பா மனம்புத்தி ஆங்கா ரத்தில்
சொக்கிச்சுப் பெண்ணாலே சூட்டிப் பாரு;
ஊணப்பா வூணப்பா வுரைக்கச் சொன்னேன்;
உலகத்தில் திரியாதே விண்ணி லாடே. 90

பிறப்பு பெண்ணால் ஆனது போலவே, இறப்பும் அவளால் ஆகும். மாயம் எல்லாம் பெண்ணால் ஆனது. இந்திரியம் அடங்காததும் பழைய வாசனை துரத்துவதும், மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் பெண்ணில் ஈடுபடுத்து வதை அறிக. உலகில் இந்த ஆசையை கைக்கொண்டு திரியாது விண்ணில் ஏறி வழி தேடுக.

ஆடையிலே விண்ணுக்குள் சித்தர் கோடி
அந்தந்த மலைகளினால் தாக்க ஓடி
ஊடையிலே யண்டத்தில் முனிவர் கோடி
உற்றுநின்ற பதமளவும் ரிடிகள் கோடி
தேடையிலே சதாநித்தம் வேதம் பாரு
சேர்ந்துநின்ற ஓசையிலே தெளியச் சொல்வார்
நாடையிலே யெந்நேரம் மவுனம் நாடு
நரகமாம் வாசனைதான் நன்றாய்க் கேளு. 91

விண்ணுக்குள் சித்தர் கோடி பேர் உள்ளனர். மலைகளின் மேல் எல்லாம் முனிவர் கோடி, எல்லாப்

பதங்களிலும் ரிஷிகள் கோடியளவு உள்ளனர். வேதத்தை இடைவிடாது நோக்கினால் ஓசையில் தெளிவான பயன் சொல்வார்கள். எப்போதும் மவுனமே நாடுவாயாக. நம் பழைய பிறவி வாசனை நமக்கு நரகம் என உணர்க.

கேளப்பா இதைவிட்டே யுலக ஞானி
கேட்டதெல்லாஞ் சொல்லுகிறேன் மக்காள் மக்காள்!
நாளப்பா செகமெல்லாஞ் சாங்க மென்பான்
நலமான நூல்பாரான் தீட்சை யாவான்
காளப்பா மவுனமென்பான் விண்ணைப் பார்ப்பான்
காதகத்தை விட்டுச்சீ வனத்திற் செல்வான்
நாளப்பா தினந்தோறுந் தர்க்கம் பேசி
நலமான பெண்ணோடு மயங்கு வானே. 92

உலக ஞானியர் பற்றிக் கூறுகிறேன். கேட்டவற்றை நான் சொல்லக்கேள். ஜெகம் முழுதும் தன்னுள் அடக்கம் என்பான். யோக முயற்சியை விட்டு விட்டுச் சீவனம் செய்யப் போவான். தினமும் தர்க்க நூல்படி விவாதிப்பான். நல்ல அழகான பெண் கிடைத்தால் இதை விட்டு அவளிடம் மயங்குவான்.

மயங்குவான் பொன்தேடப் புரட்டும் பேசி
மகத்தான ஞானமெல்லாம் வந்தது என்பான்;
தயங்குவான் மண்ணாலே சார்வு காணான்;
சாதகமா யோகத்திற் சார்ந்தே னென்பான்;
தியங்குவான் நோய்வரிற்பூ ரணமே யென்பான்;
செகநாத திரோதாயி சிரிப்பாள் பார்த்து;
முயங்குவான் சமாதிவிட் டேனையோ வென்பான்
மூடமொற்ற ஞானமெல்லா முலகிற் பாரே. 93

புரட்டுப் பல பேசிப் பெண் தேடுவான். தனக்குப் பெரிய ஞானம் வந்ததாகப் பொய் கூறுவான். பூமி

இம்சமாகிய மூலாதாரத்தைச் சாராமல் யோகம் எல்லாம் கைக்கொண்டேன் என்பான். நோய் வந்தால் கடவுளே என்று கைதொழுவான். இவனைப் பார்த்து உலகம் முழுதும் திரோதாயியாயிருந்து மயக்குபவள் சிரிப்பாள். பெண்ணிடம் ஈடுபடுபவன். ஐயோ சமாதி நிலை என்னை விட்டுப் போனதே என்று கவலைப்படுவான். உலகில் இப்படிப்பட்ட மூடத்தனமெல்லாம் பார்க்கலாம்.

பாரப்பா சரீரமிது சமாதிக் காக!
பாழான தூலமிது வென்பார் கோடி
நேரப்பா வாதம்வந்தால் ஞானம் என்று
நேரப்பா அலைந்தவர்கள் கோடா கோடி;
ஆரப்பா வுலகத்தில் ஞானி யுண்டோ?
ஆராய்ந்து நான்கண்டே னென்பார் கோடி;
ஏரப்பா அழுதலோவெள் ளாமை யாகும்?
ஏரில்லா னறுத்தடித்த கதையு மாச்சு. 94

இந்த உடலின் காரணம் சமாதி யோகம் பயில்வதற்கே ஆகும். பலர் இதனால் இது பாழான தூலம் என்பர். வாதம் கண்டால் ஞானம் பெறலாம் என்று கோடானு கோடிப் பேர் அலைவர். உலகில் யாரும் பாராத ஞானியைத் தான் பார்த்தேன் என்பர். ஏரால் அழுத்துவதுதான் வெள்ளாமை (விவசாயம்) செய்ய மூலகாரணமாகும். ஆனால் சிலர் ஏரில்லாமலே அறுத்து அடிக்கலாம் என்பர்.

(தூலம் - புலன்களுக்குத் தோன்றும் பொருள்.)

கதையாச்சே யுலகத்தில் ஞானம் வாதங்
கைகண்டாற் சொல்வாரே கல்போல் நெஞ்சே!
அதையாச்சே யிதையாச்சே யென்று சொன்னால்
அவன்கையி லொன்றுமில்லை யறிந்து கொள்ளே;

உதையாச்சே அரனுடனே தொழிலே நித்தம்
உதுவான வன்வாதி யுண்மை கேளு;
கதையாச்சே ஆனாலும் பொங்கி யுள்ளம்
கடுவான்பார் ரசயோகி ஞானி தானே. 95

உலகத்தில் ஞானம் பெறுதலும், வாதம் செய்தலும் கதையாயிற்று என்பர். உருத்திரன் செயலால் இவை அமையும். இதை வழிபட்டவர் நடந்து வருகிறது. (அழிவு) ஒரு வாதியின் உண்மையைக் கேள். ராசயோகியான ஞானி உள்ளம் வருந்தி எல்லா ஆசைகளையும் சுடுவான்.

தானென்ற வாதியிலே யிருவ ருண்டு;
சண்டாள வாதியென்றா லுண்டு உத்து
வானென்ற ஞானமென்ன வேதை பின்பு
மகத்தான பெண்ணோடே கூடி யாடிக்
கானென்ற ராககே ளிக்கை பார்த்துக்
கண்டபெண்ணைத் தாய்போலக் கருதிச் சென்றே
ஊனென்ற உடம்பெடுத்துப் போக வென்பான்
உலுத்தனுக்குச் செனனமென்ற நரகந் தானே. 96

வாதிகளில் இருவகை உண்டு. சண்டாளவாதி என்பவன் நன்றாக உண்டு, நன்கு உடை அணிந்து, பெண் இன்பம் கண்டு திரிவான். மற்றவன் பெண்ணைத் தாயாகக் கருதிக் காமம் கொள்ளான். எனவே காமம் கொண்டவனுக்கு மறுபடியும் பிறப்பு என்னும் நரகம்தான் உண்டாகும்.

நரகமென்ற பெண்மேலே யாசை விட்டு
நாதாந்த வேதாந்த சித்தாந் தம்பார்;
நரகமென்ன வுலகமெலா மனத்தில் வைத்து
நலமான தேவிகிரி யையிலே நின்று

நரகமென்ன சடமுதல்நா மல்ல வென்று
நாட்டினுள்ளே தசதீட்சை கடந்த பின்பு
நரகமென்ற சிவசொத்தை வறுமை தின்று
நாமறியோம் வாதமென்றே யிருப்பார் காணே. 97

நரகம் எனப்படும் பெண்ணாசை விட்டு நாதாந்த, வேதாந்த, சித்தாந்த முடிவுகளைப் பார். உலகம் எல்லாம் மனத்தில் அடக்கி, தேவி பூசையைச் செய்து, உடல் முதலிய அழிவன எல்லாம் நான் அல்ல என்று உணர்ந்து, பத்துவித தீட்சையும் கடந்து, சிவன் சொத்தை அனுபவிக் காது, வாதமெல்லாம் செய்ய முன்வராது நிற்பவரே உயர்ந்தோர் என்று அறிக. (சிவன் சொத்து சிவனிடமிருந்து வந்த சுக்கிலமாகிய விந்துவேயாம்)

இருக்கையிலே சதகோடித் தொழிலைச் செய்வார்;
இத்தனைக்கும் பொருளெதிவன் வறுமைக் கென்பார்;
இருக்கையிலே செயநீர்செந் தூரஞ் சுன்னம்
எடுத்தெடுத்தே யடுக்கிவைப்பார் அநேகங் கோடி;
இருக்கையிலே தொழிலெடுப்பார் ஆர்க்குங் காட்டார்;
இல்லையென்பா ருண்டென்பா ரனேகம் பேர்கள்
இருக்கையிலே சதாநித்தம் அறிவா லூட்டி
இருப்பார்கள் மவுனமுத்த வாதி யாமே. 98

இருந்தபடியே சதகோடி செயல் செய்வர். இவ்வள வுக்கும் எப்பொருளையும் தேடிச் செய்யாது தாமே செய்வர். செயநீர், செந்தூரம், சுன்னம் முதலிய மருந்து வகையெல்லாம் இருந்த இடத்திலேயே செய்து அடுக்குவர். இருந்தபடி செய்வது யாருக்கும் காண முடியாததாகும். இதனால் இது உண்டு என்பாரும், இல்லை என்பாரும் உண்டு. எப்போதும் வெளிப்படும் அறிவால் இவை செய்திருப்பர் கோடி சித்தர் என உணர்க.

(சதகோடி - நூறு கோடி)

வாதியென்றா லவன்வாதி மவுன வாதி
மகத்தான பிரபஞ்சத் திருந்தா லென்ன
வாதியென்றால் ரசவாதி ஞான வாதி
வாங்காமற் சமாதியிலே யிருந்த வாதி
வாதி யென்றால் நிசவாதி நிர்மல வாதி
வாய்திறக்க அண்டத்தே வாழ்ந்த வாதி
வாதியென்றா லவரிடத்தே சித்தர் செல்வார்
மயக்குகின்ற செனனமில்லை முத்தி தானே. 99

வாதம் செய்யாது மவுனமாய் இருப்பவனே வாதியாவான். ரசவாதி, ஞானவாதி இவையற்றுச் சமாதியிலிருந்த வாதி, நிசமான வாதி, நிர்மலமான வாதி, வாய் திறந்தால் கண்டத்தில் செலுத்தும் வாதி இப்படிப்பட்டவரிடமே சித்தர்கள் செல்வர். இவர்களுக்குப் பிறவியில்லை முத்தியே உண்டு.

முத்தியிருந்த வாதிக்கு வருகு மென்று
மூச்சுமுதற் சிவன்சொன்னா ரென்று சொல்லிப்
பத்தியிந்த சிவசொத்தைப் பெண்ணுக்கு ஈந்து
பாழான விடயமெல்லாம் பண்ணிப் பண்ணி
அத்தியென்ற பஞ்சகத்தைப் பண்ணிப் பாவி
ஆங்காரத் தால் திரிந்தும் வேதை போட்டு
மற்று நின்றே அலைந்தவர்க்கு நரக மெய்தி
மாளுவார் கோடிசென்ம மருளு வாரே. 100

இத்தகைய வாக்கே முத்தி வருமென்று சிவன் கூறினார். சிவன் சொத்தான விந்துவைப் பெண்ணிடம் விட்டு, பலவித பாழான செய்கைகள் செய்து, பஞ்சம யாசகமும் செய்து, அகங்காரத்தில் அலைந்து திரிந்தவர்கள் நரகத்தில் சென்று கோடிக் கணக்கான பிறவிகள் கொள்வர்.

(பஞ்சகம் - பஞ்சம யாகம்; கீழ்மையான யாகம்)

மருளாம லிருக்கவல்லோ வாதஞ் சொன்னார்?
மாண்டிறந்து மாண்டிறந்து பிறக்கை நன்றோ?
வெருளாமல் மனம்பிடித்த வாதி யானால்
வெகுசுளுக்கே யேறுதற்கு ஞான வீதி
அருளாமோ பொருளாமோ வென்றே யெண்ணி
அலையாமல் நின்றவனே ஆதியோகி
இருளாமோ வெளியாமோ வென்றே யெண்ணி
ஏகவெளி சுத்தவிரு ளாகிப் போமே. 101

மயங்காமல் இருப்பதற்கே வாதம் சொன்னார்கள். மேலும் மேலும் செத்துச் செத்து பிறப்பது நலமோ? மனத்தை அடக்கிய வாதியானால் ஞான வீதியில் ஏறுவது மிகவும் சுருக்கமாகும். எப்பொருளுக்கும் ஆசைப்படாதவன் முதல் யோகியாம். இருளும், ஒளியும் பூமியில்தான் மாறி மாறி வரும். சுத்தவெளியில் இப்படி மாற்றம் இருக்காது.

ஆகவப்பா விருப்பத்தோ டஞ்சு நூறும்
அறைந்திட்டேன் வாதத்தை யறிந்து கொள்ளு;
ஆகவப்பா இதற்குள்ளே ஞானம் நூறு
அப்புறத்தே சொன்னதொரு ஞானம் நூறு
ஆகவப்பா இருபத்தோ டெழுநூ றுந்தான்
அறிந்தமட்டும் சொல்லிவந்தேன் வல்லோருண்டோ
ஆகவப்பா பார்த்தேயிக பரமுஞ் சித்தி
ஆதியென்ற குருவருளால் சொன்ன முற்றே. 102

இப்படி ஞானத்தை முன்னும், பின்னும் நூறு நூறாகக் கூறினேன். இதன் மேலும் சொன்ன பலவற்றை அறியும் வல்லவர் இல்லை. இவை யாவும் குருவருளால் கூறியவை யாம்.

## பின் ஞானம் நூறு

கைலாயப் பரம்பரத்தி லென்னை யாண்ட
கடவுளெனுந் தெட்சணா மூர்த்தி பாதங்
கைலாயத் தெனையீன்ற ஆயி பாதங்
கருணையுடன் போற்றி நித்தம் ஞானம் சொல்வேன்;
கைலாய நிர்க்குணநிர் மலமே தேவர்
காட்டுகின்றீர் கேசரியின் மயமாய்க் கையில்
கைலாய பரம்பரையாய் வந்த பேர்க்குக்
கடைப்பிள்ளை ஞானத்தைப் பாடுவேனே; 1

கைலாய ஞான பரம்பரையில் என்னை ஆட்கொண்ட தட்சணா மூர்த்தி பாதம், கயிலாயத்தில் என்னை ஈன்ற ஆயியின் (தாய்) பாதம் ஆகியவற்றை கருணையோடும் கலந்து தினமும் போற்றி ஞானம் சொல்வேன். கைலாயத்தில் நிர்க்குண நிர்மல தேவர்கள் உண்டு. கேசரி யோகிகள் உண்டு. யோகம் பயில வந்தவர்க்குக் கையிலேயே சின்முத்திரை காட்டி ஆளுகின்றீர். கடைப் பிள்ளையான நான் அந்த ஞானத்தைப் பாடுவேன்.

பாடுகின்றேன் சரியையென்ன? தேவி தீட்சை
பரிவாகக் கிரியையென்ன? தேவி பூசை;
பாடுகிறேன் யோகமென்மா சற்ற அமுதம்;
பாங்கான ஞானமென்ன? மௌனத் தந்தம்
பாடுகிறேன் திடத்திரனா யீதோ கீதம்;
பாங்கான அஞ்சலிதான் மனமாந் தேகம்
பாடுகிறேன் பரன்முனிக ளுக்கே யென்றால்
பரிவானால் ஞானவித்தை பலிக்குந் தானே. 2

சரியை தேவியின் தீட்சை; கிரியை தேவியின் பூசை; யோகம், மாசற்ற அமுது பெறல்; ஞானம் மவுனத்தினால் அதன் முடிவை அடைதல். நான் பாடுவதே தோத்திரகீதம்.

அஞ்சலி என்பது தேகத்திலுள்ள மனமே ஆகும். பரம் பொருளாகிய முனிவனுக்கே பாடுகிறேன். ஆகையால் இந்த ஞானவித்தை பலிக்கும்.

தானென்ற ஞானத்தின் பூமி கேளு;
சாதகமா யோகமென்ற அகர வீடு
வானென்ற பூமியிலே வித்தை கேளு;
அறிவிற்கு மறிவான வுகார விந்து
வேனென்ற வெளியெல்லாம் படைத்து நின்று
வேதாந்த அண்டமென்ற மகார மாச்சு;
கோனென்ற நாதமங்கே குமுறி யாடும்;
கூப்பிட்டாற் கேளாது கண்ணும் போச்சு. 3

ஞானத்தின் பூமி ஆத்மாவே. யோகம் அகரமாகிய வீடு. வானத்தில் உகார எழுத்தே விந்து. வெளியெலாம் படைத்து நின்ற வேதாந்தமே மகாரமாயிற்று. இவற்றைக் கூறவே நாதம் எழும். (ஓம் என்னும் பிரணவத்தின் நாதம்). கூப்பிட்டாலும் கேளாத தூரம் வரை போகும். அதன் ஒளியைக் கண்ணாலும் காண முடியாது.

போச்சப்பா தத்துவங்க ளனித்தியப் பட்டுப்
புலன்கெட்டு நிலங்கெட்டுப் பொறியுங் கெட்டே
ஆச்சப்பா மனவரையில் மயங்கி நின்றே
ஆடுவதோர் படம்போல அசைந்து தள்ளு;
நீச்சப்பா கடநீச்சுத் திரோதாயி வெள்ளம்
நிலையேது கரையேது தவணை யேது
மூச்சப்பா அடங்கு முன்னே மாயை வந்து
முற்றிமுதிர்ந் தளிவுதள்ளு மோசங் காணே. 4

தத்துவம் எல்லாம் அழிவுக்குரியன. அப்போது புலமும் பொறியும் அந்தப் பொருளும் கெட்டு மனம் என்ற அறையில் மயங்கி நிற்க வேண்டும். ஆடும் படம் போல்

அசைவதாகும். திரோதாயியின் மாய வெள்ளம் நீந்திக் காணமுடியாததாகும். மூச்சு அடங்குவதற்கு முன்பே மாயை முதிர்ந்து தள்ளும்.

(அந்தப் பொருள் - இது முடிவான பொருள் என்பதாம். அந்தரிட்சம் என்று கூறுவர். வேத மந்திரங்கள் இதைக் குறிக்கும். வானிற்குப் போய்த் திரும்பவும் பூமி வரும். மேலும் நாதாந்தம், கலாந்தம், யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தமும் கொள்க)

காணப்பா மனவரையை மாறுக் குள்ளே
கடைத்தேறப் போகாது கறக்க மெத்த
ஊணப்பா வென்று சொன்னால் மனமூ ணாதே
உற்றுமெள்ளப் பிடித்தாலும் மாயை கட்டும்;
வீணப்பா வுலகத்தோர் ஞான மெல்லாம்;
வேதாந்த சித்தாந்த மென்பார் கோடி
தோணப்பா ஞானமென்ன கண்டிப் பில்லைச்
சுடர்கோடி யொளிபோலத் தோன்றுந் தானே. 5

மன அறையில் ஆறு ஆதாரங்களையும் முடிவாக்க முடியாது. ஆகையால் அவற்றில் ஊன்றுக என்றாலும் மனம் ஊன்றாது. மெல்ல அதைப் பிடித்தாலும் மாயை அதைக் கட்டும். உலகினர் வேதாந்த சித்தாந்தமே ஞானம் என்பர். அது வீணே ஆகும். இதுதான் ஞானம் என யாரும் கண்டித்துக் கூறவில்லை. ஆனால் யோகத்தில் கோடிச் சுடர்கள் தோன்றுவதால் அதுவே ஞானம் எனலாம். (கடவுள் கொடுத்த உடலில் யோகம் செய்வதால் இது மற்ற வழிகளை விட உயர்வு என்பதாம்)

தானென்ற நிர்மலமாம் மனத்தின் வீதி
தாண்டரிது தாண்டினா லறிவு போற்றும்
கானென்ற மனத்தின்சா தகத்தைக் கேளு
கற்பமுண்ண வந்துண்ணால் வாசிதோறும்

பானென்ற பாணத்தின் பாதை நில்லு
பகலாலுங் கேசரத்தில் மனந்தா னெட்டும்
வானென்ற வெட்டவெளி வடிவு காணும்
மாச்சல்மெத்த மாச்சல்மெத்த மருவி கூடே. 6

நிர்மல மனவீதியைத் தாண்டிச் செல்வது கடினம். தாண்டினாலும் பழைய அறிவு தொடரும், மனம் அடங்க வாசிதான் உரியது. கற்பம் உண்டது போலாகும். பானமாகச் செல்லும் அம்பு வழி போன்ற நாடி மார்க்கத்தில் தவறாமல் நில். அப்போது கேசர எல்லையை மனம் எட்டிப் பிடிக்கும். (கேசரம் ஆதார கமலங்களின் பொருட்டு மையம்) வானமாக இருக்கும் வெட்டவெளியிலும் ஒரு வடிவு காணும். ஆகவே மாயத்தை விட்டு விரும்பி யோகம் செய்.

(கேசரம் - ஆதார மையங்களின் பொருட்டு மையம்)

கூடுவது நிமைக்கு முன்னே குளிகை கூட்டுங்
கூப்பிட்டால் பூரணந்தான் கூடப் பேசும்;
ஆடுவது மனவரையில் மாயம் போக்கும்
அருவிலே சொக்கின்றி ஆட்டு விக்கும்
நாடுவது பூரணத்தி லேற்றிக் காட்டும்
நலமான சாணையார் கெவுனஞ் சூதம்
தேடுவது சித்தருக்குக் குளிகை கெட்டுச்
செகத்தோர்க்கு வாதமென்றே தேட்டுத் தானே. 7

இமைக்கும் முன்பே குளிகை வந்து கூடும். கூப்பிட்டால் கடவுளே வந்து பேசுவார். மனவறையில் இந்த இயக்கத்தால் மாயம் போகும். நாடும் பூரணத்தில் ஏற்றும். சித்தருக்குக் குளிகையாகும். உலகினர் இதையே இரசவாதம் என்று கூறுவர். (இது ஒரு மயக்கமே)

தேட்டான வரைகடந்து மனமுந் தாண்டித்
தெளிவான அறிவினுடை வரையுந் தாண்டி
நீட்டான பூரணத்தின் வரைகா ணென்று
நேரான மூன்றுவரை யேறிச் சொக்கிப்
பூட்டான பூட்டிறங்கை விட்டேன் மைந்தா
புகழான வெறுவெளியி லேறப் போகா
ஆட்டான கைலாயப் பரம்பரை வந்த
ஆச்சரிய மூலகுரு வாக்குங் கேளே. 8

மனம், அறிவு, பூரணம் என்னும் மூன்றின் ஆளுகைகளைத் தாண்டி எல்லாத் தடைகளும் நீங்கி வெட்ட வெளியைக் கலந்தேன். இறைவன் நடனம் ஆடுகின்ற கைலாயப் பரம்பரையில் வந்த வியக்கத்தக்க மூலகுருவின் வாக்கைக் கேள்.

கேளப்பா மூலர்க்குகா லாங்கி பிள்ளை;
கெடியான காலாங்கி மைந்தர் போகர்;
நீளப்பா போகர்பிள்ளை கொங்க ணர்தான்;
நேராக நான்குமுறை பேர ணாகித்
தாளப்பா மேருவிலே தவசு பண்ணிச்
சாதகமாய்க் கைலாய வர்க்க மானார்;
ஆளப்பா பிள்ளையென்றா லவரே பிள்ளை;
ஆச்சரிய மின்னமுணடு சொல்லு வேனே. 9

திருமூலர் - காலாங்கி நாதர் - போகர் - கொங்கணர் என வழிவழியாகக் குருவும் சீடருமாயினர். நாலாவதாக வந்த சீடர் கைலையில் தவம் செய்தார். சாதகத்தால் கைலாய வருக்கம் ஆனார். சீடர் என்றால் முழு இலக்கணம் கொண்ட அவரே கொங்கணர் என்னும் சீடராவார். மேலும் கேள்:

சொல்லுகிறேன் சிங்கென்று முன்னே யூன்றிச்
சோதிகண்ட பின்பதிலே மனத்தை யூன்றிச்
சொல்லுகிறேன் அங்கென்று பின்னே யூன்றிச்
சோதியிலே அக்கரங்கள் தளமுங் கண்டு
சொல்லுகிறேன் பின்பல்லோ மவுனம் உன்னித்
தொடர்ந்தேறித் தளமெல்லாம் பார்த்துக் கண்டு
சொல்லுகிறேன் புருவமை யத்திற் கூடித்
துரியமென்ற அறிவினுள்ளே சொக்கினாரே. 10

'சிம்' என்று முன்பக்க உடலில் கருத்து வைத்துச் சோதியைக் காண்க. பின்புற உடலில் 'அம்' என்று கருத்து வைத்துச் சோதியில் பல எழுத்துக்கள் தோன்றுவது அறிந்து, அவற்றுக்குரிய தாமரை இதழ்களும் கண்டு, பிறகே மவுனம் கொள்ள வேண்டும். அதனுடன் பல தாமரை இதழ்களையும் தொடர்ந்து பார்த்து, புருவ மத்தியில் உணர்வும் ஒளியும் கூடித் துரிய நிலைக்குச் சென்று அங்கே அறிவைச் செலுத்துக.

சொக்கியல்லோ அறிவைவிட்டே அகண்ட மேறித்
துயரறவே சமாதியுள்ளே கற்ப முண்டு
சொக்கியல்லோ மூன்றுவரை சடத்தோ டொக்கச்
சுருபவரை காணவென்று துணிந்து பொங்கிச்
சொக்கியல்லோ ஏறுவதற்கிவ் விதமா மென்று
சோதித்துக் குளிகையெல்லாம் பார்த்துப் பார்த்துச்
சொக்கியல்லோ ஏற்றிவைக்குஞ் சுருபமணி யென்று
சூட்சமாய் மூலருடை நூல்பார்த் தாரே. 11

துரியத்தில் சென்ற அறிவை அகண்டமான வெளியில் ஏற்றினால், சமாதியாகிய கற்ப நிலை (சாகாத நிலை) கை கூடும். மூன்று வரைகளையும் முன்பு சொன்னபடி கடந்து சடத்தோடு சடமாய் மனமும் இறக்கும். அந்தக்

குளிகைகளை எல்லாம் பார்த்துப் பார்த்து மேலும் சொருப மணியைக் காணத் திருமூலர் நூல் பார்க்கவும்.

பார்த்தறிந்தா ரிந்தமணி வாத மென்று
பரிவான கயிலாய தெட்சிணா மூர்த்தி
சேர்த்தறிந்த தம்முடைய வர்க்க மான
சீடரிலே திருமூலர் சண்டி கேசர்
மாத்தறிஞ்ச சனகாதி நால்வ ரோடு
மருவிநின்ற வியாக்ரபதஞ் சலியினோடு
போக்கறிந்த அடியெனொடொன் பதுபேர் பிள்ளை
புகழான பூரணத்தி லெழும்பென் றாரே. 12

இரச வாதம் என்று இந்த மணிவாதத்தையே திருமூலர் சொன்னார். தட்சிணா மூர்த்தியாம் கயிலாயத்தில் திருமூலர், சண்டிகேசர் மற்றும் சனகாதி முனிவர் நால்வர் இவர்களோடு வியாக்கிரபாதர் (புலிக்கால் முனிவர்), பதஞ்சலி முனிவர் ஆகிய எண்மர் (தட்சிணா மூர்த்தி உட்பட) உள்ளனர். இவர்கள் பூரணமேயாவர். இந்தச் சித்தரோடு ஒன்பது பேர் என்றார்.

விளக்கம்: பொதுவாகச் சனகாதி முனிவர் நால்வர் மட்டுமே தட்சிணா மூர்த்தியுடன் காட்டுவர். ஆனால் திருச்சி மலைக் கோட்டைத் தாயுமானவர் கோயிலில் எட்டுப் பேர் உள்ளனர் இதையறிக.

எழும்பையிலே நிர்மலம்போற் சடமோ காணா
தேனென்றாற் பூரணந்தா னெதுக்குப் பேசும்
எழும்பையிலே குளிகைமுதற் காண்டிற் பத்தே
ஏற்றியதோர் தீபத்தின் சுடர்போற் காணும்
எழும்பையிலே தேகமில்லை கோடா கோடி
எடுத்தசடஞ் சூட்சுமமா யிருந்த தென்றால்
எழும்பையிலே மேலெழும்பி மௌன முற்றும்
இருந்துரைத்த சமாதியுடைப் பலந்தான் காணே. 13

இவர்கள் பூரணமாய் எழும்போது நிர்மலமாய் உடல் காணாதிருப்பர். தீபச்சுடர் போல் தோன்றுவர். இப்படி உருவமின்றிக் கோடானு கோடி பேர் இருப்பதற்குக் காரணம், சமாதி யோகத்தில் இவர்கள் பழகியதேயாம்.

காணப்பா சொரூபமொன்று கலிதா னொன்று
கையடங்காது அட்டமா சித்தி யொன்று
பூணப்பா கைகொடுசின் மயமாந் தேவர்
பொருளோடே அருளான போக்குக் காட்டித்
தோணப்பா தோன்றிநிற்கும் சும்மா அம்மா
சுபமாக இசைந்ததிலே சொக்கு மென்பார்;
வீணப்பா மற்றதென்சின் மயத்தைக் காட்டி
வேதாந்த மூலத்தை விளம்பென் றாரே. 14

சுடரான சொரூபம், அட்டமாசித்தி, சின்மயம், தேவர் அருள் முதலிய பயன்கள் வரும். தாயான பராசக்தி இவற்றில் ஈடுபட்டிருப்பாளாம். அதுவே வேதாந்த மூலமும் இந்த யோகப் பயனும் சின்மயமுமேயாம்.

விளம்பினார் சனகாதி வேதங் கோடி;
விதத்தாரே மவுனத்தைச் சண்டி கேசர்
விளம்பினார் பதஞ்சலியும் அனத்தங் கோடி;
விரித்தல்லோ திருமூல ரனேகஞ் சொன்னார்;
விளம்பினார் ஆதாரம் என்று யானும்
விரியாம லிருநூறு ஞானம் சொன்னேன்;
விளம்பினார் வெகுவாக என்னூல் கொஞ்சம்
வேதாந்த மிருநூறும் விரைந்து காணே. 15

சனகாதி முனிவர்கள் கோடி வேதம் கூறினர். சண்டி கேசர் மவுனத்தை விதைத்தார். பதஞ்சலியும் பல கோடி கூறினார். திருமூலர் இவற்றை விரித்து அநேகம் சொன்னார். இவற்றை உள்ளடக்கி விரிக்காமல் இருநூறு ஞானம்

கூறினேன். என் நூல் பற்றிப் பலரும் கூறினர். வேதாந்தமே இந்த இருநூறு எனக் காண்க.

காணப்பா மும்மணிகை லாய வர்க்கம்
கழியாமற் பிள்ளைகட்கே மற்றோர்க் கில்லை;
தோணப்பா இவைமூன்றுஞ் சித்தர் சொல்வார்
சொற்பெரிய பூரணமே சொல்ல வேணும்;
வீணப்பா ஆராலுங் சொல்லக் கூடா
வேதாந்த அந்தத்தில் வெளியிற் கூட்டும்
ஆணப்பா அறுபத்துநால் மரபுக் குள்ளே
ஆருமே யில்லையதை அறியார் காணே. 16

மும்மணி கூறும் கைலாய வருக்கத்தைச் சீடர்க்குக் கூறுக. இவை பற்றிச் சித்தரும் பூரணமுமே சொல்ல முடியும். பிறரால் சொல்ல முடியாது. வேதாந்த முடிவில் இவை தெரியும். அறுபத்து நான்கு மரபிலும் இது இல்லையாம்.

(மும்மணி - மூலாதாரம், அநாகதம், புருவ மத்தி ஆகிய இடங்களில் சென்று நிற்கும் ஒளி மணிகளாகக் கருதப்படும். காருகபத்தியம், ஆகவநீயம், தட்சிணாக்கினி என்ற மூன்று அக்னிகளால் உண்டாவது மும்மணி என்க. அறுபத்து நான்கு மரபுகள் - அறுபத்து நான்கு கலைகள் வழி வரும் மரபுகள்)

அறியாத குளிகையுடன் சாரணையிற் குத்து
அதன்பெருமை காணக்கொங் கணரைக் கேளு;
அறியாத அண்டமுதற் புவனம் பார்த்து
அருவியதோர் பதம்பார்த்துத் திரிந்தே ஆடிக்
குறியாகக் கற்பமெல்லா மேறிப் பார்த்துக்
கூறாத பூரணத்தைக் காண்பே னென்று
நெறியாக மனமுரைக்கக் குளிகை கட்டி
நேராக மனவரையி லேறி னாரே. 17

குளிகையை உண்டபின் பிராணன் விடும் இடங்களில் பிராணாயாமம் செய்க. அதன் பெருமை அறியக் கொங்கணரைக் கேள். பிரபஞ்சம் முதல் பூவுலகம் வரை பார்த்து உரிய நேரத்தில் துரிய நிலையில் நின்று பூரணத்தைக் காண மிகுந்த குறிக்கொண்டால் மனத்தினால் அதை அடைவர்.

ஏறினா ரறுவரையி னியல்புங் கண்டே
இதமாக அறிவுடைய வரையிற் சென்று
தேறினார் மனமுரைத்தார் கண்டத் தேறச்
சேர்ந்தேறச் சேர்ந்தேறி வரையில் தாண்டிக்
கூறினா ரிவ்வளவு மொன்றோ வென்றார்
கூசாமல் மருவரையில் குதிரைப் போட்டார்
மாறினால் சென்றுமணம் பிடித்துச் சென்றார்
வரைமூன்றுங் கடக்கவொரு கற்ப மாச்சே. 18

மலையில் ஏறியவர் இயல்பும் கண்டே இயல்பாக அறிவுடைய வரையில் ஏறி, பிராணாயாமம் செய்து, மூன்று மலை எல்லைகளையும் கடந்து, துரியமாகியதைத் தாண்டிக் கற்பமான துரியாதீத நிலை (சமாதி) அடைந்தார்.

ஆச்சப்பா நாள்வரையி லேறும் போது
அரகரா வெகுகோடி யிடிபோல் நாதம்
மூச்சப்பா வோடாது முன்பின் தோணா
முதிர்ந்தமன மாயையினால் பின்னுஞ் சென்றார்
கூச்சப்பா ஐவரையிற் போக்கி நின்று
குருகுரெனை மொழிந்ததிலே மனமுந் தேறிப்
போச்சப்பா சடமொன்று நிராசை யாகிப்
புக்கினார் அறுவரையிற் புக்கினாரே. 19

மலை முகடாகிய தலை நோக்கி யோகம் செய்யும் போது, வெகுகோடி இடிகள் போல் நாதம் கேட்கும். மூச்சு

இயங்காது, முன்பின் தோணாது. மாயையால் பின்வந்தார், உடலில் நின்ற ஐந்து கடவுள் தத்துவமும் போகச் செய்து, மனத்தால் தேறியதும், நிராசையுடன் உடலாகிய சடத்தில் புகுந்தார்.

புக்கியல்லோ சுழல்காற்றின் துரும்பு போலே
புலம்பினார் மூலருடைப் பேரன் பேரன்
மக்கியல்லோ மனம்போச்சுக் குளிகை போச்சு;
மாறாத மௌனமுன்னே மாண்டு போச்சு;
ஒக்கியல்லோ சிலம்பொலிதா னுள்ளே வாங்கி
ஓகோகோ குளிகையது கீழே வாங்கு
சொக்கியல்லோ யென்செய்வே னென்றே யேங்கித்
துரியத்தை விட்டு மெள்ளக் கீழ்க்கொண் டாரே. 20

சுழல் காற்றில் அகப்பட்ட துரும்பு போல மூலருடைய பேரனுக்குப் பேரன் புலம்பினார். இந்த யோகத்தில் மனமும், குளிகையும் நீங்கி மவுனமும் குலைந்தது. சிலம் பொலியும் வெளிப்படாது உள்ளே சென்றது. துரியத் திற்குப் போகும் முயற்சியையும் கை விட்டார்.

கீழ்க்கொண்டார் கீழ்க்கொண்ட கொடியாஞ் சித்தர்
கேசரத்தை விட்டுமெள்ள அறிவில் நின்று
நாட்கொண்ட பாடெல்லாம் நினைத்துக் கொண்டு
நான்பிழைத்தேன் நான்பிழைத்தே னென்று சொல்லி
ஆட்கொண்டா என்குருபூ ரணத்தில் நின்றீர்
ஆச்சரிய மௌனையீன்று மிவரை யையா!
வேட்கொண்டா யென்தவத்தை யீந்தா னையா
வெறுவெளியாஞ் சிலம்பொலியை மேவென் றாரே.
21

கீழே சென்ற மனத்தை மெல்லத் திரட்டி, யோக ஆதார கேசரத்தை விட்டு, மெல்ல அறிவில் நின்று, இதுவரை

நடந்ததெல்லாம் நினைத்துக் கொண்டு ‘நான் இந்த அளவில் பிழைத்தேன் பிழைத்தேன்’ என்று சொல்லி, குருவை அழைத்துத் தன்னை மீட்கக் கேட்டுக் கொண்டார். அப்போது வெறும் வெளியைப் பார்த்துச் சிலம்பொலி கேட்கட்டும் என்றார் குரு.

மேவென்று சொல்லுமுன்மேற் கண்ட போகர்
வேதாந்த சிரோமணியைப் பெறுதி மைந்தா!
கோனென்ற குருவுக்கும் அவரே சீடர்
கோடிலட்சத் தொருசீட ருண்டோ காணேன்;
பானென்ற வேதாந்தஞ் சித்தாந் தம்பார்
பறக்கிறதோர் குளிகைமுதல் வாதம் பார்த்துத்
தேனென்ற கைலாய வர்க்க மாகிச்
சித்தருக்குச் சித்தராய் ரிஷியா னாரே. 22

இப்படிச் சிலம்பொலி கேட்க வைத்த போகர், வேதாந்த சிரோமணியான யோகத்தைப் பெறுமாறு மாணவருக்குக் கூறினார். இவர் போல் ஒரு சீடர் கோடியில் ஒருவர் உண்டோ? வேதாந்த சித்தாந்தம் பார்த்து அது போதாது என்று குளிகையால் வாதம் பார்த்துக் கைலாய மார்க்கப் படிச் சித்தருக்கும் சித்தராய் ரிஷியாகவும் கொங்கணர் ஆனார் என்க.

ரிஷியென்ன சிலம்பொலியைக் கண்டா ருண்டோ
நேராக வதற்குள்ளே சேர்ந்தா ருண்டோ
ரிஷியென்ன ரசவித்தை யறிந்தா ருண்டோ
நிமிடத்தில் கவனமுற்றுத் திரிந்தா ருண்டோ
ரிஷியென்ன அண்டமுதற் புவனந் தாண்டி
நின்றநிறை யாய்க்கண்டு வந்தோ ருண்டோ
ரிஷியென்ன மவுனமுற்றுச் சமாதிக் குள்ளே
நின்றதனால் திகைமையாய் நினைவாய்க் காணே. 23

ரிஷிகளும் கூட யோகியர் கேட்கும் சிலம்பொலி கேட்டதில்லை. அதனோடு ஐக்கியம் ஆனதில்லை. அவர்கள் இரசவாதம் (தங்கம் செய்முறை) தெரிந்து கொண்டதில்லை. ஒரு நிமிடத்தில் அண்டம் பலவும் திரிந்ததில்லை (கவனம் - நடை பயிலல்) அண்டங்களுக்கும் அப்பால் உள்ள புவனத்தில் சென்று வந்ததில்லை. மவுனயோகத்தால் சமாதியடைந்ததும் இல்லை. (இவை சித்தர்கள் வழக்கமாம்)

காணப்பா ரிஷியாட்டுஞ் சித்த ராட்டுங்
காரணமாய் மவுனத்தே நின்றோ ராட்டும்
பூணப்பா பூரணத்தே நின்றோ ராட்டும்
பொன்னாக மரமுதலாய்ப் புகழ்ந்தோ ராட்டும்
ஓணப்பா வாசியுடைக் குதிரை யாட்டும்
ஒன்றுமற்றுத் தன்மயமாய் நின்றோ ராட்டும்
தோணப்பா யிவையெல்லாங் கொங்கணர்க்கே யல்லால்
சூழுலகிற் சித்தருண்டோ சொல்லி டீரே. 24

(ஆட்டும் - ஆகட்டும்) ரிஷியானாலும், சித்தர் ஆனாலும், மவுனயோகி ஆனாலும், பூரணத்தில் ஐக்கியமாய் இருந்தோ ரானாலும், மரம் எல்லாம் பொன்னாகச் செய்தவரானாலும், பிராணாயாமக் குதிரையைப் பயின்றோர் ஆகட்டும். எல்லாம் இழந்து தன் ஆத்ம சொருபமாக மட்டும் இருந்தவர் ஆகட்டும். இவை எல்லாம் கொங்கணர் பெற்ற வெற்றியின் விளைவேயாகும். அவருக்கு நிகர் யாரும் இல்லை.

சொல்லிடமாய் ஞானமுண்டோ குளிகை யுண்டோ?
சூட்சித்த கற்பமுண்டோ வாசி யுண்டோ?
மல்சுட்ட வாதமுண்டோ சுன்ன முண்டோ?
மகத்தான சிக்கியுண்டோ செயநீ ருண்டோ?

வெல்லிடீர் விடமுண்டோ சாரணை யுண்டோ?
வெவ்வேறே கூட்டுகிற குடோரி யுண்டோ?
அல்லிடீல் வேதைசகு வணந்தா னுண்டோ?
அப்பனே பதினேழு மமைத்திட் டாரே. 25

ஞானத்தால் முயல்வது, மாத்திரையால் முயல்வது, காயகற்ப முயற்சியாலும் பிராணாயாமத்தாலும் முயல்வது, பலவித வாதங்கள், சுன்னம், சிக்கி, செயநீர், விடம், சாரணை, குடோரி, வேதை, சகுவணம் முதலியன சித்த வைத்திய மருத்துவமுறைகள். இவைகளைச் சித்தர் தவிர வேறு யாரால் செய்ய முடியும் என்பதாம். மருத்துவத்தா லேயே யோக சித்தி பெறுவது சித்தர் மரபாகும். இது ரிஷி, முனிவர் மரபுகளில் இல்லை.

அமைத்தவர்முக் காண்டம்பா டியதோ ரங்கம்
வந்துதித்த பிள்ளைக்கு மறிவு தோன்றும்
அமைத்தவர் பாடினபொற் கம்பி போல
அறிவுகெட்ட மிலேச்சருக்கும் வாத சித்தி
அமைத்தவர் கருவெட்ட வெளிய தாக
அங்கங்கள் மறையாமற் சொன்னார் சொன்னார்
அமைத்தவர்பாட் டுக்குநம் முடைய நூல்தான்
அருகாக மறைப்பென்றே அறைந்திட் டாரே. 26

முக்காண்டம் பாடியதில் ஒரு அங்கம் தெரிந்தாலும் பிறக்கும் குழந்தைக்கு அறிவு வரும். இவையெல்லாம் கொங்கணர் பொன்கம்பி போல் தெளிவாகப் பாடினார். பிற நாகரிகமற்ற மக்களுக்கு வாதம், சித்தி முதலியன தெரிவதில்லை. இவற்றை வெட்டவெளியின் கருவைப் போல் மறையாமல் வெளிப்படப் பாடினார். நம் பாட்டு மறைப்பு நீங்கியது எனக் கூறினார்.

அறைந்திட்டா ரைந்நூறு பிள்ளை வேண்டி
அப்பப்பால் வெகுதெளிவு சாத்தி ரந்தான்
நிறைந்திட்ட ஆரணம் போல் வெளிய தாக
நீங்காமல் துறந்துவிட்டா ரருளொடு பொருளும்
குறைந்திட்ட புத்தியல்ல நிட்களமாம் புத்தி
கூறாத பொருளையெல்லாங் கூறி விட்டார்
வரைந்திட்ட மவுனமெல்லாம் வெளிய தாக
வாய்திறக்கா வித்தையெல்லாம் விளக்கி னாரே. 27

தன் சீடர்கள் வேண்டியதால் ஐநூறு பாடல் பாடினார் கொங்கணர். அவை மிகத் தெளிவான சாத்திரமாகும்; வேதம் போல் வெளிப்படையானவை; பொருள் நிறைந்தது. பிறர் கூறாததையெல்லாம் இவர் கூறினார்; வாய் திறக்காத மவுன யோகத்தை விவரமாகக் கூறினார்.

விளங்கியதோர் கொங்கணரால் மூல வர்க்க
மகத்துவந்தா னுண்டாச்சு மக்காள் மக்காள்!
விளங்கியதோர் கீர்த்தியுண்டோ வுங்க ளாலே
வெட்டவெளிக் கப்புறத்தே செல்ல மாட்டீர்;
முளங்கியதோர் குளிகையென்ன காய சித்தி
மூச்சற்ற விடத்திலே நோக்க மென்ன
விளங்கியதோர் சித்தருட வர்க்க மென்ன
பேய்மக்கள் மூவைந்து பேரில் தானே. 28

கொங்கணரால் மூலத்தோடு இணைந்த எல்லாம் பெருமை பெற்றன. உங்களுக்கு இத்தகைய புகழ் உண்டோ? வெட்டவெளிக்கு அப்புறம் போக மாட்டீர்கள். மாத்திரை ஒன்றால் காய (உடல்) சித்தி பெறலும், மூச்சு முடியும் இடத்தில் மனத்தை ஊன்றலும் ஆராய்ந்த சித்தர்களிடம் ஒரு பரம்பரையே உள்ளது. பதினைந்து இனத்துக்குள் இவர்கள் இருப்பார்கள்.

விளக்கம்: *18* வகையில் *15* மட்டும் குறித்தனர் என்க.

தானென்று சொன்னதென்ன என்னைப் பெற்ற
சச்சிதா னந்தவெள்ளத் தயவுள் ளாரே
கோனென்ற முக்குளிகை நமக்குண் டையா
கொடியதொரு மவுனவித்தை நமக்குண் டையா
பானென்ற வாசிவித்தை நமக்குண் டையா
பாங்கான காயசித்தி நமக்குண் டையா
வானென்ற வெட்டவெளி யேறி யாடி
வருகிறேன் விடைகொடுத்து வாழ்த்தி டீரே. 29

தான் என்று கூறும் ஆத்மாவாக உள்ளவரே இறைவன் என்று சொன்னது எப்படி? சச்சிதானந்த வெள்ளமும் தயவும் உள்ளவரே! முப்பூவாகிய மாத்திரை (முக்குளிகை - முப்பூ), மவுனவித்தை, வாசியாகிய பயிற்சி, காயத்தை சித்தி செய்யும் விதம் முறை இவை யாவும் நமக்குண்டு. இதனால் வானமாகிய வெட்டவெளியில் திரிந்து திரும்பி வருகிறேன் நான்.

வாழ்த்தியுன்னை யனுப்பினால் பூர ணந்தான்
வரைகடந்தே ஆறுவரை யேறு வாயோ?
வாழ்த்தியுன்னை யனுப்பினால் நரகத் துள்ளே
மயங்காமற் செல்லுவையோ மைந்தா சொல்லு
வாழ்த்தி யுன்னை யனுப்பினா லிடியிற் குள்ளே
மயங்காமல் தியங்காமல் மருவு வாயே?
வாழ்த்தியுன்னை யனுப்பினா லென்ன முன்னால்
வாய்ப்பேச்சா வரைகடக்கும் மார்க்கம் தானே? 30

பூரணமான கடவுளின் அருளால் சித்தர் உன்னை வாழ்த்தினால் ஆறுவித ஆதாரமும் நீ கடப்பாய். நரகத்திற்கு உள்ளேயேயும் பாதிப்பு இன்றி நடந்து மீள்வாய். இடிக்குள் கூட நுழைந்து தழுவுவாய். இவை எல்லாம் மவுன யோகத்தால் செய்த சாதனையே ஆகும்.

மார்க்கமென்ன எனையீன்கை லாய மூர்த்தி!
மகத்தான சமாதியுள்ளே கற்பம் வாழ்ந்தேன்
சேர்க்கமென்ன சிவாலயங்கள் பலியேற் றுண்டேன்
சிவமேது நீரன்றி வேறு காணேன்
ஆர்க்கமென்ன குளிகையிட்டுச் சென்று போறேன்
அங்கங்கே மனந்தேறிப் போறேன் போறேன்
தீர்க்கமென்ன சொக்கினாற் சொக்கிப் போறேன்
திரும்பினால் சடத்தோடே திரும்பு வேனே! 31

என்னை ஈன்ற கைலாய பரம்பரைக் குருவே! சமாதியுள் பல கற்பங்கள் (நெடுங்காலம்) வாழ்ந்தேன். சிவாலயங் களில் பிச்சை (பலி)யேற்றுண்டேன். உம்மைத் தவிர வேறு சிவம் உண்டு என நான் அறியவில்லை. குளிகை யால் இதைப் பெற்றேன். மனம் தெளிந்தே இருக்கிறேன். யோகத்தில் துரிய மூலையை அடிக்கடி உணர்கிறேன். திரும்பவும் இதே உடம்புடன் நான் மீள்வேன். (பலி யேற்றல் - பிச்சை எடுத்தல்)

திரும்புவையோ என்மகனே திடந்தா னுண்டோ
சிறுபிள்ளை புத்தியல்லோ செப்பு றாய்நீ?
வளர்பிறையோ தேய்பிறையோ ரவியி னுள்ளே
வருவதுபோ லல்லவது மாட்டி வாங்கும்
பரும்பிறையோ யோகமது பிறவி கோடி
பாங்கான வொளிக்குள்ளே கண்ணோ கூசும்
அரும்பிறையோ மனந்தளும்பு மேவொட் டோதே
அரகரா என்மகனே யறிவாய் நீயே. 32

உடம்போடு திரும்புவதாகக் கூறும் மகனே (சீடனே) இது சிறு பிள்ளையின் அறிவல்லவா? என்று கேட்கிறீர். தேய்பிறையாகியது முடிந்து வளர்பிறை வருவதுபோல் நான் வருவதும் உறுதியே. சூரியனுள்ளே போயும்

மீள்வேன். யோகத்தில் பல கோடி பிறவிக்கு உரிய காலம் வாழ்வேன். இதற்காக வெட்டவெளியில் செல்லும்போது கண்கூசும் சோதி தெரியும். மனம் தளரும். அரகரா என்று கூறி, எங்கும் சென்று மீள்க நீயே.

அறியாத வரைபார்க்க நான்தா னேறி
அய்யனே மூன்றுவரைக் குள்ளே சிக்கி
நெறியாக நால்வரையி லேறொட் டாமல்
நிமிடத்தி லறிவினிலே வந்து நின்றே
மறிவானம் படைத்தகொங் கணரே சித்தர்
மற்றோரை யான்காணேன் மைந்தா சொல்லு
பொறியான வழியடக்கிச் சூட்ச மாகிப்
போனவரார் போகருடைப் பிள்ளை தானே. 33

உயரம் அறியாத மலையில் நான் ஏறினேன். மூன்று மலைகளும் (கிரந்திகள் மூன்றும்) ஏறினோர் நான்கு இதழ்த் தாமரையில் ஏறி உச்சந்தலை போவது கடினமாகையால், பாதியில் என் அறிவில் இயலாமை புகுந்தது. அப்போது தான் இவற்றை எளிதில் செய்த சித்தர், போகரின் சீடராகிய கொங்கணர் என்பது அறிந்தேன். (மூன்று வரை - மூன்று மலைகள்; பிரமக் கிரந்தி, விஷ்ணுக் கிரந்தி, உருத்திரக் கிரந்தி என்னும் மூன்று கிரந்திகள்)

பிள்ளையென்றா லவரல்லோ போக ருக்குப்
புகழான ரிஷிகளெல்லாஞ் சித்த ரென்பார்
தள்ளையென்றா லவர்தாமூ லரிடம் போன
சச்சிதா ணந்தவின்ப மான பிள்ளை
கொள்ளையென்றா லவர் கொள்ளை ஞான வீதி
கொடிதான சிலம்பொலியைக் கேட்டு மீண்டார்
பிள்ளையென்று வந்ததனால் கீர்த்தி யாச்சு
வேதாந்த அந்தமெல்லாம் வெளியாய்ப் போச்சே. 34

போகரின் சீடரில் அவரே சிறந்தவர். சித்தர்களே சிறந்த ரிஷிகளிலும் மேலானவர் என்பதைச் சச்சிதானந்த வடிவுடன் திருமூலரிடமே சென்று நிரூபித்த சீடர் ஆவார். ஞானத் திரளில் அவர் திரளே மிகுதி. கேட்க இயலாத சிலம்பொலி யைத் தனக்குள்ளும் திருவம்பலத்திலும் கேட்டு மீண்டார். சீடனில் சிறந்தார். வேதாந்தத்தை எல்லாம் வெளியாய் நிரப்பினார். (வேதாந்தம் - யோக முறைகள்)

போச்சென்று சொல்வதென்ன போவா னையா
புத்தி சொன்ன புத்தியெல்லாம் போட்டிட் டாயோ?
வாச்சென்று நின்வயிற்றிற் பிறந்த பிள்ளை
வந்தாலென் கெட்டாலென் மகத்வ முண்டோ?
கோச்சென்ற நாவமென்ன விடிந்தா லென்ன
கோடிரவி காந்தியென்ன பயமுண் டாமோ?
ஓச்சென்ற சிலம்பொலியைக் கண்டு வாரேன்
ஒருமனமாய்ப் பூரணத்தி லுன்னி டீரே. 35

போ என்றால் உடனே அச்சீடர் போவார். அவர் போல் வளரச் சொன்ன புத்திகள் எல்லாம் தவிர்த்திட்டாயோ? உன் வயிற்றில் வளர்ந்த பிள்ளை வந்தாலும் கெட்டாலும் அது மகத்துவமே! என்று கொங்கணர் பற்றிக் குரு நம்பிக்கையுடன் இருந்தார்.

உன்னிடீர் அண்டமுதற் புவனந் தாண்டி
ஒருநொடிக்குள் பதந்தாண்டி முப்பாழ் தாண்டி
மன்னுதிரு வருள்மனையைக் கண்டு போற்றி
மருவியதோர் புரணத்திற் சென்றே யேறிப்
பன்னிடுவீர் தினந்தோறும் பழக்க மையா
பாயுடனே யதுநடந்து வரைக ளாறும்
தன்னிடிர்யோ கறியேனும் அருளாற் போறேன்
தயாநிதியே கடாட்சித்தே அனுப்பு வீரே. 36

மனத்தால் அண்டமும், அதற்கு அப்பால் புவனமும் தாண்டி ஒரு நொடியில் இப்பதங்கள் தாண்டியபின் முப்பாழும் தாண்டி (தலைக்குமேல் மூன்று சூன்யப் பகுதி) இறைவன் அருள் இருக்கும் இடத்தைக் கண்டு, இதை நடுநாடியுடனே சென்று அறியும் பழக்கத்தைத் தினமும் செய்து, ஆறு வரைகளையும் தாண்டுக. இதை யோகம் அறியாதவனும் குரு அருளால் அறிவான். தயாநிதியின் அருட்பார்வையே போதும்.

(முப்பாழ் - தலைக்கு மேல் மூன்று சூனியப் பகுதிகள்)

அனுப்புவது பிறகு உனையான் சென்று வாரேன்
அவ்வளவுங் குகைக்குள்நீ பட்ட மாய்நில்
தனுப்பிறந்த தளிபோலச் சென்று தாண்டிச்
சாதகமாய்ச் சொருபமணி மூன்றுங் காட்டிக்
கனுப்பிறந்த கமலியது பூண்டுங் காட்டிக்
காட்டிலே யட்டமாசித் தியினால் காட்டி
உனுப்பிறந்தோர் தாண்டிலொரு வரையி லேறி
உற்றுமறு வரைதனி லோடி னேனே. 37

உன்னை (சீடனை) அனுப்புவது பிறகுதான். நான் முதலில் செல்கிறேன் என்று கூறிப் போனார் குரு. அது வரை மனக்குகையிலேயே நீ தங்கியிரு என்றார். "சொருபம் விளங்கும் மூன்று மணிகள் காட்டி, (சிந்தாமணி) கமலி யான திருமகள் அருளும் பூண்டு, காட்டில் அட்டமாசித்தி பயின்று, எல்லாம் கடந்து தலை வழியே வானில் ஏறி ஒவ்வொரு மலையும் கடந்தேன்" என்றார் குரு.

ஓடினேன் மூவரையி லிடியோ கோடி
ஓகோகோ ரவிகோடி வன்னி கோடி
வாடினேன் மனமிளைத்தேன் மயக்க மானேன்
வாயிட்ட குளிகைசென்றே யேறிப் போறேன்

நாடினேன் கற்பமொன்று மூவரையில் தாண்டி
நலமாக நாலுவரைக் குள்ளே சென்றேன்
ஆடினே னாடினே னறிவு கெட்டேன்
அரகரா மோசமென்றே யிறங்கி னேனே. 38

அந்த மூன்று மலைகளும் ஓடும்போது இடியும், மின்னலும், சூரிய ஒளியும் கோடிகளாய்த் தெரிந்ததால் மனம் தளர்ந்தேன். மயக்கமானேன். குளிகையைத் தின்றதால் வெற்றி பெற்றேன். மூன்று மலைகளும் தாண்டி கற்பமாய் (ஆயுள் நீளம்) உள்ளதைக் கண்டேன். நான்கு மலைகளையும் உள் புகுந்து கண்டேன். நெடுங்காலம் அப்படி இருந்தது தவறு எனக் கீழே இறங்கினேன்.

(மூன்றுமலை என்பது கிரந்திகள் (முடிச்சு) மூன்றுமாம். நான்கு மலை என்பது மூலாதார நூலிதழில் இருந்து உச்சந்தலை வரை ஏறுவதாம். இவை குளிகை (மாத்திரை) உண்டு வென்றதாம்)

இறங்கினே னால்வரைக்கப் புறமே போக
என்னாலே முடியாதே யேதோ அஞ்சில்
இறங்கினே னென்மக்கா ளும்மா லாமோ
ஏதுசொன்னாய் பேய்ப்பிள்ளா யென்ன பேச்சு
இறங்கினே னிந்நாள்பின் னையார் சொல்வார்
ஏகவெளி திக்காடு மிடியோ கோடி
இறங்கினே னென்னாலே முடிவு காணேன்
ஏறினார் கொங்கணர்தா மேறி னாரே. 39

கீழே இறங்கினேன். நான்கு மலைக்கும் மேல் ஏறி வானம் முழுதும் சுற்ற என்னால் முடியவில்லை. சீடர்களே, உம்மால் முடியுமோ? ஆனால் கொங்கணர் இதையும் தாண்டி இடியும், மின்னலும் உள்ள பகுதியில் வெற்றி கண்டார்.

## கொங்கணர் மகத்துவம்

ஏறியதோர் கொங்கணரைப் போலே யில்லை
ஏகவெளி தீக்காட்டெப் படியோ போனார்
மாறியதோர் மனம்பிடித்தார் யோக மானார்
மாளுவது நிசமென்று வாய்மை பூண்டார்
கூறினதோ ரறுவரையைக் கண்டு முட்டக்
குமுறியதோர் சிலம்பொலியைக் கேட்டு மீண்டார்
ஆறியதோர் மனங்கண்டா ரவரே சித்தர்
ஆச்சரியங் கொங்கணர்போ லார்கா ணேனே. 40

கொங்கணர்போல் ஏறுவது கடினம். ஏகவெளியானதில் தீக்காடு (ஒளி) இருந்தும் மாறாமல் மனம் துணிந்து யோக சித்தி பெற்றார். ஆறு ஆதாரங்களையும் (மலை என்று உபசரித்தார்) முட்டிப் பிறகு சிலம்பொலியைக் கேட்டு மீண்டார். அவர் போல் இவற்றை யார் சாதிப்பார்?

காணரிது காணரிது கோடா கோடி
கண்டுநான் பாபருட்ச சித்தர்க் குள்ளே
பூணரிது பூணரிதே அகண்ட வீதி
புக்கல்லோ சிலம்பொலியைக் கேட்க மாட்டார்
ஊணரிது ஊணரிது வெளியிற் பார்த்து
ஓடுவரோ வென்றீர்கள் மக்காள் நீங்கள்
தோணரிது தோணரிதாய் நின்ற ஞானம்
சீடருக்குள் ளோடுறது துரியந் தானே. 41

ஒளிச்சோதியைக் காண்பதும் அரிது. சித்தர் தமக்கு உள்ளேயே இதைக் காண்பர். அகண்ட வான வீதியைத் தழுவுவர். அப்படிச் செய்தால் மட்டுமே சிலம்பொலி கேட்க முடியும். வெளியில் நடப்பவை கண்டு உண்ண முடியாது என்று ஓடுவீர்கள். (உண்ணுதல் - அனுபவித்தல்) அந்த ஞானம் சீடருக்குள் எளிதில் தோன்றாது. ஆனால் துரியம் கண்டால் மட்டும் வரும்.

## சாங்கத்தார்

தானென்ற பூரணத்தைச் சாங்கத் தோர்கள்
சகமெல்லாம் நிர்க்குணமாய் நின்ற தென்பார்
வானென்ற வெளியென்பா ரில்லை யென்பார்
வாய்பேசார் சொன்னக்காற் போமோ சொல்லு
கோனென்ற குருவருளால் சமாதி கூட்டிக்
குவிந்துநின்று மவுனத்தின் நிலையைப் பற்றி
ஊனென்ற வுடம்பைவிட்டே அறிவாய் நின்று
உலாவுறதே சாங்கமென்றே யுரைத்திட் டாரே. 42

சாங்கிய சமயத்தார் ஆத்மாவாகிய பூரணத்தை ஏற்ப தில்லை. படைப்பு முழுதும் நிர்க்குணம் என்பர். வான் என்றும் வெளி என்றும் கூறுவதில்லை. குரு அருளால் சமாதி யோகம் கூடி மவுனத்தை உணர்ந்து, உடம்பு உணர்வை முழுதும் விட்டு, அறிவு மயமாக மட்டுமே நின்று உலாவுவதே சாங்கியர் கூறும் வழியாகும்.

உரைத்திட்ட காரமென்ன பிருதிவி போக்கு
ஓடுகிற வாசியினால் யோகம் பார்த்து
மறைத்திட்ட மவுனத்துடன் மவுன மூட்டி
மருவியந்த அறிவோடே வாச மாகி
நிறைந்திட்ட அகண்டமுத்தி சென்றே ஆடி
நேரான அண்டமுதற் புவனம் பார்த்து
முறைத்திட்டந் தப்பாமற் சமாதி நின்றால்
முழுயோகி முழுஞான முமூட்சா வாயே. 43

அகாரம் என்னும் (பிருதிவி) நிலப்பூதத்திலிருந்து (மூலாதாரத்திலிருந்து), பிராணாயாமம் பயின்று, மவுனத்தை யும் சாதித்து, இறை அறிவுடன் இணைந்து பிரபஞ்சமாய் விரிந்த எல்லாப் புவனங்களும் கண்டு தவறாமல் சமாதி கூடினால் முழுயோகியும் முழுஞானியும் முத்திக்குரிய முமுட்சு ஆவாய்.

ஆமப்பா இதற்கு முன்னப் பியாச மார்க்கம்
அறைகுவே னட்டாங்கம் நன்றாய்க் கேளு;
ஓமப்பா வகையாக விரித்துச் சொல்வேன்
உத்தமனே சாட்சிநித் திரையைப் போக்கு
தாமப்பா சதாநித்தம் தார கத்தே
சார்ந்துநின்ற கேசநிலை சதாநித் தம்பார்
சோமப்பால் சுழித்தோடுங் கேசரியைக் கண்டால்
சொல்லாத முத்திரையைச் சொல்லு றேனே. 44

இவற்றுக்குரிய பயிற்சி என்பது எட்டுவித யோகப் பிரிவேயாம். உன்னைச் சாட்சியாக்கும் உறக்கத்தை நீக்கு. தினமும் தாரகமாகிய ஓங்காரத்தை உச்சரித்து நில். கேசரி யோகத்தை நாளும் செய். இது உன்னைச் சுழித்துக் கொண்டு ஓடும். அது பற்றிக் கேள்.

சொல்லுறேன் ரவிமதியும் வன்னி கூடிச்
சொலித்துநின்ற விடமல்லோ கேசரிதா னப்பா
சொல்லுறேன் அதைப்பார்மனஞ் செயநீ ராகும்
சுத்தவெளி யடியோடே தாக்கி யேத்தும்
சொல்லுறேன் மனம்புத்தி சித்த மென்பார்
தொடர்ந்துநின்ற குருபதத்தைச் சூட்டிக் கேளு
சொல்லுறேன் அறிந்தமட்டும் புருவ மையம்
சூட்சந்தொட் டேறியட்டாங் கத்துறை கேளே. 45

சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றும் (பிங்களா, இடா, சுழுமுனை நாடியே இவை) ஒன்றாகக் கூடும் இடமே கேசரி யோகமாகும். (இம் மூன்றும் கூடும் இடம் புருவ மையம்) இதைச் செய்யும் தலைமை மனத்தால் ஆகும் செயநீர் (இது மருத்துவப் பெயர்) சுத்த வெளியில் அடியோடு ஏறச் செய்யும். மனம், புத்தி, சித்தம் என்று பிரித்துக் கூறுவர். குரு பதத்தை உணர்வோடு சேர்த்துக் காண்க. புருவ மையமே சூக்குமம் கொண்டு நிற்பதாகும்.

விளக்கம்: கேசரி யோகத்தில் புருவ மையம் உணர்வு மிகும். குருபாதம் என்பது புருவ மையத்துக்கு மேல் மூன்று விரல் உயரமாகும். ஒரு கண்ணை மூடி மறு கண்ணால் மூக்கு நுனி பார்ப்பது கேசரியாகும்.

கேளப்பா ஏமத்தைச் சொல்வேன் நானுங்
 கெடியான நேமமுடன் ஆசங் கொண்டு
வாளப்பா பிராணாயம் பிரத்யா காரம்
 மகத்தான கியானமொடு தாரணை கேளு
தாளப்பா சமாதியுடை நிட்டை பங்கம்
 தனித்தனியே சொல்லுகிறேன் நன்றாய்ப் பாரு
வேளப்பா ஏமமென்ற பத்துஞ் சொல்வேன்
 வேதாந்த பொறியறிந்தோர் பெரியோர் தாமே. 46

இயமம் (ஏமம்), நியமம் (நேமம்), ஆசனம் (ஆசம்), பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் (கியானம்), சமாதியாகிய நிட்டை ஆகிய இவை எட்டும் தனித்தனியே கூறப்பட வேண்டும். இயமத்தில் பத்து உண்டு. வேதாந்தம் அறிந்த பெரியோர் இவற்றை உணர்வர்.

பெரியோர்கள் அண்டமென்ற ஆன்மா நோக்கிப்
 பேரான பரிச்சின்ன மனமு மாகி
அறியார்கள் சாதியென்ற ஆச்சிரம் விட்டே
 ஆசையென்ற விகற்பமெல்லாம் அடித்துத் தள்ளிப்
பரியோங்க ளிங்கிசையை நீக்கிப் போட்டுப்
 பராபரத்தை நோக்குவதங் கிசம தாகும்
சரியோரா வதுஞ்சகல மதத்தி னாலுந்
 தனித்தனியே கண்டிக்கப் படாதென் பாரே. 47

அண்டம் என்றும் அகண்டம் என்றும் ஆன்மாவைக் கூறுவர். (விபு எனப்படும்.) அதன் சிறிய விளைவே

மனமுமாகும். (பரிச்சின்னம்) சாதிபேதம் கருதாது (ஆசிரம் - பேதம்). ஆசைகள் பலவற்றையும் உதறிவிட்டு, இச்சையை விட்டகன்று, பராபரத்தையே நோக்கி இருப்பது அங்கிசம் என்பர். யாவராலும் இது இகழப்படாதது ஆகும்.

(அங்கிசம் - பராபரத்தையே சிந்தித்து இருப்பது)

என்பார்க ளிங்கிசையா யிருக்கும் மாண்பர்
எங்கெங்கும் நிறைந்திருந்த சுரூப மூர்த்தி
அன்பார்க ளிதுவல்லோ சத்தியந்தான்
ஆரதிக ஆன்மசரீ ராதி சுபாவம்
வன்பார்க ளபகரிப்பை விட்டு விட்டு
மனமுரைத்தா லூரதிக மென்று பேரு
தன்பார்கள் பிறசரீ ராதி சுபாவந்
தானென்ற தற்குடலட் சணந்தான் பாரே. 48

இதைக் கூறியவர்கள் எங்கும் புகழ் உடம்பாய் உள்ள பெரியோர். எங்கும் தன் சொரூபத்தைப் பரவச் செய்து சத்தியமாய் இருக்கும் பரம்பொருள் ஆன்மாவுடன் கூடிய உடல்களில் அதன் சுபாவம் வெளிப்படும். ஆகவே பிறரிடம் அபகரிப்புக் கொள்ளாது மனம் இணைந்தால் வள்ளன்மை மிகுதி என்பர். பிற உடம்புகளின் இயல்பை யும் தன் உடம்பின் இயல்பு எனக் காண்பீராக.

பாரப்பா பிரமமது சுபாவ மாகப்
பரவியது நிரந்தரமுஞ் சரித்தா லன்று
நேரப்பா பிரமசரிய மிதுவாங் கண்டால்
நிரந்தரமுந் தயவினுடை நினைவு கேளு
தாரப்பா சரீரத்தில் வருத்தம் நீங்கிச்
சகலசனம் நம்மைப்போ லென்றே யெண்ணி
ஆரப்பா சுபானுபவ போதஞ் செய்வார்
அவரல்லோ தயவுடையோ ரறிந்து காணே. 49

பிரம்மத்தின் இயல்பு என்றும் நிலையாக நமக்குள் இயங்கினால் பிரமச்சரியம் என்பர். இது வந்தால் யாவர்க்கும் (தயவு) இரக்கம் உண்டாகும். ஆகவே உடலில் துன்பம் நீங்கி எல்லா மக்களும் நம்மைப் போன்றோர் என்று எண்ணுக. இந்தச் சுபமான அனுபவமே தயவு மிகக் காரணமாகும்.

காணப்பா வேதாந்த சாத்திரம் செம்மை
கரைகற்ற சமயம்பொய் யென்று தள்ளி
ஆணப்பா திடப்பட்டாட் சேப மென்பார்
வீட்சணமுஞ் சீதளமுஞ் சுகதுக் கத்தால்
வீணப்பா மானாபி மானம் வந்து
வெறும்வெளிபோற் சொப்பனமா மென்று தள்ளித்
தோணப்பா தாங்காம லகண்டத் துள்ளே
சொக்குவது சமயமென்று சொல்ல லாமே. 50

வேதாந்தமாகிய யோகம் தவிர பிற சாத்திரம், கரை யில்லாத சமயம் ஆகிய இவை பொய் என்று தள்ளுக. இன்ப துன்பத்தால் மட்டுமே எதிர்ப்பு, மறுப்பு, ஒன்றுபடல் முதலியன உண்டாகும். மானம் அபிமானம் (பற்று) ஆகியவற்றை எல்லாம் கனவு என்று தள்ளுக. அகண்ட மாகிய ஆத்மாவுக்குள்ளே ஒன்றி இயங்குவது மட்டுமே சமயம் என்று சொல்லலாம்.

சொல்லலாம் வேதாந்தத் துள்ளே முத்தி
தொடுகுறியாஞ் சாத்திரத்தின் முத்தி யில்லை
வெல்லலா மதனாலே சொன்ன வெல்லாம்
வேறில்லை நாமதுதான் எனலே முத்தி
அல்லவெலாஞ் சொப்பனம்போ லவத்தை யாண்டு
அகிலபிர பஞ்சமெல்லா மடுத்து மூழ்கி
நில்லலா மற்புதமாய் நிற்பிட மற்று
நிர்மலமாய் நிற்கிறபூ ரணந்தா னென்னே. 51

வேதாந்த சாத்திரத்தின் சொல் வகையாக உள்ளதே முத்தி தராது. மனத்தால் நூல்கள் சொல்லியவற்றை வெல்லலாம். பூரணமும், நாமும் வேறு அல்ல என்று உணர்தலே முத்திக்கு உபாயமாகும். இரவில் காணும் கனவு போல் பிரபஞ்சம் முழுதும் மனத்தில் மூழ்கும். அதில்தான் பிரம்மமாகிய பூரணம் எங்கும் பரவி அற்புதமாய் உள்ளது.

தானென்ற பூரணந்தான் நாமென் றெண்ணிச்
சதாநித்தம் மறவாம லிருந்தா னாகில்
வானென்ற கலிதகரி யாச்சு தாச்சு
மருவியதோர் சாத்திரத்தி னாலே யப்பா
கோனென்ற தன்னிடத்தே யொன்று மில்லை
கூடிநின்று போனதில்லை யென்றே யெண்ணி
வேனென்ற நிர்க்குணமும் வேறொன் றில்லை
வேதாந்தசித் தாந்தமென்றார் கௌச மாச்சே. 52

அந்தப் பிரம்மமாகிய பூரணம்தான் நாம் என்று எண்ணிக் கொண்டு எல்லா நேரமும் மறவாமல் இதை உணர்ந்தால், சாட்சியாக அதை உணரலாம். சாத்திரத்தால் தன்னிடம் இது நிலைபெறாது, தனக்கு வேறாக எதுவும் இல்லை என்று உணர்வது நிர்க்குண பிரம்ம சாதனையாகும். வேதாந்த சித்தாந்தம் இந்த நெறியை அனுபவம் ஆக்குவதில்லை.

ஆச்சப்பா நேமத்தைச் சொல்லக் கேளு
அறைகுவேன் நன்றாகப் பூர ணந்தான்
வாச்சப்பா சத்யமென்ன மித்தை யென்ன
மருவியதோர் நானேதான் என்ற தாரு
வீச்சப்பா நமக்குவந்த பந்த மேது
வேதாந்த சாத்திரத்தில் விளங்கப் பார்த்துக்
கூச்சப்பா திடப்பட்டார் தவசென் பார்கள்
குலாமரிட்ட விடவெல்லாங் குருட்டு நோக்கே. 53

இனி நியமம் என்ன என்று சொல்லக் கேள். பூரணம் சத்திய வடிவாய் உள்ளது. நாம் அது என்பது மாயை (மித்தை) என்று கூறுபவர் யார்? நமக்கும், பரிபூரணத் துவத்துக்கும் என்ன தொடர்பு? வேதாந்த சித்தாந்தப்படி விளக்கமில்லை. தவத்தால் பூரணத்தை உணரலாம் என்பர். இது குருட்டு நோக்கமே ஆகும்.

நோக்கப்பா பிரமமதி லோகத் துள்ளே
நுகர்ந்து நின்ற காமியத்தை நரகென் றெண்ணி
வாக்கான வெறுப்பதுசொப் பனம்போ லெண்ணி
சகமிது வென்றுதள்ளி மனமீ தேறித்
தாக்கான பொருளல்லோ சச்சிதா னந்தம்
தடைபெறவே தானானார் சந்தோட மாச்சு
போக்கான வேதாந்தப் பிரம சாரம்
புகட்டுகிற குருச்சொல்பூ ரணமென் றெண்ணே. 54

உலகத்தில் எங்குமாய் உள்ள பிரம்மத்தையே நோக்கலாம். கனவுபோல் எங்கும் பரந்து மனத்தில் ஏறி வந்து நம்மையே தாக்கும் உணர்வுப் பொருளே சச்சிதானந்தமாகிய பூரணம் ஆகும். தானே அதுவென உணர்வதால் மகிழ்ச்சியே மிகும். வேதாந்தம் கூறுகிறபடி குருவாக வரும் அவனே கூடப் பூரணம் என்று எண்ணுக.

எண்ணியதோர் மூன்றையுந்தா னுண்மை யென்றே
எண்ணியிருக் கிறதாரென் றியம்பு வார்கள்
தண்ணியதோர் குருவுரைத்த வுபதே சத்தைத்
தானறிந்து பூரணமாய் முத்த னாகிப்
பண்ணியதோ ரபராதம் குருவுக்கு ஈந்து
பராபரத்தைத் தன்தேகம் போலே யெண்ணி
அண்ணியதோர் சுகமுடனே துக்க மெல்லாம்
ஆர்செய்துந் தனக்குவரம் போலுங் காணே. 55

மூன்றுவகைப் பாழையும் உண்மையென்று எண்ணி எப்படி உணர்வு பெறுவது என்பர் சிலர். குருவின் உபதேசத்தைக் கேட்டு, தானே பரிபூரணம் என்று அறிந்தால் முத்தியுண்டு. குருவுக்கே கேடு செய்து பராபரமே உன் தேகம் என உணர்வது அரிது. (இதில் குரு உபதேசம் என்பது "அது நீய் ஆனாய்" என்ற மகாவாக்கியமாகும். அதாவது பிரம்மமே நீயாகி உள்ளாய் என்பதாம்)

காணப்பா இப்படியே தீர்த்தி யானால்
கைகடந்த சிவபூசை யென்று சொல்வார்
வீணப்பா சகலநூ லென்று தள்ளி
விரைந்துநின்ற விரத்தியெல்லாம் விட்டே யோடி
ஊணப்பா குருபிறகே நிழலைப் போலே
உத்தமனே சச்சிதா னந்த னானாய்
ஆணப்பா தேவிக்குப சரித்து வென்று
அறிகிறதே சிரவணமென் றறிந்து கொள்ளே. 56

இப்படித் தன்னைப் பூரணமாக எண்ணுவது கைகடந்த சிவபூசை என்று சொல்வார்கள். எல்லா நூல்களும் வீணானது என்று தள்ளுவீராக. எல்லாத் துன்பத்தையும் நீக்குக. குருவை நிழலாகப் பின்பற்றினால் சச்சிதானந்தம் ஆவாய். தேவியை உபசரித்து, மறவாது அவள் நாமம் சொல்லி வந்தால், இந்த உணர்வால் வெற்றி யாகலாம்.

அறிந்திருந்த வேதநிலை விட்டு நீயும்
அப்பனே வாசனைப்ர பஞ்சந் தாண்டி
மறிந்திந்த புத்ராதி பாசத் தாலே
மாயம்வந்து முட்டையிலே கலச்சை யாக்கிச்
செறிந்தவதை யடிச்சகவே தாந்தம் பார்த்துச்
சீராக நிற்கிறதே செம்மை யாகும்
நெறிந்து நின்ற வேதாந்தப் பிரமந் தன்னில்
நினைவோடு வருகிறதே யாசை தானே. 57

இந்த வேதநிலையைக் கைவிட்டு, நீயும் சென்ற பிறவி முதல் தொடரும் வாசனை ஆகிய பிரபஞ்சத்தைத் தாண்டி வருக. புத்திரன் முதலிய பாசங்களை நீக்கி, வேதாந்தம் கூறும் பிரமத்தை உணர்ந்து, அதுதான் நான் என்று எண்ணிப் பிரம்மமாகவே நின்று உணர்க. இந்த ஆசை யைத் தருவதும் பிரம்மமே ஆகும்.

ஆசையென்றும் மதியென்றும் அதற்கு நாமம்
அப்பனே தாம்பிரம மென்றே ஆசான்
நேசையென்ற வுபதேசப் படியே யென்றும்
நேராக வேதாந்தப் பொருளென் றெண்ணிப்
பூசையென்று மற்றதெல்லாந் தள்ளி விட்டால்
உத்தமனே சிவமென்று சொல்லு வார்கள்
காசையென்றே என்னென்ன கார்யம் வந்தும்
கைவிட்ட துக்கம்வந்தும் கலங்கி டாரே. 58

ஆசை, அறிவு முதலியன குரு உணர்த்திய பிரம்மத்தி லிருந்தே நமக்கு வரும். இதையே வேதாந்தம் என்று கொண்டு, பிற பூசைகளை எல்லாம் நீக்கி விட்டால் நீயே சிவமானாய் என்பார்கள். இதில் இடையூறுகளும் துன்பமும் வந்ததால் பலர் கலங்கிக் கைவிட்டனர்.

கலங்காமல் தாப்பிரம மென்றே யெண்ணிக்
கவடற்று நிரந்தரம்வே தாந்தம் பார்த்தே
மலங்காமல் நிற்கிறதே விரத மப்பா
மகத்தான நேமமென்ற பத்து மாச்சே
இலங்காம லிருப்பதையும் அனுட்டித் தக்கால்
என்மகனே மனந்திடமா யில்லா விட்டால்
துலங்காத சுவரில்சித் திரம்போ லாகும்
சுழியதுதா னடிப்படைமூன் றொன்றும் வாறே. 59

சிறிதும் கலக்கம் அடையாமல், தானே பிரம்மம் என்று எண்ணி, கபடம் இல்லாது என்றும் வேதாந்த உபதேசமாக நிற்பதே விரதமாகும். இவ்விரதம் ஒன்றே பத்துவித நியமநெறியுமாம். இதைக் கைக்கொள்ளும்போது மனம் திடமாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் சுவரில் கண்ட சித்திரம் போல் தனக்கும் பிரம்மத்திற்கும் வேறுபாடு வரும். இந்த வகையில் பழகினால் மூன்று பாழும் ஒன்றாகி அதுவும் நமக்கு உண்மையாக விளங்கும்.

(பத்துவித நியமங்கள் - தச காரியங்களே தச நியமம் ஆகும். தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆத்ம ரூபம், ஆத்ம தரிசனம், ஆத்தும சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பனவாம்)

வாறாகச் சுகாசனமா யிருந்து கொண்டு
மருவியதோர் மூலத்தில்வங் கென்று பூரி
கூறாகக் கும்பித்துமாத் திரையை யேற்றிக்
குறியோடே சிகாரத்தால் ரேசி ரேசி
சாறாக இப்படியாங் கென்று கும்பி
சாதகமா யிவைமூன்றும் தீர்ந்த பின்னே
ஆறாக அகாரமுத லுகாரங் காட்டி
அப்பனே மவுனத்தாற் கும்பித் தேறே. 60

சுகாசன நிலையில் அமர்ந்து மூலாதாரத்தைக் கருதி 'வம்' என்று கூறியபடி பிராணாயாமம் செய்து மெல்ல மெல்லக் கும்பகம் செய்யும் போது, மாத்திரையை (நேர அளவை) உயர்த்தினால், சிகாரமாகிய மார்பில் ரேசகம் செய்தால் 'ஆம்' என்று கும்பகம் செய்து இம் மூன்றையும் (இழுத்தல், அடக்கல், வெளியிடல்) செய்தபின், ஆறாதார வழியில் 'அ' 'உ' 'ம்' என்றும் நிலைகளை மவுனத்தோடு கும்பகத்தால் கடந்து மேல் நோக்கி யோக உணர்வை ஏற்றுக.

கும்பித்து மௌனந்தான் குவிந்த பின்பு
　　கொள்கியதோர் மூலத்தை விட்டு நீயுந்
தம்பித்துக் கண்டத்தே நின்றே யூது
　　தாலடங்கி யுரைத்தபின்மேல் மூலம் நின்று
சொம்பித்தே யறிவோடே மௌனம் பூரி
　　சுகமாகப் பூரணத்தை யதற்குட் கும்பி
தம்பித்து மனத்தொடுரே சகத்தைப் பண்ணு
　　தலமான பிரமமென்று பிராண னாச்சே. 61

இது முடிந்தபின் மூலாதாரத்தைக் கருதி மூச்சை இழுத்து விடுவதை நீக்கிக் கண்டத்தின் (கழுத்து) அளவில் மூச்சை ஏற்றி விடுக. பிறகு மூலத்தில் இப்படிச் செய்க. பிராணனைப் பிரம்மமாகக் கருதி மவுனத்தில் பூரித்து மனம் ஒன்றி மீண்டும் மீண்டும் ரேசகம் செய்க. (ஆசனத்தைச் சுகாசனம் என்பதால் கூறினார்)

ஆச்சப்பா இதுவல்லோ பிராணா யாமம்?
　　அறிந்தவனார் சிவயோகி யறியார் மற்றோர்
ஓச்சப்பா பிரபஞ்ச வாசை விட்டே
　　ஒன்றையுந்தான் மனத்தினுள்ளே சங்கி யாமல்
வாச்சப்பா வந்ததென்ற காரண மாக
　　மருவியதோர் ஞானமென்ற மார்க்கத் தூடிக்
கூச்சப்பா காமியத்தை நரகென் றெண்ணக்
　　கூறான கர்மமெல்லாம் விடுக்கு நன்றே. 62

இதுவே பிராணாயாமம் ஆகும். சிவயோகியே இதனை அறிவான். பிறர் அறியமாட்டார். இப்பிரபஞ்சத்தில் ஆசைகளை நீக்கி, மனத்தில் பிரம்மத்தை ஐயுறாமல், ஞான மார்க்கத்தில் சென்று, ஆசையெல்லாம் நரகம் என்று நீக்கி எல்லாச் செய்கைகளையும் விடுவித்து விடுக.

நன்றாக வேதாந்த சாத்தி ரத்தால்
நாம்சாட்சி யென்றுநித்த முரைத்து நின்று
பன்றான மற்றவைநாம் அல்ல வென்று
பரவிநின்றே யுலகமெல்லாம் மித்தை யென்று
கன்றாக வுரைப்பநிரந் தரமு நினைவாய்க்
காரணகா ரியங்களெல்லாந் தவிர்ந்து போட்டு
ஒன்றான வொருபொருளாய் நின்றா யானால்
உத்தமனே பிரத்தியா கார மாச்சே. 63

நலமான வேதாந்தத்தில் கூறியபடி நாம் சாட்சியாக இருக்கிறோம். பிரம்மம் தவிர மற்றவை நாம் அல்ல என்றும் உலக முழுதும் மாயை என்றும் எப்போதும் எண்ணி, காரணகாரிய அறிவை நீக்கி பிரம்மமே நீயாக ஒரு பொருளாய் நின்றால் அதுவே பிரத்தியாகாரமாகும்.

ஆச்சப்பா மாயையொடு மாய வின்பம்
அப்பனே சுத்தசை தன்ய மூன்றும்
போச்சப்பா ஆகாயம் போலே எங்கும்
ஓடியெங்கும் மறைந்திருக்குங் கண்டா லுந்தான்
ஆச்சப்பா அவர்களைத்தான் தீர்த்த மூர்த்தி
யாகநனி தோத்திரமாய்த் தியானம் பண்ண
வீச்சப்பா பிரமமென்றே தியான மாச்சு
விளம்புகிறேன் ஐந்துவகைச் சமாதி தானே. 64

மாயை, மாயத்தால் வந்து மறையும் இன்பம், தூய அறிவு (சைதன்யம்) ஆகிய மூன்றும் ஆகாயம் போல் எங்கும் பரவியதாம். அந்த மூன்றையும் நம்மோடு கலக்க வைத்த கடவுளைத் தியானம் செய்தால் அதுவே பிரம்மத்தைத் தியானிப்பது ஆகும். (இதுவரை இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் என்ற ஏழும் பிரம்மம் தானே என்று உணர்வது என்றார்) (பிரத்தியாகாரம் - காரண காரிய அறிவை நீக்கி, பிரம்மமே தானாக உணர்ந்து, ஒரு பொருளாய் நிற்றல்)

தானென்ற அதிட்டான சைதன் யத்தைத்
தனையளித்து நிலவறையில் தீபம் போல
ஆனென்ற அலைவற்றுத் திடம தாக
அப்பனே அகண்டமது தானாய் நின்று
வேனென்ற தோற்றமற்றே யிருந்தா யானால்
விளங்கியதோர் தத்வலயச் சமாதி யாச்சு
வானென்ற சவ்விகற்பச் சமாதி கேளு
மருவியதோர் தத்வலயச் சமாதிக் குள்ளே. 65

தான் என்று உணர்வதற்கு நம்மை வந்து சாரும் அறிவை நமக்கு அளித்ததை உணர்ந்து, பாதாள அறையில் விளக்குச் சுடர் அசையாது இருப்பது போலப் பிரபஞ்சம் முழுதும் தானாக எண்ணி, தன் தோற்றத்திலும் உணர் வில்லாது இருந்தால் தத்துவங்களோடு ஒடுங்கிய சமாதி என்பர். இதன் பிறகு சவ்விகற்ப சமாதி கேள்.

(சைதன்யம் - தூய அறிவு)

உள்ளாக இருக்கையிலே பேசுஞ் சுற்றம்
உறவாகக் கேட்டக்கால் தாணு வித்தை
தள்ளாகச் சவ்விகற்பச் சமாதி யென்று
தாமுரையார் பெரியோர்கள் கேளு கேளு
விள்ளாகத் திரிசாணு வித்தை மார்க்கம்
விரவியந்தச் சமாதியிலே நிற்கும் போது
தள்ளாகத் தன்னையனு சந்தா னித்துத்
தலமான சந்தானந் திரிசாண மாச்சே. 66

மேற்படித் தத்துவலய சமாதியில் ஒன்றிய பின், எல்லா வற்றையும் துறந்து விட்டால் அந்த உணர்வும் இல்லா விட்டால் அதையே சவ்விகற்ப சமாதி என்பர். இப்படி நிற்கும் நிலையில் தன்னையே பிரம்மமாக மேலும் தொடர்ந்து நினைத்து வருவதே இதுவாம்.

ஆச்சப்பா இதன்பேர்சவ் விகற்ப மென்பார்
அருளியதோர் நிருவிகற்பச் சமாதி கேளு!
ஓச்சப்பா தத்வலயச் சமாதி முத்தி
உத்தமனே சாத்தனுத்தங் கேம றந்த
ஆச்சப்பா துக்கமுற்று மிருகம் போல
ஆச்சரியஞ் சத்தமெல்லாங் கேளா விட்டால்
கூச்சப்பா சித்தமது சொரூபத் துள்ளே
கொண்டாற்பூ ரணத்தில்நிரு விகற்ப மாமே. 67

நிர்விகற்ப சமாதி என்பதை இனிக் கேள். விலங்குகள் நிலையில் வேறுவேறான ஒலிகளைத் தனக்குள் கேட்டு, பிரம்மத்தைத் தன் வடிவமாக உணர்ந்து சித்தத்தால் இதைத் தெளிவு செய்வது இதுவாம்.

ஆமப்பா சமாதிவிட்டுச் சரிக்கும் போதும்
அப்பனே சாத்திரங்கள் பார்க்கும் போதும்
ஓமப்பா காலமென்ற நிறையு மில்லை
உத்தமனே பிரபஞ்ச மில்லை யென்று
சோமப்பா விகாரந்தோற் றும்ப்ர பஞ்சஞ்
சொப்பனம்போல் பாசமென்ற மதிய டக்கில்
ஆமப்பா தீவிரமாம் பிறவி யார்க்கும்
அகத்தான காரணனா மென்றே யெண்ணே. 68

சமாதியை விட்டு இயங்கும் போதும், சாத்திர உண்மை களை அறியும் போதும், காலமும் பிரபஞ்சமாகிய இடமும் இல்லையாம். விகாரப்படும் பிரபஞ்சம் கனவுபோல் நம் அறிவில் அடங்கி நிற்கும். பிறவிக்கும் இந்தக் கனவுக் காட்சியே அடிப்படையாகும். மனத்தில் அடக்கினால் பிறவி யாருக்கும் உண்டாகாது என்று எண்ணுக.

எண்ணியல்லோ மனத்துள்ளே படாதே நீக்கி
ஏக்கமாய் நிருவிகற்ப மாகி நின்றே
அண்ணியல்லோ பிரபஞ்ச விகற்பந் தள்ளி
அனுபோக நிருவிகற்பச் சமாதி யாச்சே

ஒண்ணியல்லோ சொரூபத்தில் லயிச்சு நின்றே
உற்றிருந்த அகண்ட விர்த்தி காற்றில் தீபந்
தண்ணியல்லோ வுப்புண்டாற் போலே மைந்தா
சாதகமா யுன்னுருவங் கெட்டுப் போச்சே. 69

மனத்தில் வேறு கருத்து ஏறாது பிரம்மமாகவே தன்னை எண்ணி ஏங்கினால் நிர்விகற்பச் சமாதியாகும். பிரபஞ்ச வேற்றுமைகளைத் தள்ளிவிட்டால் நிர்விகற்ப சமாதியாகும். இப்படித் தன்னிலேயே லயமானால், உப்புத் தின்றவன் தண்ணீர்க்குத் தாகமாவது போல் பயன் தொடரும். உன் உருவம் உணர்வில் தோன்றாது மறையும்.

போச்சதுவுங் கடிகையொன்று தானாய் நின்றாற்
புகழான பெருமை சொல்ல வென்றாற் கூடா
ஆச்சதுவு மவுனமுற்று வாயை மூடி
ஆசையற்றே இருந்தல்லோ அகண்ட வீதி
வாச்சதும்ப்ர பஞ்சத்திற் கண்ட தெல்லாம்
வாலையுட னுரைபோலும் மலைபோற் காணும்
கோச்சதுவுஞ் சிலந்தியுடை நூலும் போலக்
கூறமத னங்கம்போற் குறியைக் காணே. 70

புகழான அப்பொருளை விரித்துக் கூற முடியாது. மவுனத்தால் ஆசையின்றி இருந்தால் பிரபஞ்சத்தின் விரிவான வீதிகள் தெரியும். பிரபஞ்சத்தில் காண்பன வாலைப்பெண் கூறுவதேயாகும். சிலந்தியைச் சிறைப்படுத்தியது சிலந்தியின் வாய் நூலே. அது வேறு பொருள் அன்று. சிலந்தியின் ஓர் உறுப்பே. அது போன்றதே நாம் பாவனையும் வேறல்ல என அறிக. (கடிகை - ஒன்றரை நாழிகை)

குறியன விண்ணுதித்த மேகம் போலுங்
கோதியதோர் சொப்பனப்ர பஞ்சம் போலும்
நெறியான அகண்டம்நம் மிடத்தே மைந்தா!
நேராக வுண்டாகில் இற்றுப் போற்று

பறியான வெவ்வேறு நாம மாகிப்
பாழுலகு நம்மிடத்தே தோன்றுந் தோன்றும்
மறியாக வழிந்துபோம் நாமே பிரமம்
மற்றொன்று மில்லையென்று மயக்கந் தீரே. 71

வானில் உதித்த மேகம் போலவும், சொப்பனத்தில் தோன்றும் பிரபஞ்சம் போலவும், உண்மையாக இந்தப் பேரண்டம் நமக்குள்ளேயே உள்ளது. வேறு வேறான பெயர்களில் கூறப்படும் இந்தப் பேரண்டப் பாவனை நமக்குள் நாமாகப் பிரம்மமாக நிற்கும் இயல்பு ஆகும். இதை வேறு பொருள் என்று குழம்ப வேண்டாம்.

மயக்கமற்று நானொருவ னெனக்கு ளெல்லாம்
மற்றொன்று மில்லையென்று தீர னாகித்
தியக்கமற்றெந் நேரமுமுள் ளிட்டுக் கொண்டு
சேர்ந்துவருஞ் சந்தோடந் துக்கந் தள்ளி
முயக்கமற அருட்பெய்து முன்னே வந்து
முன்னின்று விகற்பங்கள் பண்ணி னாலும்
அயக்கமற்று மனதிடமாய்ச் சதமாய்த் தள்ளி
ஆராதி கொண்டகற்றித் தானாய் நில்லே. 72

நான் பிரம்மத்தோடு ஒன்றி ஒருவனாய் உள்ளேன். எல்லாம் எனக்குள் உள்ளது. வேறுபாடாய் எதுவும் இல்லை என்று திடமாக நம்புக. தயங்காது எப்போதும் இந்த உணர்வுடன் சுகம், துக்கம் ஏதும் இல்லாமல், வேற்றுமை செய்யும் முயற்சி எதுவந்தாலும் தளராமல் திட மனத்தோடு எப்போதும் நிற்பாயாக.

நில்லப்பா சஞ்சாரத் தாலத் துள்ளும்
நேராகச் சமாதியிலே யிருக்கும் போதே
அல்லப்பா தொய்தம்வந்தா லாதரவு பண்ணி
அசையாத மலைபோல இருக்க நன்று

சொல்லப்பா கற்பமது கண்டத் தெய்துஞ்
சுட்டிநின்று திடப்படுதல் மெத்த நன்று
வெல்லப்பா வாசனையை விண்டா யானால்
மேவியதோ ராரூடச் சமாதி யாச்சே. 73

சமாதியில் இப்படி இருக்கும்போது இருவேறு (துவைதம்) பொருள் என்ற எண்ணம் வந்தால் அதைத் தள்ளி அசையாமல் நிற்க. இதனால் கற்பகாலம் வரையில் வாழும் நிலை உண்டாகும். இப்படித் திடமாக இருப்பதே மிகவும் நலமாகும். இதனால் முற்பிறவி வாசனை விடுபட்டுப் போகும். இது ஆரூடச் சமாதியாம்.

விளக்கம்: பதஞ்சலி கூறிய அட்டாங்க யோகம் வேறுபாடு உடையதாம்.

## மாயை யுத்தி

ஆச்சப்பா மாயையுத்தி சொல்ல வென்றால்
அனேகமுண்டு; சூட்சுமமாய்ச் சொல்லக் கேளு;
வாச்சப்பா தேசத்திற் பேதா பேதம்
மருவியதோர் கிராமத்தில் கிராம பேதம்
ஓச்சப்பா திறங்களிலே திறங்கள் பேதம் ஓகோகோ
சனங்களிலே யனேக பேதம்
வீச்சப்பா புத்திகளிற் பேதா பேதம்
வெகுமோக மாயத்தால் தோன்றுங் காணே. 74

மாயை என்னும் உத்தி பற்றிச் சொல்வது என்றால் நிறைய உள்ளது. சூக்குமத்தைக் கேட்பாயாக. தேசத்தில் பல தேச பேதங்கள் உண்டு, கிராமங்களில் இப்படிப்பட்ட கிராம பேதங்கள் உண்டு, திறமைகளிலும், மக்களிலும், அறிவுகளிலும் பல பேதங்கள் உண்டு. இவை மாயத்தால் உண்டாவனவேயாம்.

## ஞானவான்

காணப்பா அன்னமய மாகிநின்று
கலந்துநின்ற பிராணமய கோச மாச்சே
ஊணப்பா விக்யான மயமு மாகி
உத்தமனே மனோமயமாங் கோச மாச்சு
பூணப்பா ஆனந்த மயமு மாகப்
பொங்கிற்றே யஞ்சுதிறை போதத் துக்குத்
தோணப்பா திறையஞ்சு மாயை மாயை
சொல்லுகிறேன் சூட்சத்தைப் பூட்டிப் பாரே. 75

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசம் நம்மில் உண்டு. ஆன்மாவை இந்த ஐந்து பைகள் (கோசம்) ஒன்றின் உள் ஒன்றாக மூடி வைத்துள்ளன. (உடம்பு - அன்னமயம், காற்று வழங்கும் பகுதி பிராணமயம், மனம் செயற்படும் பகுதி மனோமயம், அறிவு வழங்கும் பகுதி விஞ்ஞான மயம், ஆன்மப் பிரகாசம் வழங்கும் பகுதி யாவும் ஆனந்த மயம். ஆத்மாவை உணர்வதால் ஆனந்தம் கிடைக்கிறது. எனவே ஆனந்த மயம் என்றார்) ஐந்து கோசங்கள் - அன்னமயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்பன. ஆன்மாவை இவை பைகள் போல் வைத்துக் கொண்டிருக்கின்றன.

பூட்டியதோர் விசிட்டனென்றும் விராட னென்றும்
புகழ்பெரிய ஏமகற்பப் போக்கே தென்றும்
நீட்டியதோ ரண்டமென்றும் புவன மென்றும்
நேரான பதங்களென்றும் மாயை யாச்சே
ஆட்டியதோ ராட்ட மெல்லாம் மாயை யாட்டே
அறிந்து கொள்ளு முன்மனமே மட்டை மாயை
மூட்டியதோர் மனமும்வந்த வரைக்கே நிற்கும்
மூதண்ட மனங்கடக்க முடியா வாறே. 76

விசிட்டன், விராடன், ஹேமகற்பம், அண்டம், புவனம், பலவித படி நிலைகள், என்று இப்படி பிரித்துப் பேசப் படுவன யாவும் நமக்கும் கடவுளுக்கும் இடையே பேதம் தருவதால், இவற்றை மாயை என்றார். இவற்றின் ஆட்டமெல்லாம் மாயையின் ஆட்டமேயாம். இவற்றை அறிந்து கொள்வதற்கு முன் மனம் மட்டை போல் மாயை யில் கிடந்தது. மனம் முயற்சியால் எல்லா இடங்களிலும் போகும். ஆனால் பேத உணர்வு வந்தால் மனத்தால் இந்தப் பிரம்மாண்டத்தைக் கூடக் கடக்க இயலாது.

வுறான வுலகத்திற் சுத்த வீரன்
மனத்தோடே போராடி யருவில் மாள்வான்
கூறான ஞானியென்றால் லிங்கம் புக்குக்
குறியான அம்பலத்தில் சேர்வா னப்பா
தாறான வுலகத்தோர்க் கடுத்த ஞானஞ்
சகத்திரமாங் கோடியிலே யொருவர் சொல்வார்
வீறான சிலபேய்கள் சாங்கம் பேசி
விழித்திறந்து விழித்திறந்து திரிவர் தானே. 77

மனத்தோடு பேத உணர்வில் போராடும் சுத்த வீரன் உருவின்றி மாய்வான். ஞானியானால் லிங்கமாகிய ஒளியில் புகுந்து அம்பலத்தில் (சிவலோகம்) சேர்வான். இந்த ஞானம் கோடியில் ஒருவர்க்கே வரும். சில பேய் மனிதர்கள் விரிவாகப் பேதத்தையே பேசி, பிறந்து இறந்து திரிவர்.

தானென்ற பிரமருமோ ரறிவிற் சென்றார்
சாதகமாய் மாலென்றால் அறிவில் தோன்றும்
கோனென்ற ருத்திரனோ ரறிவி லந்தங்
கொள்கின்ற மகேச்சுரனோ ரறிவிற் றோன்றும்
வானென்ற சதாசிவனோ மணியைக் காண்பான்
மகத்தான ஐவருந்தா னாக்கிப் பீடம்
வேனென்ற பஞ்சகர்த்தாள் மட்டுஞ் சென்றால்
வேதாந்தி யெனமட்டுஞ் சொல்வார் பாரே. 78

பிரம்மன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் என்னும் ஐந்து கடவுள் தத்துவங்களும் நம் அறிவில் தோன்றுவன. இவர்களை மட்டும் அடைய உபாசித்தால் வேதாந்தி என்று மட்டுமே கூறுவர்.

பாரப்பா சித்தரென்றார் குளிகை போட்டுப்
பகுத்தறிவா ருள்மனையைப் பரிந்து போற்றி
நேரப்பா தம்மொடுபூ ரணத்தில் நின்று
நேராக ஓடம்போல் நீஞ்சி யாடிச்
சேரப்பா திரும்பிவந்து புகுது வார்கள்
செகத்திலுள்ள சித்தருக்கே அடுத்த வாறு
கூறப்பா பூரணத்தில் நாதந் தாண்டிக்
கொங்கணர்தாம் சிலம்பொலியைக் கூடி னாரே. 79

சித்தர்கள் யோகத்திற்குரிய மாத்திரையைத் தின்று ஒவ்வொன்றையும் தாமே பகுத்து உணர்வர்; தமக்குள் உள்ள கடவுள் பீடத்தை அறிந்து போற்றிப் பூரணத்தி லேயே நின்று நீரில் ஓடம் நீந்துவது போல், மனத்தால் பிரம்மத்தை அடைந்து கலந்து மீண்டும் இவ்வுலக வாழ்வில் திரும்பி வருவர். கொங்கணர் நாதத்தை உபாசனை செய்து அதைத் தாண்டி, இறைவன் நடனமாடும் போது ஒலிக்கும் சிலம்பொலியில் கலந்தார்.

கூடினார் மூலகுரு பேரனென்று
கோடான கோடிசித்த ராடிப் பார்த்தார்
ஆடினா ராடினா ரேற மாட்டார்
ஆச்சரியங் கொங்கணர்தாம் அகண்டில் சித்தர்
ஓடினா ரோடினா ரனேகங் கோடி
ஓங்கிநின்ற காகத்தி லொன்றிப் போட்டுத்
தேடினார் தேடினார் குளிகை தன்னைச்
சித்தருக்குச் சொருபனிது கிட்டும் வாறே. 80

மூல குருவின் பேரன் என்று கோடிக்கணக்கான சித்தர்கள் கூடினர். ஆனால் அவர்களில் பெருவெற்றி கொங்கணர்க்கே ஆகும். வேறு வேறு உருவில் ஒன்றி, காகத்தில் ஒன்றி, தம் குளிகை எங்கே என்று தேடினார். இப்படிச் சித்தர்கள் சொரூபம் கொள்வர் என்க.

வாறான சுருபமணி யாரின் வர்க்கம்
மகத்தான தெட்சிணா மூர்த்தி வர்க்கம்
கூறான தொன்றாய்நிட் களங்க மாகிக்
குவிந்துநின்ற பொருளாகிக் கூறொ ணாத
தாரான தற்பதமாய் அதுவு மற்றுச்
சச்சிதா னந்தத்தில் நின்ற ஆசான்
பேரான பிள்ளைகட்கு மணியு மீந்து
பெரும்பாதை மகாரமென்று பேசி னாரே. 81

சொரூபமணியார் வர்க்கம், தட்சிணா மூர்த்தி வர்க்கம் எனப் பல சித்தர் தோன்றினர்; நிட்களமாய் (உருவமின்றி)ப் பிரமத்தில் ஒன்றாகித் தத்பத வடிவமானார்; அதுவும் நீங்கிச் சச்சிதானந்த வடிவில் ஆசானாகித் தம் சீடர்களுக்கு மணி ஒலி கேட்க வைத்து, 'மகாரம்' என்பது முடியும் புருவமத்தியே யோகத்தலம் என்று கூறினர்.

பேசியதுர்க் கந்தமென்ன வென்று கேட்டால்
பெருவிரலே நீயாய்மெய் விரலே போத
மாசியது வற்றக்காற் கவிக்கு முன்னே
மக்களே யிந்தப்பா ரென்று காட்டித்
தேசியது மகாரவித்தை சென்று கூட்டிச்
செப்பாதே மகாரவித்தை குளிர்ந்த ஞானம்
வாசியதுக் கருகாகுங் கண்டு கொள்ளும்
மக்களே சின்முகத்தில் நடுப்பா லாமோ. 82

இவ்வறில் நீங்காத பிறவி வாசனை எதுவென்றால் கேட்பாயாக. சின்முத்திரையில் பெருவிரல், பிரம்மமாகிய

நீயே ஆகும். அதைக் கூடி நிற்கும் சுட்டுவிரல் ஞான வடிவமானது என்று கூறுக. பிற மூன்றும் அந்நியமாம். அவை நீங்க மகர வித்தையாகிய புருவமத்தியில் உணர்வு கொள்க. வாசியினால் இதை நிறைவேற்றுக.

நடுவென்ன வெட்டவெளி யொன்று மில்லை
நானுமில்லை நீயுமில்லை அகண்ட வீதி
கடுவென்ன லகுவென்ன மனஞ்செம்மை யானால்
கண்டுகொள்ளு மென்றுசொல்லிக் கரத்திற் காட்டிச்
சுடுவென்ன தாபமென்ற முளையை முந்திச்
சுடுகின்ற துத்தியென்ன மௌனத் தீதான்
விடுவென்ன இந்திரியப் பாம்பை நீயும்
விட்டகன்றே யறிவோடோ மேவு மேவே. 83

நடுவாகிய வெட்டவெளியும் இல்லை, நானும் நீயும் அகண்டமான வீதியும் இயலாததும் எளியதும் என்பன எதுவுமில்லை. மனம் மட்டும் செம்மையானால் பிரம்மத்தை நீயும் கண்டுகொள்ளலாம். அந்த இடத்தை அறிவித்து மவுனம் கொண்டு இந்திரியமாகிய பாம்புகளை நீக்கி அறிவு மட்டும் துணையாய் நீ பதத்தை எண்ணுவாயாக.

விளக்கம்: இந்திரியம் தகாதனவற்றைத் தருவதால் பாம்பென்றார்.

மேவுமென்கை லாயபரம் பரையா மாணா
வெகுகோடி ரிஷிகளுக்கு முபதே சித்தார்
மேவுமென்று சித்தரிலே யனேகங் கோடி
மேருவிலே யிருந்தார்க்கு முபதே சித்தார்
மேவுமென்றென் னோடுபதி னாறு பேர்க்கு
விளங்கியவர் பதம்பிடிக்க வுபதே சித்தார்
மேவுமென்றே யெழுவருடன் திருமூ லர்க்கு
விளம்பினார் மெய்ஞ்ஞானம் விளம்பி னாரே. 84

என் கைலாய பரம்பரையில் வெகுகோடி ரிஷிகள் உபதேசம் பெற்றார். சித்தர்களிலும் பல கோடி பேர்கள் உபதேசம் பெற்றார். இமய மலையில் இருப்பவர்க்கும் இதையே உபதேசித்தார். என்னோடு பதினாறு பேருக்கும் இவற்றை உபதேசித்தார். திருமூலருடன் பிற ஏழு பேர்க்கும் (தட்சிணாமூர்த்தியே) உபதேசமாக மெய்ஞ்ஞானம் தந்தார்.

விளம்பியநா மெல்லாங்கை லாய வர்க்கம்
மேருவிலே யெடுத்தவுட லெமக்கு மக்காள்
அளம்பினதோர் சனகாதி யையர் விட்டே
அரைக்கணமும் பிரியார்க ளடியை விட்டுத்
தளம்பினதோர் கொடிக்குக்கொழு கொம்பு போலே
சதாநித்தங் காத்திருக்கோ மையா கிட்டக்
கிளம்பினதோர் பந்துபோ லனேகம் பிள்ளை
கெடியிட்டு மாட்டியங்கே கிட்டி னாரே. 85

இப்படிக் கூறப்பட்ட நாங்கள் யாவரும் கைலாய பரம்பரையில் வந்தவராவோம். இமயத்தில் உடல் எடுத்த வர்கள் இவர்கள், சனகர் முதலிய நான்கு முனிவர்கள் அரைக்கணமும் பிரியாத அந்த மூல குருவின் திருவடியை விட்டு, கொடிக்குத் தேவையான கொழுகொம்பு போன்ற குருவை எண்ணிப் பல நாள் காத்திருந்தோம். எங்களைப் போலப் பலரும் குருவைத் தேடி அங்கே வந்தனர்.

கிட்டினங்கை லாயபரம் பரையி னாலே
கேளுமாச் சரியங்கொங் கணர்தாம் சென்று
கிட்டினோ மென்று சொல்லி யீசா னத்தே
கெடியான ரசமுண்டு சட்டை போக்கிக்
கிட்டினோ மீசானந் துதித்தோ மென்று
கெடியாகத் தவசிருந்து முத்த ராகிக்
கிட்டினோ மென்றுசொல்லித் தட்சிணா மூர்த்தி
கெடியான பதம்பிடித்துப் பணிந்திட் டாரே. 86

கைலாய பரம்பரையினாலே கொங்கணர் தாம் ஈசான திசையில் சென்று, அமுதம் உண்டு, உடம்பாகிய சட்டையை நீக்கி, ஈசானத்தில் சிவமானோம் என்று தவம் இயற்றி, சீவன் முத்தராகி, தட்சிணா மூர்த்தியின் பாதத்தைப் பிடித்துப் பணிந்தார்.

பணிந்திட்ட கொங்கணரைப் பார்த்து நாதன்
பாருலகிற் பிறந்தவனிப் படிதா னானால்
பணிந்திட்ட சடம்போக்கிக் கைலாயத் தேக
மானதுதான் வெகுகடின மதிக மெத்தக்
கனிந்திட்ட கனிவாலே வீரத் தாலே
கலங்காமற் சமாதியுற்றுக் கயிலா யத்தில்
தணிந்திட்ட புத்திகொண் டிங்கே வந்தாய்
சாதகமா யொருவரையுங் கண்டி லேனே. 87

இப்படிப் பணிந்த கொங்கணரைப் பார்த்து 'உலகில் பிறந்தவன் இப்படித்தான் இருப்பானாகில், உடல் உணர்வை நீக்கிக் கைலாயம் சென்று, சமாதியில் கலந்து, நல்ல அறிவுடன் இங்கு வந்தாய்' எனப் பரமன் பாராட்டினான். இப்படி ஒருவரையும் காணவில்லை என்றான்.

கண்டிலே னாச்சரியங் குமார னேபார்
கலந்தநற் சென்மமிவர் கைலாய மானார்
ஒண்டிலே நாலதுக்கு மகத்வ மென்ன
உற்றசிவ விந்துவிலப் படிதா னாச்சு;
கண்டிலே னிவரைப்போற் சித்தர் காணேன்
காரணமா யிவனுக்குத் தீட்சிப் பேனான்
பண்டிலேன் கொங்கணரே மயங்க வேண்டா
பரம்பரமாய் வயதுதந்த மௌனந் தானே. 88

"குமாரனே! இப்படி நான் பார்க்கவில்லை. சென்மம் எடுத்தும் நாதவிந்துவில் கலந்து கைலாயம் அடைந்த இவரைப் போன்ற சித்தரைக் கண்டதில்லை. உனக்குக்

கற்ப கால தீட்சை தந்தேன். மௌனத்தால் அதைப் பெறுக'' என்றார் குரு.

மௌனவித்தை மூலருக்கு முன்னே சொன்னேன்
மருவியவர் காலாங்கிக் கதுவே சொன்னார்
மௌனவித்தை யகண்டாதி யறிந்து கொள்ளும்
மகத்தான போகருந்தா னுமக்குச் சொன்னார்
மற்றொன்று மயக்கமற்று மௌனத் தார்க்கு
மௌனவித்தை யெய்தியக்கா லவனே ஞானி
பற்றொன்றும் வையாதே பலருங் காண
வாய்திறந்து பேசாதே மகாரம் நன்றே. 89

''மவுனயோகத்தை திருமூலருக்கு முன்பே நான் சொன்னேன். காலாங்கி நாதருக்கும் திருமூலர் இதையே சொன்னார். அகண்டத்தையே அறியும் இந்த மவுனத்தைப் போகர் உமக்குக் கூறினார். மவுன வித்தை அறிந்தவனே ஞானியாவான். எதிலும் பற்று வைக்காதே, வாய் திறந்து பேசாதே. மகாரத்தில் (புருவமத்தி) எப்போதும் உணர்வு கொள்'' என்று குருகூறினார்.

நன்றான மௌனத்திற் கடிகை சேர
நல்வினையுந் தீவினையும் நாச மாகும்
நன்றான மௌனமென்று நினைக்க முத்தி
நல்லோர்கள் நினைப்பார்கள் மற்றோர் காணார்
நன்றான மௌனமல்லோ ரிஷிகள் சித்தர்
நாலுதிக்குஞ் சொருபமல்லோ ஞானி யானார்
நன்றான மௌனத்தைக் கண்டார் முன்னே
நலமாகக் கூப்பிடுதல் கண்டி லாரே. 90

பல நாழிகை மவுனத்தில் இருந்தால் இருவினைகளும் நாசமாகும். மவுனத்தை நினைத்தாலே முக்தியாம். நல்லோர்களே நினைப்பர். மற்றவர் காணமாட்டார். ரிஷிகள் சித்தர் ஆனது மவுனத்தாலேயாம். நான்கு திசையிலும் தம்

சொரூபம் ஞானத்தால் காண்பர். மவுனத்தைக் கண்டவர் அதனை விட வேறு மார்க்கம் காணார்.

கண்டிலார் மோனத்தி லனேக சித்தி
காணுமப்பா சொல்லுகிறேன் நன்றாய்க் கேளே
அண்டிலார் மந்திரங்கள் செபிக்கும் போது
அப்பனே மௌனமென்றே தீட்சை கேளு;
ஒண்டியாய் வாய்மூடிப் பேச்சு மற்றே
ஒருசேரச் சமைத்துண்ணு ஒருபோ தப்பா
விண்டிலா தெந்நேரஞ் செபித்தா யானால்
விளங்கியதோ ரேழுலட்ச மந்த்ரஞ் சித்தே. 91

மோனத்தில் அநேக சித்தியே காணுவர். மந்திரம் செபிக்கும் போதும் மவுனமே தீட்சையாகும். வாய் மூடிப் பேச்சில்லாது இடைவிடாது ஜபம் செய்தால் ஏழு இலட்சம் மந்திரம் சித்திக்கும்.

விளக்கம்: மந்திர உச்சாடனத்தில் மவுனமே சிறப்பு என்க.

சித்தாகுஞ் சித்தியுமா மெட்டெட் டாகுந்
திறமாக நின்றவர்க்கு மந்த்ரஞ் சித்தி
சத்தாகும் வேதமந் திரத்தைப் பாவி
சலசலெனப் பசிச்சே விப்பார் கோடி
கத்தாதும் நாய்போல கத்தி யென்ன
காசுக்கு மாகாது சித்தி யில்லை
முத்தான மௌனம்விட்டால் மனம்பா ழாச்சு
மோசமிந்த வேதமெல்லாம் பொய்யென் பாரே. 92

அட்டமாசித்தியும் கிடைக்கும். திறமாய் நின்றால் மந்திரமும் சித்தியாகும் என்றும் உள்ளதாகிய வேத மந்திரத்தையே செபிக்க வேண்டும். அதை விட்டுச் சலசல என உச்சாடனம் செய்வார் பலர். நாய்போல் கத்தினால் மந்திர சித்தி ஒரு காசுக்கும் பயனாகாது. மவுனத்தை விட்டு

விட்டால் மனம் பாழாகும். வேதத்தைப் பலரும் மோசம் என்பர்.

பொய்யென்றே யெண்ணியெண்ணி யுலகங் கெட்டுப்
போச்சதனா லேயுகத்தின் பேத மாச்சு;
கையென்று யோகத்தில் மௌன முட்டக்
கடுஞ்சித்தி யறிவுமட்டுங் கலந்து நாக்கு
சையென்ற நிர்த்தமப்பா ஆறிற் காணுஞ்
சாதகமாய் மேல்மூலந் தாண்டிக் காணும்
மெய்யென்று பிடித்தக்கா லவனே யோகி
விரைந்திதனை யறியாட்டால் விருதா மாடே. 93

எல்லாம் பொய் என்று எண்ணி உலகில் பலர் கெட்டார். யுகத்தில் இதனால் பல பேதங்கள் உண்டாயின. மௌனத்தை முடுகச் செய்து அறிவோடு தாக்குக. ஆறு ஆதாரத்திலும் இந்த அசைவுகள் காணும். மேல் மூலம் தாண்டியும் அசைவு காணும் (மேல் மூலம் - உச்சந் தலை) இதை மெய்யாக எண்ணுபவனே யோகியாவான். இதை விரைந்து அறியாதவன் பயனற்ற மாடே ஆவான்.

விருதன்றோ வுலகத்தில் ஆசா னென்று
வேடமிட்டு வேடமிஞ்சி மோடி யேற்றி
விருதன்றோ பணம்பறித்துப் பிழைப்பார் ஐயோ
வேதாந்த மொன்றுமில்லை சாங்க மென்பார்
விருதன்றோ கெடுத்துவிட்டா ருலகத் தோரை
வேடமென்று மயக்காலே மயங்கிப் போனார்
விருதன்றோ சீடருடைப் பாவ மெல்லாம்
விளையாட்டுப் போல்வாங்கி விழுந்திட் டாரே. 94

பல வீணர் உலகில் தாமே குரு என்று வேடம் போட்டு, மோடி செய்து, பணம் பறித்துப் பிழைப்பார். வேதாந்தம் (யோகம்) ஏதுமில்லை. சாங்கியமே யோகம் என்பார். வீணாக இப்படிப் பேசி உலகைக் கெடுத்து

விட்டார். வேடத்தால் பிறரை மயக்கிவிட்டார். பிறர் பாவத்தையும் இவரே வாங்கிக் கொண்டு விட்டார்.

விழுந்திட்டா ரென்றறிந்து கொங்கண ரேநீர்
வெகுபிள்ளை பெற்றீர்முந் நூறு பிள்ளை
நழுந்திட்ட பிள்ளையுண்டோ திறந்தா னுண்டோ
நலமாக வுமைப்போலா னாரு முண்டோ
அழுந்திட்ட சமாதியுண்டோ தியான முண்டோ
ஆகாத பிள்ளையுண்டோ சொல்லுஞ் சொல்லும்
கொழுந்திட்ட தேவரீர் கருணை யாலே
கொஞ்சமறப் பிள்ளையிலே கூடி லேனே. 95

பிறர் இப்படி விழுந்தனர் என அறிந்து கொங்கணர் பலரைத் தம் சீடராக்கினார். அதனால் உம்மைப் போன்றோர் யாருமில்லை. உம்மைப் போல் ஈடுபட்டுச் சமாதி தியானம் பழகியோர் உண்டோ? உம் சீடரில் வீணானவரும் இல்லை. உம் கருணை கொண்டிட நானும் உம் சீடராக வில்லை என்பதே எனது வருத்தம்.

கூடாத நல்லபுத்தி சித்தர் வென்றார்
கொள்கியே வரங்கள்பூ மியிலே தட்டி
நீடாகத் தெண்டனிட்டே அழைத்துக் கொண்டு
நிமிடத்திற் குகையினுள்ளே நேர்ந்து போனார்
ஆடானா லதுமாட்டு வன்றே சித்தர்
ஆனந்த போகமுண்ட ஆண்மை யாண்மை
ஓடானா லோட்டுநிர்க் குணத்தின் வீதி
ஒருமனமாய் நின்றுபுத்தி யுரைப்புத் தானே. 96

நல்ல அறிவுடைய சித்தர்கள் வென்றனர்; பூமியில் பல வரம் பெற்றனர்; நீண்ட வணக்கம் செய்து குகையில் போய் யோகம் செய்தனர். ஆடானது மாடு ஆகாதது போல இயல்புகள் சித்தர் பலருக்குள்ளும் வேறு வேறாகும். ஒரே மனமாய் நின்று அறிவைச் செயல் படுத்துவர் சித்தர்.

தானென்ற கொங்கணர்போல் பிள்ளை பெற்றால்
தங்குமடா குட்டென்கை லாய மூர்த்தி
வானென்ற சுந்தரா னந்தன் விந்து
வரவற்ற பூரணமே தாப மென்னக்
கானென்ற வெளிகடக்க அறிவோம் நாங்கள்
கரையற்ற போகத்தைப் பானஞ் செய்வோம்
கோனென்ற கைலாய பூரணமே தேவர்
கொள்கிறதோ ருற்பனமும் லயமும் சொல்லே. 97

கொங்கணர் போல் சீடர்களுக்கு உபதேசித்தால் கைலாய மூர்த்தியின் தொடர்பு பெருகும். வானில் உள்ள சுந்தர ஆனந்தனின் விந்து வாராமலே பூரணத்தின் மேல் தாபம் உண்டாகும். வெளியைக் கடந்து செல்லும் யோக முயற்சியும் அறிவோம். அளவற்ற இன்பத்தை அடைவோம். கைலாய பூரணமே தேவர் பலரும் ஐக்கியம் காண்பதாம்.

சொல்லுகிறேன் கேளுங்கள் மக்காள் நீங்கள்
சுகமாக வாரிதியில் மேக நீர்போல்
அல்லுகிற துவலையைப்போற் பிறப்புண் டாச்சே
அதுவோங்கும் விவரமென்ன சொல்வீ ரையா.
பல்லுகிற சந்திரனாம் நீரை வாங்கு
பாங்கான ரவியங்கே நன்றாய்ப் பாரு
சொல்லுகிற கெர்ப்பத்தில் விந்து வுன்னிச்
சிந்தூளி பரஞ்சத்தாற் சின்ன மாச்சே. 98

"சீடர்களே! கேளுங்கள். உடலில் வாழும் மழைத் துளி போல் பிறப்பு உண்டாகும்" என்றார் குரு. சீடர்கள் அதன் விவரம் கூறுமாறு கேட்க, "சூரிய சந்திரர்களே கடல் நீரை வாங்குவோர் ஆவர். (உடலிலும் இந்த இரு நாடிகளே பிறப்பை நீக்கும்) உடலில் பரத்தின் பதிவு உண்டாவதால் குழந்தை உண்டாகிறது" என்று கூறினார் குரு.

ஆச்சப்பா சனனமிந்தப் படியே யாகில்
அடங்கிறதக் கனியும்ரவி மதியுங் கூடி
வாச்சப்பா சந்திரனிற் கலந்து போனால்
மாளுகிற விதமிதுதான் குளிர்ந்து போகும்
நீச்சப்பா சின்னமொடு பாணம் ரண்டும்
நேராக மனோன்மணியைத் தொட்டு மீறாம்
ஓச்சப்பா லக்கமில்லை யெழுவகைத் தோற்றம்
உத்தமனே நாலுவகை யோனி காணே. 99

இப்படியே பிறவி உண்டாகும். சந்திர நாடியில் சூரிய சந்திர நாடிகள் கூடிக் கலந்தால் இறப்பு உண்டாகும். மனோன்மணி வரை இந்த நாடிகள் இரண்டும் போவதாக எண்ணி மீட்க வேண்டும். மனோன்மணி உச்சித்தலைக்கு மேல் 18 விரல் உயரத்தில் உள்ளது. இதனால் எழுவகைப் பிறப்பும் அறியலாம். நான்குவகை யோனிகளில் முழுதும் காணலாம்.

(எழுவகைப் பிறப்புகள் - தேவர், மனிதர், விலங்கு, பறப்பன, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம். நான்கு வகை யோனிகள் - முட்டையில் பிறப்பன, கருப் பையில் பிறப்பன, வேரில் கிழங்கில் பிறப்பன, வியர்வையில் பிறப்பன.)

காணிந்தப் படியெல்லாங் கண்டு கொண்டு
கலங்காம லிருக்காமல் யுகமே கோடி
வானிந்த காயமட்டே சால மெல்லாம்
மனந்தாண்டி அறிவில்வந்த தெல்லாம் போச்சே
ஆனிந்தப் படிநீங்கள் சமாதி கொண்டே
அரைவிட்டால் குளிகையிட் டோடிப் பாரு
தோணிந்தப் படிசொன்னேன் முன்னைத் தூக்குச்
சுழற்காற்றுத் துரும்பதுபோல் மவுன மாமே. 100

பிரபஞ்சம் முழுதும் மனத்தால் கலந்து அது கலையாமல் கோடியுகம் இருக்கலாம். இந்த உடம்பின் அளவே

எல்லாச் சாலமும் உண்டு. மனத்தின் அறிவைத் தாண்டினால் உடல் உணர்வு முழுதும் போகும். இப்படி நீங்கள் சமாதி கண்டு, குளிகை கொண்டு மவுனம் கொண்டு காற்றில் துரும்பு போல் எங்கும் கலக்கலாம்.

மௌனமென்றீ ரெனையாண்ட தட்சிணா மூர்த்தி
மலர்பணிந்தே ஞானமது நூறுஞ் சொன்னேன்
மௌனமென்ற நாதாக்கள் பதத்தைப் போற்றி
வகையோடே நிகண்டாக வாதஞ் சொன்னேன்
மௌனமென்றீர் ஞானம்பொய் யென்று சொல்லி
வாகான செயமண்டி போட்டே நூற்றில்
மௌனமென்ற சமரசத்தான் மக்காள் மக்காள்
வாகான ஞானமுறை முற்றுங் காணே. 101

என்னை அருளால் ஆட்கொண்ட தட்சிணாமூர்த்தியே! மவுனத்தால் தான் என்னை நீர் ஆட்கொண்டீர். உம் பாதத்தில் மலர்தூவியே நூறு பாடல்களில் ஞானம் சொன்னேன். பிற குருவினர்களின் பாதங்கள் போற்றி, பெரிய வாதங்கள் சொன்னேன். ஞானத்தையும் பொய் எனும்படி மவுனத்தை உயர்த்திக் கூறினீர். மவுனமே ஞானம் முழுதும் கூறியதெனச் சீடர்களே அறிவீர்களாக.

கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 26. கொங்கணச் சித்தர்

கேரள நாட்டின் கொங்கண தேசத்தில் பிறந்தவர். ஆதலால் கொங்கணர் எனப் பெற்றார். சித்திரை மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவர்.

போகரின் சீடர்களில் ஒருவர். திருமூலரைக் கண்டு சித்தியடைந்தவர். இவர் திருமூலர் போலவே கூடு விட்டுக் கூடு பாயும் சித்தி பெற்றதாகக் கருவூரார் கூறுகிறார்.

மகாபாரதத்தில் உள்ள கதையை இவர் மீது ஏற்றிக் கூறி, கொக்கைப் பார்வையால் எரித்ததாகக் கூறுவர். இவர் திருப்பதியில் சித்தியடைந்தவர்.

## கொங்கணச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும்

### வாலைக்கும்மி

கல்விநிறை வாலைப்பெண் காதலியென் றோதுகின்ற
செல்வியின்மேற் கும்மிதனைச் செப்புதற்கே - நல்விசய
நாதனின்சொல் வேதனஞ்சு போதன்மிஞ்சி மானகஞ்ச
பாதம்வஞ்ச நெஞ்சினில்வைப் போம். 1

கல்வி நிறைந்த வாலைப் பெண்ணாகிய யோகியர் தம் காதலி எனப்படும் குமரியின் மேல் கும்மிப் பாட்டைச் சொல்வதற்கே, நல்விசயநாதன் எனப்படும் பிரம்மாவும் அஞ்சும் அறிவுடையவனின் புகழ் மிக்க மதிப்பிற்குரிய பொன்னார் திருவடிகளை வஞ்சமான நெஞ்சில் வைப்போம்.

விளக்கம்: வாக்குத் தானத்தில் இருப்பதால் கல்வி நிறைந்தவள் என்றார். பாலா என்பவளே வாலை எனப்படுவாள் - நல் விசயநாதன் என்பவர் இவரின் முதல்

குருவாக இருக்கலாம். வேதன் - பிரம்மன், போதன் - அறிவுடையவன், மிஞ்சி - புகழ் பெற்ற, மான - மதிப்பிற் குரிய, கஞ்சம் - பொன் மற்றும் தாமரை.

## விநாயகர் துதி

சத்தி சடாதரி வாலைப்பெண் ணாமந்த
உத்தமிமேற் கும்மிப் பாட்டுரைக்க
வித்தைக் குதவிய வொற்றைக்கொம் பாம்வாலை
சித்தி விநாயகன் காப்பாமே. 2

பராசத்தியாகிய சடையை உடைய வாலைப் பெண்ணாம் அந்த உத்தமி மேல் கும்மிப்பாட்டைச் சொல்ல, கல்விக்கு உதவிய ஒற்றைக் கொம்பனாகிய வாலை சித்தி விநாயகன் காப்பாம்.

விளக்கம்: பராசத்தியின் பிள்ளைப் பருவம் ஆகை யால் சத்தி சடாதரி என்றார். மகாபாரதத்தை மலை மேல் எழுதத் தம்முடைய தந்தத்தை உடைத்ததால் வித்தைக்கு உதவிய ஒற்றைக் கொம்பாம் என்றார். வாலை அருளைச் சித்தி பெற வைக்கும் விநாயகன் என்க.

## சரஸ்வதி துதி

சித்தர்கள் போற்றிய வாலைப்பெண் ணாமந்த
சக்தியின் மேற்கும்மிப் பாட்டு ரைக்கத்
தத்தமி தோமென ஆடும் சரஸ்வதி
பத்தினி பொற்பதங் காப் பாமே. 3

சித்தர்கள் போற்றிய வாலைப் பெண் மேல் கும்மிப் பாட்டைச் சொல்ல, சரஸ்வதியாகிய பத்தினியின் பொற் பாதம் காப்பாம்.

(தத்தமிதோம் - சந்தமான தாளக் குறிப்பு. மகிழ்ச்சியின் வெளிப்பாடு - கல்வியாளரை என்றும் பிரியாததால் பத்தினி என்றார்)

## சிவபெருமான் துதி

எங்கும் நிறைந்தவள் வாலைப்பெண் ணாம்மாலின்
தங்கையின் மேற்கும்மி பாடுதற்குக்
கங்கை யணிசிவ சம்புவாம் சற்குரு
பங்கயப் பொற்பதம் காப்பாமே. 4

எங்கும் நிறைந்தவளாம் வாலைப் பெண், திருமாலின் தங்கையும் ஆகியவள் மேல் கும்மி பாடுவதற்குக் கங்கையைத் தலையிலணிந்த சிவசம்புவாம் சற்குருவின் தாமரைப் பொற்பாதம் காப்பாகும்.

## முருகன் துதி

ஞானப்பெண் ணாமருள் சோதிப்பெண் ணாமாதி
வாலைப்பெண் மேற்கும்மி பாடுதற்கு
மானைப் பெண்ணாக்கிய வள்ளிக் கிசைந்திடும்
மால்முரு கேசனுங் காப்பாமே. 5

ஞானப் பெண்ணாகவும், அருள் சோதிப் பெண்ணாகவும், வாலைப் பெண்ணாகவும் உள்ளவள் மேல் கும்மி பாடுவதற்கு மானாகத் தோன்றிய வள்ளிக்கு இசைந்திடும் முருகேசன் காப்பாம்.

## திருமால் துதி

ஆண்டிப்பெண் ணாம்ராச பாண்டிப்பெண் ணாம்வாலை
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குக்
காண்டீபனாம் பணிபூண்டவன் வைகுந்தம்
ஆண்டவன் பொற்பதங் காப்பாமே. 6

ஆண்டிகள் கும்பிடும் தெய்வமாகவும், அரசர்கள் கும்பிடும் தெய்வமாகவும் விளங்கும் வாலை அம்பிகை மேல் கும்மி பாடுவதற்குக் காண்டீபனின் பணியை ஏற்ற வைகுந்தம் ஆள்பவன் பொற்பாதம் காப்பு.

## நந்தீசர் துதி

அந்தரி சுந்தரி வாலைப்பெண் ணாமந்த
அம்பிகை மேற்கும்மி பாடுதற்குச்
சிந்தையில் முந்திநல் விந்தையாய் வந்திடும்
நந்தீசர் பொற்பதங் காப்பாமே. 7

அந்தரத்துள்ளவளும், சுந்தரியானவளும், வாலைப் பெண்ணும் அம்பிகை மேல் கும்மி பாடுவதற்குச் சிந்தையில் முந்தி நல்ல புதுமையாய் வந்திடும் நந்தீசர் பொற் பாதம் காப்பு. (நந்தீசர் இவர் குருவின் குருவாம்).

விளக்கம்: நந்தீசர் இவர் குருவின் குருவாம்.

## நூல்

தில்லையில் முல்லையி லெல்லையு ளாடிய
வல்லவள் வாலைப்பெண் மீதினிலே
சல்லாபக் கும்மித் தமிழ்பா டவரும்
தொல்லை வினைபோக்கும் வாலைப்பெண்ணே! 8

வாலைப் பெண்ணே! தில்லையில், காட்டில், பிரபஞ்சத்தின் எல்லையில் ஆடிய வல்லவளாம் வாலைப் பெண் மீதில், இன்பமான கும்மித் தமிழ்ப் பாட வரும் என் பழைய வினையை நீக்குக.

விளக்கம்: முல்லை - காடு என்பதாம். சல்லாபம் - இன்பம். காளியும் சிவனுடன் நடனம் ஆடியது அறிக.

மாதா பிதாகூட இல்லாம லேவெளி
மண்ணும் விண்ணுமுண்டு பண்ணவென்று
பேதைப்பெண் ணாமுதல் வாலைப்பெண் ணாளென்று
புகுந்தா ளிந்தப் புவியடக்கம். 9

வாலைப் பெண்ணே! இறைவன் போல் இவளுக்கும் தாய், தந்தை இல்லை. மண் முதல் விண் வரையான பஞ்ச

பூதங்களையும் செய்ய வேண்டுமெனச் சிறு பெண்ணான இவளே முதலில் எல்லாம் செய்ய வந்தாள். அதனால் எல்லா உலகும் இவள் கையில் அடங்கின.

வேதமும் பூதமுண் டானது வும்வெளி
விஞ்ஞானசாத்திர மானதுவும்
நாதமுங் கீதமுண் டானதுவும் வழி
நான்சொல்லக் கேளடி வாலைப்பெண்ணே! 10

வாலைப் பெண்ணே! வேதம், ஐந்து பூதங்கள், வெளியில் விஞ்ஞானம், சாத்திரம், நாதம், கீதம் எல்லாம் வாலையால் வந்தது என்று நான் சொல்லக் கேள்.

விளக்கம்: வெறும் வெளியில் யோக சித்தி விளைவதால் விஞ்ஞானம் என்றார். ஆத்மா பரவலை விஞ்ஞான மயம் என்பர். நாதம் - இது ஒளிக்கு ஈடானது இதுவே தாளக் கட்டில் கீதமானது.

முந்தச் செகங்களுண் டானது வும்முதல்
தெய்வமுந் தேவருண் டானதுவும்
விந்தையாய் வாலையுண் டானதுவும் ஞான
விளக்கம் பாரடி வாலைப்பெண்ணே! 11

வாலைப் பெண்ணே! முன்பு ஜெகங்கள் (உலகுகள்) உண்டானதும், முதல் தெய்வமானதும், தேவர்கள் வந்ததும், அதிசயமாய் வாலையாக இவள் வெளிப்பட்டதுவும் ஞான விளக்கம் என அறிக.

அரிக்கு முந்தின தவ்வெழுத்தாம் பின்னும்
அரிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்
தரிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி
பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம். 12

திருமாலுக்கும் முந்தியது இவள் எழுத்தாம். பிறகு அவருக்குள் நின்றதும் ஐந்தெழுத்தாம். எல்லாம் தரிக்க

(உண்டாக) வந்ததும் ஐந்தெழுத்தாம். வாசியாகிய (பிராணா யாமம்) குதிரைக்குள் நின்றதும் ஐந்தெழுத்தாம் (மூச்சு குதிரை என்பது உருவகம்)

ஆதியி லைந்தெழுத் தாயினாள் வாலைப்பெண்
ஐந்தெழுத்தாமென்று பேரானாள்;
நாதியி னூமை யெழுத்திவள் தானல்ல
ஞான வகையிவள் தானானாள். 13

ஆதியில் இவளே ஐந்தெழுத்தாய் இருந்தாள். வாலைப் பெண் என்பதே ஐந்தெழுத்தாகும். ஊமை எழுத்தாக இவள் இல்லை. (ஊமை - ஒலிக்காதது) இவள் ஞான வகையாளும் ஆவாள்.

ஊமை யெழுத்தே யுடலாச்சு மற்றும்
ஓமென் றெழுத்தே யுயிராச்சு
ஆமிந் தெழுத்தை யறிந்துகொண்டு விளை
யாடிக் கும்மி யடியுங்கடி. 14

ஊமை எழுத்தே உடலாயிற்று. ஓம் எனும் எழுத்தே உயிராயிற்று. இப்படியாகும் இந்த எழுத்துக்களை அறிந்து கொண்டு விளையாடிக் கும்மி அடியுங்கள்.

செகம்ப டைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சீவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்
உகமு டிந்தது மஞ்செழுத்தாம் பின்னும்
உற்பன மானது மஞ்செழுத்தாம். 15

செகத்தைப் படைத்ததும், சீவனைப் படைத்ததும், யுகம் முடிந்ததும், மறுபடி எல்லாம் உண்டானதும் ஐந்து எழுத்துக்களாலேயாம்.

விளக்கம்: ஐந்து எழுத்தும் ஐந்து நிற ஒளிகளாம். இவையே எல்லாம் செய்கின்றனவாம்.

சாத்திரம் பார்த்தாலுந் தானுமென்ன? வேதம்
தானுமே பார்த்திருந் தாலுமென்ன?
சூத்திரம் பார்த்தல்லோ ஆளவேணும் அஞ்சு
சொல்லை யறிந்தல்லோ காண வேணும்? 16

சாத்திரம் பார்த்தாலும், வேத விதிப்படி பார்த்தாலும், எல்லாவற்றுக்கும் ஆதாரம் (சூத்திரம்) பார்த்துத்தான் எதையும் செய்ய வேண்டும். அதன்படி ஐந்து எழுத்தை யறிந்தே எல்லாம் காண வேண்டும்.

காணாது கிட்டாதே எட்டாதே அஞ்சில்
காரிய மில்லையென் றேநினைத்தால்
காணாதுங் காணலா மஞ்செழுத் தாலதில்
காரியமுண்டு தியானஞ் செய்தால். 17

அஞ்செழுத்தால் எதுவும் இயலாது என்று நினைத்தால் எதுவும் காணாது கிட்டாது எட்டாதுதான். ஆனால் அஞ்சு எழுத்தைத் தியானம் செய்தால் எல்லாச் செயலும் உண்டு. காணாத ஒன்றையும் காண முடியும்.

ஆயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயறி
வாயனு மைந்தா மெழுத்துக்குள்ளே
வாயனு மைந்தா மெழுத்துக்குள் ளேயிந்த
வாலையு மைந்தா மெழுத்துக்குள்ளே. 18

ஆயனாகிய திருமாலும், அயனாகிய பிரம்மாவும், தலைவனாகிய சிவனும் வாலைப் பெண்ணும் அஞ்சு எழுத்தில் நின்றே அருள் புரிவர் என அறிக.

விளக்கம்: அயன் என்பது ஆயன் என நீண்டது. ஆயன் என்பது கண்ணன் வளர்ப்புக் குலத்தால் திருமாலைக் குறித்தது. ஆயன் என்பது தலைவன் என்பதால் சிவனைக் குறித்தது.

அஞ்செழுத் தானதும் எட்டெழுத் தாம்பின்னும்
ஐம்பத்தோர் அட்சரந் தானாச்சு
நெஞ்செழுத் தாலே நினையா மலந்த
நிசந்தெ ரியுமோ வாலைப்பெண்ணே! 19

வாலைப் பெண்ணே! சிவாயநம எனும் ஐந்தெழுத்தும், ஓம் நமோ நாராயணாய எனும் எட்டெழுத்தும், வடமொழி எழுத்துக்கள் ஐம்பத்தொன்றும் தமக்குள் சக்தி பெற்றுப் படிப்படியாக வளர்ந்தனவாம். நெஞ்சத்தில் எழுதி இவற்றைச் (மவுனமாக) சொல்வதால்தான் இந்தச் சக்தி எனவும் அறிக.

ஏய்க்கு தேய்க்கு தஞ்செழுத் துவகை
எட்டிப் பிடித்துக் கொளிரண் டெழுத்தை
நோக்கிக்கொள் வாசியை மேலாக வாசி
நிலையைப் பாரடி வாலைப்பெண்ணே! 20

வாலைப் பெண்ணே! ஐந்தெழுத்து என ஏய்க்கின்றன நம்மை. இவை யாவும் இரண்டெழுத்தில் அடக்கம். அதுவே ஓம் என்பதாம். இதைச் சொல்லும்போது பிராணா யாமத்தையும் கூடவே நடத்த வேண்டும். அதிக நேரம் வாசியையே கவனமாகக் கொள்ள வேண்டும்.

சிதம்பர சக்கரந் தானறி வாரிந்தச்
சீமையி லுள்ள பெரியோர்கள்
சிதம்பர சக்கர மென்றால் அதற்குள்ளே
தெய்வத்தை யல்லோ அறியவேணும்! 21

திருவம்பலச் சக்கரம் எனப்படும் சிதம்பர சக்கரத்தையே இந்த நாட்டுப் பெரியோர் அறிவர். அது வெறும் சக்கரம் அலல. அதற்குள் தெய்வத்தை அறிய வேண்டும்.

மனமு மதியு மில்லாவி டில்வழி
மாறுதல் சொல்லியே யென்னசெய்வாள்?
மனமு முறுதியும் வைக்கவே ணும்பின்னும்
வாலைக் கிருபையுண் டாகவேணும். 22

மனமும் அறிவும் (விருப்பம் + அறிவு) ஆகிய இரண்டும் இருந்தால்தான் எதையும் மேற்கொள்ள முடியும். மனமும் உறுதியும் வைத்து வாலையின் அருளும் கிடைத்தால் எலலாம் சித்தியாகும்.

இனிவெ ளியினிற் சொல்லா தேயெழில்
தீமாட்டு திந்த வரிவிழிக்கே
கனிமொ ழிச்சியீர் வாருங்கடி கொஞ்சங்
கருவைச் சொல்லுவேன் கேளுங்கடி. 23

இந்த வரி படர்ந்த விழியில் தீ (ஒளி) பளிச்சிடும். கனி போலும் மொழியுடைய பெண்களே! இதன் உள்விவரம் சொல்கிறேன். வெளியே சொல்லாதீர்கள்.

ஊத்தைச் சடலமென் றெண்ணா தேயிதை
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே
பார்த்த பேருக்கே ஊத்தையில் லையிதைப்
பார்த்துக்கொள் உன்றன் உடலுக்குள்ளே. 24

இது அசுத்தமான உடலென்று எண்ணாதே. உப்புக் களால் ஆன உடலாகவும் எண்ணாதே. இவ்வுடலில் உணர்வை (கடவுளை; ஒளியை)ப் பார்த்தவர்களுக்கு இதில் அசுத்தம் இல்லை. எனவே இதை முயன்று பார்.

உச்சிக்கு நேராயுண் ணாவுக்கு மேல்நிதம்
வைத்த விளக்கும் எரியுதடி
அச்சுள்ள விளக்கு வாலைய டிஅவி
யாம லெரியுது வாலைப்பெண்ணே! 25

வாலைப் பெண்ணே! தலை உச்சியின் நடுவே நுழைந்து உண்ணாக்கு இருப்பதற்கு மேல் என்றும் அணையாமல் ஓர் ஒளி (விளக்கு) எரிந்தபடி உள்ளது. இதுவே வாலை என்னும் கடவுள் உருவமாகும் (அச்சு). அதைக் கண்டு கொள்.

(வாலை - பாலா எனும் தேவி, வாலைப் பெண் - குமரிப் பெண்)

எரியு தேஅறு வீட்டினி லேயதில்
எண்ணெயில் லையமிழ் தண்ணீரில்லை
தெரியுது போக வழியுமில்லை பாதை
சிக்குது சிக்குது வாலைப்பெண்ணே! 26

வாலைப் பெண்ணே! ஆறு யோக ஆதாரங்களாகிய வீடுகளிலும் ஒளி உள்ளது. இது சுழுமுனை நாடியால் மூலாதாரத்தில் இருந்து வந்து எரியும். ஒளி என்பது பலருக்கும் தெரியாது. எண்ணெயில்லாதும் தண்ணீர் கூட இல்லை. இதைப் பிறர் அடைவதும் சிக்கலே ஆகும்.

சிலம்பொ லியென்னக் கேட்குமடி மொத்த
சிக்குள்ள பாதை துடுக்கமடி
வலம்புரி யச்சங்கமூது மடிமேலே
வாசியைப் பாரடி வாலைப்பெண்ணே! 27

வாலைப் பெண்ணே! சிலம்பொலி, வலம்புரிச் சங்கு ஒலி ஆகிய இவை உடலுக்குள் கேட்கும். வாசியாகிய பிராணாயாமத்தில் ஒன்றினால் இது விளங்கும். இல்லா விடில் சிக்கலே ஆகும்.

வாசிப் பழக்க மறியவே ணுமற்றும்
மண்டல வீடுகள் கட்டவேணும்
நாசி வழிக்கொண்டு யோகமும் வாசியும்
நாட்டத்தைப் பாரடி வாலைப்பெண்ணே! 28

வாலைப் பெண்ணே! பிராணாயாமத்தை நன்கு பழகிக் கொள்ள வேண்டும். மூன்று மண்டலங்களையும் உடம்பில் பிரித்துணர வேண்டும். நாசி வழியாக இழுத்து அந்த நாசி (மூக்கு) கண்ணில் படாதுள்ள கேசரி யோகம் பயில வேண்டும். இதனால் தண்டுவடம் நேராகும்.

முச்சுடரான விளக்கினுள் ளேமூல
மண்டல வாசி வழக்கத்திலே
எச்சுட்ராகி யந்தச் சுடர்வாலை
இவள்விடவேறில்லை வாலைப்பெண்ணே! 29

மூன்று சுடரான விளக்கில் (சூரிய சந்திர நட்சத்திர) இது எதைச் சேர்ந்த ஒளி என்பதை மூலாதாரத்தில் வாசிப் பழக்கத்தால் அறியலாம். இதுவே வாலையாகும். (வாலை என்ற தெய்வம் பற்றி ஒரு குமரியிடம் கூறுவதாக நினைக)

சூடாமல் வாலை யிருக்கிற தும்பரி
சித்த சிவனுக்குள் ளானதனால்
வீடாமல் வாசிப் பழக்கத்தைப் பாருநாம்
மேல்வீடு காணலாம் வாலைப்பெண்ணே! 30

வாலைப் பெண்ணே! (சுடாமல் என்பது சூடாமல் என உள்ளது) குண்டலினி நெருப்பு நாடிக்குள் இருந்தாலும் சுடுவதில்லை. சித்தமாகிய சிவத்துக்குள் உள்ளது. ஆகவே வாசிப் பழக்கத்தால் தலை உள்ளே அதைக் கொண்டு செல்வோம். (மேல் வீடு - தலை உட்பகுதி)

மேல்வீடு கண்டவன் பாணியடி விண்ணில்
விளக்கில் நின்றவன் வாணியடி
தாய்வீடு கண்டவன் ஞானிய டிபரி
தாண்டிக் கொண்டான்பட் டாணியடி. 31

(பாணி - கை, தாய்வீடு - மூலாதாரம், பரி - குதிரை (வாசி), பட்டாணி - குதிரைச் சேவகன்) மேல் வீடு

கண்டவன் கைத்திறம் கொண்டவன். தலைக்குள் விளக்கு சத்தியேயாம். மூலாதாரத்தை உணர்ந்தவன் ஞானி. பிராணா யாமத்தை வசப்படுத்துபவனே நல்ல யோகி. (வாசி - குதிரை எனப்படும்)

அத்தியி லேகரம் பத்தியி லேமனம்
புத்தியி லேநடு மத்தியிலே
நெற்றி சதாசிவ மென்றுசொன் னேனுன்றன்
நிலைமையைப் பாரடி வாலைப்பெண்ணே! 32

வாலைப் பெண்ணே! அத்தி (அடியில் உள்ள) எனப் படும் மூலாதாரத்தில் (கரம் - பயிற்சி) மூச்சுப் பயிற்சியும், மனத்தில் பக்தியும், புத்தியினால் நடு நாடி தேடி புருவ மத்தி வரை சென்றால் சதாசிவத்தைக் காணலாம். அதைச் செய்து பார்.

அழுத்தி லேசொல்லஞ் செழுத்தி லேநானும்
வழுத்தி னேன்ஞானப் பழத்திலே
கழுத்தி லேமயேச் வரனு முண்டுகண்
கண்டு பாரடி வாலைப்பெண்ணே! 33

வாலைப் பெண்ணே! அழுத்தமாக ஐந்தெழுத்தை இடம் அறிந்து நானும் ஓதினேன். ஞானம் பழுத்தது - கழுத்தில் (விசுத்தி) மகேஸ்வரன் உண்டு. இவற்றைக் கருதிப் பார்.

அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சிய ரேநிதம்
கொஞ்சி விளையாடும் வஞ்சியரே
நெஞ்சிலே ருத்திரன் சூழிருப் பானவன்
நேருட னாமடி வாலைப்பெண்ணே! 34

வஞ்சியரோ! ஐந்தெழுத்திலும் பிஞ்செழுத்தாகிய ஓங்காரத்திலும், தினமும் விரும்பி ஓதினால் நெஞ்சில் (அநாகதம்) ருத்திரன் வெளிப்படுவான். வாலைப் பெண்ணே! இதை நேர்ந்தறிக.

தொந்தியி லேநடுப் பந்தியி லேதிடச்
சிந்தையி லேமுந்தி யுன்றனுடன்
உந்தியில் விட்ணுவுந் தாமிருப் பாரிதை
உண்மையாய்ப் பாரடி வாலைப்பெண்ணே! 35

வாலைப் பெண்ணே! வயிற்றில் தொப்புள் நடுப் பகுதியில் திடமான சிந்தையில் முன்னதாக நினைவு கொண்டால், தொப்புளில் திருமால் (விஷ்ணு) இருப்பதை உண்மையாக அறியலாம்.

ஆலத்தி லேயிந்த ஞாலத்தி லேவருங்
காலத்தி லேயனு கூலத்திலே
மூலத்தி லேபிரமன் தானிருந் துவாசி
முடிக்கிறான் பிண்டம் பிடிக்கிறானே. 36

ஆலம் விதை போல் இருந்து, காலத்தில் உலகில் விரியும் குண்டலினி அனுகூலமாய் மூலாதாரத்தில்தான் உள்ளது. பிரமன் அங்கிருந்து வாசியை (மூச்சு) உருவாக்கி, இவ்வுடல் (பிண்டம்) முழுதும் அனுப்புகிறான்.

தேருமுண்டு ஐந்நூறும் ஆணியுண் டேஅதில்
தேவரு முண்டுசங் கீதமுண்டே
ஆருண்டு பாரடி வாலைத்தெய் வம்மதில்
அடக்கந் தானடி வாலைப்பெண்ணே! 37

வாலைப் பெண்ணே! தேர்கள் (நாடிகள்), ஐநூறு உண்டு, அவை பெயராமல் (ஆணி) உள்ளன - அவற்றில் தேவர்கள் சக்தி வடிவில் உள்ளனர். சங்கீதம் உடலில் கேட்கும் ஒலிகள் ஆகும். இவையெல்லாம் வாலை எனும் தெய்வத்தின் செயல். அவள் இவற்றில் அடங்கி உள்ளாள் என அறிக.

ஒன்பது வாயில்கொள் கோட்டையுண் டேஅதில்
உள்ளே நிலைக்கார ரஞ்சுபேராம்
அன்புட னேபரி காரர்க ளாறுபேர்
அடக்கந் தானடி வாலைப்பெண்ணே! 38

வாலைப் பெண்ணே! உடலில் ஒன்பது வாயில்கள் உண்டு. உடலே ஒரு கோட்டையாம். அதைச் செய்து காக்கும் நிலைக்காரர் ஐவர் (பஞ்சபூதம்) ஆவர். அதைச் சிறப்பிப்பது பக்தியுடன் பரிசிக்கப்படும் ஆறு ஆதாரங்களே யாம். இவற்றில் வாலையும் அடக்கமாம்.

இந்த விதத்திலே தேகத்திலே தெய்வம்
இருக்கையில் புத்திக்க றிக்கையினால்
சந்தோட வாலையைப் பாராமல் மனிதர்
சாகிற தேதடி வாலைப்பெண்ணே! 39

வாலைப் பெண்ணே! இவ்வாறு உடம்பிலேயே தெய்வம் இருக்கும் போது புத்தி மழுங்கி மகிழ்ச்சிக்குரிய வாலைத் தெய்வத்தைக் காணாமல், மனிதர்கள் வீணே சாவது ஏன்?

நகார திட்டிப்பே ஆனத னால்வீடு
வான வகார நயமாச்சு!
உகார முச்சி சிரசாச் சேஇதை
உற்றுப் பாரடி வாலைப்பெண்ணே! 40

வாலைப் பெண்ணே! 'ஓம் நமசிவாய' என்பது மூலாதாரம் முதல் புருவ மத்தி வரை ஒவ்வொன்றாய் நிற்கும். அடியிலிருந்து இதைத் திடம் செய்தால் வான மாகிய (விசுத்தியில்) வகார இடம் இனிதில் கிட்டும். ஓம் என்பதில் உள்ள உகாரம் சிரசு வரை இந்த யோகத்தால் பரிசமாகும்.

விளக்கம்: ஓம் - மூலம், ந- சுவாதிட்டானம், ம - மணிப்பூரகம், சி - அநாகதம், வ - விசுத்தி, ய - புருவமத்தி என வரிசை காண்க. உச்சியில் மூலாதார ஒளி செல்லும் என்பது இதன் கருத்து.

வகார மானதே ஓசையாச் சேஅந்த
மகார மானது கர்ப்பமாச்சே
சிகார மானது மாய்கையாச் சேஇதைத்
தெளிந்து பாரடி வாலைப்பெண்ணே! 41

வாலைப் பெண்ணே! வானத்துக்குரிய விசுத்தியால் (வகாரம்) ஓசைக்குரியதாம். 'ம' என்ற எழுத்துக்குரிய (உந்தி, தொப்புள்) மணிப்பூரகத்தில்தான் குண்டலினி சக்தி திரண்டு எழுவதைக் கர்ப்பம் என்றார். சிகாரம் அநாகதம் ஆகும். இதை உபாசிக்க மாய்வது போலும் சமாதி யோகம் உண்டாகும் என அறிக.

ஓமென்ற அட்சரந் தானுமுண் டதற்குள்
ஊமை யெழுத்து மிருக்குதடி;
நாமிந்தவெ ழுத்தை யறிந்துகொண் டோம்வினை
நாடிப் பாரடி வாலைப்பெண்ணே! 42

வாலைப் பெண்ணே! ஓம் என்பதில் 'ம்' என்பது முடித்து வைக்கும் எழுத்து. இது முழுமையும் உச்சரிக்கப் படாமையால் ஊமை எழுத்து எனப்படும். இதையறிந்து பயிற்சி தொடங்குக என்பதாம்.

கட்டாத காளையைக் கட்டவே ணுமாசை
வெட்டவேணும் வாசி யொட்டவேணும்
எட்டாத கொம்பை வளைக்கவே ணுங்காயம்
என்றைக் கிருக்குமோ வாலைப்பெண்ணே! 43

வாலைப் பெண்ணே! கட்டாமல் தறி கெட்டு ஓடும் காளை போல் உந்திக்கு மேல் ஒளி ஏறும். அதைக்

கைப்பற்றி ஏற்றுவது கட்டுவதாகும். ஆசைகள் இல்லாமல் மூச்சுப் பயிற்சியை நாடியில் ஒட்ட வேண்டும். ஒட்டாத கொம்பு ஆகிய உள்நாக்கை வளைத்து அதனுள் ஒளி காணுதல் வேண்டும். நாவினால் மடித்துத் தொட முயல்வது இது உள்நாக்கு வரை போவதாம்.

இருந்த மார்க்கமாய்த் தானிருந்து வாசி
ஏற்காம லேதான டக்கவேணும்
திரிந்தே ஓடிய லைந்துவெந் துதேகம்
இறந்து போச்சுதே வாலைப்பெண்ணே! 44

வாலைப் பெண்ணே! பிராணாயாமத்தை அமர்ந்த படியே மெல்ல அடக்கிச் செய்ய வேண்டும். இதனால் உடல் முழுதும் காற்று பரந்து இறுதியில் உடல் உணர்வு இறந்து போகும். (சமாதியாகும்)

பூத்த மலராலே பிஞ்சுமுண் டேஅதில்
பூவில்லாப் பிஞ்சும் அனேகமுண்டு
மூத்த மகனாலே வாழ்வுமுண் டுமற்ற
மூன்றுபே ராலே அழிவுமுண்டு! 45

மனத்தில் கூறுவது பூத்த மலர். பிஞ்சு என்பது ஓம் என்னும் ஒலி, பூவில்லாப் பிஞ்சு வாயால் கூறும் ஓம் ஒலி, மூத்த மகன் மவுன யோகம் மூன்று பேர் - மனம் மொழி மெய்யால் கூறுவது. இதில் மவுனமே சிறந்தது என்க. (பூத்த மலர் - மனத்தில் கூறுவது. பூவில்லாப் பிஞ்சு - வாயால் கூறும் 'ஓம்' என்னும் ஒலி. மூத்த மகன் - மவுன யோகம். மூன்று பேர் - மனம், மொழி, மெய் என்பன)

கற்புள்ள மாதர் குலம்வாழ்க நின்ற
கற்பை யளித்தவரே வாழ்க!
சிற்பர னைப்போற்றிக் கும்மிய டிகுரு
தற்பரனைப் போற்றிக் கும்மியடி. 46

மனத்தில் ஒருமித்த உணர்வு - கற்பு. அதைக் கொடுத்த கடவுள் வாழ்க. எனவே சித்தத்தில் உள்ள கடவுளை (சிற்பரன்)யும் குருவாகிய தற்பரனையும் போற்றிக் கும்மி யடிக்கவும்.

அஞ்சி னிலேரண் டழிந்ததில் லையஞ்
சாறிலே யுநாலொழிந்த தில்லை
பிஞ்சிலே பூவிலே துஞ்சுவ தாம்அது
பேணிப் போடலாம் வாலைப்பெண்ணே. 47

வாலைப் பெண்ணே! அஞ்சு எழுத்து, சி, வ என்பவை இறைவனையும், சக்தியையும் கூறுவதால் அவை அழியா - ஆறிலே நான்கு என்பது அநாகதம். இதுவும் அழியாது - பிஞ்சாகிய ஓம் எழுத்திலும், பூக்கள் ஆறிலும் (கமலம்) உணர்வு கொண்டு (துஞ்சுவது) சமாதி கொள்ளலாம். (கமலம் - யோக ஆதாரம்)

கையில்லாக் குட்டையன் கட்டிக்கிட் டானிரு
காலில்லா நெட்டையன் முட்டிக் கிட்டான்
ஈயில்லாத் தேனெடுத் துண்டுவிட்டானது
இனிக்கு தில்லையே வாலைப்பெண்ணே! 48

வாலைப் பெண்ணே! கை என்பது (இயமம் நியமம்) இல்லாதவர் குறைந்த பயனே பெறுவர். (கால் - காற்று) பிராணாயாமம் இல்லாது நெடிய செய்தாலும் முட்டுப்படும் (தடையாம்). எனவே இவை பெற்ற பிறகு (ஈயில்லாத் தேன்) யோகத்தால் அமுதம் சுரக்கும். அதையெடுத்து அனுப்புவதிலும் கடவுள் அருளாலேயே இயைபு வருமாம்.

மேலூரு கோட்டைக்கே ஆதரவாய் நன்றாய்
விளங்கு கன்னனூர்ப் பாதையிலே
காலூரு வம்பலம் விட்டத னாலது
கடு நடையடி வாலைப்பெண்ணே! 49

வாலைப் பெண்ணே! தலை உச்சி (மேலூர்) கோட்டைக்குச் செல்ல ஆதரவாகவும் நல்லதாகவும் உள்ளது. காது மத்தி வழி கண் மூக்கு நடுவே உள்ள நெருப்புக் காண்பதாம் (கன்னனூர்ப் பாதை). மூச்சுப் பயிற்சி மேற்கொள்ளாதவர்க்கு இது கடிதாய் நடப்பதாகும்.

தொண்டையுள் முக்கோணக் கோட்டையி லேயிதில்
தொத்திக் கொடிமரம் நாட்டையிலே
சண்டை செய்துவந்தே ஓடிப்போனாள் கோட்டை
வெந்து தணலாச்சு வாலைப்பெண்ணே! 50

வாலைப் பெண்ணே! தொண்டையுள் (விசுத்தி) ஒரு முக்கோணம் அடையாளமாக உள்ளது. அதை துளைத்துச் சுழுமுனை நாடி மேல் செல்வதே கொடி மரம் நாட்டுவதாம். அப்போது தடையாயிருந்த மாயை போரிட்டு மறைந்தாள். இதனால் அந்த ஆதாரம் (கோட்டை) கைவசம் ஆனது.

ஆசை வலைக்குள் அகப்பட்டதும் வீடு
அப்போதே வெந்தே அழிந்திட்டதும்
பாச வலைவந்து மூடியதும் வாலை
பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே! 51

வாலைப் பெண்ணே! ஆசை வலையில் அகப்பட்டால் உடல் முழுதும் யோக முயற்சியில் தோற்றுப் போகும் (வெந்து அழியும்). அதுபோல் பாச வலையும் வந்து மூடினால் வாலை எனும் சக்தியின் பாதத்தை வணங்குக.

அன்ன மிருக்குது மண்டபத்தில் விளை
யாடித்திரிந்தே ஆண்புலியும் அங்கே
இன்ன மிருக்குமே யஞ்சு கிளியவை
எட்டிப் பிடிக்குமே மூன்று கிளி 52

அன்னமிருக்கும் மண்டபம் பிரமன் இருக்கும் மூலாதார மண்டபம் (அன்னம் பிரமன் வாகனம்) அங்கு யோகப் பயிற்சி செய்தால் ஆறு ஆதாரத்தில் மிச்சம் ஐந்து இருப்பது ஐந்து கிளி என்றார். இவற்றை மூன்று அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற சிறப்பு ஆதாரம் மூன்றும் எட்டிப் பிடிக்கும் என்றார். (ஆண் புலி என்பது சுழுமுனை நாடி)

தோப்பிலே மாங்குயில் கூப்பிடு தேபுது
மாப்பிள்ளை தான்வந்து சாப்பிடவும்
ஏய்க்கு மிப்படியஞ்சா றாந்தை
இருந்து விழிப்பது பாருங்கடி! 53

யோகத்தால் உடலில் ஓசை கேட்பதே தோப்பில் குயில் கூவுவதாம். புது மாப்பிள்ளை என்பது சுழுமுனையிலும் ஒளி ஏறுவதாம். இப்படி நடக்கும் போது ஐந்து பூதங்க ளுடன் கூடிய ஆறு ஆதாரங்களும் துணை புரியாமல் ஏய்க்கலாம் என்று எச்சரிக்கிறார்.

மீனு மிருக்குது தூரணி யிலிதை
மேய்ந்து திரியுங் கலசாவல்
தேனுமிருக்குது போரையிலே யுண்ணத்
தெவிட்டு தில்லையே வாலைப்பெண்ணே! 54

(தூரணி - நாடி, மீன் - ஒளி) (கலம் பன்னிரண்டைக் குறிக்கும் அளவுப் பெயர்) இந்த ஒளி உச்சியில் 12 விரல் உயரும் போது அமிர்தம் உடல் முழுதும் இறங்கும். (தேன் - அமுதம்) அது தெவிட்டாததாகும். (சாவல் - நிற ஒளி - சேவல் வால் போல்வது)

காக மிருக்குது கொம்பிலே் தான்கத
சாவி லிருக்குது தெம்பிலேதான்
பார்க்க வெகுதூர மில்லை யிதுஞானம்
பார்த்ததால் தெரியுமே வாலைப்பெண்ணே! 55

முதலில் தலை உச்சியில் தீச்சுடர் தெரியாது இருளாய் இருப்பதால் காகம் இருக்கிறது என்றார். (கொம்பு உச்சியில் உள்ள ஒளிச் சுடர்) - ஆனால் முயற்சித்தால் (தெம்பில்) திடமான சாவலின் வால் போல் நிறவொளி உண்டு. இது ஞானத்தால் வருவதாகும். அப்போது அது தொலைவில் இல்லை என அறியலாம்.

கும்பிக் குளத்திலே யம்பல மாமந்தக்
குளக்க ருவூரில் சேறுமெத்த
தெம்பிலிடைக் காட்டுப் பாதைக ளாய்வந்து
சேர்ந்தா ராய்ந்துபார் வாலைப்பெண்ணே! 56

வாலைப் பெண்ணே! கும்பியாகிய நீராதாரம் சுவாதிட்டானம். இதிலிருந்து மார்பில் அம்பலமான மன்றத்தை அடைக. ஆனால் குணமாகிய அக்கருவூர் (யோனிப் பகுதி இதுவே சுவாதிட்டானம் ஆகையால்) மிகவும் சேறுபட்டுக் கிடப்பதாகும். அதாவது எளிதில் இது கடக்க முடியாது என்க. துணிவுடன் இடையில் உள்ள காட்டுப் பகுதியைக் கடந்து ஆராய்ந்து வழியறிக.

பண்டுமே ஆழக் கிணற்றுக்குள் ளேரண்டு
கெண்டை யிருந்து பகட்டுதடி
கண்டிருந்தும் அந்தக் காக்கையுமே யஞ்சி
கழுகு கொன்றது பாருங்கடி! 57

ஆழ்கிணறு உடம்பு அடியில் உள்ள மூலாதாரம் எனும் கிணறு. அதில் இரண்டு கெண்டை என்பது இடா பிங்களா ஆகிய இரு நாடிகள் - அவை அங்கே ஒளிர் கின்றன. காக்கை என்பது ஓரளவு பறக்கும் தூரம். கழுகு வானத்தில் உச்சியில் பறக்கும் தூரம். எனவே மூலா தாரத்தை அடுத்த ஆதாரங்கள் வரை முயன்றால் போதாது. மிக உச்சி வரை ஆக்ஞை வரை மன உணர்வால் தூண்டினால், இவை இதன் நாடிகள் வசப்படும் என்க.

ஆற்றிலே யஞ்சு முதலைய டியரும்
புற்றிலே ரண்டு கரடியடி
கூற்றனு மூன்று குருடன டிபாசங்
கொண்டு பிடிக்கிறான் வாலைப்பெண்ணே! 58

ஆறு சுழுமுனை நாடியில் தொடர்ந்து ஒளி போவது. அது பஞ்சபூதக் கலப்பு ஒளியாகையால் ஐந்து முதலை என அறிக. கூற்று வராது என்பதால் முக்காலமும் குருடன் (மூன்று குருடன்) என்று கொள்க. பாசத்தால் பிடிப்பவன் இயமன் என்பதாம்.

முட்டை யிடுகு தொருபற வைமுட்டை
மோசம் பண்ணு தொருபறவை
வட்டமிட் டாரூர் கண்ணியி லிரண்டு
மானுந் தவிக்குது வாலைப்பெண்ணே! 59

ஓர் உணர்வு யோக சித்திக்கு முயல்கிறது. மாயை என்னும் ஒன்று அதைத் தடுக்கிறது என்பதை முட்டை, பறவை என உருவகம் செய்தார். இரு மான்கள் இடா, பிங்களா நாடிகள் மாறி மாறி வருவதைக் கண்ணியில் (வலை) இரு மான் தவிப்பதாக உருவகம் செய்தார்.

அட்டமா வின்வட்டப் பொட்டலி லேரண்டு
அம்புலி நிற்குது தேர்மேலே
திட்டமாய் வந்து அடிக்குதில் லைதேகம்
செந்தண லானதே வாலைப்பெண்ணே! 60

வளர்பிறை, தேய்பிறை என்பன இரு அம்புலிகள். இது தலையில் சந்திர மண்டலத்தில் திரிவதை வட்டப் பொட்டல் என்றார். அட்டமா என்பது புரியட்டகத்தின் விளைவு என்பதாம். ஒரு-பிறை என இல்லாததால் திட்டமாக உணர்வு திரளவில்லை என்றார்.

முக்கோண வட்டக் கிணற்றுக்குள் ளேமூல
மண்டல வாசிப் பழக்கத்திலே
அக்கோண வட்டச் சக்கரத் தில்வாலை
அமர்ந்தி ருக்கிறாள் வாலைப்பெண்ணே! 61

மூலாதாரத்தில் முக்கோணம் நாலிதழ்த் தாமரை வட்டத்தில் உள்ளது. இது உள் ஊடுருவுவதால் கிணறு என்றார். மூலாதாரத்தில் உள்ளும் புறமுமாக எட்டும்படி பிராணாயாமம் செய்து பழகினால் அக்கோண வட்டத்தில் வாலை இருப்பதை உணரலாம். தலை உச்சியில் சிவமும், மூலத்தில் பராசத்தியும் இருப்பதான மரபை இங்கு வலியுறுத்துகிறார்.

இரண்டு காலாலொருகோபுர மாம்நெடு
நாளா யிருந்தே அமிழ்ந்துபோகும்
கண்டபோ துகோபு ரமிருக்கும் வாலை
காணவு மொட்டாள் நிலைக்கவொட்டாள். 62

இரு கால்கள் முதலாக இடா பிங்களா நாடி தொடங்கி நெற்றி வரை போவதால் இரு காலில் ஒரு கோபுரம் எனப் பட்டது. இவ்வுடல் அழிவதற்குள் முயற்சி செய்க. வாலை யைக் கண்டால் இவ்வுடல் நீடித்து வாழும். ஆனால் அவள் எளிதில் காணவோ நிலைக்கவோ செய்யாள் என அறிக.

அஞ்சு பூதத்தை யுண்டுபண்ணிக் கூட்டி
ஆறா தாரத்தை யுண்டுபண்ணிக்
கொஞ்சு பெண்ணாசை யுண்டுபண்ணி வாலை
கூட்டுகிறாள் காலனை மாட்டுகிறாள். 63

ஐம்பூதங்களால் உடல் செய்து, அதில் ஆறு ஆதார மையம் செய்து வைத்தாலும், பெண்ணாசையையும் சேர்த்ததால் உடல் அழிய இயமன் வருகிறான்.

காலனைக் காலாலு தைத்தவளாம் வாலை
ஆலகா லவிட முண்டவளாம்
மாளாச் செகத்தைப் படைத்த வளாமிந்த
மானுடன் கோட்டை இடித்தவளாம். 64

இயமனைக் காலால் உதைத்த சிவனின் சத்தியாகை யால் இவள் உதைத்ததாகவும், இவளே (சிவன் போல்) ஆலகால விஷம் உண்டதாகவும், உடனே மாளாத இப் பிரபஞ்சத்தையும் படைத்து மாளும் மனித உடலையும் (கோட்டை) படைத்தாள் எனவும் கூறினார்.

மாதாவாய் வந்தே அமுதந்தந் தாள்மனை
யாட்டியாய் வந்து சுகங்கொடுத்தாள்
ஆதர வாகிய தங்கையா னாள்நமக்
காசைக் கொழுந்தியு மாமியானாள். 65

தாயாகப் பால் தந்ததும், மனைவியாக உடல் சுகம் தந்ததும், தங்கையாக ஆதரவு தந்ததும், கொழுந்தியும் மாமியும் ஆனதும் வாலையே என்க. பராசத்தியே பெண் வடிவம் யாவுமானாள் என்பதாம்.

விளக்கம்: எல்லாப் பெண்களும் சக்தி வடிவம் ஆண்கள் சிவ வடிவம் என்பது பொது மரபு.

சிரித்து மெல்லப் புரமெரித் தாள்வாலை
செங்காட்டுச் செட்டியைத் தானுதைத்தாள்
ஒருத்தி யாகவே சூரர்தமை வென்றாள்
ஒற்றையாய்க் கஞ்சனைக் கொன்றுவிட்டாள். 66

திரிபுரத்தைச் சிரித்தே வாலைப் பெண் எரித்தாள். (சிவன் செயல்) காட்டிற்கு அழைக்கும் செட்டி என்பது இயமனை இவளே மார்பில் உதைத்தாள்; துர்க்கையாக நின்று சூரர்களை அழித்தாள்; கம்சனை (க்கண்ணனுக்கு முன் யோக மாயையாகப் பிறந்து) அழித்தாள் என்க.

இப்படி யல்லோ இவள்தொழி லாமிந்த
ஈனா மலடி கொடுஞ்சூலி
மைப்படுங் கண்ணியர் கேளுங்கடி அந்த
வயசு வாலை திரிசூலி. 67

இத்தொழில் செய்யுமிவள் வேறாக மாறுவதில்லை என்பதால் மலடி என்றார். மைப்படும் கண்ணியரே கேளுங்கள். இவள் வயதுக்கு வரும்போது திரிசூலி யாவாள். (திரிசூலி - துர்க்கை. கொடுஞ்சூலி - அரக்கரை அழிக்கும் சூலம் உடையாள்)

கத்தி பெரிதோ யுறைபெரி தோவிவள்
கண்ணு பெரிதோமுகம் பெரிதோ
சத்திபெரிதோ சிவம்பெரிதோ நீதான்
சற்றே சொல்லடி வாலைப்பெண்ணே! 68

கத்திக்கு உறை சரியான அளவிலேதான் இருக்கும் பெரிதாகவோ சிறிதாகவோ இராது - முகத்திற்கு ஏற்ற அளவிலேயே கண் இருக்கும், அதே போல் சக்தி பெரிதா, சிவம் பெரிதா, என்றால் இரண்டும் சமமாகவே இருக்கும். கண் பெரிது போல் தெரிந்தாலும் அளவு ஒத்தே உள்ளதால் சக்தியும் அப்படித் தெரிந்தாலும் சமமாகவே உள்ளதாம்.

அன்னம் பெரிதல்லால் தண்ணீர் பெரிதல்ல
அப்படி வாலை பெரிதானால்
பொன்னு பெரிதல்லால் வெள்ளி பெரிதல்ல
பொய்யாது சொல்லுகிறேன் கேளுங்கடி. 69

நீர் பெரிதானாலும் அதன் மேல் நீந்தும் அன்னம் சிறிதே. ஆனால் பெரிது போன்று தோன்றும் இடத்தை வைத்துச் சில நேரம் சிறிது பெரிது கொள்வர். பொன் வெள்ளியினும் ஒளி சிறந்தது என்பது போல் கொள்க. (சிவமா சத்தியா என்ற தொடர்பிலாம்)

மாமிச மானா லெலும்புண் டுசதை
வாங்கிஓடு கழன்று விடும்
ஆமிச மிப்படிச் சத்தியென் றேவிளை
யாடிக் கும்மி அடியுங்கடி. 70

மாமிசம் வெளியே தெரியும் அதற்கு ஆதாரம் எலும்பே யாகும். ஆசையை விலக்கினால் ஓடுபோல் கழன்று வருவதைக் காணலாம். இப்படிச் சத்தி சிவம் உளது என்று அறிக.

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் விளையாதென்று
கண்டுகொண்டு முன்னே அவ்வை சொன்னாளது
உண்டோ வில்லையோ வாலைப்பெண்ணே! 71

வாலைப் பெண்ணே! முளைப்பது அரிசிதான் என்றாலும் உமியை எடுத்து விட்டுப் போட்டால் அரிசி முளைக்காது ன்று அவ்வை அறிந்து சொன்னாள். அதுபோல் ஒன்றிற்குக் கீழானதும் துணையாகும். அப்படி இருக்கச் சத்தியா சிவமா என்பது தேவையற்ற ஆராய்ச்சியே.

மண்ணு மில்லாமலே விண்ணுமில்லை கொஞ்சம்
வாசமில் லாமலே பூவுமில்லை
பெண்ணு மில்லாமலே யாணுமில் லையிது
பேணிப் பாரடி வாலைப்பெண்ணே! 72

நிலமில்லா விட்டால் வானம் இல்லை. (தேவையு மில்லை) அதுபோல் சிறிதாவது ஒரு மணமில்லாது எந்தப் பூவும் இல்லை.

நந்த வனத்திலே சோதியுண் டுநிலம்
நித்திய பேருக்கு நெல்லுமுண்டு
விந்தையாய் வாலையைப் பூசிக்க முன்னாளில்
விட்ட குறைவேணும் வாலைப்பெண்ணே! 73

(நந்தவனம் உடல் உள்ள மனம்) வாலைப் பெண்ணே! கடவுள் உடம்பில் சோதியாக உள்ளார். நிலத்தைத் தினம் கண்காணித்தவர்க்கே நெல் விளைச்சல் உண்டு. அதுபோல் தினமும் வாலையைப் பூசித்தால்தான் அல்லது முன் பிறவியில் விட்ட குறை தொட்ட குறையிருந்தால்தான் இப்படிச் சோதியை உணர முடியும்.

வாலையைப் பூசிக்கச் சித்தரானார் வாலைக்
கொத்தாசை யாய்ச்சிவ கர்த்தரானார்
வேலையைப் பார்த்தல்லோ கூலிவைத்தா ரிந்த
விதந்தெ ரியுமோ வாலைப்பெண்ணே! 74

வாலைப் பெண்ணே! உழைப்புக்கேற்ற ஊதியம் போலவே வாலையைப் பணிவதால்தான் சித்தாக முடியும். அவளுக்கு மிகுந்த அன்புடன் இருந்தால் சிவகர்த்தராகவே (சிவமாகவே) ஆவர் என அறிக.

வாலைக்கு மேலான தெய்வமில்லை மானங்
காப்பது சேலைக்கு மேலுமில்லை
பாலுக்கு மேலான பாக்கியமில்லை வாலைக்
கும்மிக்கு மேலான பாடலில்லை. 75

வாலைக்கு மேலான தெய்வம் இல்லை. மானம் காப்பதற்குச் சேலைக்கு மேல் ஏதுமில்லை. பாலை விடச் சிறந்த உணவுமில்லை. வாலைப் பெண்ணைப் பற்றிய பாட்டுக்கும் மிக்க மேலான பாட்டுமில்லை.

நாட்டத்தைக் கண்டா லறியலா குமந்த
நாலாறு வாசல் கடக்கலாகும்
பூட்டைக் கதவைத் திறக்கலா கும்மிது
பொய்யல்ல மெய்யடி வாலைப்பெண்ணே! 76

வாலைப் பெண்ணே! கண் பார்வையால் காணாது நிற்பதும், காண்பதைக் காணாதே உணர்வதும் ஆகியவை

தெரிந்தால் 24 தத்துவங்களாகிய வாயில்களைக் கடக்க லாம். (தத்துவ நிக்ரகம் செய்தலாம்) யோக சித்திக்குரிய பூட்டைத் திறக்க முடியும். இது மெய்யாகும் என்பதாம்.

ஆணும் பெண்ணும்கூடி யானதனால் பிள்ளை
ஆச்சுதென் றேநீரும் பேசுகின்றீர்
ஆணும் பெண்ணுங்கூடி யானதல்லோ பேதம்
அற்றொரு வித்தாச்சு வாலைப்பெண்ணே! 77

வாலைப் பெண்ணே! ஆண் பெண் சேர்க்கையால் பிள்ளை பிறக்குமென்று நீர் பேசுகின்றீர். ஆண் பெண் என்பது பேதம். ஆனால் விதை என்பதில் இப்பேத மில்லை. வளர்ந்த செடி கொடி பார்த்தே ஆண் பெண் பேதமுண்டாகும் என அறிக.

இன்றைக் கிருப்பதும் பொய்யல்ல வேவீடே
என்வாழ்க்கை யென்பதும் பொய்யல்லவே
அன்றைக் கெழுத்தின் படிமுடியும் வாலை
ஆத்தாளைப் போற்றடி வாலைப் பெண்ணே! 78

வாலைப் பெண்ணே! இன்றைக்கு இருப்பது பொய் யல்ல. இதன் பிறகு வீடுபேறே என் வாழ்க்கை என்பதும் பொய்யல்ல. அன்று பிரமன் எழுதியபடியே முடியும். அதனால் வாலை எனும் தாயைப் போற்றுக.

வீணாசை கொண்டு திரியா தேயிது
மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்கூடு
காணாத வாலையைக் கண்டுகொண் டால்காட்சி
காணலா மாகாய மாளலாமே. 79

வீணான ஆசை கொண்டு திரியாதே. இவ்வாழ்வு மெய் யன்று, பொய். இவ்வுடலும் (கூடு) பொய் (அழியக் கூடியதே) காண்பதற்கு அரிய வாலையைக் கண்டு கொண்டால் எல்லாம் காணலாம். ஆகாயத்தையே ஆளலாம்.

பெண்டாட்டி யாவதும் பொய்யல்லவோ பெற்ற
பிள்ளைக ளாவதும் பொய்யல்லவோ?
கொண்டாட்ட மானதகப்பன் பொய் யேமுலை
கொடுத்த தாயும் நிசமாமோ? 80

உறவில் மனைவியும் பொய்யே, பெற்ற பிள்ளைகளும் பொய்யே, தந்தை, பாலூட்டிய தாய் யாவரும் அழியத் தக்கவரே. (பொய் - அழியக் கூடியது)

தாயும் பெண்டாட்டியுந் தான்சரி யேதன்மம்
தாமே யிருவருந் தாங்கொடுத்தார்
காயும் பழமுஞ் சரியா மோஉன்றன்
கருத்தைப் பார்த்துக்கொள் வாலைப்பெண்ணே! 81

வாலைப் பெண்ணே! தாயும் மனைவியும் பெண் என்ற வகையில் சரிதான். இருவரும் ஒவ்வொரு வ்கைத் தருமம் ஆவர். காயும் பழமும் வேறு வேறாவது போல் யாவும் வேற்றுமை கொண்டதேயாம்.

பெண்டாட்டி மந்தைமட்டும் வருவாள் பெற்ற
பிள்ளை மசானக் கரையின்மட்டும்
தொண்டாட்டுத் தர்மம் நடுவினி லேவந்து
சேர்ந்து பரகதி தான்கொடுக்கும். 82

(பலரும் வாழும் தெருவை மந்தை என்றார்) இறந்த பின் தெரு வரை மனைவியும், சுடுகாடு வரை பிள்ளையும் வருவர். நடுவில் நாம் செய்த தர்மம் பரகதி அடையும்வரை பயன் தரும்.

பாக்கியமும் மகள் போக்கியமும் ராச
போக்கியமும் வந்த தானாக்கால்
சீக்கிரந் தருமஞ் செய்யவேண்டுங் கொஞ்சந்
திருப்ப ணிகள்மு டிக்கவேண்டும். 83

வாலைப் பெண்ணே! பாக்கியத்தால் வரும் பொருளும், பெண்ணுக்குச் செய்யும் மண உறவும் அரசால் வரும் பணமும் கொண்டு தருமத்தைச் செய்க சிறிது திருப் பணியும் செய்து வெற்றி கொள்க.

திருப்பணி களைமுடித் தோருஞ் செத்துஞ்
சாகாதபேரி லொருவ ரென்றும்
அருட்பொ லிந்திடும் வேதத்தி லேயவை
அறிந்து சொன்னாளே வாலைப்பெண்ணே! 84

திருப்பணிகள் முழுதும் செய்தவர்கள் இறந்தாலும், இறவாத புகழாளர் என்றும், அருள் பெற்றவர் என்றும் வேதத்தையறிந்து சொன்னாள் வாலைப் பெண்.

மெத்தை தனிலே படுத்திருந் துநாமும்
மெல்லிய ரோடு சிரிக்கும்போது
யுத்தகாலன் வந்துதான் பிடித்தால் நாமும்
செத்த சவமடி வாலைப்பெண்ணே! 85

வாலைப் பெண்ணே! மெத்தையிட்டுச் சுகமாகப் படுத் திருந்தாலும், பெண்களோடு அங்கே சிரித்திருந்தாலும், இயமன் வருவான். அப்போது நாம் சவமே ஆவோம். (அதற்குள் யோகம் புரிக என்பதாம்).

ஏழை பனாதிக ளில்லையென் றாலவர்க்கு
இருந்தா லன்னங் கொடுக்கவேண்டும்
நாளையென் றுசொல்ல லாகா தேயென்று
நான்மறை வேத முழங்குதடி. 86

ஏழைகள் காணார், களார், கால் முடம் பட்டார் முதலிய இயலாதவர்கள், வசதி இல்லை என்றபோது, அவர்க்கு நம்மிடம் இருக்கும் உணவைக் கொடுக்க வேண்டும் - நாளை தருவதாகச் சொல்லாதே என்று வேதம் கூறுகிறது.

பஞ்சை பனாதி யடியாதே யந்தப்
பாவந் தொலைய முடியாதே
தஞ்சமென் றோரைக் கெடுக்கா தேயார்க்கும்
வஞ்சனை செய்ய நினையாதே. 87

பஞ்சைப் பனாதியாக இருப்பதாகிய பாவம் தொலைய முடியாது. தஞ்சம் என்று வருவோரைக் கெடுப்பதும் யார்க்கும் வஞ்சம் செய்வதும் கூடாது. (நினைப்பதுவும் கூடாது)

கண்டதுங் கேட்டதுஞ் சொல்லாதே கண்ணில்
காணாத வுத்தரம் விள்ளாதே
பெண்டாட்டிக் குற்றது சொல்லாதே பெற்ற
பிள்ளைக்கு இளப்பங் கொடுக்காதே. 88

கண்டதையும் கேட்டதையும் பிறரிடம் சொல்லாதே. கண்ணில் காணாததை விசாரிப்பில் தீர்ப்பாகக் கூறாதே. மனைவியிடமும் உள்ளதை (மறைவை)ச் சொல்லாதே. தன் பிள்ளையைத் தானே இழித்துப் பேசாதே (இளப்பம் - இழிவு)

சிவன்ற னடியாரை வேதிய ரைச்சில
சீர்புல ஞானப் பெரியோரை
மவுன மாகவும் வையாதேயவர்
மனத்தை நோகவும் செய்யாதே. 89

சிவனடியாரை, வேதியரை, சிறப்புக்குரிய புலமை ஞானம் உடைய பெரியோர்களை மனத்தளவிலும் கூட வையாதே. அவர் மனம் நோகும்படி எதுவும் செய்யாதே.

வழக்க ழிவுகள் சொல்லாதே கற்பு
மங்கையர் மேல்மனம் வையாதே
பழக்க வாசியைப் பார்த்துக்கொண் டுவாலை
பாதத்தைப் போற்றடி வாலைப்பெண்ணே! 90

வாலைப் பெண்ணே! வழக்கில்லாததைச் சொல்லாதே. பெண்கள் மேல் காமம் கொள்ளாதே. பழகி வரும் பிராணாயாமத்தைச் செய்து வாலை (தெய்வம்)யின் திருவடி போற்றுவாயாக.

கூடிய பொய்களைச் சொல்லாதே பொல்லாக்
கொலைக ளவுகள் செய்யாதே
ஆடிய பாம்பை யடியா தேயிது
அறிவு தானடி வாலைப்பெண்ணே! 91

மனத்தில் கூடிய பொய்யைச் சொல்லாதே, பொல்லாத கொலை களவுகள் செய்யாதே, நல்ல பாம்பை அடிக்காதே. இவற்றை அறிவில் இருத்திக் கொள்.

காரிய னாகினும் வீரியம் பேசவும்
காணா தென்றவ்வை சொன்னாளே
பாரினில் வம்புகள் செய்யா தேபுளிப்
பழம்போ லுதிர்ந்து விழுந்தானே. 92

காரியத்தைச் செய்வதில் கவனம் காட்டாது செய்ய முடியும் என்ற வீரியத்தை மட்டும் பேசாதே. இப்படி ஔவையார் சொன்னதைக் கேள். உலகில் வம்புகள் செய்து பகைக்காதே. இவை செய்வார் புளியம்பழத்தில் ஒட்டியிருந்த ஓடு கழன்றது போல் உடல் விழ இறப்பர்.

காசார் கள்பகை செய்யா தேநடுக்
காட்டுப் புலிமுன்னே நில்லாதே
தேசாந்தி ரங்களுஞ் செல்லா தேமாய்கைத்
தேவடி யாள்தனம் பண்ணாதே! 93

பணம் படைத்தவரிடம் பகை கொள்ளாதே. நடுக் காட்டில் புலிக்கு முன் நிற்காதே. பழக்கமற்ற தேசங்களில் தனித்துப் போகாதே. பொருட் பெண்டிர் போல் நடந்து மாயம் செய்யாதே.

தன்வீடி ருக்க அசல்வீடு போகாதே
தாயார் தகப்பனை வையாதே
உன்வீட்டுக் குள்ளேயே யூக மிருக்கையில்
ஓடித் திரிகிறாய் வாலைப்பெண்ணே! 94

வாலைப் பெண்ணே! தன் வீடு (மனைவி) இருக்கும் போது அயல் வீட்டில் (பிறன் மனைவியிடம்) செல்லாதே, பெற்றவர்களை வையாதே. உன் உடலுக்குள்ளேயே யூகித்து உணர வழியிருக்கும் போது, அதை விட்டுப் பல இடத்திலும் ஓடித் திரியாதே.

சாதி பேதங்கள் சொல்லுகி றீர்தெய்வம்
தானென் றொருவுடல் பேதமுண்டோ?
ஓதிய பாலதி லொன்றாகி யதிலே
உற்பத்தி நெய்தயிர் மோராச்சு. 95

சாதி பேதம் பேசுகிறீர்களே! ஓர் உடம்பில் உள்ள தெய்வம் வேறு சாதி உடம்பில் இல்லாது போகுமா? பாலினுள் உள்ள சத்தியே விரிந்து நெய், தயிர், மோர் எனப் பிரிகிறது. (அதுபோல் உனக்குள் பல சக்தியுண்டு அது விரியும் என்பதாம்).

பாலோடு முண்டிடு பூனையு முண்டது
மேலாக காணவுங் காண்பதில்லை
மேலந்த ஆசையைத் தள்ளிவிட் டுள்ளத்தில்
வேண்டிப் பூசையைச் செய்திடுங்கள். 96

பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்று இருவகை உணர்வு கொள்ளாதே. மேம்போக்காக எதுவும் செய்யாதே. மேல் மேல் வரும் ஆசைகளைத் தள்ளி விட்டு உள்ளத்தில் சேர்ந்து பூசை செய்யுங்கள்.

கோழிக் காறுகாலுண் டென்றுசொன் னேன்கிழக்
கூனிக்கு மூன்றுகா லென்றுசொன் னேனே்
கூனிக்கிரண் டெழுத்தென்று சொன்னேன் முழுப்
பானைக்கு வாயில்லை யென்று சொன்னேன். 97

(நாதம் என்பது கோழி எனக் கூறப்பட்டது. கூனி என்பது குண்டலினி சக்தியாம்) நாதத்தை ஆறு ஆதாரங் களிலும் உயர்த்துக. குண்டலினி சக்திக்கு இடா, பிங்களா, சுழுமுனை ஆகிய மூன்றும் கால் போல் உதவும். ஓம் என்ற வரி வடிவில் இரண்டாகிய எழுத்தால் குண்டலினியை எழுப்புக. (உடல் முழுதும் - முழுப் பானை) உடல் முழுதும் உள்ள ஒன்பது வாயில்களையும் உணர்விலிருந்து விலக்கி நிற்குமாறு சொன்னேன்.

ஆட்டுக் கிரண்டுகா லென்றுசொன் னேன்நம்
மானைக்குப் பானைக்கு நிற்கு மேல்சூல்
மாட்டுக்குக் காலில்லை யென்றுசொன் னேன்கதை
வகையைச் சொல்லடி வாலைப்பெண்ணே! 98

வாலைப் பெண்ணே! மூலாதாரம் அளவும், மூச்சு செல்லப் புகுவதும் உண்டு. மணிப்பூரகத்தோ மூச்சுப் பயிற்சி இடம் வலமாக மாறுவதும் உண்டு. (மணிப் பூரகத்தின் சின்னம் ஆடு; கால் - காற்று; இரண்டு இடம் வலம், ஆனை - விசுத்தி) விசுத்திக்கு மேல் யோக முயற்சி திரளும் (சூல் பெறும்) மாடு - ஆன்மா. இதைக் காற்றால் உணர முடியாது என உணர்க.

கோயிலு மாடும் பறித்தவ னுங்கன்றிக்
கூற்றுமேகற் றிருந்தவனும்
வாயில்லாக் குதிரை கண்டவ னுமாட்டு
வகைதெ ரியுமோ வாலைப்பெண்ணே! 99

வாலைப் பெண்ணே! கோயிலாகிய வீட்டில் ஆன்மா (மாடு)வைக் கண்டு அதைத் தனிப்படுத்தியவனும்,

வஞ்சமாக வந்த கூற்றை விலக்கியவனும், கடிவாளமில்லாத (தடையற்ற) பிராணாயாமம் (குதிரை) செய்பவனும், வேறு வேறு ஆன்ம சக்தி உடையவர் என வகையறிக.

இத்தனை சாத்திரந் தாம்படித் தோர்செத்தார்
என்றா லுலகத்தோர் தாம்சிரிப்பார்
செத்துப் போய்க்கூடக் கலக்கவேண் டுமவன்
தேவர்க ளுடனே சேரவேண்டும். 100

பல சாத்திரம் படித்தவர்களும் செத்துப் போவர் என்றால் உலகம் சிரிக்கும். செத்த பிறகும் கூட நல்வினை யால் கடவுளைக் கூட முடியும் அல்லது தேவர்களாக முடியும் (சாகாதிருக்கப் படித்தவனே உயர்ந்தவன் என்பதாம்)

உற்றது சொன்னக்கா லற்றது பொருந்தும்
உண்டோ உலகத்தி லவ்வைசொன்னாள்
அற்றது பொருந்து முற்றது சொன்னவன்
அவனே குருவடி வாலைப்பெண்ணே! 101

வாலைப் பெண்ணே! தனக்கு நேர்ந்ததைச் சொன்னால் அதன் மூலம் சொல்லாததும் விளங்கும். இப்படி அவ்வை சொன்னாள். இப்படி நடந்து கொள்பவனே குரு வடிவ மாவான்.

பூரண நிற்கும் நிலையறி வான்வெகு
பொய்சொல்வான் கோடி மந்திரஞ்சொல்வான்
காரண குருஅ வனுமல் லவிவன்
காரியகுரு பொருள்ப றிப்பான். 102

கோடி மந்திரம் கற்றாலும் பொய் சொல்கிறவனுக்குப் பரிபூரணமாகிய கடவுள் உடலில் நிற்கும் நிலை தெரியாது. இத்தகையவன் ஒன்றை உருவாக்கும் காரண குருவல்லன். பொருள் பறிக்கும் காரிய குருவே ஆவான்.

எல்லா மறிந்தவ ரென்றுசொல் லியிந்தப்
பூமியி லேமுழு ஞானியென்றே
உல்லாச மாக வயிறு பிழைக்கவே
ஓடித் திரிகிறார் வாலைப்பெண்ணே! 103

வாலைப் பெண்ணே! இவ்வுலகில் தாம் எல்லாம் அறிந்தவர் என்றும் முழு ஞானி என்றும் சொல்லிக் கொண்டு எளிதாக வயிறு பிழைக்கவே பலர் திரிகிறார்கள்.

ஆதிவா லைபெரி தானா லும்மவள்
அக்காள் பெரிதோ? சிவன்பெரிதோ?
நாதிவா லைபெரி தானாலும் அவள்
நாயக னல்ல சிவம்பெரிது. 104

ஆதிவாலை - குண்டலினி சக்தி - அவள் பெரியவள் என்றாலும் பராசக்தியே பெரியவள் (அக்காள்) அவளை விடவும் சிவம் பெரிதா இல்லையா? எங்கும் சக்தி வடிவாய் (நாதி) உலவுபவள் பெரியவளே ஆனாலும் அவள் நாயகனை விடப் பெரியவள் இல்லை. எனவே சிவமே பெரிது. (நாதி - 'நாதன்' என்னும் சொல்லுக்குப் பெண் பால்; தலைவி)

ஆயுசு கொடுப்பாள் நீரிழி வுமுதல்
அண்டாது மற்ற வியாதியெல்லாம்
பேயும் பறந்திடும் பில்லிவி னாடியில்
பத்தினி வாலைப்பெண் பேரைச்சொன்னால். 105

வாலை எனும் தெய்வம் ஆயுள் கொடுப்பாள். நீரிழிவு முதலிய நோய் வராமல் காப்பாள். அவள் பெயரைச் சொன்னால் பேய், பில்லி, சூனியம் முதலியன பறந்து விடும்.

நித்திரை தன்னிலும் வீற்றிருப் பாளெந்த
நேரத்தி லும்வாலை முன்னிருப்பாள்
சத்துரு வந்தாலும் தள்ளிவைப் பாள்வாலை
உற்றகா லனையும் தானுதைப்பாள். 106

உறங்கும் போதும் நம்மைக் காக்க விழித்திருப்பாள். எந்த நேரத்திலும் முன்னால் இருப்பாள். பகை வந்தாலும் தள்ளி வைப்பாள். இயமன் வந்தாலும் உதைப்பாள்.

பல்லாயி ரங்கோடி யண்டமு தல்பதி
னான்கு புவனமும் மூர்த்திமுதல்
எல்லாந் தானாய்ப் படைத்தவ ளாம்வாலை
எள்ளுக்கு ளெண்ணெய்போல் நின்றவளாம். 107

பல்லாயிரங் கோடி அண்டங்கள் படைத்தவளாம். உடம்பில் பதினான்கு புவனங்களின் மூர்த்தியை வைத்த வளாம். எல்லாவற்றையும் தானே படைத்தவளாம். அந்த வாலை எனும் சக்தி எள்ளுக்குள் எண்ணெய் போல் இருப்பா ளாம். (5 ஞானேந்திரியம் + 5 கர்மேந்திரியம் + 4 அந்தக் கரணம் ஆக 14 உறுப்பும் 14 உலகம் எனப்படுவது மரபு)

தேசம் புகழ்ந்திடும் வாலைக்கும் இத்தமிழ்
செய்ய எனக்குப தேசஞ்செய்தாள்
நேசவான் வீரப் பெருமாள் குருசாமி
நீள்பதம் போற்றிக்கொண் டாடுங்கடி. 108

எல்லா நாட்டினரும் புகழும் வாலையானவள், தமிழில் நூல் செய்ய என்னை இந்த நாட்டில் பிறக்கச் செய்தாள். அன்பான வீரப்பெருமாள் எனும் குருசாமியின் பெருமைக் குரிய திருவடிகளைப் போற்றுங்கள். (வீரப் பெருமாள் என்பவர் இவரின் நேர் குருவாக இருக்கலாம்.)

ஆறு படைப்புகள் வீடு கடைசூத்ர
அஞ்செழுத் துக்கும் வகையறிந்து
கூறு முயர்வல வேந்த்ரன் துரைவள்ளல்
கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி. 109

ஆறு ஆதாரங்களையும் சூத்திர நூலாக இணைக்கும் ஐந்தெழுத்து மந்திரத்தை வகையறிந்து கூறுவதில் வல்லவர்

ஆன வேந்திரன் துரை வள்ளல் என்ற வெற்றிக் குருவை வாழ்க என்று கொண்டாடுங்கள்.

ஆடுங்காள் பெண்டுக ளெல்லோ ருமந்த
அன்பான கொங்கணர் சொன்னதமிழ்
பாடுங்கள் சித்தர் களெல்லோ ரும்வாலை
பரத்தைப் போற்றிக் கொண்டாடுங்கடி. 110

பெண்கள் எல்லாரும் ஆடுங்கள். கொங்கணர் சொன்ன தமிழைப் பாடுங்கள். சித்தர்கள் எல்லாரும் வாலை எனும் பராபரத்தைப் போற்றுங்கள்.

சித்தர்கள் வாழி சிவன்வா ழிமுனி
தேவர்கள் வாழி, ரிஷிவாழி,
பத்தர்கள் வாழி, பதம்வா ழிகுரு
பாரதி வாலைப்பெண் வாழியவே! 111

சித்தர்கள், சிவன், முனிவர், தேவர், ரிஷி, பக்தர்கள், குருவின் பாதம், துர்க்கையாகிய வாலைப் பெண் ஆகிய யாவரும் வாழ்வார்களாக.

## கொங்கணச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 27. சட்டைமுனி ஞானம்

இவர் சிங்கள நாட்டுப் பொண்ணுக்கும் தமிழருக்கும் பிறந்ததாகவும் தமிழகம் வந்து சிறப்புக் கொண்டதாகவும் கூறுவர். இவர் இல்லறத்தில் முழுதும் இல்லாது பாதியில் வடநாட்டுச் சித்தரால் தடுத்து ஆட்கொள்ளப்பட்டார். கருவூரார், போகர், கொங்கணர் முதலியவர்களிடம் சீடராக இருந்துள்ளார். கைலை மலையில் குளிருக்காகச் சட்டை அணிந்ததால் இப்பெயர் வந்தது என்பது அகத்தியரால் அறியலாம்.

பிற சித்தர் சட்டையில்லாதிருக்க இவர் மட்டும் சட்டை அணிந்ததால் இப்பெயராக இருக்கலாம். கண்ணிகளாகப் பாடாமல் நான்கு எண்சீர் விருத்தங்களாகவே பாடியுள்ளார். இவர் திருவரங்கத்தில் ஜீவனுடன் சமாதியானார் என்றும், சீர்காழியில் சமாதியானதாகப் போகர் நூலும் கூறும்.

## சட்டைமுனி ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும்

### பூசை செய்யும் முறை
### எண்சீர் விருத்தம்

காணப்பா பூசைசெய்யும் முறையைக் கேளாய்
    கைம்முறையாய்ச் சுவடிவைத்துப் பூசை செய்வார்
பூணப்பா சிலபேர்தான் தீபம் வைத்துப்
    புகழாகப் பூசை செய்வார் பெண்ணை வைத்தும்
நாளப்பா சக்கரத்தைப் பூசை செய்வார்
    நம்முடைய பூசையென்ன மேருப் போலே
ஓதப்பா நாற்பத்துமுக் கோணம் வைத்தே
    உத்தமனே, பூசை செய்வார் சித்தர்தானே. 1

பூசைகள் பலவிதமாகும். படிக்கும் சுவடியை வைத்தும், தீபத்தைப் பார்த்தும், குமரிப் பெண்ணையே தெய்வமாக வைத்தும், சக்கரம் (மந்திரம்) வைத்தும், ஒவ்வொரு வகையாரும் பூசை செய்வார்கள்.

சித்தர்கள் ஸ்ரீ சக்கர மேருவை வைத்துப் பூசை செய்வர். தடையாக உள்ள ஸ்ரீ சக்கரத்தின் ஒன்பது பகுதிகளையும் ஒன்றின் மேல் ஒன்றாக நிற்க வைப்பது மேரு எனப்படும். இதில் 43 முக்கோணங்கள் உண்டு.

தானென்ற மேருவைத்தான் பூசை செய்வார்
சாபமிட்டால் அண்டரண்டம் தீயா வேகும்
தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்
சிறுபிள்ளை யாமொருவன் தீண்டப் போகா
வ்ானென்ற மேருவைத்தான் பூசை செய்தோர்
வாய்திறந்தே உபதேசம் சொன்னா ராகிற்
கோனென்ற வாதசித்தி கவன சித்தி
கொள்ளை யிட்டான் அவன்சீடன் கூறினானே. 2

மேருவைப் பூசிப்பவர் சாபம் இட்டால், உலகங்களும் அதில் உள்ளவர்களும் தீயாக வெந்து அழிவர். இனிமை மிக்க மேருவைப் பூசிக்க தீட்சை வேண்டும். சிறுவர்கள் தொடக் கூடாது. இவர்கள் உபதேசம் செய்தால் இரச வாதம், கவனம் முதலியன கொள்ளையாய் வெற்றியாகும்.

விளக்கம்: இரசவாதம் - பாதரசத்தில் பலவிதமாகத் தங்கம் வரை செய்வது. கவனம் - நடை; வானில் உலாவுதல் முதலிய சித்தியாம்).

கூறியதோர் வாலையின்மூன் றெழுத்தைக் கேளாய்
குறியறிந்து பூசைசெய்து பின்பு கேளாய்
மாறியதோர் திரிபுரையெட் டெழுத்தைக் கேளாய்
மைந்தனே இவளை நீபூசை பண்ணத்

தேறியதோர் புவனைதனின் எழுத்தைக் கேளாய்
திறமாகப் புவனையைநீ பூசை பண்ணு
ஆறியதோர் யாமளையா றெழுத்தைக் கேளாய்
அவளுடைய பதம் போற்றிப் பூசைபண்ணே. 3

வாலைக்கு மூன்று எழுத்தும், திரிபுர சுந்தரிக்கு எட்டு எழுத்தும், புவனேசுவரிக்கு எழுத்தும், சியாமளா தேவிக்கு ஆறு எழுத்தும் பூசைக்குரியன.

விளக்கம்: இவையாவும் ஸ்ரீ வித்யா என்னும் 15 எழுத்தின் அடக்கமேயாகும். ஸ்ரீவித்யா மந்திரம் - பரா சக்திக்கு உரிய மந்திரங்கள் 16 எழுத்துக்கள்; வாலைக்கு மூன்றெழுத்து, திரிபுரசுந்தரிக்கு எட்டெழுத்து, புவனேசு வரிக்கு ஓர் எழுத்து; சியாமளா தேவிக்கு ஆறு எழுத்து.

பண்ணியபின் யாமளைஐந் தெழுத்தைக் கேளாய்
பண்பாகத் தீட்சையைந்தும் முடிந்தபின்பு
வண்ணியதோர் வாசியென்ற யோகத் துக்கு
மைந்தனே வைத்துப்ராணா யாமந் தீரும்
கண்ணியதோர் இத்தனையும் அறிந்தி ருந்தாற்
காயசித்தி விக்கினங்கள் இல்லை யில்லை
உண்ணியதோர் உலகமென்ன சித்தர் சொன்ன
உத்தமனே விட்டகுறை எடுக்கும் காணே! 4

சியாமளாவுக்கு ஐந்தெழுத்தும் உள்ளது. இதைக் கூறி வாசியோகமாகிய பிராணாயாமம் செய்ய வேண்டும். இவை செய்தால் காயசித்தி உண்டு. பிற கெடுதல் தடை இல்லை. உலகம் உன்னைச் சித்தர் என்று புகழும். சென்ற பிறவியின் தொடர்பால்தான் இப்பூசை செய்ய வேண்டும்.

தியங்கினால் கொர்ச்சித்துத் துரத்துச் சண்ணுஞ்
சீரியர் மிலேச்சரையே சுகத்தி னுள்ளே
மயங்கினார் நாலுபா தத்தி னுள்ளும்
மனஞ்செவ்வை யாவதெப்போ தறிவதெப்போ?

தயங்கினார் உலகத்திற் கோடி பேர்கள்
சாவதும் பிறப்பதுங்கா வடிபோ லாச்சு
துயங்கினார் துயரத்தால் ஞானம் போச்சு
சுடுகாட்டில் அறிவதுபோல் சுத்தப் பாழே. 5

நடுவில் இப்பூசையைக் கைவிட்டால் விட்ட குறை உன்னைத் துரத்தும். நாகரிகமற்றவரும் சிறப்புக்குரியவர் போல் நான்கு வகை நெறிகளிலும் கலந்துள்ளனர். (சரியை, கிரியை முதல் நான்கு நெறியாம்.) இதனால் மனம் உடனடியாகச் செம்மைப் படாது. இதனால் பலரும் தயங்கினர். சரியான முறையில் பூசை செய்யாவிட்டால் காவடி மேலும் கீழும் அசைவது போல் பிறப்பும் இறப்பும் தொடரும் என அறிக.

பாழான மாய்கைசென் றொழிவ தெப்போ?
பரந்தமனஞ் செவ்வையாய் வருவ தெப்போ?
வாளான விழியுடைய பெண்ணைச் சேரும்
மயக்கமற்று நிற்பதெப்போ? மனமே ஐயோ!
காழான உலகமத னாசை யெல்லாங்
கருவறுத்து நிற்பதெப்போ? கருதி நின்ற
கோளான கருவிவிட்டு மேலே நோக்கிக்
கூடுவது மேதென்றால் மூலம் பாரே. 6

பாழான இறப்பிலிருந்து விலகுவது எப்போது? மனம் செம்மையாவது எப்போது? காமமாகிய மயக்கம் தீர்வது எப்போது? மனமே! உலகத்தில் உள்ள பேராசை எல்லாம் இல்லாமல் இருப்பது எப்போது? கருவிகளான தத்துவங்களின் துணையில்லாது மேல் உலகைச் சென்றடைவது எப்போது எனில், மூலாதாரத்தை உணர்ந்து இப்பயன்களைப் பெறுக.

## சட்டைமுனி ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 28. திருவள்ளுவ ஞானம்

இவர் திருக்குறள் பாடிய திருவள்ளுவரில்லை. இவர் பாடிய கடவுள் வாழ்த்தில் திருமால், பிரமன், அகத்தியன் முதலிய பெயர்களைச் சொல்லி இருப்பதால் இவர் திருக்குறள் பாடியவரல்லர் என்பது உறுதியாகும். இருபது பாடல்கள் இவர் பெயரில் உள்ளன.

## திருவள்ளுவ ஞானம் பாடல்கள்

மூலமும் உரையும்

### காப்பு

எண்சீர் விருத்தம்

அண்டம்பிண்டம் நிறைந்துநின்ற அயன்மால் போற்றி!
அகண்டபரி பூரணத்தின் அருளே போற்றி!
மண்டலஞ்சூழ் இரவிமதி சுடரே போற்றி!
மதுரதமி ழோதும் அகத்தியனே போற்றி!
எண்டிசையும் புகழுமென்றன் குருவே போற்றி!
இடைகலையின் சுழுமுனையின் கமலம் போற்றி!
குண்டலிக்குள் அமர்ந்துநின்ற குகனே போற்றி!
குருமுனியின் தாளிணையெப் போதும் போற்றி! 1

அண்டங்கள், அவற்றிலுள்ள உடல்கள் ஆகிய யாவற்றிலும் நிறைந்து நிற்கும் பிரமன் திருமால் போற்றி! இவர்களை இப்படி நிற்கச் செய்த விரிந்த பிரபஞ்சம் முழுதும் நீக்கமற இருக்கும் பரிபூரணமான அருள் போற்றி! பூமண்டலத்தைச் சூழ்ந்து ஒளி சிறக்கச் செய்யும் சூரிய சந்திரர் நட்சத்திர ஒளிகள் போற்றி! இனிய தமிழை ஓதும் அகத்தியன் போற்றி! எட்டுத் திசைகளும் புகழும் சிறப்புக் குரிய என் குருவே போற்றி! இடைகலையால் மாற்றப்

படும் சுழுமுனை சென்று இணையும் கமலம் (ஆதார கமலம்) போற்றி! குண்டலியின் உள்ளே அமர்ந்திருக்கும் குகனே போற்றி! குருமுனிவன் இரு பாதங்களையும் எப்போதும் போற்றி.

## கட்டளைக் கலித்துறை

அன்னை யெனுங்கர்ப்ப மதனில்வந் துமதிலேயிருந்தும்
நன்னயமாய்ப் பத்துத்திங்களு நானகத் தேயிருந்தேன்
என்ன அதிசயங் காணிவ்வுலகி லேயமைந்த
உன்னதமெல்லா மமைத்தோன் உண்மையைக் காண்கிலரே.
2

தாயின் கர்ப்பத்தில் தோன்றி, அதிலேயே இருந்து, பத்து மாதமும் நன்கு வளர்ந்திட வயிற்றின் உள்ளேயே இருந்தேன். மிகுந்த அதிசயங்கள் கொண்ட இவ் வுலகின் உன்னதத்தை எல்லாம் அமைத்தவனையும் அமைத்த உண்மையையும் பிறர் அறியவில்லை.

அம்புவி தன்னிலேயுதித் தாய்ந்தறி பாடைதன்னை
வம்புலகத் தார்வசிய மாய்க்கைப் பிடித்தேபிரிந்து
கும்பி தனிலேயுழன்றும் அக்குண்டலி பொற்கமலம்
நம்பியிருந்தேன் சிலநாள் ரகசியங் காண்கிலனே! 3

இவ்வுலகிலே உதித்தேன். இவ்வுலகின் மொழி வழியாக அவர்கள் கருத்து வழி பயின்றேன். பிறகு உண்மை தெரிந்து பிரிந்தேன். வயிற்றிலே கருவாய்த் துன்புற்றபின் குண்டலினி யோகத்தால் பொற்கமலத்தைக் கொண்ட சகஸ்ராரத்தையே நம்பி உய்யலாம் என்றிருந்தேன். ஆனால் அந்த இரகசியம் அறியவில்லை.

## தரவு கொச்சகம்

அண்டரண்ட வான்புவியும் ஆகமத்தி னுட்பொருளும்
கண்டிதமா யான்விளங்குங் காயமதி லேயறியும்

வண்டரெனை நீசனென்ற வாறுதனை யேயொழித்தேன்
விண்டரக சியந்தன்னை விளக்கமது காண்கிலரே. 4

அண்டங்களும், அதில் உள்ள உயிர்களும், (அண்டர்) நாம் வாழும் நிலமும், ஆகமத்தின் மறைவான உட் பொருளும், இவற்றிலிருந்து தனித்துள்ள எனக்கும் (என் ஆன்மாவால்) என் உடம்பிலேயே எல்லாம் அறிய முடியும். வண்டுகள் போல் நீசர்களாய் இருந்தவர்களை விட்டு விலகினேன். காரணம் ஞானிகள் கூறிய (விண்ட) இரகசியங்களை விளக்கமாக அவர்கள் அறியவில்லை.

வையமதி லேயுதிக்கு மாண்பர்களே யுங்களுயிர்
மெய்யென் றிருந்தசைவு வெளிப்படுவ தென்னவிதம்?
அய்யமில்லா வாழ்ந்துலகில் ஆண்மையாய்ப் பூண்டமதிப்
பொய்யெனுமிவ் வாழ்க்கையது போகுஞ்சுடு காடுளதே. 5

இவ்வுலகில் தோன்றும் மாட்சிமைக்குரியவர்களே! உங்கள் உயிர் மெய்யானதாக (அழியாது) இருந்து உங்களை அசையச் செய்து வெளிப்படுவது எப்படி? உலகில் வாழ்ந்து ஆண்மை விளங்க ஐயம் இல்லாது இருந்த வாழ்வு மட்டும் (சுடுகாடு) மறைந்து போகும். (வாழ்வு மறையும்; உயிர் மறையாது என உணர்க)

### கட்டளைக் கலித்துறை

வீடானமூலாச் சுழிநாத வீட்டில்விளங்கும் விந்து
நீடாழிலோகந் தழைத்துப் பெருகியு நின்றிலகுந்
தேடாதழித்த பொருளான பொக்கிடந் தேடியென்ன
காடானநாடு சுடுகாடு சேர்வதுங் கண்டிலரே. 6

வீட்டுலகில் விளங்கும் ஒளியே விந்து இப்பெரிய உலகில் தழைத்துப் பெருகி நின்று வி.ங்கும். தேடினாலும் அழியத் தக்க பொருள் குவியலைத் தேடி என்ன பயன்? இந்த நாடும் செல்வமும் அழிந்தே (சுடுகாடு) போகும்.

விளக்கம்: மூலச்சுழி நாதர் என்றது அவர் குருவாய் இருக்கலாம். அவரை விளித்ததால் மாணவனாகவும் இருக்கலாம்.

எழுவகைத் தோற்றமும் நால்வகை யோனியி லெய்திடினும்
பொழியச் சுரோணிதம் நாதவிந்து பொருள்போகத்தால்
கழியக்கழியக் கடலுயிர் தேய்பிறை கண்டுமிருந்
தழியப்பெருந்தரை யெந்நா ளிருந்தும் அனித்தியமே! 7

ஏழு வகையான பிறப்புக்களும் அவை நான்கு வகை யோனிக்குள் பிறந்தாலும் நாத விந்து இரண்டும் சுக்கிலம் (ஆண் சாரம்) சுரோணிதமாக (பெண் சாரம்)க் கலந்தே பிறக்கும். கடல் நீர் பிறை வளர வளரப் பெருகித் தேயத் தேயக் குறையும். அவ்வாறே இந்த நிலம் எப்படி இருந் தாலும் அழியும் தன்மையதே.

விளக்கம்: ஏழு வகைப் பிறப்பு என்பது தேவர், மனிதர், விலங்கு, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகியன. முட்டையில் பிறப்பன, கருப்பையில் (குட்டி) பிறப்பன, வேரில் கிழங்கில் பிறப்பன, வியர்வையில் பிறப்பன என யோனிகள் நான்கு வகைப்படும்.

எந்நா ளிருந்தென்ன முன்னாளனுப்படி யிந்தவுடல்
தன்னா லழிவதுந் தானறியாதெனத் தந்தைவிதி
உன்னலழிவ துடலுயிர் காயமொழிவ துங்கண்டு
அந்நா ளனுப்படி கண்டுமிருந் தறியாதவரே! 8

எத்தனை நாள் இருந்தும் என்ன? முன்னாள் விதிப்படி இந்த வுடல் தன்னால் அழிவது ஆகும். இதையறியாது, தந்தை முதலிய பிறர் உடல்களும் விதிப்படி அழிவதும் கண்டாலும் அழியாதிருக்கும் வழியறிந்தார்கள் இல்லை.

யோனிக்குளாசை யொழியா தனித்தியம் உங்களுயிர்
தேனிக்குள் இன்பஞ்சுகாதீத மோவருஞ் சிற்றின்பத்தில்

ஊனற்றுக்காய முடலற்று போம்பொழு தொன்றறியா
ஈனர்க்குச் சொர்க்கஞ் சுடுகாடொழிய இனியில்லையே. 9

காமத்தால் இன்பம் கருதி ஈடுபடுவோர் உடல் அழிவது அதனால் என அறியார்கள். காமம் உடையார்க்குச் சுடுகாடே சொர்க்கமாகும்.

விளக்கம்: சொர்க்கம் சுடுகாடு என்று வஞ்சமாய்ப் புகழ்ந்தார் (பழித்தார்) என அறிக.

## நேரிசை வெண்பா

இந்தவுடல் காயம் இறந்துவிடு மிவ்வுலகில்
வந்தவழி தானறியா வாழ்க்கை - இந்தவுடல்
அற்பக் குழியி லரவ மிருப்பதெனும்
கற்பகத்தை யாண்டிடுமோ காண். 10

இந்த உடல் இவ்வுலகில் இறந்து விடும். வந்தது எவ் வழியில் என அறியாத வாழ்வு இது. இவ்வுடலுக்குள் சிறிதாய் உள்ள ஒரு குழியில் (மூலத்தில்) குண்டலினி ஆகிய (அரவு) பாம்பு இருப்பதையும் நினைத்ததை எல்லாம் (கற்பகம்) அது தரும் என்பதையும் பலர் அறியவில்லை.

ஞானமறிந் தோர்க்கு நமனில்லை நாள்தோறும்
பானமதை யுண்டு பசியினால் - ஞானமது
கண்டால் உடலுயி ருங்காயம் வலுவாகும்
உண்டால் அமிர்தரச முண். 11

ஞானத்தை அறிந்தோர்க்கு எமனில்லை (யமன்) நாள்தோறும் யோகத்தால் ஊறும் அமுத பானத்தை உண்டு மேலும் உண்ண முடிவு செய்தால் உடல் உயிர் எல்லாம் வலிமை உண்டாகும். ஆகவே அமுத ரசத்தையே உண்க. அமிர்தரசம் - சிவசம்பு என்பாரும் (அமுரி) உளர். அமுரி - 'உப்பின் கசடு'; உடலில் தோன்றும் உப்புநீர்; சிறுநீர் என்றும் கூறுவர்.

சுழியறியார்க் கென்ன சுகமறியார்க் கென்ன
வழியறியார்க் கென்னஎய்து மாறு -சுழியறியா
மூலமறிந் தவ்வழியில் முத்தியடை யார்க்குநமன்
காலனவர்க் கேமரணங் காண். 12

சுழுமுனையை அறியாதவர்க்கும், யோக சுகம் அறியாத வர்க்கும், யோக வழியை அறியாதவர்க்கும் சித்தியை அடைய வேறு வழியில்லை. மூலமும் யோகமும் அறிந்து முயலாதார்க்கு முத்தி இல்லை. இயமன் வாராமல் போவதும் இல்லை.

வேத மறைஞான மெய்யுணர்வு தானாகில்
நாதனரு ளால்பதவி நாடுமே - வேதமறை
நாலு பொருளுள் நற்பொருளின் ஆறறியப்
பாலுமது நெய்யெனவும் பார். 13

வேத வழிப்படி மெய்யுணர்வு உண்டானால் நாதன் அருள் கிடைக்கும். முத்தியையும் நாடுவர். நான்கு வேதங்களும் அவற்றின் பொருளும் எப்படி எனில் பாலும் அதனால் உண்டாகிய நெய்யும் போன்றதாம்.

முதலிருந்த ஊழ்வினையை முப்பாழைச் சுட்டுப்
பதறா மதிபாடு பட்டேன் - முதலிருந்த
நல்வினையுந் தீவினையும் நாடாம லும்பிறந்து
வல்வினையிற் போக்கிவிட்டேன் வாழ்வு. 14

முதலில் உள்ள விதியை (ஊழ்வினையை) முப்பாழை யும் கடப்பதால் நீங்கிப் பதறாமல் ஆய்ந்தேன். நல்வினை தீவினைகளை நாடாமல் பிறந்து வல் வினையையும் போக்கி விட்டேன்.

விளக்கம்: இரு வினைகளை ஒட்டி மலபரிபாகம் இதில் கூறினார் என அறிக.

காயசித்தி யாலெனது கன்மவினை போக்கியபின்
மாயசித்தி மூலசுழி வாய்க்குமே -காயசித்தி
மூலப் புளியால் முதல்தீட்சை யாச்சுதுஇனிக்
காலமென்னி ரண்டாண்டில் காண். 15

காயசித்தியால் என் விதி வலிமையைப் போக்கிய பிறகு நான் மாய ஒரு சுழி உண்டாகாது. காயசித்தி மூலாதாரத்தை உணர்வதே முதல் தீட்சையாகும். இது முதல் இரண்டாண்டில் இதன் விளைவை அறியலாம்.

கல்லுப்பின் வாருங் கருத்தறியா துண்டுமனு
வல்வினைக் குள்ளாகி மரணமார் - கல்லுப்பு
வெள்ளைக்கல் லுப்பு வெகுவிதமாய் வந்தாலும்
உள்ளமதி லுண்டென்றே உன். 16

கல் உப்பு முதலியவை கொண்டு காய சித்திக்காக முப்பூ செய்யும் வழக்கத்தை எதிர்த்து உள்ளத்தால் யோகம் செய்தே அதைப் பெற முடியும் என்கிறார்.

என்றும்இந் துப்பாகும் எண்சா ணுடலிருக்கக்
கண்டுமறி யாதென்ன காரணமோ - என்றுமதி
வாரி யமுரியதை வன்னிவிட்டுக் காய்ச்சியபின்
வீரியமா யானுணரு மெய். 17

என்றும் இந்துப்பு வேண்டும். அது உடலுக்குள்ளே உள்ளது. இதைப் பலர் அறியவில்லை. அதன் காரணம் எதுவோ? அமுரியை உண்டு குண்டலினி நெருப்பால் யோகம் செய்து வீரியமாய் உடலை உணர்க.

உப்பின் கசடுதான் ஊறலது மாறினதால்
முப்புசுன்ன மாவதற்கு முன்னமே - உப்பதனால்
கற்பாந்தங் கோடி காய மிதுவலுத்துச்
சொற்பாயும் வாசியில் தேகம். 18

(உப்பின் கசடு - அமுரி) அதை உண்பதால் முப் பூவுக்குச் சுன்னம் (முதல் நிலை) என்றும் இதனால் கற்பாந்த கோடி காலம் உடலழியாது வலுத்து இருக்கச் செய்யலாம் என்றும் வாசியும் இதில் வேண்டும் என்றும் கூறுவர்.

விளக்கம்: உடலில் தோன்றும் உவர் நீர் அமுரி என்பதாம் அது சிறுநீர் என்றும் கூறுவர். சுன்னம் - முதல் நிலை.

அஞ்சுபஞ்ச பூதம் அறிந்தால் அனித்தியம்போம்
அஞ்சு வசப்படுவ தாண்டதனில் -அஞ்சினையும்
கண்டறி வோர்ஞானக் காட்சி யதினினைவு
விண்டறிய லாமே விதி. 19

ஐந்து பூதங்களின் உண்மையை அறிந்தால் அழிவது என்ற நிலை இல்லாது போகும். அவை ஓராண்டில் வசமாகும். ஐந்து பூதங்களின் நிகழ்வுகளைக் கண்டு அறிவோர் ஞானக் காட்சியைக் காண்பர். இவர்களுக்கு விதி உண்டு என்று கூற வேண்டாம்.

விளக்கம்: ஐந்து என்பது மூலாதாரம் முதல் விசுத்தி வரை உள்ள ஆதாரத்தை என அறிக. அவையே பஞ்ச பூதச் சார்பின.

எண்சாணாந் தேக மெடுத்தாலென் னாண்டையே
பெண்சாரல் நீக்கியே பேரின்பம் - கண்காணத்
தேக மொழியாமல் சித்தி பெறுஞானம்
யோகசித்தி பூசைவிதி யுன். 20

எண்சாண் உடம்பு கொண்ட பிறவி எடுத்ததற்காக வருந்த வேண்டாம். காமத்தை நீக்கி, உடல் அழியாமல் சித்தி பெறும் ஞானத்தை யோக சித்தி பூசை விதியால் உணர்ந்து சிந்திக்க. (உன் - சிந்திக்க)

# 29. அகத்தியர்

வேதம், இதிகாசம், புராணம், சங்க கால இலக்கியம், பிற்கால மருத்துவம், சித்தர் பாடல் எனப் பலவற்றிலும் இப்பெயருடன் ஒருவர் இருப்பது கொண்டு இங்குள்ள வரைத் தெளிய முடியவில்லை. போகரும் கருவூராரும் இவரைக் குரு எனக் கூறுகின்றனர். இவர் அட்டமா சித்தி யடைந்தவராகக் கூறப்படுகிறார். இவர் பாடலில் வேதாந்தக் கருத்துக்கள் மிகுதியாம். ஞானம் என்னும் ஐந்து பகுதி களாக இவர் பாடல்கள் காணப்படுகின்றன.

## அகத்தியர் பாடல்கள்

மூலமும் உரையும்

### ஞானம் - 1

**எண்சீர் விருத்தம்**

சத்தியே பராபரமே ஒன்றே தெய்வம்
சகலவுயிர் சீவனுக்கு மதுதா னாச்சு
புத்தியினா லறிந்தவர்கள் புண்ணி யோர்கள்
பூதலத்தில் கோடியிலே யொருவ ருண்டு
பத்தியினால் மனமடங்கி நிலையில் நிற்பார்
பாழிலே மனத்தை விடார் பரமஞானி
சுத்தியே யலைவதில்லை சூட்சஞ் சூட்சம்
சுழியிலே நிலையறிந்தால் மோட்சந் தானே. 1

என்றுமுள்ளது சத்தியம். எங்கும் நிறைந்தது பராபரம். இதுவே தெய்வம். எல்லா உயிர்களிலும் சீவனாக அதுவே உள்ளது. இதை அறிவால் புண்ணியர்கள் அறிவர். அப்படி அறிபவர் கோடியில் ஒருவரே இவ்வுலகில் உண்டு. அப்படி அறிந்ததால் பக்தி மிகுந்து மனம் அடங்கி ஒரே

நிலையில் நிற்பர். பாழானவற்றில் மனத்தை விட மாட்டார்கள். அவர்கள் பரம ஞானி ஆவர். எங்கும் சுற்றி இதை அலைந்து தேட வேண்டாம். சூக்குமமான ஒரு சுழியிலேயே இதன் நிலையை அறிந்தால் அவர்களுக்கு மோட்சமுண்டு.

மோட்சமது பெறுவதற்குச் சூட்சம் சொன்னேன்
மோகமுடன் பொய்களவு கொலை செய்யாதே
காய்ச்சலுடன் கோபத்தைத் தள்ளிப் போடு
காசினியிற் புண்ணியத்தைக் கருதிக் கொள்ளு
பாய்ச்சலது பாயாதே பாழ்போ காதே
பலவேத சாத்திரமும் பாரு பாரு
ஏச்சலில்லா தவர்பிழைக்கச் செய்த மார்க்கம்
என்மக்கா ளெண்ணியெண்ணிப் பாரீர் நீரே. 2

மோட்சம் பெறச் சூக்குமம் சொன்னேன். மோசம் செய்வதற்காகப் பொய் களவு கொலை செய்யாதே. மிகுந்த கோபத்தை அது வரும் போது தள்ளிப் போடு. உலகில் புண்ணியத்தையே கருத்தில் கொள்க. யாரிடத்து பாயாதே. பாழ் வழியில் போகாதே. பலவித வேத சாஸ்திரங் களையும் பார். ஏய்க்காமல் அவரவரும் உய்தியடையச் செய்த மார்க்கம் இது (யோகம்) என் மக்களே, இதை எண்ணிப் பார்ப்பீராக.

பாரப்பா நால்வேதம் நாலும் பாரு
பற்றாசை வைப்பதற்கோ பிணையோ கோடி
வீரப்பா ஒன்றொன்றுக்கு ஒன்றை மாறி
வீணிலே யவர்பிழைக்கச் செய்த மார்க்கம்
தேரப்பா தெருத்தெருவே புலம்பு வார்கள்
தெய்வநிலை ஒருவருமே காணார் காணார்
ஆரப்பா நிலைநிற்கப் போறா ரையோ
ஆச்சரியங் கோடியிலே யொருவன் தானே. 3

நான்கு வேதங்களையும் பலமுறை பார். பற்று, ஆசை முதலியன வைப்பதும், பிணைப்பதும் கோடி பேர்களாம். ஒரு சில சாஸ்திரம் வெவ்வேறாகச் சொன்ன வீராப்பு எல்லாம் அவர் அவர் பிழைப்பதற்காகச் செய்த மார்க்கமே யாகும். தெருவில் பலவிதமாகப் புலம்புவார்கள். எல்லாரும் நிலையாக இருக்கப் போவதில்லை. கோடியில் ஒருவன் வியக்கத் தக்கபடி நிலையாக இருப்பான்.

ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேணும்
　　உத்தமனாய்ப் பூமிதனி லிருக்க வேணும்
பருவமதிற் சேறுபயிர் செய்ய வேணும்
　　பாழிலே மனத்தைவிடான் பரமஞானி
திரிவார்கள் திருடரப்பா கோடா கோடி
　　தேசத்திற் கள்ளரப்பா கோடா கோடி
வருவார்க ளப்பனே அனேகங் கோடி
　　வார்த்தையினால் பசப்புவார் திருடர் தானே. 4

எல்லா மதத்துக்கும் யாவர்க்கும் உள்ள தெய்வம் ஒன்றே என வணங்க வேண்டும். பூமியில் உத்தமனாக வாழ வேண்டும். பரம ஞானி பாழான செய்திகளில் மனத்தை விட மாட்டான். திருட்டுத்தனமாகத் தம்மைப் புகழ்ந்து திரிபவர் கோடிக்கணக்கில் உளர். இவர்கள் தேசத்தில் உள்ள கள்ளத்தனமானவரே. அநேக கோடி பேர் வார்த்தையில் பசப்பி நம்மைத் திருட வருவர்.

தானென்ற தானேதா னொன்றே தெய்வம்
　　தகப்பனுந் தாயுமங்கே புணரும் போது
நானென்று கருப்பிடித்துக் கொண்டு வந்த
　　நாதனைநீ எந்நாளும் வணங்கி நில்லு
கோனென்ற திருடனுக்குந் தெரியு மப்பா
　　கோடானு கோடியிலே யொருவ னுண்டே
ஏனென்ற மனத்தாலே யறிய வேணும்
　　என்மக்காள் நிலைநிற்க மோட்சந் தானே. 5

தான் என்ற உணர்வைத் தருவதுதான் தெய்வமாகும். தாய் தந்தையர் உடலால் கலந்து இன்புறும்போது நான் எனும் உணர்வைத் தரும் ஒரு பொருள் கருவில் தோன்றி வந்தது. அந்த நாதனை எந் நாளும் வணங்கி நில். உலகில் தலைவ ராய் உள்ளவர்ககும் இது தெரியும். திருட்டுத் தனமாக இதை மறைப்பர். கோடிகளில் ஒருவன் மறைக்க மாட்டான். ஏன் என்று எதையும் மனத்தால் விசாரிக்க வேண்டும். என் மக்களே! நிலையாக நிற்க மோட்சமே சாதனம் ஆகும்.

மோட்சமது பெறுவதற்குச் சூட்சம் கேளு
முன்செய்த பேர்களுடன் குறியைக் கேளு
ஏய்ச்சலது குருக்களது குலங்கள் கேளு
எல்லாருங் கூடழிந்த தெங்கே கேளு
பேச்சலது மாய்கையப்பா வொன்று மில்லை
பிதற்றுவா ரவரவரும் நிலையுங் காணார்
கூச்சலது பாளையந்தான் போகும் போது
கூட்டோடேபோச்சுதப்பா மூச்சுத் தானே. 6

மோட்சம் பெறச் சூக்குமம் கேள். முன்பு இப்படி முயன்றவர் குறிப்பைக் கேட்டு அறிக. ஏய்க்கின்ற குருக்களின் குலங்கள் கேட்டு அறிக. எல்லாரும் எப்போது எப்படி இவ்வுடலை நீத்தனர் என அறிக. பேச்சால் பேசுவது யாவும் மாயையே. பிதற்றுவர் பலர் அவரவர் நிலைகளை அறியார். கூச்சலிட்டுப் பலரும் அழுது போகும் போது, கூடும் (உடலும்) மூச்சும் ஒன்றாக மறைந்தன.

விளக்கம்: படைவீரர் அணி பாளையம் எனப்படும் இங்குப் பலர் என்று நின்றது.

மூச்சொடுங்கிப் போனவிடம் ஆருங் காணார்
மோட்சத்தின் நரகாதி யிருப்புங் காணார்
வாச்சென்றே வந்தவழி யேற்றங் காணார்
வளிமாறி நிற்குமணி வழியுங் காணார்

வீச்சப்பா வெட்டவெளி நன்றாய்ப் பாரு
வேதங்கள் சாத்திரங்கள் வெளியாய்ப் போச்சே
ஆச்சப்பா கருவுதனில் அமைந்தாற் போலாம்
அவனுக்கே தெரியுமல்லா லறிவாய்ப் பாரே. 7

மூச்சு எங்கே ஒடுங்கி நாம் மறைகிறோம் என்பதை யாரும் அறிவதில்லை. மோட்சம், நரகம் முதலியன எங்கு உள்ளன என்றும் அறியார். வாய்ப்பாக வந்த போதும் ஏறுவதுமான வழியும் காணார், மூச்சுக் காற்றை மாற்றி விட்டு மூச்சின்றி நிற்கும் வழியையும் அறியார், வெட்ட வெளியை ஊன்றி உணர்ந்து பார்ப்பீராக. வேதமும் சாத்திரமும் வெளியிலிருந்தே பெறப்பட்டன. கருவில் அமைவதை அறிவால் அவனாக அறிந்து பார்ப்பாராக.

பாரப்பா வுலகுதனிற் பிறவி கோடி
படைப்புகளோ பலவிதமாய்க் கோடா கோடி
வீரப்பா அண்டத்திற் பிறவி கோடி
வெளியிலே ஆடுதப்பா வுற்றுப் பாரு
ஆரப்பா அணுவெளியி லுள்ள நீதான்
ஆச்சரியம் புழுக்கூடு வலைமோ தப்பா
கூரப்பா அண்டத்திற் பிண்ட மாகும்
குணவியவா னானக்காற் சத்ய மாமே. 8

ஒரு பொருளே பல பிறவிகளில் உலகில் பிறக்கும். படைப்புகளோ இப்படிப் பார்த்தால் பல கோடியாகும். அண்டங்களிலேயே பலகோடி உயிர்கள் வெளிப்பட ஆடுவதை உற்றுப்பார். அணுக்கள் பல உள்ள வெளியில் தான் நீயும் இருந்தாய். அதை உற்றுப் பார்த்தால் வியப்பாக இருக்கும். புழுக்கள் பலவலைகளாகப் பின்னியதாய் இருக்கும். மேலும் அண்டத்தில் உள்ள எல்லாம் இவ் வுடம்பிலும் (பிண்டம்) இருக்கும். குணம் மிக்கவர் ஆனால் சத்தியமாய் இவை தோன்றும்.

சத்தியமே வேணுமடா மனித னானால்
சண்டாளஞ் செய்யாதே தவறி டாதே
நித்தியகர் மம்விடாதே நேமம் விட்டு
நிட்டையுடன் சமாதிவிட்டு நிலைபே ராதே
புத்திகெட்டுத் திரியாதே பொய்சொல் லாதே
புண்ணியத்தை மறவாதே பூசல் கொண்டு
கத்தியதோர் சண்டையிட்டும் தர்க்கி யாதே
கர்மியென்று நடவாதே கதிர்தான் முற்றே. 9

மனிதனாகப் பிறந்தால் சத்தியம் தேவை. சண்டாளத் தனம் செய்து தவறு இழைக்காதே. நியமத்தையும் அன்றாடச் செய்கைகளையும் விடாதே. நிட்டை, சமாதி இவற்றை விட்டு வேறு நிலைக்குப் போகாதே. புத்தி கெட்டுத் திரியாதே. பொய் சொல்லாதே. புண்ணியம் பெரிது என மறவாதே. பூசல் கொண்டு கத்தித் தர்க்கம் செய்யாதே. கருமியாக (பணப்பற்றாளனாக) இருக்காதே. கதிர் போல் மனம் முற்றுதல் ஆகட்டும்.

## ஞானம் -2

மனமது செம்மை யானால்
மந்திரம் செபிக்க வேண்டா
மனமது செம்மை யானால்
வாயுவை உயர்த்த வேண்டா
மனமது செம்மை யானால்
வாசியை நிறுத்த வேண்டா
மனமது செம்மை யானால்
மந்திரம் செம்மை யாமே. 1

எல்லா நன்மைகளுக்கும் வெற்றி ஆகியவற்றுக்கும் அடிப்படை மனமேயாகும். இது கோணாமல் சிறப்பாக இருந்தால் வேறு மந்திரம் கூற வேண்டாம். காற்றைப்

பிராணாயாமத்தால் உயர்த்தவும் வேண்டாம். வாசியாக மூச்சை அடக்க வேண்டாம். மந்திரம் எல்லாம் மனத்தின் செம்மையால் மட்டுமே செம்மையாகும்.

## உயர் ஞானம்

### எண்சீர் விருத்தம்

உண்ணும்போ துயிரெழுத்தை வுயர வாங்கி
உறங்குகின்ற போதெல்லா மதுவே யாகும்
பெண்ணின்பா லிந்திரியம் விடும்போ தெல்லாம்
பேணிவலம் மேல்நோக்கி அவத்தில் நில்லு
திண்ணுங்கா யிலைமருந்து மதுவே யாகும்
தினந்தோறும் அப்படியே செலுத்த வல்லார்
மண்ணூழி காலமட்டும் வாழ்வார் பாரு
மறலிகையில் அகப்படவு மாட்டார் தாமே. 2

(உயிர் எழுத்து ஆன்மாவுக்குரிய எழுத்து. இது ஓம் எனப்படும்.) உண்ணும் போதும் உறங்குவதற்குப் போகும் போது இதைக் கீழ் மேலாக உயர்த்துக. பெண்ணில் இந்திரியத்தை (விந்து) விடும்போது, கீழிருந்து வலப்பக்கமாக இவ்வெழுத்து மேல் நோக்கிப் போவதாகக் கருதி உச்சியில் வெளியில் மனத்தை நிறுத்து. மருந்து மூலிகை உண்ணும் போதும் இதை இப்படியே மேல் உயர்த்துக. இவ்வாறு தினமும் செலுத்த வல்லவர்கள் மண்ணில் ஊழிக்காலம் வரை வாழ்வார்கள். யமன் கையில் அகப்பட மாட்டார்கள்.

விளக்கம்: உண்ணுதல், உறங்குதல், பெண்ணின்பம், மருந்து உண்ணல் முதலிய சிறப்பான காலங்களில் உள் உணர்வாகிய ஆத்மா மிகவும் விழித்திருக்கும். அப்போது இதைச் சொல்வதும் செய்வதும் பெரும் பயனாம்.

## தனி ஞானம்

ஒண்ணான உச்சிவெளி தாண்டி நின்று
உமையவளுங் கணபதியு முந்தி யாகி
விண்ணொளியாம் அம்பரம்ஓம் அவ்வும் உவ்வும்
விதித்தபரம் ஒருவருக்கும் எட்டா தப்பா
பண்ணான உன்னுயிர் தான்சிவம தாச்சு
பாற்கடலில் பள்ளிகொண்டான் விண்டு வாச்சு
கண்ணான கணபதியைக் கண்ணில் கண்டால்
கலந்துருகி யாடுமடா ஞானம் முற்றே. 3

உச்சிவெளியாகி ஒன்றையும் தாண்டி மேல், மனத்தை நிறுத்த வேண்டும். உமையவளும் கணபதியும் இருக்கும் மூலாதாரத்தை முன்னதாக நினைத்தபின் இதைச் செய்க. விண் ஒளிகளின் கலவையாகிய ஓம், அ, உ, எனும் எழுத்துக்களில் வெளிப்படும். தெய்வ சக்தி ஒருவருக்கும் எட்டாது. பண்பட்ட உன் உயிரே சிவமதாகும். பாற்கடலில் பள்ளி கொண்ட விஷ்ணுவையும், கணபதியையும் (மணிப்பூரகம், மூலாதாரம்) அவரவர் இடங்களைக் கருதிக் கண்டால் ஞானம் கலந்து உருகிவரும்.

விந்துநிலை தனையறிந்து விந்தைக் கண்டால்
விதமான நாதமது குருவாய்ப் போகும்
அந்தமுள்ள நாதமது குருவாய்ப் போனால்
ஆதியந்த மானகுரு நீயே யாவாய்.
சந்தேக மில்லையடா புலத்தியன்னே
சகலகலை ஞானமெல்லா மிதற்கொவ் வாவே.
முந்தாநாள் இருவருமே கூடிச் சேர்ந்த
மூலமதை யறியாட்டால் மூலம் பாரே. 4

விந்துவாகிய ஆக்ஞையை உணர்ந்தால், விதமான நாதம் புறப்படும். அதுவே குருவாம். மூலாதாரம் முதல், தலை உச்சியில் ஆறு விரல் உயரம் வரை, நாதம்

இருப்பதை உணர்வதும் குரு உபதேசமாகும். இப்படி உணர்ந்தால் ஆதியும் அந்தமுமான குருவாக நீயே ஆவாய். புலத்தியனே, இதில் ஐயமில்லை! சகல கலைகளின் ஞானமும் இந்த உணர்வுக்கு நிகராகாது. இதற்கு மூன்பு கடவுளும் நீயும் சேர்ந்த இடம் அறியாது போனால் மூலாதாரமே அது என எண்ணி உற்றுப்பார். (புலத்தியன் இவர் சீடரின் பெயர். அவரை அழைத்துக் கூறியதாம்.)

மூலமதை யறிந்தக்கால் யோக மாச்சு
முறைமையுடன் கண்டக்கால் வாத மாச்சு
சாலமுடன் கண்டவர்முன் வசமாய் நிற்பார்
சாத்திரத்தைச் சுட்டெறிந்தா லவனே சித்தன்
சீலமுள்ள புலத்தியனே பரம யோகி
செப்புமொழி தவறாமல் உப்பைக் கண்டால்
ஞாலமுள்ள எந்திரமாஞ் சோதி தன்னை
நாட்டினால் சகலசித்தும் நல்கும் முற்றே. 5

(மூலாதாரம்) மூலத்தை அறிவதுதான் யோகமாகும். முறையாக இதைக் கண்டால் இரசவாதம் செய்யலாம். முன் நிற்பவரை வசம் செய்யும் சாலம் உண்டாகும். இதைத் தவிர வேறு சாத்திரம் தேவையில்லாதவன் சித்தனாவான். சீலமுள்ள புலத்தியனே! பரம யோகியின் உபதேச உட்பொருளைக் (உப்பு) கண்டால் இதுவே இயந்திர வழிபாடு ஆகும். சோதியை இந்த இயந்திரத்தில் காணப் பெற்றால் சகலவிதமான சித்துக்களும் கிடைக்கும்.

## ஞானம் -3

பாரப்பா சீவன்விட்டுப் போகும் போது
பாழ்த்தபிணங் கிடக்குதென்பார் உயிர்போச் சென்பார்
ஆரப்பா அறிந்தவர்கள்? ஆரும் இல்லை
ஆகாய சிவத்துடனே சேரு மென்பார்

காரப்பா தீயுடன்தீச் சேரு மென்பார்
கருவறியா மானிடர்கள் கூட்ட மப்பா
சீரப்பா காமிகள் தாமொன்றாய்ச் சேர்ந்து
தீயவழி தனைத்தேடிப் போவார் மாடே. 1

உடலை விட்டுச் சீவன் பிரிந்தால் பிணம் கிடக்கிறது என்பர்; உயிர் போய் விட்டது என்பர்; யார் இது பற்றி முழுதும் அறிந்தவர்கள்? யாரும் இல்லை! உயிர் ஆகாயத்தி லுள்ள சிவத்தோடு சேரும் என்பர். தீயோடு தீ இணைவது போல் சிவமாகி விடும் என்பர். கருவின் நிலை அறியாத மானிடரின் கூட்டம் இப்படிக் கூறும். காமம் உடையோர் ஒன்றாய்க் கூடித் தீய வழி நாடிப் போவார்.

மாடுதா னானாலும் ஒருபோக் குண்டு
மனிதனுக்கோ அவ்வளவுந் தெரியா தப்பா
நாடுமெத்த நரகமென்பார் சொர்க்க மென்பார்
நல்வினையோ தீவினையோ எண்ண மாட்டார்
ஆடுகின்ற தேவதைகள் அப்பா கேளு
அரியதந்தை யினஞ்சேரு மென்றுந் தோணார்
சாடுமெத்த பெண்களைத்தான் குறிப்பா யெண்ணித்
தளமான தீயில்விழத் தயங்கி னாரே. 2

மாடுகள் புதிது புதிதாக நினைத்து மாற்றம் செய்வ தில்லை. மனிதன் மாற்றம் செய்பவன். நரகம், சொர்க்கம், நல்வினை, தீவினை என்பர். பலவித தேவதைகளும் ஆடுகின்றன. தந்தை இனத்தில் அவை சேரா. பெண் களையே அத்தேவதைகள் வந்து சாரும். அத்தேவதை தீண்டிய பெண்கள் தீயில் விழ மட்டும் தயங்குவர். இதனால் அவர்களை அறிக.

தயங்காமற் பிழைப்பதற்கே இந்த ஞானம்
சார்வாகப் பாராட்டும் ஞானம் வேறே
மயங்குதற்கு ஞானம்பார் முன்னோர் கூடி
மாட்டினார் கதைகாவ்ய புராணமென்றும்

இயலான ரசந்தனிலீப் புகுந்தாற் போலும்
இசைத்திட்டார் சாத்திரங்க ளாறென்றேதான்
வயலான பயன்பெறவே வியாசர் தாமும்
மாட்டினார் சிவனாருத் தரவி னாலே. 3

பிழைப்பு நடத்தவே தேவதை பற்றிப் பேசுவார்கள். ஆனால் பிறர் பாராட்டும் ஞானம் வேறாகும். குழப்பம் தர முன்பே கதையும் காவியமும் புராணமும் சொன்னார்கள். இவை ஆறு விதமான சாத்திரக் கலைகளாம். ஆறு அங்கம் என்பர். சிவனின் உத்தரவினால் வியாசர் இப்புராணங்கள் பயன் பெறுமாறு செய்தார்.

உத்தார மிப்படியே புராணங் காட்டி
உலகத்தில் பாரதம்போல் கதையுண் டாக்கிக்
கர்த்தாவைத் தானென்று தோண வொட்டாக்
கபடநா டகமாக மேதஞ் சேர்த்துச்
சத்தாக வழியாகச் சேர்ந்தோர்க் கெல்லாஞ்
சதியுடனே வெகுதர்க்கம் பொருள்போற் பாடிப்
பத்தாகச் சைவர்க்கொப் பனையும் செய்து
பாடினார் சாத்திரத்தைப் பாடி னாரே. 4

இப்படிப் பல காரணங்களில் புராணம் காட்டி, மகாபாரதம் போல் பல கதைகளை உண்டாக்கி, உலகத்தில் கடவுள் தானே என்பதை உணராதபடி கபடநாடகம் செய்வர்: அறிவார்ந்த தர்க்கம் பல பேசிச் சதி செய்வர். பத்துவகையான சைவம் உண்டு என ஒப்பனை செய்து சாத்திரம் பாடியுள்ளனர்.

(பத்துவிதமான சைவம் - ஆதி, அநாதி, மகர, பேத, அபேத, அந்தர, குண, நிர்க்குண, அத்துவா, யோக சைவம் என்பனவாம். மேலும் பல பிரிவுண்டாம்)

பாடினதோர் வகையேது? சொல்லக் கேளு;
பாரதபு ராணமென்ற சோதி யப்பா
நீடியதோர் ராவணன்தான் பிறக்கவென்றும்
நிலையான தசரதன்கை வெல்க வென்றும்
நீடியவோ ராசனென்றும் முனிவ ரென்றும்
நிறையருள் பெற்றவ ரென்றுந் தேவ ரென்றும்
ஆடியதோர் அரக்கரென்றும் மனித ரென்றும்
பாடினார் நாள்தோறும் பகையாய்த் தானே. 5

பாடிய வகை எப்படி என்றால் பாரத புராணம் என்பன ஒருவித சோதியால் (அறிவால், கற்பனையால்) பாடியதாம். இராவணன் தசரதன் என்ற அரசர்களும், அரக்கர்களும், முனிவர்களும், நிறையருள் உடையவர் என்றும், மனிதர் என்றும் வேறுபாடும் பகையும் தோன்றப் பாடி வைத்தனர்.

கழிந்திடுவார் பாவத்தா லென்று சொல்லும்
கட்டியநால் வேதமறு சாத்தி ரங்கள்
அழிந்திடவே சொன்ன தல்லால் வேறொன் றில்லை
அதர்மமென்றுந் தர்மமென்றும் இரண்டுண் டாக்கி
ஒழிந்திடுவா ரென்றுசொல்லிப் பிறப்புண் டென்றும்
உத்தமனாய்ப் பிறப்பனென்று முலகத் தோர்கள்
தெளிந்திடுவோர் குருக்களென்றுஞ் சீடரென்றும்
சீவனத்துக்கு அங்கல்லோ தெளிந்து காணே. 6

பாவம் அழியும் என்று சொல்லி நான்கு வேதங்களும் ஆறு சாத்திரங்களும் சொன்னார்கள். அவை யாவும் அழிவதற்குரியனவே. அதர்மம், தர்மம் என இரண்டு சொல்லி, பிறப்புக்கள் உண்டென்றும் சொல்லி உத்தம னாகப் பிறக்கும் இவை என்பர். குருக்கள் உலகில் தெளிந்த அறிவுடையோர் என்றும், சீடர் என்றும் வகுத்தன எல்லாம் பொருள் தேடிப் பிழைப்பதற்கு வந்தன என்று தெளிக.

## ஞானம் - 4

### எண்சீர் விருத்தம்

பூரணமே தெய்வமென உரைத்தா ரையா
பூரணத்தை யின்னதென்று புகல வேண்டும்
காரணத்தைச் சொல்லுகிறேன் நினைவாய்க் கேளு
கலையான பதினாறும் பூரணமே யாகும்
மாரணமாம் உலகத்தில் மதிம யங்கி
மதிகெட்டுப் பூரணத்தை யிகழ்ந்தா ரையா
வாரணத்தை மனம்வைத்துப் பூரணத்தைக் காத்தால்
வாசியென்ற சிவயோக வாழ்க்கை யாச்சே. 1

பூரணமாக உள்ளதே தெய்வம் எனப் பெரியோர் உணர்ந்தனர். பூரணம் என்பது என்ன என்று சொல்ல வேண்டும். எல்லாம் உண்டாவதற்குக் காரணமே அது தான். பதினாறு கலை எனப்படுவனவே பூரணமாகும். கணபதியை (வாரணம்) மனத்தில் வைத்துப் பூரணத்தைக் காத்தால் (போற்றினால்), வாசியாகிய சிவயோக வாழ்க்கை கைகூடும்.

(பதினாறு கலைகள் - சந்திரனுக்குரியவை பிரதமை முதல் பவுர்ணமி முதல் 15 திதிகள் சூன்யமான அமாவாஸ்யை சேரப் பதினாறு ஆகும். மேலும் அகரம், மகரம், உகரம், விந்து, அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபிணி, அனந்தை, அனாதை, அனாசிருதை, சமனை, உன்மனை)

ஆச்சப்பா இந்தமுறை பதினெண் பேரும்
அயன்மாலும் அரனோடு தேவ ரெல்லாம்
மூச்சப்பா தெய்வமென்றே யறியச் சொன்னார்
முனிவோர்கள் இருடியரிப் படியே சொன்னார்;
பேச்சப்பா பேசாமல் நூலைப் பார்த்துப்
பேரான பூரணத்தை நினைவாய்க் காரு
வாச்சப்பா பூரணத்தைக் காக்கும் பேர்கள்
வாசிநடு மையத்துள் வாழ்வார் தானே. 2

இந்த வகையில் பதினெட்டுச் சித்தர்களும் மும்மூர்த்திகளும், தேவர்களும், தெய்வம் என்று நாம் அறியச் சொன்னார்கள். ஆகவே பேச்சைத் தவிர்த்து நூல் கற்றுப் பூரணத்தை நிலையாகக் காப்பாயாக. இப்படிப் பூரணத்தைக் காப்போர்கள் வாசியின் நடுவே வாழ்வாராம்.

விளக்கம்: வாசி - யோக சித்தி, 18 சித்தர் என்பவர்கள் அட்டமா சித்தி பெற்றவராதலால் தெய்வமென்றார்.

தானென்ற பெரியோர்க ளுலகத் துள்ளே
தாயான பூரணத்தை யறிந்த பின்பு
தேனென்ற அமுதமதைப் பானஞ் செய்து
தெவிட்டாத மவுனசிவ யோகஞ் செய்தார்;
ஊனென்ற வுடலைநம்பி யிருந்த பேர்க்கே
ஒருநான்கு வேதமென்றும் நூலா றென்றும்
நானென்றும் நீயென்றும் சாதி யென்றும்
நாட்டினா ருலகத்தோர் பிழைக்கத் தானே. 3

தான் என்று உணரும் பெரியோர் உலகத்தில் தாயாகிய (வாலையை) பூரணத்தை அறிந்து, யோக சித்தியால் தோன்றும் அமுதத்தை உடலில் அருந்தி, இடைவிடாது மவுனமாகிய சிவயோகம் செய்தார்கள். தசையால் ஆகிய இந்த உடலை மட்டும் நம்பி இருந்தவர்கள், நான்கு வேதம், ஆறு அங்கம் (நூல்), நான் நீ என்ற சாதிப் பிரிவு ஆகியன தம் பிழைப்புக்காக உலகத்தோர் நாட்டினார்கள்.

பிழைப்பதற்கு நூல்பலவுஞ் சொல்லா விட்டால்
பூரணத்தை யறியாம லிறப்பா ரென்றும்
உழைப்பதற்கு நூல்கட்டிப் போடா விட்டால்
உலகத்திற் புத்திகெட்டே யலைவா ரென்றும்
தழைப்பதற்குச் சாதி யென்றும்விந்துவென்றும்
தந்தைதாய் பின்னையென்றும் பாரி யென்றும்
உழைப்பதற்குச் சொன்னதல்லாற் கதிவே றில்லை
உத்தமனே யறிந்தோர்கள் பாடி னாரே. 4

பிழைப்புக்கான நூல்கள் பலவும் சொல்லாவிட்டால் பூரணத்தை அறியாமல் இருப்பர் என்றும், நூல் கட்டிக் கூறாவிட்டால் உழைக்கவும் முடியாது உலகில் பலர் புத்தி கெட்டுப்போவர் என்றும், சாதி என்றும், விந்து என்றும், தந்தை தாய் பிள்ளை ஆகியவர் சமம் என்றும் பலவாகக் கூறியது, பலரும் அது பற்றியே பேசுவதற்காகவே ஆகும்.

பாடினா ரிப்படியே சொல்லா விட்டால்
பரிபாடை யறியார்கள் உலக மூடர்
சாடுவார் சிலபேர்கள் பலநூல் பார்த்துத்
தமைமறந்து படுகுழியில் விழுவார் சாவார்
வாடுவார் நாமமென்றும் ரூபமென்றும்
வையகத்திற் கற்செம்பைத் தெய்வ மென்றும்
நாடுவார் பூரணத்தை யறியார் மூடர்
நாய்போலே குரைத்தல்லோ ஒழிவார் காணே. 5

இப்படி விவரமாகக் கூறாவிட்டால் உலகில் அறியாமை உடையோர் வேற்று மொழிகளும் அறிய மாட்டார்கள். சிலர் முரண்படுவர். பல நூலும் படித்துப் படுகுழியில் விழுந்து அழிவர். பூரணத்தை அறியாதவர் நாமம் ரூபம் (வடிவு) என்றும் வாடுவார்கள். கல்லாலும் செம்பாலும் அமைக்கப்பட்ட வடிவங்களைத் தெய்வம் என்று நாடுவர். இவர்கள் முரண்பட்டு நாய்போல் குரைப்பர்.

காணாமல் அலைந்தோர்கள் கோடா கோடி
காரணத்தை யறிந்தோர்கள் கோடா கோடி
வீணாகப் புலம்பினதா லறியப் போமோ
விஞ்ஞானம் பேசுவதும் ஏதுக்காகும்
கோணாமற் சுழுமுனையில் மனத்தை வைத்துக்
குருபாத மிருநான்கில் நாலைச் சேர்த்து
நாணாம லொருநினைவாய்க் காக்கும் போது
நாலுமெட்டு மொன்றாகும் நாட்டி யூதே. 6

பூரணத்தைக் காணாது அலைந்தவர்களும் காரணமான அதை அறிந்தவர்களும் கோடிக்கணக்கு உள்ளவர்களே. வீணாகப் புலம்புவதால் இதை அறிய முடியாது. விஞ்ஞானம் பேசுவதும் இதற்குக் காரணமாகலாம். (ஆத்மாவை அறியும் முயற்சி விஞ்ஞானம் எனப்படும்) அங்கும் இங்கும் பெயராமல் மனத்தை நிலையாகச் சுழுமுனையில் வைத்து, உச்சியில் உள்ள எட்டிதழ்த் தாமரையுடன் மூலாதாரத்தில் (அடிப்பாகம்) உள்ள நான்கு இதழையும் சேர்த்து, ஒரே நினைவுடன் பிராணாயாமமும் செய்யும் போது இவை அடி முதல் முடிவரை ஒரு நேர்க்கோடாக விளங்கும். (உச்சியில் உள்ள எட்டு இதழ்த் தாமரை குருபாதம் எனப்படும்)

ஊதியேதோ ரூதறிந்தா லவனே சித்தன்
உத்தமனே பதினாறும் பதியே யாகும்
வாதிகளே யிருநான்கும் பதியின் பாதம்
வகைநான்கு முயிராகும் மார்க்கங் கண்டு
சோதிபரி பூரணமும் இவைமூன் றுந்தான்
தூங்காமல் தூங்கி யங்கே காக்கும்போது
ஆதியென்ற பராபரையு மரனு மொன்றாய்
அண்ணாக்கின் வட்டத்துள் ளாகும் பாரே. 7

தான் பிராணாயாமம் செய்வதை உடம்பின் உட்பாகங் களில் முழுதுமாக உணர்பவன் சித்தனாவான். பதினாறு கலைப் பகுதிகளும் தெளிந்திருக்கும் இடமாகும். தலையில் உள்ள எட்டு இதழ்களும் கடவுள் பாதமாகும். இதனுடன் சேர்ந்து உயிர், சோதி, பரிபூரணம் என்பன மூன்றையும் நினைத்தபடி யோகம் செய்தால், பராசத்தியும் சிவமும் ஒன்றாகி அண்ணாக்கு வட்டத்தில் உணர்வு தருவார்கள்.

பாரப்பா உதயத்தில் எழுந்திருந்து
பதறாமற் சுழுமுனையில் மனத்தை வைத்துக்
காரப்பா பரிதிமதி யிரண்டு மாறிக்
கருவான சுழுமுனையில் உதிக்கும் போது

தேரப்பா அண்ணாக்குள் நின்று கொண்டு
　　தியங்காமற் சுழுமுனைக்குள் ளடங்கும் பாரு
சீரப்பா பதினாறில் எட்டும் நான்கும்
　　சிதறாமல் மூன்றும்ஒன்றாய்ச் சேர்ந்து போமே. 8

உதய காலத்தில் (4 மணி முதல் 6 வரை வைகறை என்பதும் பொருந்தும். எழுந்து) பரபரப்பு இல்லாமல் மூலாதாரத்தில் புறப்படும் சுழுமுனை நாடியில் மனம் வைத்து, அதைச் சுற்றி இடா, பிங்களா நாடிகள் பாம்புப் பின்னலாக மாறுவதைப் பயிற்சி செய்தால், சுழுமுனை நாடியின் வாயில் குண்டலினியில் ஒளி ஏறத் தொடங்கும். அப்போது அண்ணாக்கில் மனம் வைத்தால் உணர்வு சுழுமுனைக்குள் அடங்கக் காணலாம். பதினாறு (விசுத்தி), எட்டு (தலை உச்சி), நான்கு, (மூலாதாரம்) எல்லாம் (மூன்றும்) ஒன்றுபட்டு ஒரே ஒளித்தூணாக இருக்கக் காணலாம். (இதுவே முழுமையான யோகமாகும்)

ஒன்றான பூரணமே யிதுவே யாச்சு
　　உதித்தகலை தானென்று மிதுவே யாச்சு
நன்றாகத் தெளிந்தவர்க்கு ஞானஞ் சித்தி
　　நாட்டாமற் சொன்னதனால் ஞான மாமோ
பன்றான ஆதிகுரு சொன்ன ஞானம்
　　பரப்பிலே விடுக்காதே பாவமாகும்
திண்டாடு மனத்தோர்க்குக் காணபோகா
　　தெளிந்தவர்க்குத் தெரிவித்த வுகமை தானே. 9

மேற்கூறிய பாடலில் ஒன்றாக உள்ள ஒளித்தூணே பூரணம் (கடவுள்) என்றானது. கலைகள் உதித்தல் என்பது இதுவே. இதை நன்கு உணர்ந்து பயிற்சி செய்பவர் ஞானசித்தி யடைவர். இதில் நாட்டமில்லாதவர்களுக்குச் சொன்னாலும் அது ஞானமாகாது. இதுவே குரு சொல்லிய ஞானமாகும். இதை எங்கும் பரவலாகச் சொல்லிப் பலரையும் அரைகுறையாக்குவதால் பாவமே உண்டாகும்.

பலவகையில் திண்டாடும் மனம் உடையார்க்கு இது தெரிய முடியாதது. இதைத் தெளிவாக உணர்ந்தவர்களுக்குச் சொல்வது உவகை தருவதாகும்.

உகமையின்னஞ் சொல்லுகிறேன் உலகத் துள்ளே
        உவமையுள்ள பரிகாசம் நனிபே சாதே
பகைமை பண்ணிக் கொள்ளாதே வீண்பே சாதே
        பரப்பிலே திரியாதே மலையே றாதே
நகையாதே சினங்காதே யுறங்கி டாதே
        நழுவாதே சுழுமுனையிற் பின்வாங் காதே
செகமுழுதும் பரிபூரண மறிந்து வென்று
        தெளிந்துபின் உலகத்தோ டொத்து வாழே. 10

உவகை தருவதனை இன்னும் சொல்கிறேன். உலகில் யோகப் பயிற்சி பற்றி உவகை கூறுவதோ கேலி பேசுவதோ கூடாதே. இது பற்றிப் பேசிப் பிறருடன் பகைமை பண்ணிக் கொள்ளாதே. வீண் பேச்சும் பரவலாக இதைப் பேசுவதும் செய்யாதே. மலையில் போய்த் தனித்து இதை அவசர மாய்ப் பயிற்சி செய்யாதே. நகைத்தல் சினத்தல் வேண்டாம். (வெறும் பேச்சிற்கு நகைப்பதை விலக்கு என்றார்) உறக்கமும் அளவோடு இருக்கட்டும். சுழுமுனையில் பயிற்சி செய்வதைக் கைவிடாதே. நமக்குள்ளும் பிரபஞ்சம் முழுதும் பரிபூரணம் இருப்பதைத் தெரிந்து கொள். அறிந் தாலும் உலகத்தவர்போல் நீயும் ஒன்றி வாழ்க.

வாழாமல் உலகம் விட்டு வேடம் பூண்டு
        வயிற்றுக்கா வாய்ஞானம் பேசிப் பேசித்
தாழ்வான குடிதோறும் இரப்பான் மட்டை
        தமையறியாச் சண்டாளர் முழுமா டப்பா
பாழாகப் பாவிகளின் சொற்கே ளாதே
        பதறாதே வயிற்றுக்கா மயங்கி டாதே
கேளாதே பேச்செல்லாங் கேட்டுக் கேட்டுக்
        கலங்காதே யுடலுயிரென் றுரைத்தி டாதே. 11

உலகத்தாருடன் ஒன்று பட்டு வாழாமல், துறவி வேடம் முதலிய ஒப்பனை செய்து, வயிற்றுப் பிழைப்புக் காக வெறும் வாய் ஞானம் மட்டும் பேசிப் பேசி, தாழ்ந்த குடிசைகள் தோறும் பிச்சை எடுத்து உண்பவன் வெறும் மட்டை தம்மை அறியாத சண்டாளர் முழுமாடே ஆவார். பாழாகப் போகச் செய்யும் பாவிகளின் சொல் கேட்காதே. பதறாதே. வயிற்றுக்காகக் குழப்பமாகி விடாதே. எல்லார் பேச்சும் கேட்டுக் கலக்கம் அடையாதே. உன் உடல் உயிர் எனப் பிரித்துப் பேசாதே (இரண்டும் கூடிக் கடவுள் என அறிக. அரிசிக்கு உமி போல உயிருக்கு உடல் உள்ளதாகக் கருதுக. உயிர் பூரணமாகும்)

உடலுயிரும் பூரணமும் மூன்று மொன்றே
உலகத்திற் சிறிதுசனம் வெவ்வே றென்பார்
உடலுயிரும் பூரணமும் ஏதென் றக்கால்
உத்தமனே பதினாறு மொருநான் கெட்டும்
உடலுயிரும் பூரணமும் அயன்மா லீசன்
உலகத்தோ ரறியாமல் மயங்கிப் போனார்
உடலுயிரும் பூரணடி முடியு மாச்சே
உதித்தகலை நிலையறிந்து பதியில் நில்லே. 12

உடல், உயிர், பூரணம் (கடவுள்) ஆகிய மூன்றுமே ஒன்றே ஆகும். வேறு சிலர் இவை வேறு வேறு என்பர். இது எப்படி என்றால் பதினாறு தாமரை கொண்ட விசுத்தி, மூலாதாரம் (நான்கு இதழ்த் தாமரை), உச்சியின் எட்டு இதழ்த் தாமரை, உடலும் உயிரும், பூரணமும், பிரமன், திருமால், உருத்திரன் இவை யாவும் உலகத்தவர் அறியாத படி மறைந்துள்ள பூரண இடங்களாம். உடலில் அடியும் முடியும் சேரும்போது உடல் உயிர் பூரணம் ஆகிய மூன்றும் ஒன்றாகக் காணலாம். ஆகவே குண்டலினி உதித்துச் சுழுமுனையில் நிற்கும் நிலையறிந்து அதே பதியில் நிற்பாயாக.

பதியின்ன இடமென்ற குருவைச் சொல்லும்
பரப்பிலே விள்ளாதே தலையிரண் டாகும்
விதியின்ன விடமென்று சொல்லக் கேளு
விண்ணான விண்ணுக்குள் அண்ணாக்கு அப்பா
மதிரவியும் பூரணமுங் கண்வாய் மூக்கும்
மகத்தான செவியோடு பரிச மெட்டும்
பதியவிடஞ் சுழுமுனையென் றதற்குப் பேராம்
பகருவார் சொர்க்கமும் கைலாச மென்றே. 13

மேற்பாட்டில் பதி என்று சொன்னது சுழுமுனை நாடியாகிய (குருநாடி) குருவையே சொன்னதாகும். இதை வெளியில் பரவலாகச் சொல்லாதே. தலை வெடித்து இரண்டாகும். எந்த வகையில் சுழுமுனையை முழுதும் அறிதல் என்றால் (அதைச் சூக்கும இடங்களில் அறிய முடியாது.) விண் பகுதியான அண்ணத்தில் உள்ள உள் நாக்கே ஆகும். இடா, பிங்களா (மதிரவி), பூரணம் (சுழுமுனை) கண், வாய், மூக்கு இவை நடுவே காதுத் துளை வழியே சென்று நடுவே போய் ஒளியைக் காண்பதும் உச்சியில் எட்டிதழ்த் தாமரையை உணர்வால் பரிசிப்பதும் மனத்தில் பதிந்தால், அது சுழுமுனை சென்று பரவும் என்று உணரலாம். இதையே சொர்க்கமென்றும் கயிலை என்றும் கூறுவர்.

விளக்கம்: உண்ணாக்கை இந்திரயோனி அல்லது சொர்க்க வாசல் என்று கூறுவதும் இதுவேயாம்.

கைலாசம் வைகுந்தந் தெய்வ லோகம்
காசிகன்யா குமரியென்றுஞ் சேது வென்றும்
மயிலாடு மேக மென்றும் நாக மென்றும்
மாய்கையென்றும் மின்ன லென்றும் மவுன மென்றும்
துயிலான வாடையென்றும் சூட்ச மென்றும்
சொல்லற்ற இடமென்றும் ஒடுக்க மென்றும்
தயிலான பாதமென்றும் அடிமுடி என்றும்
தாயான வத்து வென்றும் பதியின் பேரே. 14

(பதி - கடவுள்) கடவுள் பெயரைப் பலவிதமாக நூல்கள் கூறுவதைத் தொகுத்து இதில் கூறுகிறார். கைலாசம், வைகுந்தம், தெய்வலோகம், காசி, கன்னியாகுமரி, சேது, மயிலாடுமேகம், நாகம்,மாய்கை, மின்னல், மவுனம், துயில் என்னும் வாடல், சூக்குமம், சொல்லற்ற இடம், ஒடுக்கம், தைலதாரை போன்ற பாதம், அடி, முடி, தாய் எனும் பொருள் என இப்பெயர்களால் இடத்துக்கு ஏற்பக் கூறுவர்.

பேருசொன்னேன் ஊர்சொன்னேன் இடமும் சொன்னேன்
பின்கலையும் முன்கலையும் ஒடுக்கம் சொன்னேன்
பாருலகிற் பலநூலின் மார்க்கஞ் சொன்னேன்
பலபேர்கள் நடத்துகின்ற தொழிலும் சொன்னேன்
சீருலகம் இன்னதென்று தெருட்டிச் சொன்னேன்
சித்தான சித்தெல்லாம் சுருக்கிச் சொன்னேன்
நேருசொன்னேன் வழி சொன்னேன் நிலையுஞ் சொன்னேன்
நின்னுடம்பை யின்னதென்று பிரித்துச் சொன்னேன். 15

பேர், ஊர், இடம், பின்வரும் கலை (ஒளி), முன்வரும் கலை, ஒடுக்கம், பல நூலில் கூறிய வழிகள், பலரும் பயிற்சி செய்யும் முறைகள், சீர் மிக்க உலகம், சித்து, சித்தில் வரும் தெய்வசித்து, நேர்வழி, நிலை, உடம்பின் உண்மை முதலிய வற்றை இந்நூலில் வகுத்துத் தெளிவாகக் கூறினேன் என்று விவரித்தார்.

பிரித்துரைத்தேன் சூத்திரமீ ரெட்டுக் குள்ளே
பித்தர்களே நன்றாகத் தெரிந்து பார்க்கில்
விரித்துரைத்த நூலினது மார்க்கஞ் சொன்னேன்
விள்ளாதே இந்த நூலிருக்கு தென்று
கருத்துடனே அறிந்து கொண்டு கரைமா றாதே
காரியத்தை நினைவாலே கருத்திற் கொள்ளு
சுருதிசொன்ன செய்தியெல்லாம் சுருக்கிச் சொன்னேன்
சூத்திரம்போற் பதினாறும் தொடுத்தேன் முற்றே. 16

16 சூத்திரத்தில் இவற்றைப் பிரித்துக் கூறினேன் என்றார். (16 என்பது இதுவரை உள்ள பாடல்களேயாம்) உலகின் மேல் பித்தாக உள்ள மனிதர்களே, நன்கு தெரிந்து கொள்க. இதில் விரித்துரைத்ததெல்லாம் பலருக்கும் சொல்லாதே. கருத்துடன் கற்றவனாகிய நீ உணர்ந்து இதை விட்டு வேறு ஒன்றில் மாறாதே. செய்யும் செயலைக் கருத்தில் கொள்க. வேதம் (சுருதி) சொன்ன கருத்தெல்லாம் சுருக்கிக் கூறினேன். ஆகவே இச்சூத்திரம் 16உம் முற்றியது என்றார்.

## ஞானம் - 5

கற்பமென்ன வெகுதூரம் போக வேண்டா
கன்மலையில் குவடுகளில் அலைய வேண்டா
சர்ப்பமென்ன நாகமதோர் தலையில் நின்று
சாகாத கால்கண்டு முனையி லேறி
நிற்பமென்று மனமுறுத்து மனத்தில் நின்று
நிசமான கருநெல்லிச் சாற்றைக் காணு
சொற்பமென்று விட்டு விட்டால் அலைந்து போவாய்
துரியமென்ற பராபரத்திற் சென்று கூடே. 1

காயகல்ப மருந்து தேடி வெகுதூரம் போகவேண்டாம். சர்ப்பமாகிய குண்டலினியின் தலையில் நின்று, (மூலாதாரத்தில்) உச்சித் தலை வரையில் இடையில் பிரியாமல் கலையாமல் ஒரே கம்பி போல் திரண்டு நிற்கும் காற்றை (இதுவே இங்குச் சாகாத காலாம்)க் காணும் போது, சுழுமுனையில் அந்தக் காற்று நுழைந்தே போகும். அப்படி மனத்தில் வேறு எதுவும் கருதாது தினமும் கருநெல்லிச் சாறும் உண்டு வந்தால் காயகல்பம் அதுவே ஆகும். துரியம் என்பதும் இதுவேயாம். இதில் பராபரத்தையும் காணலாம். இதைச் சாதாரணம் (சிறிது) என்று விட்டு விட்டால் பல விடங்களிலும் கலைய நேரும்.

கூடப்பா துரியமென்ற வாலை வீடு
கூறரிய நாதர்மகேச் சுரியே யென்பார்
நாடப்பா அவள்தனையே பூசை பண்ணு
நந்திசொல்லுஞ் சிங்காரந் தோன்றுந் தோன்றும்
ஊடப்பா சிகாரவரை யெல்லாந் தோன்றும்
ஊமையென்ற அமிர்த வெள்ளம் ஊறலாகும்
தேடப்பா இதுதேடு காரிய மாகும்
செகத்திலே இதுவல்லோ சித்தி யாமே. 2

மேல்பாட்டில் கூறிய துரியம் என்ற நிலை வாலைத் தெய்வத்தின் வீடேயாகும். அது மகேஸ்வரன் மகேஸ்வரி இணைப்பு என்றும் கூறுவர். அவளையே நாடிப் பூசை செய். நந்தியெம்பெருமான் கூறிய உபதேசம் (சிங்காரம்) அப்போது தோன்றும். சிகாரம் என்பது மார்பு நடு ஆகும். இதுவரை உணர்வை ஏற்றினால் (ஊமை யெழுத்தால் 'ம்' முடித்து வைக்கும் எழுத்தால்) உண்டாகும் அமிர்த வெள்ளம் ஊற்றெடுக்கும். இதை உடம்பில் தேடி அறிவாயாக. இது தேடியே தீர வேண்டும். செகத்தில் இதுவே சித்தியாகும்.

ஆமென்ற பூர்ணஞ்சுழு முனையிற் பாராய்
அழகான விந்துநிலை சந்திர னிற்பார்
ஓமென்ற ரீங்காரம் புருவ மையம்
உத்தமனே வில்லென்ற வீட்டிற் காணும்
வாமென்ற அவள்பாதம் பூசை பண்ணு
மற்றொன்றும் பூசையல்ல மகனே சொன்னேன்
பாமென்ற பரமனல்லோ முதலெ ழுத்தாம்
பாடினேன் வேதாந்தம் பாடி னேனே. 3

பூரணம் என்பது சுழுமுனையை அறிவதாகும். ஒளி நிலையாகிய விந்து என்பதைச் சந்திர மண்டலத்தில் உணர்ந்து பார். ஓம் என்ற ரீங்காரம் புருவமத்தியாகும். சைவத்தில் ஓம் என்பது பிரணவம். சாக்தத்தில் ஹ்ரீம்

என்பது பிரணவம். இதை ரீங்காரம் என்பர். சக்திப் பிரணவம் என்றும் கூறுவர். புருவங்களை வில்லாக நினைத்து இதை உணர்க. வாமை என்பவள் பாதத்தையும் பூசை செய்க. மற்ற எதுவும் பூசையாகாது. முதல் எழுத்து ('அ') பரமன் ஆகும். இதன் மூலம் வேதாந்தம் பாடினேன் என்க.

பாடுகின்ற பொருளெல்லாம் பதியே யாகும்
பதியில்நிற்கும் அட்சரந்தான் அகார மாகும்
நாடுகின்ற பரமனது ஓங்கார மாகும்
நலம்பெரிய பசுதானே உகார மாகும்
நீடுகின்ற சுழுமுனையே தாரை யாகும்
நின்றதோர் இடைகலையே நாத விந்தாம்
ஊடுகின்ற ஓங்கார வித்தை யாகும்
ஒளியான அரியெழுத்தை ஊணிப் பாரே. 4

பாடும் பொருளில் இருப்பது கடவுளே (பதி) ஆகும். அப்பதிக்குரிய எழுத்து 'அ' என்பதாகும். நாம் நாடிப் பார்க்கும் பரமனுக்குரியது 'ஓம்' என்ற எழுத்தாகும். ('ஓம் இதி ஏகாட்சரம் பிரம்மம்' என்ற வேத வாக்கியம் அறிக) ஆன்மாவே (பசு) ஓம் என்பதில் உள்ள 'உ' எனும் எழுத்தாகும். நீண்டு செல்லும் சுழுமுனை நாடியே தாரை (ஆதாரம்) ஆகும். (பராசக்தியும் ஆகும் என்க) இடை பிங்கலை இரண்டும் விந்து நாதம் எனப்படும். (இரண்டையும் சேர்த்து இடை கலை என்றார்) இதனால் இடை கலை விந்துவாகவும் பிங்கலை நாதமாகவும் ஆகும். இதையறிதலே ஓங்கார வித்தையாகும். அதுபோல் ஓம் நமோ நாராயணாய என்ற அரியின் எழுத்தையும் ஊன்றிப் பார்ப்பாயாக.

ஊணியதோர் ஓங்காரம் மேலு முண்டே
உத்தமனே சீருண்டே வூணிப் பாரே
ஆணியாம் நடுநாடி நடுவே மூட்டும்
ஆச்சரிய வெழுத்தெல்லாம் அடங்கி நிற்கும்

ஏணியா யிருக்குமடா அஞ்சு வீடே
　　ஏகாந்த மாகியவவ் வெழுத்தைப் பாரு
தோணிபோற் காணுமடா அந்த வீடு
　　சொல்லாதே ஒருவருக்குந் துறந்திட் டேனே. 5

ஊன்றி யறிந்தால் ஓங்காரத்தில் மேலும் பல உண்டு சீருடனே ஊன்றிப் பார். (அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்ற ஐந்தும் ஓகாரத்தில் உள்ளவையுமாகும் என்பர்.) நடுநாடியாகிய சுழுமுனையில் நாம் கூறும் எல்லா மந்திரங்களும் அடங்கி நிற்கும். ஐந்து பஞ்ச பூத வீடுகளும் (மூலம் முதல் விசுத்தி முடிய) சுழுமுனை மேலே ஏறிப் போக ஏணியாகும். ஏகாந்தமான (ஓம்) மந்திரத்தை இந்தப் பாதையில் உச்சரித்தால், ஐந்து வீடும் வெள்ளத்தில் தோணி போல் உதவும். இதை யாருக்கும் சொல்லாதிரு.

துறந்திட்டேன் மேல்மூலங் கீழ்மூ லம்பார்
　　துயரமாய்நடு நிலையை யூணிப் பாராய்
அறைந்திட்டேன் நடுமூலம் நடுநா டிபார்
　　அப்பவல்லோ வரைதாக்கும் தாரை காணும்
உறைந்திட்ட ஐவருந்தான் நடனம் காணும்
　　ஒளிவெளியும் சிலம்பொலியு மொன்றாய்க் காணும்
நிறைந்திட்ட பூரணமு மிதுதா னப்பா
　　நிசமான பேரொளிதான் நிலைத்துப் பாரே. 6

மேல் மூலம் (தலை உச்சி), கீழ் மூலம் (முதுகின் கீழ்ப் பக்கம்) ஆகிய இரண்டையும் ஓர் ஒளித்தூணால் இணைத்துப் பார். நடுவில் உள்ள சுழுமுனை நாடியை ஊன்றிப் பார். நடுநாடியாகிய இதுவே நடுமூலமாகும். இம்மூன்று மூலமும் நாடிப் பார்க்கும் போது தலை வரை தாக்கும் தாரையாகிய பராசக்தியைக் காணலாம். ஐந்து பூதங்களின் நடனமும் காணலாம். ஒளி, வெளி, சிலம்போசை எல்லாம் காணலாம். இதுவே எங்கும் நிறைந்த பூரணமாகும். இதுவே பேரொளி யும் ஆகும்.

சும்மாநீ பார்க்கையிலே மனத்தை யப்பா
சுழுமுனையி லோட்டியங்கே காலைப் பாராய்
அம்மாநீ தேவியென்று அடங்கிப் பாராய்
அப்பவல்லோ காயசித்தி யோக சித்தி
உம்மாவும் அம்மாவும் அதிலே காணும்
ஒருமனமாய்ச் சுழுமுனையில் மனத்தை யூன்று
நம்மாலே ஆனதெல்லாஞ் சொன்னோ மப்பா
நாதர்கள் இதையாரும் பாடார் காணே. 7

சும்மா நீ பார்க்கும் போதும் மனத்தைச் சுழுமுனையில் ஓடச் செய்து, காற்றையும் அதிலே செலுத்தி, அம்மா நீயே பராசக்தி என்று அடக்கமாகக் காண்பாயாக. அப்போதுதான் காயசித்தி (உடல் நீடுவாழ்தல்) யோக சித்தி (யோக வெற்றி) உண்டாகும். 'அ' 'உ' என்ற இரண்டெழுத்தும் அதில் காணலாம். ஒரே சிந்தையோடு சுழுமுனையில் மனத்தை ஊன்றிப்பார். இவை முற்றும் நம்மால் செய்யத் தகு வகை யாவும் கூறினேன். நாதர்கள் யாரும் இதை வெளிப்படப் பாடமாட்டார்கள்.

காணுகின்ற ஓங்கார வட்டம் சற்றுக்
கனலெழும்பிக் கண்ணினிலே கடுப்புத் தோன்றும்
பூணுகின்ற இடைகலையில் பரம்போ லாடும்
பொல்லாத தேகமென்றால் உருகிப் போகும்
ஆணவங்க ளானவெல்லா மழிந்து போகும்
அத்துவிதத் துரியாட்ட மாடி நிற்கும்
ஊணியதோ ரெழுத்தெல்லாந் தேவி யாகும்
ஓங்காரக் கம்பமென்ற உணர்வு தானே. 8

ஓங்காரம் செல்லும் வட்டங்களில் எல்லாம் குண்டலினிக் கனல் எழும்பும். அப்போது கண்களில் கடுகடுப்பு உறுத்தல் தோன்றும், இடைகலையில் பம்பரம் போல் இந்த ஓம் அசைவு ஆடும். ஒழுங்கில்லாதார் உடல் என்றால்

உருகிப் போகும். ஆணவம் அழியும். அத்துவிதமாக ஒன்றிய துரியம் ஆடி நிற்கும். ஊன்றி நோக்கும். எல்லா எழுத்தும் தேவியேயாகும். இதை உணர ஓங்காரத்தை அடி முதல் முடி வரை ஒரு கம்பம் செய்து அதில் மனம் ஒன்றுக.

உணர்வென்றாற் சந்திரனி லேறிப் பாவி
ஓடியங்கே தலையென்ற எழுத்தில் நில்லே
அணுவென்றால் மனையாகுஞ் சிவனே யுச்சி
அகாரமென்ன பதியுமென்ன சூட்ச மாகும்
கணுவென்ன விற்புருவ மகண்ட வீதி
கயிலாய மென்றதென்ன பரத்தின் வீடு
துணுவென்ற சூரியன்றன் நெருப்பைக் கண்டு
தூணென்ற பிடரியிலே தூங்கு தூங்கே. 9

உணர்வு என்பது இடா எனும் சந்திர நாழியில் ஏறித் தலைவரை சென்று நிற்பதாம். அணு என்பது (ஆன்மா) மூலாதாரமாகும் (மனை) சிவன்தான் உடம்பின் உச்சி யாகும். அகாரம் என்ற கடவுள் சூட்சமமாக உள்ளான். இடைப் பகுதி என்பது புருவமாகிய அகண்ட வீதியாம். பரத்தின் வீடே கயிலாயம் (தலை உச்சி) ஆகும். சூரிய நாழியில் (பிங்கள நாடி) குண்டலினி நெருப்பை உற்று, தூண் போன்ற ஆரியன் உச்சியில் தியானம் (தூக்கம்) செய்க.

மூவெழுத்தும் ஈரெழுத்து மாகி நின்ற
மூலமதை யறிந்துரைப்போன் குருவு மாகும்
ஊவெழுத்துக் குள்ளேதா னிருக்கு தப்பா
உணர்வதுவே கண்டறிந்தோன் அவனே ஆசான்
யாவருக்குந் தெரியாதே அறிந்தோ மென்றே
அவரவர்கள் சொல்வார்க ளறியா மூடர்
தேவரொடு மாலயனுந் தேடிக் காணார்
திருநடனங் காணமுத்தி சித்தியாமே. 10

ஹ்ரீம், ஓம் என்று இரண்டு (3-2) எழுத்துக்களும் மூலாதாரத்தைக் குறிக்கும். அதை உணர்த்துபவனே குரு ஆவான். 'உ' எனும் எழுத்தின் உள்ளேதான் உணர்வு உள்ளதாக அறிவோன் ஆசான் ஆவான். யாவர்க்கும் இதன் உண்மை தெரியாது எனக்குத் தெரியும் என்போர் சிலர் அறியா மூடர்கள். தேவர்களும் திருமாலும் பிரம்மனும் தேடி அறியாதது என்பது (அடிமுடி) இதுவே ஆகும். ஆகவே இறைவன் நடனம் கண்டால் முத்தி உறுதியாகக் கிடைக்கும்.

ஈரெழுத்து மோரெழுத்து மாகி யாங்கே
இயங்கி நிற்கும் அசபையப்பா மூலத்துள்ளே
வேரெழுத்தும் வித்தெழுத்தும் இரண்டுங் கொண்டு
வித்திலே முளைத்தெழுந்து விளங்கி நிற்கும்
சீரெழுத்தை யூணிநல்ல வாசி யேறித்
தெருவீதி கடந்தமணி மண்ட பத்துச்
சாரெழுத்தி னுட்பொருளாம் பரத்தை நோக்கிச்
சார்ந்தவர்க்குச் சித்திமுத்தி தருமே தானே. 11

இரண்டெழுத்தும் ஒரெழுத்தும் எனப்படும் ஓம் என்பது மூலத்தில் மவுனமாக ஓதப்படும் (அசபை) வேராகவும் வித்தாகவும் கொண்டு அவற்றில் முளைத்து எழுந்து விளங்கி நிற்கும். (மவுனமாக ஓம் என்பதை மூலாதாரத்தில் ஓத குண்டலினி எழுந்து ஒளியாகப் போகும் என்பதாம்.) மேலும் மூல மந்திரத்தை (சீரெழுத்து) எழுப்பி வாசி ஏற்றி நாடி வழியெல்லாம் சென்று மணி மண்டபம் ஆகும் சகஸ்ராரத்தைச் சார்ந்து பரத்தைத் தியானித்தால் முத்தி உறுதியாகும்.

ஏகமெனு மோரெழுத்தின் பயனைப் பார்த்தே
எடுத்துரைத்து மிவ்வுலகி லெவரு மில்லை
ஆகமங்கள் நூல்கள் பல கற்றுக் கொண்டே
அறிந்தமென்பார் மவுனத்தை அவனை நீயும்

வேகாச்சா காத்தலைகால் விரைந்து கேளாய்
விடுத்ததனை யுரைப்பவனே ஆசா னாகும்
தேகமதி லோரெழுத்தைக் காண்போன் ஞானி
திருநடனங் காண முத்தி சித்தி யாமே. 12

ஒரே நிலையான 'ஓம்' எனும் ஓர் எழுத்தின் பயனை எடுத்துரைத்தும் இவ்வுலகில் முன் வருவார் எவருமில்லை. ஆகமமும் பல நூல்களும் கற்றே இவ்வுலகில் பலரும் மவுனத்தை அறிந்தோம் என்பர். வேகாத் தலை, சாகாக்கால் என்பவற்றை விரைந்து கேட்பாயாக. விரைவாகக் கேட்டதற்குப் பதில் கூறுபவனே ஆசான் ஆவான். தேகத்திலே அந்த ஓர் எழுத்தைக் காண்பவன் ஞானி. திருநடனம் கண்டவனுக்கு முத்தி உறுதியாகும்.

குருவாகஉமைபாக னெனக்குத் தந்த
கூறரிய ஞானமது பத்தின் மூன்று
பொருளாகச் சொல்லி விட்டேனப்பா நீதான்
பொருளறிந்தாற் பூரணமும் பொருந்திக் காணே
அருளாகா திந்நூலைப் பழித்த பேர்கள்
அருநரகிற் பிசாசெனவே அடைந்து வாழ்வார்
அருளாக ஆராய்ந்து பார்க்கும் பேர்கள்
ஆகாயம் நின்றநிலை அறிய லாமே. 13

குருவாக எனக்கு வந்த உமைபாகன் எனக்குச் சொன்ன இந்த ஞானத்தில் பத்தில் மூன்று பகுதிகளைச் சொல்லி விட்டேன். இப்பொருள் அறிந்த நீ பூரணத்தையும் பொருத்தமாகக் காணுக. இந்நூலைப் பழித்தவர்கள் அருநரகில் பிசாசாக அலைவர். அருளாக ஆராய்ந்து பார்ப்பவர்கள் ஆகாயம் நின்ற நிலையை அறிவார்கள்.

## அகத்தியர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 30. திருமூல நாயனார்

திருமூலர் என்ற பெயரில் திருமந்திரம் எழுதிய அவரே இவர் என்று உறுதியாகக் கூற முடியவில்லை. ஆகவே அவர் வரலாற்றை இங்கு எழுதுவது முறையாகாது. அவர் பாடல் வகை, சொல்லாட்சி, விளித்துக் கூறல் முதலியன இவர் பாடலில் முழுதும் ஒத்துப் போகவில்லை. அவர் பாடல் சிறியது, இவர் பாடல் பெரியது என்பதாலும் அறிக.

## திருமூல நாயனார் பாடல்கள்

மூலமும் உரையும்

### எண்சீர் விருத்தம்

அடியாகி அண்டரண்டத் தப்பால் ஆகி
அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி
முடியாகி நடுவாகி மூலந் தன்னில்
முப்பொருளுந் தானாகி முதலுமாகிப்
படியாய்முப் பாழற்றுப் படிக்கு மப்பாற்
படிகடந்து பரஞ்சோதிப் பதியு மாகி
அடியாகு மூலமதே அகார மாகி
அவனவளாய் நின்றநிலை யறிவ தாமே. 1

அடியிலிருந்து அண்டங்களும் அதில் வாழ்வோரும் ஆகி, அகாரம் என்ற எழுத்தொலியுமாகி, அதுவே ஓம் என்பதில் முதல் (படி) பாதமாகியது. ஓம் என்பது அடி, நடு, முடி என்று மூலாதார முதல் செல்வதாகி, மும் மூர்த்தி களும் தானே ஆகி, அவர்களுக்கு முதலும் ஆகி, படிமுறை யால் ஒளி உச்சியில் முப்பாழும் நீங்கி, அதற்கும் அப்பால் உள்ளவற்றைக் கடந்தால் பரஞ்சோதி ஆகிய பரம் பொருளைக் காணலாகும். அடியாகிய மூலாதாரமே

அகரமாகக் கொண்டு உயர்ந்தால் அவனும், அவளும் ஓரணுவில் ஒன்றியிருப்பது அறியலாகும்.

அதுவாகி அவனவளாய் எல்லா மாகி
அடிநடுவு முடிவாகி யகண்ட மாகிப்
பொதுவாகிப் பல்லுயிர்க ளனைத்துக் கெல்லாம்
புகலிடமாய் எப்பொருட்கும் மூல மாகி
மதுவாகி வண்டாகிச் சுவையு மாகி
மலராகி மணமாகி மதிக்க ஒண்ணா
அதுவாகும் அகாரமதே மூலமாகி
அண்டமெல்லாந் தாங்கிநின்ற அம்மூல மாமே. 2

அது என்னும் சொற்பொருளுக்கு இயக்கம் ஆகி, அவன் அவள் என்று பிரிந்து, எல்லாப் பொருளிலும் இப்படி இருப்பதாகி, அடி நடு முடி என்று பிரித்து உணரும் மிக விரிந்த பகுதியும் இவர்களே ஆகி, யாவர்க்கும் பொதுவாகி, எல்லா உயிர்களுக்கும் அடைக்கலமாகி, எல்லாவற்றுக்கும் மூலமாகி, மது வண்டு, மதுவின் சுவை எனப் பிரியக் கூடியது மூன்றுமே தானாகி, மலராகி மணமுமாகி, மதிப்பிட முடியாதபடி அது என்ற பெயரோடு அகாரமாய் - மூலாதாரம் முதல் எல்லா அண்டங்களும் தாங்கியதே அப்பரம்பொருளாம்.

மூலமெனு மாதார வட்டந் தானே
முச்சுடரும் முக்கோண மூன்று நாடிச்
சீலமெனுஞ் சிவலிங்க பாத தீர்த்தந்
திருவடியுந் திருமேனி நடமு மாகும்
கோலமுடன் அண்டமெல்லாந் தாங்கிக் கொண்டு
கொழுந்துவிட்ட கம்பமதாய் மேலே நோக்கி
ஆலமுண்ட கண்டமெலாந் தானாய் நின்ற
அகாரமுதல் அவ்வெழுத்தை அறிந்து பாரே. 3

மூலாதாரமாகிய யோக ஆதார வட்டத்தில், தானே மூன்று சுடரும் முக்கோணமும் மூன்று நாடியுமாய்க் கடவுளே உள்ளார். சீலமாயிருப்பது சிவலிங்க பாதத்தில் திருமஞ்சன நீர்போல் பயன் தருவது. திருவடி, திருமேனி, திருநடம் என்ற பலவகைக் கோலத்துடனும் எல்லா அண்டங்களை யும் தாங்கி நிற்பதாம்.

இதுவே மூலாதாரம் முதல் உச்சி வரை ஒளி விடும் தூணாக இருக்கும். விசுத்தியாகிய தொண்டைக் குழி வழியாக இதுவே செல்லும். 'அ' என்னும் தாரகமாகிய ஒலியை அறியலாம்.

'அ' என்ற சப்தம் மட்டும் எழுப்பி னால், அது உடல் முழுதும் எதிர் ஒலியாவதை அறிந்து அது சிவம் என உணர்க.

அறிந்ததுவுந் தற்பரமே அகார மாகும்
    அறிவுடைய உகாரம்சிற் பரம தாகும்
பிறந்ததுவும் உலகமெலாஞ் சமயந் தானாம்
    பேதமெனுங் கருவிவகை யெல்லா மாகும்
அறிந்ததுவும் அகாரமெனும் பாதந் தன்னை
    அடிமுடியென்று அனுதினமும் அறிந்து நோக்கே. 4

இப்படி அறிந்ததுவும் தற்பரமாகிய (கடவுளாகிய) அகரமாகும் - 'உ'கரம் என்பது சிற்பரமாகும். (தத்பரம் - அதுவான கடவுள், சித்பரம் - சித்தத்தது எனப்படும் கடவுள்) இவ்வெழுத்துக்கள் கூடி எழுந்ததும் உலகமெலாம் (உறுப்புக்கள் யாவும்) இவற்றை ஒலிப்பதால் அங்கே சமயம் உண்டாகிறது. (சமயம் - பயிற்சி) இவையே பேதத்தால் பல பொருளாகின்றன. அகாரம் என்ற (பாதத்தை) அடிப்படையை உணர்ந்து அடி முதல் முடி வரை திரண்ட நாதத்தைத் தினமும் அறிந்து நோக்குக. தற்பரம் - தானே அதுவாக விளங்கும் பரம்பொருள்.

நோக்கமுடன் மூலமெனும் பாதந் தன்னை
நுண்பொருளாஞ் சிற்பரத்தினூடே நோக்குந்
தீர்க்கமுடனாதார வகையுந் தாண்டித்
திருநயனம் நாசிநெற்றி நடுவே பார்த்துப்
போக்கறிந்திங் கிந்தநிலை நோக்க வல்லார்
புரிசடையோன் தன்னுடைய புதல்வ ராவார்
ஆக்கமுடன் அருட்சுடர்போற் குருவைத் தானே
அனுதினமும் நோக்கி நிற்பார் ஆசா னாமே. 5

கடவுளைக் காணும் நோக்கத்துடன் மூலமாகிய திருவடியை மனத்தில் பதிய வைத்துச் சிந்தையில் தோன்றும் கடவுள் நினைவோடு கண், மூக்கு, புருவ மத்தி இவை நடுவே காதுத் துளை வழி உணரப்படுவதாம். இவ்வழியே ஒளியைக் காண வல்லவர் புரிசடையோனாகிய கடவுளின் புதல்வர் ஆவார். அருட் சுடராகிய அக் குருவையே நாள் தோறும் நோக்கி நின்று ஆசான் ஆவர். சித்பரம் - சித்தத்தில் இருக்கும் பரம்பொருள்.

ஆசானு மீசானு மொன்றே யாகும்
அவனவளு மொன்றாகும் அதுதா னாகும்
பேசாத மந்திரமு மிதுவே யாகும்
பேரொளியின் வடிவாகும் பேரு மாகும்
நேசாருங் கலைகளெலாந் தானே யாகும்
நிலையான ஓங்கார பீட மாகும்
ஈசானை ஆசானாய்க் காணும் பேர்க்கிங்
கின்பமுடன் கயிலாச மெய்த லாமே. 6

ஆசானாகிய மனிதனும், ஈசனாகிய கடவுளும் ஒன்றே ஆவர். அவன் அவள் இருவரும் ஒருவரே ஆவது போலாம் இது. இப்படி உணர்வதே பேசாத மந்திரமாகும். பேரொளி யாகிய வடிவமும் இதுவே. பேரும் பிற கலைகளும் நிலையான ஓங்கார பீடமும் ஆகும். ஈசனை ஆசானாகக் காண்பவர் கைலாயம் எய்தும் பேறு பெற்றவராம்.

எய்தரிய பரசிவத்தின் மூலந் தன்னில்
இருசுடரும் உதித்தொடுங்கு மிடமே யென்று
எய்தரிய பரசிவத்தின் மூலம் தன்னில்
இருசுடரும் உதித்துஒடுங்கும் இடமேஎன்று
மெய்தொழியுஞ் சுழுமுனையே கம்ப மாகி
மெய்ப்பொருளாஞ் சோதியென மேவி நிற்கும்
இவ்வகையே மூலமெனும் பாதந் தன்னை
இருநேர மற்றிடத்தே யிறைஞ்சிக் காணே. 7

(வலியுறுத்தற்காக முதலடி இரண்டாம் முறையாக வந்தது.) பரமசிவமாகிய மூலாதாரத்தில் இடாபிங்களா என்ற இருநாடி (ஒளிகள்) உதித்து ஒடுங்கும். இவை நடுவான சுழுமுனையே கம்பம் போல் உடல் உச்சி வரை போகும். இப்படி மூலாதாரத்தைக் காலையிலும் மாலை யிலும் கண்டு வணங்குக.

விளக்கம்: இரு நேரம் அற்ற இடம் - சந்திக்காலம்.

காண்பதுதான் பேரொளியின் காட்சி யாகும்
காணரிய பொருளாகுங் காட்டும் போதே
ஆண்பெண்ணாய் அலியாகி அடியு மாகி
அப்பாலைக் கப்பாலாய் அமர்ந்த சோதி
வீண்பயிலும் வேதமெல்லாந் தேடிக் காணா
வெறும்பாழ தாகியே மேவி நின்றார்
சேண்பயிலும் செகசோதி மூலந் தன்னைத்
தேடரிய பாதமென்றே தெளிந்து நோக்கே. 8

உடலில் இப்படிக் காண்பது கடவுளாகிய பேரொளி யின் காட்சியே ஆகும். காண முடியாதன எல்லாம் காட்டும் இது. ஆண் பெண் அலி என வேறுபாடு கொண்ட இவ்வுலகில் இதையும் இதற்கு அப்பாலுமான வற்றையும் காட்டும் சோதியது. வேதங்களால் இவற்றைக் காண முடியாது. அவை வீணேயாம். வெறும் பாழாக அவை

நிற்கும். தேடக் கிடைக்காத இச்சோதியையே அதாவது மூலாதார ஒளியையே இறைவன் பாதமாகக் கொள்க.

தெளிவரிய பாதமது அகார மாகிச்
சிற்பரமுந் தற்பரமுந் தானே யாகி
அழிவரிய சோதியது தானே யாகி
அடிமுடுவு முடியாகி யமர்ந்து நின்று
மொழிவரிய முதலாகி மூல மாகி
முச்சுடருந் தானாகி முடிந்த சோதி
சுழியினிலே முனையாகிக் கோப மாகிச்
சொல்லரிய எழுத்தொன்றே தொகுத்துப் பாரீ. 9

இப்படிப்பட்ட திருவடியே 'அகரம்' எனும் ஒலியாம். சித்பரம், தத்பரம் இரண்டும் அந்த ஒலியேயாம் (அகர ஒலியை மாடும், ஆடும், மனிதனும் மட்டுமே சிறப்பாக ஒலிக்க முடியும்.) இச்சோதி என்றும் அழியாததும் ஆகும். அடியும் முடியுமாக மேவி நின்று, சொல்ல இயலாத முதலும் மூலமும் ஆகி, முச்சுடரும் தானே ஆகி முடிந்த தாம். சுழுமுனையில் தோன்றி இந்திர கோபம் போல் சிவந்து 'ஓம்' என்ற எழுத்தின் ஒளியாகி நிற்கும். (முச்சுடர் சூரிய, சந்திர, நட்சத்திர ஒளியாகும்)

தொகுப்பதுதாம் மந்திரங்கள் கருவி நூல்கள்
சொல்லரிய தத்துவங்கள் தம்மை யெல்லாம்
வகுத்துடனே யிவற்றையெலாங் கண்டு நீங்கி
வாகான உடலுயிரை வகையாற் கண்டு
பகுப்புடனே சேராமற் பாதந் தன்னைப்
பரகதிக்கும வழியெனவே பற்றிக் கொண்டு
விகற்பமிலா மூலமதில் நின்ற சோதி
மேலான பாதமென்றே மேவி நில்லே. 10

தொகுக்கப் பெறும் மந்திரம், அவற்றை விளக்கும் (கருவி) நூல்கள், தத்துவங்கள் எல்லாம் கண்டு நீங்கி,

உடல் உயிரை மட்டும் காணும் பகையால் கண்டு, மூலாதார மாகிய பாதமே பரகதிக்கு வழி என உணர்ந்து பற்றிக் கொண்டு, விலகாமல் அங்கே (மூலத்தில்) நின்ற சோதியே பாதம் என விரும்பி நிற்பாயாக.

மேவியதோர் சற்குருவின் பாதந் தன்னை
மெய்ஞ்ஞான மென்றதனை மேவிக் கொண்டு
ஆவியுடல் காயமெல்லா மறிந்து பார்த்தே
அத்தனார் வடிவமென்றே அறிந்து கொண்டு
பாவனையு ளானவெல்லாம் விட்டு நீங்கிப்
பகலிரவு மற்றிடத்தே கருத்தை வைத்துச்
சீவனையுஞ் சிவந்தனையும் ஒன்றாய்த் தானே
திருமூலர் பாதமொன்றித் திடமாய்க் காணே. 11

சற்குருவின் பாதங்கள் மெய்ஞ்ஞானம் என்று விரும்பிக் கொண்டு, உயிர் சூக்கும, தூல உடல் எல்லாம் அறிந்து பார்ப்பீராக. அவை எல்லாம் கடவுள் வடிவமேயாம். வெறும் பாவனைகளை நீக்கி, பகலிரவு இல்லாத துரிய நிலையில் கருத்தைச் செலுத்தி, சீவன் சிவம் ஆகிய இரண்டும் ஒன்று எனப் பார்ப்பதாம். திருமூலர் பாதத்தையும் ஒன்றித் திடமாக நில்.

விளக்கம்: உண்மை என்ற நம்பிக்கை வேறு, வெறும் பாவனை வேறு. ஆகவே பாவனையை மறுத்தார். இரவு பகல் அற்ற இடம் துரிய நிலையாகத் தூங்காமல் தூங்கு மிடம் என அறிக

## திருமூல நாயனார் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 31. வால்மீகி சூத்திரம்

இவர் இராமாயணம் எழுதியவர் அல்லர். அதே பெயரைக் கொண்டவரே ஆவார். இவர்தான் இராமாயணம் எழுதியதாகப் போகர் ஏழாயிரத்தில் (5834இல்) ஒரு பாடல் கூறுகிறது. போகர் ஏழாயிரத்தில் பல பாடல்கள் இடைச் செருகல். அதில் இதுவும் ஒன்று. இவர் புரட்டாசி மாதத்தில் அனுஷ நட்சத்திரத்தில் பிறந்ததாகவும், வேடர் குலம் எனவும் கூறுவர். எட்டுக்குடி எனும் முருகன் தலத்தில் இவர் சமாதியானதாகக் கூறுவர்.

## வால்மீகி சூத்திரம்

### மூலமும் உரையும்

இருள்வெளியாய் நின்றசிவ பாதம் போற்றி
எழுத்ததனின் விவரத்தை விரித்துச் சொல்வேன்
அருவுருவாய் நின்றதுவே எழுத்த தாகும்
ஆதியந்தம் அண்டபிண்ட மதுவே யாகும்
திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபம்
சிவசத்தி திருமாலின் ரூப மாகும்
வருமுருவே சிவசத்தி வடிவ மாகும்
வந்ததிலும் போனதிலும் மனத்தை வையே. 1

இருளாகவும், வெட்டவெளியாகவும் இருப்பது சிவமேயாகும். அவரின் பாதம் போற்றுகிறேன். எழுத்துக் களை விவரமாக விரித்துச் சொல்கிறேன். கேள். அருவ மாகவும் அருவுருவமாகவும் நின்ற நாதமே எழுத்தானது. ஆதியந்தம் என்பனவும், அண்டங்களே உடலாகப் (பிண்டமாக) உள்ளன என்பதும் சரியேயாம். அழகிய உருவமாய், சூரிய சந்திர வடிவமாக இருப்பதும் சிவன்,

சத்தி, திருமால் ஆகியோரின் வடிவமேயாகும். எல்லா உருவங்களுமாகச் சிவசத்தி வடிவமே வரும். ஆகவே வந்ததும் மறைந்ததுமாகிய வடிவங்களில் மனத்தை வைப்பீராக.

வந்ததுவும் போனதுவும் வாசி யாகும்
வானில்வரும் ரவிமதியும் வாசி யாகும்
சிந்தைதெளிந் திருப்பவனா ரவனே சித்தன்
செகமெலாஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்
நந்தியென்ற வாகனமே தூல தேகம்
நான்முகனே கண்மூக்குச் செவிநாக் காகும்
தந்திமுகன் சிவசத்தி திருமூச் சாகும்
தந்தைதாய் ரவிமதியென் றறிந்து கொள்ளே. 2

வருவதும் போவதும் (மூச்சாகிய) வாசியாகும். வானில் இப்படிச் சூரிய சந்திரர் வந்து போவதும் ஒரு வாசி என்றே உணர்க. சிந்தை தெளிந்திருப்பவன் சித்தனாவான். எல்லாப் படைப்பும் (செகம்) சிவம் என்றே அறிந்தவனே சித்த னாவான். நந்தி எனும் வாகனமே நம் (தூல) புற உடம் பாகும். கண், மூக்குச் செவி, நாக்கு ஆகியவை நான்முக னாகிய பிரமன் ஆவான். சிவசத்தியின் மூச்சாக இருப்பதே யானைமுகனாம் (தந்திர - யானை) தாயும், தந்தையும் சூரிய சந்திரர் என்று அறிந்து கொள்க.

அறிந்து கொள்ளு பூரகமே சரியை மார்க்கம்
அடங்குகின்ற கும்பகமே கிரியை மார்க்கம்
பிரிந்துவரும் ரேசகமே யோக மார்க்கம்
பிசகாமல் நின்றதுவே ஞான மார்க்கம்
மறிந்துடலில் புகுகின்ற பிராண வாயு
மகத்தான சிவசத்தி அடங்கும் வீடு
சிறந்துமனத் தெளிவாகிச் சேர்ந்தோன் சித்தன்
சிவசிவா அவனவனென் றுரைக்க லாமே. 3

பூரகம் (மூச்சிழுத்தல்) சரியை மார்க்கமாகும். மூச்சை அடக்குவதே (கும்பகம்) கிரியை மார்க்கமாம். இவற்றி லிருந்து பிரிந்து வரும் ரேசகம் (வெளிவிடும் மூச்சு) யோக மார்க்கமாகும். எதிலும் பிசகு இல்லாது இருப்பதே ஞான மார்க்கமாகும். உடம்பில் திரும்பி வந்து புகும் பிராண வாயுவே சிவசத்தி அடங்கும் இடமாகும். சிறந்த மனமும் அதில் தெளிவும் கொண்டவன் சித்தனாவான். அவன் அவன் யார் என்று, சிவா சிவா சொல்ல முடியுமோ?

ஆமப்பா வுலகத்தில் பெருநூல் பார்த்தோர்
அவரவர்கண் டதையெல்லாம் சரிதை யென்பார்
ஓமப்பா கல்செம்பைத் தெய்வ மென்றே
உருகுவார் பூசிப்பார் கிரியை யென்பார்
வாமப்பா யோகமென்று கனிகாய் தின்று
வாய்பேசா வூமையைப்போல் திரிகு வார்கள்
காமப்பா ஞானமென விண்டு மேலும்
காக்கைபித்தன் மிருகம்போல் சுற்று வாரே. 4

உலகத்தில் பெருநூல் பழித்தவர்கள் அவரவர் கண்ட வற்றை எல்லாம் சரித்திரம் என்பர். கல் + செம்பைத் தெய்வமென்று நம்பி உருகுகின்றோர் தம் பூசையைக் கிரியை என்பர். யோகம் செய்வதாகக் கூறிக் கனியும் காயும் தின்று வாய் பேசாதவரைப் போல் திரிவார்கள். அவர்களே ஞானம் உடையவர்களாம்.

சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப் பார்த்துத்
துடிப்பா ருலகத்தில் சிற்சில் லோர்கள்
தெற்றுவா ரவர்பிழைக்க அனேக வேடம்
தேகத்தி லணிந்துகொண்டு திரிகு வார்கள்
பற்றுவார் குருக்களென் பார்சீட ரென்பார்
பையவே தீட்சைவைப்பார் தீமை யென்பார்
கத்துவார் திரிமூர்த்தி தாமே யென்று
காரணத்தை யறியாத கசடர் தானே. 5

பெருநூலைப் பார்த்து மனம் துடிப்பர். சிலர் பலர் தம் பிழைப்புக்காக உடலின் மேல் பல வேடம் புனைந்து திரிவர். தாமே குருக்கள் என்று பற்றுவார்கள். தாமே ஞானி களின் சீடர் எனச் சொல்லிக் கொள்வர். இடையே தாமே தீட்சை தருவதாகக் கூறுவர். உமக்கு வந்த தீமை இது என்று கூறுவர். தாமே கடவுள் என்று கத்துவர். காரண காரியம் அறியாத கசடர்களே இவர்கள்.

தானென்ற வுலகத்தில் சிற்சில் லோர்கள்
சடை புலித்தோல் காசாயம் தவவேடம் பூண்டு
ஊனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி
உலகத்தில் யோகியென்பார் ஞானி யென்பார்
தேனென்ற சிவபூசை தீட்சை யென்பார்
திருமாலைக் கண்ணாலே கண்டோ மென்பார்
கானென்ற காட்டுக்குள் அலைவார் கோடி
காரணத்தை யறியாமல் கதறு வாரே. 6

தானே உலகில் சிறந்தார் என்று கூறிச் சிலர் சடை வளர்த்துப் புலித்தோலில் அமர்ந்து, காவியுடை அணிந்து, பலவித வேடங்களைப் பூண்டு, உடம்பு எல்லாம் திருநீறு அணிந்து, உலகில் தாமே யோகி என்பர்; ஞானி என்பர்; திருமாலைத் தம் கண்ணால் நேரே கண்டேன் என்பார். காடுகளிலும் அலைந்து திரிவர் பலர். இவர்கள் காரணங் களை அறியாமல் கதறுபவர்களே ஆவர்.

கதறுகின்ற பேர்களையா கோடா கோடி
காரணத்தைக் கண்டவர்கள் கொஞ்சம் கொஞ்சம்
பதறுகின்ற பேர்களெல்லாம் பராப ரத்தைப்
பற்றிநின்று பார்த்தவர்கள் சுருக்க மப்பா
உதறுகின்ற பேர்களெல்லா முலகத் துள்ளே
உதித்தகலை தம்முள்ளே யறிய மாட்டார்
சிதறுகின்ற பேர்களைப்போல் சிதறி டாமல்
சிவசத்தி வரும்போதே தன்னில் நில்லே. 7

இப்படிக் கதறுவோர் மிகப் பலர். காரணத்தைக் கண்டு உணர்ந்தவர்கள் மிகச் சிலரே. பதறும் பலரும் பராபரத்தைப் பார்த்தவர் அல்லர். அவர்கள் மிகவும் குறைவு. இப்படி உதறுபவர் தமக்குள் உதித்த கலையை (ஒளியை) அறிவதில்லை. பலர் போல் சிதறி ஓடாமல் சிவசத்தி வரும் போது தன் அளவில் நிற்பீராக.

நில்லென்ற பெரியோர்கள் பாடை யாலே
நீடுலகம் தன்னுள்ளே நாலு வேதம்
வல்லமையாய்ச் சாத்திரங் ளிருமூன் றாக
வயிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்
கல்லுகளைக் கரைப்பதுபோல் வேதாந் தங்கள்
கட்டினா ரவரவர்கள் பாடையாலே
தொல்லுலகில் நாற்சாதி யனேகஞ் சாதி
தொடுத்தார்க ளவரவர்கள் பிழைக்கத் தானே. 8

இப்படி இவை நிற்கட்டும் என்று தவத்தால் உணர்த்திய வர்கள் அருளால் பலவும் நின்றன. தீயவையும் அவற்றோடு புகுந்தன. வேதம் நான்கு, ஆறு அங்கம், புராணம், பதினெட்டு, கல்லும் கரையுமாறு கூறப்பட்டவே தான் வேதாந்தங்கள் ஆகிய இவற்றை அவரவர் மொழிகளால் காட்டினார்கள். ஆனால் கால வெள்ளத்தில் சிலர் நான்கு சாதி முதல் பற்பல சாதிகளும் தொகுத்துப் பிழைப்பு நடத்தினர்.

தானென்ற வுலகத்தி லில்லா விட்டால்
தன்பெருமை யாலழிந்து சகத்தில் வீழ்வார்
ஊனென்ற வுடம்பெடுத்தா லெல்லாம் வேணும்
உலகத்தி லவரவர்கள் பாடை வேணும்
மானென்ற சிவகாமி சிவனுங் கூடி
மாமுனிவர் முகம்பார்த்து மறைநூல் சொன்னார்
தேனென்ற சிவகாமி யருளி னாலே
திரட்டினார் வெகுகோடி தேச பாடை. 9

கடவுளே உலகமாக விரிந்தார். இல்லாவிட்டால் சகத்தில் தற்பெருமை கொண்டு பலர் வீழ்வார். உலகில் ஊன் உடம்பைப் பெற்றால் சில விரிவுகள் தேவையேயாகும். பல மொழிகளும் பலருக்கும் தேவை. மான் போன்ற சிவகாமியும் சிவனும் கூடி, ஞானிகள் முகத்தைப் பார்த்து மறைநூல்கள் வெளிப்படுமாறு சொன்னார்கள். சிவகாமியின் அருளால் பலப்பல மொழிகள் திரண்டன.

தேசத்தின் பாடைதனை யறிந்தி டாமல்
    தெளிவாகத் தாமுரைப்பார் பாடை பார்த்தோர்
ஆசிப்பா ருலகத்தில் கண்ட தெல்லாம்
    ஆச்சரியந் தனைக்கண்டு மறந்து போவார்
வாசிதனை யறியாத சண்டி மாண்பர்
    வார்த்தையினால் மருட்டி வைப்பார் வகையிலாமல்
நாசிநுனி யதன்நடுவில் சிவத்தைக் கண்டோர்
    நான்முகனும் திருமாலும் சிவனுந் தாமே. 10

தேசத்தின் ஒருமித்த மொழியை அறியாமல் தம் மொழிகளையே பெரிது என்பர். உலகப் பொருள்களைக் கண்டு வியப்பதால் பிற உணர்வை மறந்து விடுவர். வாசி (மூச்சுப்பயிற்சி) யோகம் அறியாதவர் தம் வாய் வார்த்தைகளால் மருளச் செய்வர். மூக்கின் நுனி நடுவில் சிவம் இருப்பதை யோகத்தால் கண்டவர் மும்மூர்த்திகளையும் அப்படிக் காண்பவரே ஆகிவிடுவர்.

சிவசிவா பதினெண்பேர் பாடற் கெல்லாம்
    திறவுகோல் வால்மீகன் பதினா றாகும்
சிவம்பெத்த சித்தரெல்லா மென்னூல் பார்த்துச்
    சிவனோடே கோள்சொன்னார் சினந்தான் நாதன்
அவமாகிப் போகாமல் சிவனுத் தார
    அருளினால் திறந்து சொன்னேன் உலகுக்காக
நவமான நவக்கிரகந் தன்னுள் ளேயே
    நாக்குவாய் செவிமூக்கு மத்திக்கு அப்பால். 11

சிவசிவா, பதினெட்டுச் சித்தர்களின் பாட்டில் காணும் புரியாத பகுதிகளைத் திறந்து காட்டும் சாவியாக வால்மீகியின் பதினாறு பாட்டும் அமையும். சிவனுக்கு அணுக்கமானோர் என் நூலைப் பார்த்து இதில் குறை கூறியபோது, சிவனே அவர்களைச் சினந்தான். தவம் கெட்டு அவமாகாதிருக்கவே எல்லாவற்றையும் உலகினர்க்காக வெளிப்படையாகக் கூறினேன். ஒன்பது நவகிரகங்களும் தனக்குள்ளேயே உள்ளன. நாக்கு, வாய், காது, மூக்கு ஆகிய இவற்றின் மத்திக்கு அப்பால் காண்க.

நாக்குவாய் செவிமூக்கு மத்திக்கு அப்பால்
நடுவீதி குய்யமுதல் உச்சி தொட்டுத்
தாக்குவாய் அங்கென்றே அதிலே முட்டுத்
தாயாரைப் பூசித்து வேதம் ஓது.
வாக்குவாய் அசையாமல் மவுனங் கொண்டு
வாசிவரு மிடத்தில் மனம்வைத்துக் காத்து
நீக்குவாய் வாசியோடு மனந்தான் புக்கு
நினைவதனி லடங்கிவரும் வரிசை காணே. 12

நாக்கு, வாய், காது, மூக்கு, மத்திய நாடிக்கு அப்பால் நடுவீதியாக உள்ள வெளியில் (குய்யம் - மூலாதாரம்) மூலாதாரம் முதல் உச்சி வரை மனத்தால் மூச்சின் மூலம் தாக்க வேண்டும். தாயாகிய பராசக்தியை வணங்கி, வேதம் ஓதுக. வாக்கும் வாயும் அசையாத மவுனம் கொண்டு வாசி வரும் இடத்தில் மனத்தையும் உடன் கொண்டு பிறவற்றை நீக்குக. நினைவில் யாவும் அடங்கச் செய்க.

காணரிதே யெவராலு மிருசு வாசம்
காண்பவனே சிவசித்தன் அவனே யாகும்
பூணரிதிவ் வுலகத்தி லிந்நூல் கிட்டில்
பூலோக சித்தனென வுரைக்க லாகும்

காணரிது சிவசக்தி திருமூச் சாகும்
காட்டாதே மூடருக்கே யிந்நூல் தன்னை
தோணரிது விழிமயக்கம் சும்மாப் போமே
சொல்லரிய சூட்சுமத்தைச் சொன்னே னப்பா! 13

இரு மூக்கினாலும் மூச்சை இழுத்து, மாறாமல் இரு மூக்காலும் வெளிவிடும் பயிற்சி (இரு சுவாசம்) சித்தனால் மட்டுமே செய்ய முடியும். இந்த நூல் கிடைத்தால் பூவுலகில் பலரும் சித்தனாவர். விழியால் மயங்காமல் சொல்ல அரிய சூக்குமத்தைச் சொன்னேன் நான்.

சூட்சமிந்நூல் சொல்லுகின்றேன் வாசி காண
சூட்சாதி சூட்சத்தைத் துறக்கப் போகா
சாட்சியில்லை துணையில்லை கேள்வி யில்லை
சந்தேக மொன்றுமில்லை விழியைக் காணக்
காட்சியென்ன கற்பகத்தில் வசிக்கு மாப்போல்
காரணத்தைக் கண்ணாலே கண்டி ருக்க
ஆட்சிதரு முமையாளப் படியே கண்டேன்
ஆனந்தத் திருக்கூத்தின் நடக்கை காப்பே. 14

வாசியோகம் காணுமாறு சூக்குமத்தைச் சொல்கிறேன். சூக்குமத்திற்கும் சூக்குமமாகி நிற்பதைத் துறக்க முடியாது. சாட்சியோ, துணையோ, இதுபற்றிய கேள்வி விசாரிப்போ இல்லை. ஐயத்திற்கு இடமுமில்லை. கற்பகத்தில் வசிப்பதைப் போல் காணமுடியும். காரணமான கடவுளைக் கண்ணாலேயே கண்டிருக்க முடியும். உமையம்மையையும் இப்படியே கண்டேன். ஆனந்தத் தாண்டவம் நடக்கக் கண்டேன். அது காப்பதாக.

காப்பதற்குப் பத்தியத்தைச் சொல்லக் கேளு
காய்கனிகள் பஞ்சரசம் பரமான் னங்கள்
ஏற்கையுட னுண்டுகொண்டு சிவத்தைக் காத்தே
என்மகனே சித்தருடைக் குருநூல் பாராய்

ஆத்துமத்துக் கழிவில்லா திருக்க வேணும்
அவரவர்கள் நித்யகர்மம் நடக்க வேணும்
தீர்க்கமுட னின்றவர்க்கு வாசி சித்தி
சிறப்புடனே பதினாறும் பலிக்குந் தானே. 15

இதற்கான பத்தியம் சொல்கிறேன். கேள். காய்கனிகள், பஞ்சகவ்யம், பரமனுக்குரிய உணவுகள் ஏற்குமளவு உண்டு கொண்டு, உடம்பிலும் உள்ளத்திலும் சிவத்தை விலகாமல் காத்துக் கொள்க. சித்தர்களில் குருவானவர் நூல் பார்ப்பாயாக. எப்போதும் ஆத்மா பிரியாது இருக்க வேண்டும். அவரவர் நாள்தோறும் செய்யும் செய்கைகள் தவறாமல் நடக்க வேண்டும். இவற்றில் உறுதியாக இருந்தால் வாசியோகம் சித்தியாகும். இந்தப் பதினாறும் பலிக்கும்.

தானவனா யிருக்கவென்றால் வாசி வேணும்
தனக்குள்ளே தானிற்க இடமும் வேணும்
வானவனாய் நின்றவர்கட் கெல்லாஞ் சித்தி
வானுக்குள் மனமிருக்க மதிபோல் காணும்
தேனவனாஞ் சித்தருக்குத் தெவிட்டா மூலி
சிரசப்பா வுடலுக்குப் பதியே யாகும்
கோனவனா யிருக்கவென்று குறியைச் சொன்னேன்
குவலயத்திடல் பதினாறுங் குறுகத் தானே. 16

செல்வனாக இருக்க வேண்டுமென்றால் வாசி யோகம் வேண்டும். தன் ஆத்மாவிற்குள்ளேயே தான் நிலைநிற்க இடம் வேண்டும். வானவனாய் நிற்கும்போது சித்தி வரும். வானுக்குள் மனம் வைத்தால் நிலவுபோல் ஒளி தோன்றும். இதுவே சித்தர்க்கும் தளர்வில்லாத மூலிகையாகும். இந்த உடலுக்குத் தலைமை தருவது தலையே ஆகும். தலைவனாகவே இருந்து விடும் குறிப்பைச் சொன்னேன். உலகில் பதினாறு பாடல்களும் வந்து சேரும்.

## வால்மீகி சூத்திரம்

மூலமும் உரையும் முற்றும்.

# 32. இராம தேவர்

## பூஜா விதி

ஆதியென்ற மணிவிளக்கை அறிய வேணும்
அகண்டபரி பூரணத்தைக் காண வேணும்
சோதியென்ற துய்யவெளி மார்க்க மெல்லாஞ்
சுகம்பெறவே மனோன்மணி யென்னாத்தாள் தன்னை
நீதியென்ற பரஞ்சோதி ஆயி பாதம்
நிற்குணத்தி னின்றநிலை யாருங் காணார்
வேதியென்ற வேதாந்தத் துள்ளே நின்று
விளங்குவதும் பூசையிது வீண் போகாதே. 1

எல்லாவற்றுக்கும் மூலமாகிய மணிவிளக்குப் போலும் உள் ஒளியை அறிய வேண்டும். அதனால் பிரபஞ்சம் முழுதும் விரிந்த பரிபூரணத்தைக் காண வேண்டும். சோதி தோன்றுதலை உச்சியிலான வெளியின் வழியே இன்பம் தரும் மனோன்மணியாகும் என் தாய் தன்னை எங்கும் நியதியாய் நிர்வாகம் செய்யும் பரஞ்சோதியான தாயின் பாதம் இவற்றை அறிய வேண்டும். நிர்க்குணமாய் இருக்கும் அவள் நிலையை உடலிலும் உலகிலும் யாரும் அறிவது கடினம். வேதாந்தமாகிய யோக மார்க்கம் என்னும் வேதிக்கும் செயலால் இவற்றை விளங்கிக் கொள்ளும் பூசை இது வீண் போகாது.

விளக்கம்: வேதி - வேதித்தல்; செயற்படுத்தல். இது யோகம் செய்தால் வேதி இயல் மாற்றம் வரும் என்பதாம். தலைக்கு மேல் 18 விரல் உயரத்தில் இருப்பது மனோன்மணியாம். மனோன்மணி - தலைக்கு மேல் 18 விரல் உயரத்தில் இருக்கும் ஆதாரச் சக்தி.

போகாமல் நின்ற தேரையா நீதான்
　　பூரணத்தி னானகலை ஐந்தும் பெற்றே
ஆகாம லானந்த வல்லி யாலே
　　அடிமுடியின் நடுவாசி யாறுக் குள்ளே
வாகாமல் வாலையுடை மூலத் தாலே
　　வழிதோன்றும் மூன்றெழுத்தை யுரைக்க வேணும்
சாகாமல் சாகுமடா இந்த மூலஞ்
　　சசிவட்டம் நடுக்கோண முக்கோண மாமே. 2

உன் உடம்பு போகாமல் நிற்கும் தேரைப் போன்றது. (ஆனால் எங்கும் மனத்தால் போகவும் வல்லது) பூரண மான கடவுளிடம் இருந்து வரும் ஐந்து கலைகளைப் பெற்று, (பிரதிட்டை நிவர்த்தி முதலிய கலைகள் ஐந்தும்) ஆனந்தவல்லியாகிய பராசத்தி அருளால் உடம்பில் அடி நடு முடி வரை உள்ள ஆறு ஆதாரங்களிலும் பிராணாயாமம் செய்து, வாலைப் பெண் இருக்கும் மூலாதாரத்தி லிருந்து வழியை உண்டாக்கும் 'ஓம்' எனும் பிரணவ மந்திரத்தை மவுனமாகச் சொல்ல வேண்டும். (ஹ்ரீம் என்றும் கூறலாம். எனவே பொதுவாக மூன்றெழுத்து என்றார்) அப்போது பிடிபடாதிருந்த மூலம் இடம் கொடுக்கும். சந்திர மண்டலத்தின் (தலையில்) நடுவே கோணமாகிய முக் கோணத்தில் அந்த மந்திரம் சென்று (ஓசை) ஒளியாக மாறும்.

முக்கோண முச்சுழிதற் கோண மாகி
　　முதலான மூலமணி வாலை தன்னில்
நாற்கோண நாலுவரை நயந்து காக்க
　　நாயகியாள் பரஞ்சோதி நாட்ட முற்றுத்
தீக்கோணத் திக்குதிசை யிருந்த மாயம்
　　தெரிந்திடவே யுரைத்திட்டேன் விவர மாக
தாக்கோண விட்டகுறை வந்த தென்றால்
　　தனியிருந்து பார்த்தவனே சித்த னாமே. 3

முக்கோணத்தில் மூன்று சுழியாய் உள்ள கோணத்தில் அந்த ஒலி ஒளியாக மாறி, வாலைக் குமரி இருக்கும் மூலா தாரத்தில் நான்கு கோண (நாலிதழ்த் தாமரை)ம் வரை பரவும். இந்த நாயகி பரஞ்சோதியை நாட்டம் கொண்டு தீயாக முடுகி, தென் திசை (உடம்பின் அடிப்பக்கம்)யிலிருந்து புறப்பட்டு, வடதிசை வரை மாயமாய்ச் செல்வாள். எல்லாம் தெரியுமாறு விபரமாக இதைச் சொன்னேன். தாக்குவதற்குப் பழைய பிறவி வாசனை வருமானால், தாக்கப்படாமல் விலகி இருந்து பார்ப்பவனே சித்தனாவான்.

விளக்கம்: நான்கு இதழ்த் தாமரை நடுவே முக்கோணம் இருப்பது மூலாதார அடையாளம். அங்கே வாலை வடிவில் பார்வதி இருப்பாள். அவள் தீயாகப் புறப்படுவது குண்டலினி எனப்படும்.

சித்தான மூன்றெழுத்துச் செயலாஞ் சோதி
சீரியவை யுங்கிலியும் சவ்வு மாகி
முத்தான லட்சவுரு செபிக்கச் சித்தி
முற்றிடுமே யெதிரியென்ற பேய்கட் குந்தான்
வித்தான வித்தையடா முட்டும் பாரு
விரிவான முகக்கருவு மூன்று கேளு
சத்தான அதன்கருவும் சிலையில் வைத்துச்
சதுரான விதிவிவர மறியக் கேளே. 4

மனமொன்றிச் சொல்லப்படும் மூன்றெழுத்து சோதி யாக வெளிப்படும்; இதுவே ஐம், க்லீம், ஸௌ, என்ற பாலா மந்திரமும் ஆகும். (தமிழில் சௌம் என்பது வட மொழியில் ஸௌ: எனப்படும்) இம்மந்திரம் தடை செய்யும் எதையும் எதிர்க்கும். ஆதலால் இலட்சம் உரு இதைச் செபிக்க வேண்டும். விதவிதமான விளைவுகளை இந்த மந்திரம் செய்யும். இதன் அடிப்படையான மூன்று சக்தியும் கேள். அதற்கும் கருவானதை உன் முதுகுத் தண்டில் வைத்து விவரமாய்ச் செலுத்துவதைக் கேட்பாயாக.

விளக்கம்: முதுகுத் தண்டை வில் என்பர் (சிலை) இதன் வழியாகவே நாம் கூறும் மந்திரம் தலைக்கும் செல்லும் என்பர்.

கேளப்பா பலிகொடுத்துப் பூசை செய்து
கிருபையுள்ள வுருவேற்றித் திட்ட மாக
வாளப்பா சுடுகாட்டின் சாம்பல் தன்னில்
வளமாகப் புதைத்துவிடு நடுச்சா மத்தில்
ஆளப்பா அடியற்று மரண மாகி
ஆண்டிருந்த தவசுநிலை தான்கு லைந்து
காணப்பா கண்மணியே வீழ்வான் பாவி
கதைதெரியச் சொல்லுகிறே னின்னம் பாரே. 5

பகைவனாயின் அவனுக்கு எதிராக இந்த மந்திரத்தை இலட்சம் முறை சொல்லி, எலுமிச்சையில் குங்குமம் பூசிப் பலியாகக் கொடுத்துப் பூசை செய்து தாயின் அருளால் ஒரு லட்சம் முறை இம்மந்திரத்தை உரு ஏற்றுக. இது வாளாக உருவம் பெறும். சுடுகாட்டுச் சாம்பலில் பலியிட்டதை நடுச் சாமத்தில் கொண்டு போய்ப் புதைத்து விடு. அப்பகைவன் ஆதாரம் இழந்து மரணம் எய்தி அவன் செய்த தவம் குலைந்து வீழ்வான். இன்னும் கதை சொல்லக் கேள். (இது கடிய வகையில் செய்யும் முயற்சியாகும். மனம் ஒருமித்தலின் விளைவு இப்படி என அறிக)

இன்னமின்னங் கண்முன்சோ தனையு மாகும்
ஈடேற வேணுமென்றா லிதனிற் சூட்சம்
அன்னமின்னா அகிற்கட்டை தேவ தாரம்
அறிவுடைய முளைசீவிச் சிங்கை யோதி
வன்னமின்னார் பேர்சொல்லி நசியென் றேதான்
வலிதான நூற்றெட்டு வுருவம் போடு
சன்னமின்னா மரத்தடியி லிருந்து கொண்டு
சதிராக ஆணிகொண் டடித்தி டாயே. 6

இன்னும் கண் முன்னாலேயே நீ சோதித்து அறியலாம். முழு வெற்றியடைய இதற்கு மேலும் வழியுண்டு. அகில் கட்டை, தேவதாரம் ஆகிய இவற்றை முளையாகச் சீவி, 'ஓம் சிங்' என்ற மந்திரமும் ஓதி, எதிரியின் பேர் சொல்லி, 'நசி' (அழிக) என்றும் 108 முறை சொல்லி, ஒரு பால் வடியும் மரத்தில் ஆணியை அடித்திடுக.

அடித்தமுளை பிடுங்கிவைத் திருக்கிப் போடு
ஆனந்த வுருக்குலைந்து பட்டுப் போகும்
தொடுத்தமுதல் நாலாநாள் கண்டு தானுந்
தொகைமுடிந்து வாச்சுதடா விந்தப் போக்கு
விடுத்தபின்பு விடமேறிக் கருகிப் போகும்
விரித்துரைத்தேன் பூட்டிதுவே வீண் போகாது
தடுத்துவிடு நகரத்தி லடித்துப் பாரு
தட்டழிந்து உயிர்முதலாய்ச் சேத மாமே. 7

முன்பு அடித்த ஆணியை மறுபடி பிடுங்கி முன் போல் அடித்தால், அம்மரம் உருவழிந்து பட்டுப் போகும். நான்கு நாளில் இப்படி நடப்பதால் மந்திர சக்தியின் வேகம் அறியலாம். இதனால் எதிராளிக்கு விஷம் ஏறும். உடல் கருகும். இம்முயற்சி வீணாகாது என அறிக. நகரத்தின் நடுவில் இப்படி அடித்தால் உடல் குலைந்து உயிரும் சேதமாகும்.

ஆமப்பா அடிதரிசிங் களத்தி லானால்
அதியங்காண் கண்டவர்க்கே யடைக்க லம்போம்
வீமப்பா வெளிதிறந்து சொன்னேன் பாரு
விளையாட்டே யில்லையடா இந்தப் போக்கு
சோமப்பா சுத்தியுடன் தலையும் மூழ்கிச்
சுருக்கெனவே தியானிப்பா யாத்தாள் மூலம்
தாமப்பா சத்தியமே சொன்னேன் பாரு
தவறாது ராமனுடை வாக்யந் தானே. 8

ஆம். இப்படி அடி தவறாமல் செய்தால், அதிசயமாய் விளைவு அறியலாம். செய்தார்க்கு அடைக்கலம் ஆவார். எல்லாம் மறைக்காமல் சொல்லி விட்டேன். இது வெறும் விளையாட்டு அன்று. இதைச் செய்து தலை முழுகிச் சுத்தமாய் சுருக்கமாய் தாயைத் (கடவுள்) தியானம் செய். இது சத்தியம். இந்த இராமன் வாக்கியம் தவறாது.

தானென்ற மூலமுடன் சித்தி பண்ணு
தனதான நூற்றெட்டுக் குள்ளே சித்தி
ஆனென்ற அண்டர் பதியெட்டு மாடும்
அறுபத்து நால்மூலி யெல்லா மாடும்
கோனென்ற கோடிசித்துக் கணத்தி லாடுங்
குணமாக ரேவதிநாட் செய்ய நன்று
வானென்ற அட்டமியிற் செய்ய நன்று
வளர்பிறையில் செய்தவனே யோகி யாமே. 9

நம் உயிர்ப்பாகிய மூலாதாரத்தை முடுகி நினைத்துச் சித்தி செய்தால், 108 முறை செய்யும் போது சித்தியாகும் உலகில் உள்ள எட்டுப் பக்கத்துப் பதிகளும் ஆடும். அறுபத்து நான்கு மூலிகையும் மனத்தில் தோன்றும். ஒரு கணத்தில் கோடி சித்தி கிடைக்கும். ரேவதி நட்சத்திரத்தில் இவற்றைச் செய்வது மிகவும் நலமாகும். அட்டமியான திதியாய் இருந்தால் மேலும் நல்லது. இவற்றை வளர்பிறை நாளாக அறிந்து செய்க.

விளக்கம்: வளர்பிறை அட்டமி ரேவதி மூன்றும் கூடி வரும் நாளாகில் மிகுந்த பலன் கிடைக்கும் என அறிக.

யோகியா யாவதற்கீ துனக்குச் சொன்னேன்
ஓகோகோ முன்னுரைத்த மூலத் தாலே
யோகிகளா யேகாந்த வல்லி யாட்கிங்கு
ஏட்டிலே யெழுதினதால் எல்லா மாச்சு

தாகிகளாய்த் தாயுடைய கிருபை யாலே
தவமாகும் அவமாகும் சுபமுண்டாகும்
மோகிகளால் மூலபூசா விதிபத் தாலே
முத்திபெறச் சித்திவிளை பத்து முற்றே. 10

யோகியாவதற்காக உனக்கு இதை விரித்து உரைத்தேன். இவை முன்னதாக உரைத்ததின் ஒரு பகுதியே (முன்னோர் வழி). இங்கு ஏட்டில் எழுதிய யாவும் ஏகாந்தவல்லியருளும் யோகமே ஆனது. அந்தத் தாயின் கிருபையால் தவம் தவமாகும்; அவம் ஆகும்; சுபம் சுபம் ஆகும். ஆகவே அறிந்து தெளிந்து செய்க.

யோகம் உள்ளவர்களை மாற்றும் மூல பூசையின் விதியை இப்பத்துப் பாடல்களால் முத்தியும் சித்தியும் பெற விளக்கினேன்.

## இராமதேவர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 33. கருவூரார்

## பூஜாவிதி

### *காப்பு*

### *எண்சீர் விருத்தம்*

தெளிவுதனில் தெளிவுதரு மருளுங் காணும்
கெணத்திலே சிவமயமுஞ் சேரத் தோணும்
வழியதனில் நல்லவழி ஞானம் கூடும்
மகத்தான வேதாந்தம் சித்தி காட்டும்
ஒளிவுதனி லொளிவுதரு முறுதி சொல்வார்
உற்பனத்தி லுற்பனமா யுறுதி தோணும்
வெளியதனில் வெளியாகி நாதத் துள்ளே
விளங்கிநின்ற வாலைப்பெண் ணாதி காப்பே!

(இவர் இராராசச் சோழன் குருவாய் இருந்த கருவூரார் என்று கூறுகின்றனர். ஆனால் சான்று இல்லை) இவள் தெளிவார்க்குத் தெளிவும் பிறர்க்கு விளங்காமையும் தருவாள்; ஒரு கணத்தில் சிவமயமாகச் சேர்ப்பாள்; நல்ல வழியால் ஞானம் காட்டுவாள்; மறை உடல் மறைவு தருவாள்; உறுதியும், உதிப்பதில் உதிப்பதும் காட்டுவாள்; வெளியோடு வெளியாக விரியும் நாதத்தில் விளக்கமாய் நிற்கும் வாலைப் பெண்ணாகிய இந்த ஆதி என்னைக் காக்கட்டும்.

ஆதியந்தம் வாலையவ ளிருந்தே வீடே
ஆச்சரியம் மெத்தமெத்த அதுதான் பாரு
சோதியந்த நடுவீடு பீட மாகிச்
சொகுசுபெற வீற்றிருந்தாள் துரைப்பெண் ணாத்தாள்
வீதியந்த ஆறுதெரு அமர்ந்த வீதி
விளையாடி நின்ற திருமாளி கண்டாய்
பாதிமதி சூடியே யிருந்த சாமி
பத்துவய தாகுமிந்த வாமி தானே. 1

வாலைப்பெண் ஆகிய இவள் இருக்கும் மூலாதார மாகிய வீடே ஆதியும் முடிவுமாகும். எல்லாவற்றுக்கும் இவளே காரணமாவாள். சோதி தோன்றும் நடுநாடிக்குப் பீடமாய் இருக்கும் மூலாதாரத்தில் சொகுசாக வாலைப் பெண் அமர்ந்திருப்பாள். இவளே தலைவி மற்றும் தாய் ஆவாள். ஆறு ஆதாரங்களும் உள்ள யோக வீதியில் இவள் விளையாடித் திருமாளிகை காண்பாள். பாதி நிலவைச் சூடிய சிவன் இவள் கணவன். இவளுக்கு உருவமது பத்து வயதான சிறுமியே ஆகும்.

வாமியிவள் மர்மம் வைத்துப் பூசைபண்ண
மதியுனக்கு வேணுமடா அதிக மாக
காமிவெகு சாமிசிவ காமி ரூபி
காணரிது சிறுபிள்ளை கன்னி கன்னி
ஆமிவளை யறிந்தவர்கள் சித்தர் சித்தர்
அறிந்தாலு மனமடக்க மறிய வேணும்
நாமிவளைப் பூசை பண்ண நினைத்த வாறு
நாட்டிலே சொல்லவென்றால் நகைப்பார் காணே. 2

இறைவன் இடது பக்கமாயிருக்கும் இவ்வாலையை மனத்தில் வைத்துப் பூசை செய்ய அதிக அறிவு உனக்கு வேண்டும். காமவடிவம், சாமியாகிய சிவத்துடன் உள்ள சிவகாமி எனும் வடிவம் நம்மால் காண முடியாதது. இச்சிறு பிள்ளை கன்னியாவாள். இவளை அறிந்தவர்களே சித்தர் ஆவார். அறிந்தபின் மனம் அடக்கமாக இருக்க வேண்டும். நாம் இவளைப் பூசை செய்யும் விபரத்தை நாட்டோர்க்குச் சொன்னால் நகைப்பார்கள்.

காணப்பா இவளுடைய கற்பு மெத்த
கண்டவர்க்குப் பெண்ணரசு நானே யென்பாள்
ஊணப்பா அமிழ்தமிவ ளூட்டி வைப்பாள்
உள்வீட்டுக் குள்ளிருந்து மேலே யேறப்

பூணப்பா மனமுறைந்து வாவா வென்பாள்
புத்திரனே யென்மகனே யென்று சொல்லி
வேணப்பா வேணதெல்லாந் தருவே னென்பாள்
வேதாந்த சூட்சமெலாம் விளங்கும் தானே. 3

இவள் கணவன்பால் மிகுந்த ஆசை உள்ளவள். காண்பவர்க்குப் பெண்ணரசியாகத் தோன்றும் இவளே, யோகிக்கு யோகசாதன அமிர்தத்தை ஊட்டி வைப்பாள். உடம்பிற்குள் உள்ள வழியின் மூலம் மேலே ஏறிப் போக வா, வா என்று அழைப்பாள். என் மகனே என்று கூறுவாள். அன்பினால் உன் விருப்பம் எல்லாம் தீர்ப்பேன் என்பாள். வேத முடிவாகிய யோகத்தை இவளே விளக்குவாள்.

தானென்ற வாலையிவள் ரூபங் காணச்
சமர்த்துண்டோ ஆண்பிள்ளை தானு முண்டோ
பானென்ற வாமத்துக் குள்ளே யப்பா
பராபரையாள் பலகோடி விதமு மாடித்
தேனென்ற மொழிச்சியிவள் சித்தர்க் கெல்லாஞ்
சிறுபிள்ளை பத்துவய துள்ள தேவி
ஊனென்ற வுடலுக்குள் நடுவு மாகி
உத்தமியாள் வீற்றிருந்த வுண்மை தானே. 4

நம் உயிரனைய இந்த வாலைப் பெண் வடிவம் காணச் சமர்த்து உண்டோ? வலிமை கொண்ட ஆண் மகனும் உண்டோ? இடது பக்கத்தில் பலவிதமாக இப்பராசக்தி ஆடிடுவாள். சித்தர்களிடம் தேனாகப் பேசி உபதேசிப்பாள். ஆனால் இத்தேவி பத்தே வயதான சிறு பிள்ளையே ஆவாள். இவள் உடல் நடுவேதான் வீற்றிருப்பாள்.

உண்மையிவள் நாணமில்லா திருந்த வீடே
ஊருக்குள் நடுவீடே உற்றுப் பாரு
செம்மையாய்க் கண்டவர்க ளுண்டோ அப்பா
செகசால வித்தையிவ ளாடும் வித்தை

உண்மையடா பஞ்சவண்ண மாகி நின்ற
உலகதனி லலைந்தவர்கள் கோடா கோடி
நின்மலமாய்க் கண்டவர்கள் சொல்லா ரப்பா
நேசமுட னெனக்குரைத்த நிசங்கண் டேனே. 5

இவள் மறைவு (நாணம் இல்லாமை) இல்லாமல் மூலா தாரத்தில் இருப்பாள். உடம்பின் உள்பக்க வழியில் நடுவே உற்று இவளைப் பார். முழுதும் இவளை அறிந்தவரில்லை. இவ்வுலகத்தையே மாயமாக்குவாள். இவள் ஐந்து நிறங்க ளாகி இருப்பாள். அதையறியவே உலகில் அலைந்தவர் கோடி கோடியாவர். நேரில் கண்டவர்கள் வெளியில் சொல்ல மாட்டார்கள். இவை அவள் எனக்குச் சொன்ன உண்மைகள் ஆகும்.

கண்டதொரு பூரணத்தின் மகிமை கேளு
கால்மேலுந் தலைகீழும் நடுவு மாகி
அண்டரொடு முனிவர்களுங் கண்டு போற்ற
ஆதவனு மம்புலியு மதிலே நின்று
தொண்டுபண்ணு மவர்களிலே நாலு பேர்கள்
சுகம்பெறலா மென்றுசொன்ன வாசல் நாலு
கொண்டவர்கள் கண்டுவந்த தொண்ணூற் றாறு
கொள்கையெனக் காத்திருந்த குறிப்பைப் பாரே. 6

பூரணமாகிய கடவுள் மகிமையைக் கேள். கால்பகுதி மேலாகும்; தலைப்பகுதி கீழ்நோக்கும்; நடுவிலேயே உடலில் யோக வீதி இருக்கும். இதில் சூரிய சந்திரர் இருநாடிகளாய் நின்று யோகத்திற்குத் துணை செய்வர். இவர் நான்கு மார்க்கமாக வந்து சுகம் அமையலாம் என்று சொன்ன வாயில் நான்கு இதழ்த் தாமரை யுள்ள மூலாதாரம் ஆகும். இதை மனத்தில் கொண்டவர்கள் 96 தத்துவங் களையும் கண்டு வருவர் என அறிக.

(தொண்ணூற்றாறு தத்துவங்கள் - ஆன்ம தத்துவம் 24, நாடிகள் 10, அவத்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாரம்

*6, தாது 7, மரபு 10, கோசம் 5, வாயில் 9 ஆக மொத்தம் 96 அல்லது 36 தத்துவம் 60 தாத்விகம் சேர்ந்ததும் 96 தத்துவமாகும்)*

பார்த்தவர்கள் செய்தொழிலும் மனமும் வேறாம்
பலநூலைப் படித்துப் படுகுழியில் வீழ்வார்
ஏற்றபடி மனம்போனாற் புத்தி போச்சே
ஏழைமதி போகாதே என்தாய் பாதம்
போற்றுதற்கே ஐவரையு மனத்தி லொன்றாய்ப்
புத்திசித்தம் ஓர்நிலையில் நிறுத்தி வாசம்
பூத்தமல ரெடுத்துதிருப் பாதம் போற்றப்
பொறியைந்து கருவிகர ணாதி போமே. 7

திருவருளால் யோகம் தெரிந்தவர்கள் தாமே முயலாது பலநூலும் படித்துக் குழம்பிக் குழியில் விழுவர். மனம் வேறு வேறு வகையில் போய் அறிவும் குலையும். என் தாயின் (வாலை) பாதத்தை எண்ணி மனம் வைத்தால் அறிவு கெடாது. ஐந்து வகைக் கடவுள் தத்துவத்தையும் மனத்தில் ஒன்றாக்கி, புத்தியும் சித்தமும் ஒருநிலையில் ஒடுங்கி நிற்கும் போது, மணமலரை எடுத்துத் தாயின் பாதத்தில் வழிபாடு செய்ய ஐந்து பொறிகளும் அதனால் வந்த கருவிகளும் யாவும் பிரிந்து போகும்.

(ஐந்து வகைக் கடவுள் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்கள் செய்யும் தெய்வங்கள்)

போச்சுதடா மனமாய்கை வீறு போச்சு
பொறியைந்து கருவிகர ணாதி போச்சு
ஏச்சுதடா வென்றுமன மிறக்க லாச்சு
எனக்கொருவ ரிணையில்லை யென்ற பேச்சு
வாய்ச்சுதடா மனமடங்க வங்கென் றோர்சொல்
வாய்பேசா மவுனத்தை யதிலே சேர்க்கக்
காய்ச்சுதடா பூத்தமலர் கருத்தை யூன்று
கனியாகும் அக்கனியைக் கண்டு கொள்ளே. 8

மனம் மாய்ந்து போனால் வீறுபோகும். அதனால் தான் குறுக்கே நிற்கும் கருவிகளும் கரணங்களும் விலகும். மனமானது ஒன்றாக நிற்காமல் இறந்தே போகும். (சிந்திப்பதை நிறுத்தும்)

எனக்கு ஒருவர் நிகரில்லை என்று பேசும் செருக்கு 'வம்' என்று கூறும் பீஜமந்திரத்தால் காணாமல் போகும். அதோடு வாயும் பேசாத மவுனத்தை அதில் இணைத்தால் பூத்த மரம் காய்த்தது போல் பயன் உண்டாகும். அந்த வெற்றிக் கனியைக் கண்டு கொள்.

கொள்ளுதற்கிங் கின்னமொரு குறிப்பைக் கேளு;
கோடியிடிமின் முழங்குங் கண்ணை மூடு
விள்ளுதற்கு மனமடங்காப் பூதங் காணும்
விள்ளாதே யுள்ளபடி சிங்கென்றோர் சொல்
விள்ளவுமே யுபாயமதால் நடுவே நில்லு
வேகமெல்லா மொடுங்குமடா சத்தம் போச்சு
கள்ளரைப்போல் மயங்காதே மவுனத் தூன்று
கண்ணிணையுந் திறக்காதே கருதிப் பாரே. 9

கோடி மின்னல் ஒரு சேர மிளிர்வது போல் தோன்று மாதலால் கண்ணை மூடுக. சொல்ல முடியாதபடி மனத்தை அடக்கு. வதைத்தார்க்கும் ஒரு சக்தி தோன்றும். அப்போது 'ஓம் சிங்' என்று ஒரு சொல் சொல்லு. இந்த உபாயத்தால் நடுவீட்டில் (உடம்பில்) மனத்தைச் செலுத்து. மனத்தில் அதைக் கெட்டொழிக்க வந்த வேகமெல்லாம் அடங்கிப் போகும். சத்தம் இல்லாது போகும். கள்வர் போல் மயங் காதே. மவுனத்தில் ஊன்றி நில். கண் திறவாமல் கருதிப் பார்.

பாரேது? புனலேது? அனலு மேது?
பாங்கான காலேது? வெளியு மாகும்
நாரேது? பூவேது? வாச மேது?
நல்ல புட்பந்தானேது? பூசை யேது?

ஊரேது? பேரேது? இனமு மேது?
ஓகோகோ அதிசயந்தா னென்ன சொல்வேன்!
ஆறேது? குளமேது? கோயி லேது?
ஆதிவத்தை யறிவதனா லறிய லாமே. 10

நிலம், நீர் முதலிய பஞ்சபூதங்கள் இல்லை. பூவும் தொடுக்க நாரும் அப்போது எப்படிக் கிடைக்கும் பூசை செய்ய? அதனால் பூசையும் இல்லை. ஊர், பேர், இனம் இவை இல்லாமையால் ஆறு, குளம், கோயில்களும் தோன்றாமை யால், ஆதியான பரம்பொருளை அறிவார் அறியலாம்.

ஆமெனவும் ஊமெனவும் இரண்டுங் கூட்டி
அப்பனே ஓமென்ற மூன்று மொன்றாய்
நாமெனவுந் தாமெனவு மொன்றே யாகும்
நல்லவர்க ளறிவார்கள் காமி காணான்
வாமம்வைத்துப் பூசைபண்ண இந்த மார்க்கம்
வந்தவர்க்குச் சத்திசிறு பிள்ளை வாலை
சோமநதி யமுதமுண்ண வாவா வென்பாள்
சுகமுனக்குப் பரமசுகம் அருள் செய்வாளே. 11

ஆம், ஊம் என்ற இரண்டு மந்திரமும் கூட்டி, இவற்றின் முன் ஓம் சேர்த்து, மூன்றாக்கி உரைத்தால் நாம் வேறு கடவுள் வேறாகத் தோன்றாது ஒன்றேயாகும். இது நல்லவர் களால் உணரப்படும். அதைப் பற்று அழியாதவர் காண மாட்டார். இறைவனின் இடப்பக்கத்தில் உள்ள பராசத்தியை இப்படிப் பூசை செய்ய வந்தவர்க்கு சத்தியானவள் சிறு பிள்ளை வாலையாக நிற்பாள். சோம பானமாகும் யோக அமுதத்தை அவளே வா என்று அழைத்துக் கொடுப்பாள். இதுவே உனக்குப் பரம சுகமதாகும்.

செய்குவாய் பூசையது செய்யும் போது
செய்குறிகள் தவறாமல் நடக்க வேண்டும்
உய்குவாய் பெண்ணரவம் கடியா வண்ணம்
ஊமையென்ற நடுத்தீயை யதிகங் கொண்டால்

பைகுவாய் அரவுவிடம் பொசுங்கிப் போகும்
பங்கமுனக் கில்லையடா அங்க மீதில்
ஐகுவாயுள் ளடங்கிப் பேச்சை விட்டே
அழைத்திடவே யஞ்சுமது கொஞ்சுங் காணே. 12

பூசை செய்யும்போது முறைகளில் எதுவும் தவறாமல் செய்ய வேண்டும். பெண்ணாசைப் பாம்பு கடிக்காமல் மீள்வாயாக. (காமம் நீக்குக) ஊமை எழுத்தை (மவுனத்தை) மிகுத்துச் செய்தால் அந்த ஆசையாகிய பாம்பு விடம் பொசுங்கிப் போகும். உனக்கு அதனால் பங்கமில்லை. மவுன யோகத்தால் அச்சப்படத்தக்கது ஆயினும் நம்மீது அன்பு கொள்ளும்.

காணாத காட்சியெல்லாங் கண்ணிற் காணும்
கலங்காதே மெய்ம்மயக்கம் மெத்த வாகும்
பூணாத பணிபூண்டு சிறுபெண் ணாகப்
போதமெனும் பொருள்பறிக்க வருவாள் கண்டாய்
வாணாளை மடக்கியிவள் ரூபங் கண்டு
மயங்காதே மவுனத்தில் நில்லு நில்லு
கோணாத முக்கோணக் குறியைப் பாரு
கூசாதே கண்கூசுங் கூசுங் காணே. 13

இதுவரை காணாத காட்சிகள் யோகம் தொடங்கிய வர்க்குத் தெரியும். கலங்காமல் கண்ணை மூடிடுக. வாலைப் பெண் பல நகைகள் பூண்டு சிறுபெண்ணாக நம் அறிவைச் சோதிக்க வருவாள். அவள் வழியில் மயங்காதே. மவுன யோகத்தில் மீளாது நில். கண் கூசினாலும் கூசாமல் நில்.

கூச்சமற்றுப் பார்க்கையிலே இருள்போல் மூடும்
கொள்ளிகொண்டு கொளுத்தியதை வெளிச்சம்போடு
வாய்ச்சமர்த்துப் பேசாதே மவுனத் தூன்று
வாவாவென் றேநீயும் வருந்திக் கூவச்

சூட்சமது விருந்தவிடஞ் சொல்ல லாமோ?
சொல்லுதற்கு வாய்விட்டுச் சொல்ல லாமோ?
தாய்ச்சமர்த்துப் பாராதே தாயைப் போற்று
சற்குருபோ லுற்பனத்தைத் தாய்சொல் வாளே. 14

கூசாமல் பார்க்கும் போது இருள் போல மூடும். ஒரு கொள்ளியால் இருளை நீக்குவதாகக் கருதிக் கொள். வாய் பேசாதே. மவுனத்தில் ஊன்றி நில். தாயை நீ சோதிக்காதே. அவள் தயவை நீ போற்றுக. சற்குருபோல் உதிப்ப தெல்லாம் அவள் சொல்வாள்.

சொல்வதற்கிங் கிவளையலால் சுகம்வே றுண்டோ
சூட்சமெல்லா மிவளைவிடச் சூட்ச முண்டோ
நல்லவர்க்கு நடுவில்விளை யாடும் வல்லி
நாதவிந் தோங்கார நிலையுங் காட்டி
வல்லவர்க்கு வல்லவளும் நானே யென்பாள்
வரமவர்க்கும் வேணதெல்லாம் வழங்கும் ரூபி
புல்லருக்கிங் காயுதமும் புல்லே யாகும்
புத்திகெட்ட லோபிகட்குப் புகலொ ணாதே. 15

இவளைத் தவிர வேறு சுகம் உள்ளதாகக் கூற முடியாது. இவளை விடச் சூட்சுமம் ஏதுமில்லை. நல்லவர் உடலில் நடுவே விளையாடுவாள். நாதம், விந்து இரண்டிலும் ஓங்காரத்தின் விரிவைக் காட்டுவாள். வல்லவர்க்கு வல்லவள் என்று தாய் கூறுவாள். வரம் வேண்டுமளவு உருவம் வடிவம் ஆவாள். புல்லர்களும் புத்தியற்றவர்களும் இவளால் பயன் பெற மாட்டார்கள்.

புகலுவார் வேதமெல்லாம் வந்ததென்று
பொய்பேசிச் சாத்திரங்கள மிகவும் கற்றே
அகலுவார் பெண்ணாசை விட்டோ மென்றே
அறிவுகெட்டே ஊர்தோறுஞ் சுற்றிச் சுற்றிச்

சகலமுமே வந்தவர்போல் வேடம் பூண்டு
சடைமுடியுங் காசாயந் தன்னைச் சுற்றி
இகலுமன மடங்காமல் நினைவு வேறாய்
எண்ணமெலாம் பெண்ணாசை பூசை தானே. 16

வேதங்கள் தாமாக வந்தது என்பார். காமத்தை விடாமல் பொய் பேசிப் பல சாத்திரம் மிகவும் கற்றதாகக் கூறுவர். ஆனால் அறிவு கெட்டு ஆசையால் ஊர்தோறும் சுற்றி எல்லாம் கண்டவர் போல் வேடம் கொள்வர். காவி யுடை, சடைமுடி எல்லாம் அணிந்து மனம் மட்டும் முரண்பாடு அடங்காமல் பெண் ஆசையையே தினமும் எண்ணி அங்கேயே பூசிப்பர்.

பூசையது செய்வமென்று கூட்டங் கூடிப்
புத்திகெட்டுக் கைம்முறையின் போக்கை விட்டுப்
பாசையது மிகப்பேசிப் பாட்டும் பாடிப்
படிப்பார்கள் மந்திரத்தின் பயனைக் காணார்
ஆசையிலே பெண்ணாசை மயக்கத் தாலே
அங்கிருந்த வாமத்தைப் பங்கு போட்டுப்
பேசையிலே மனம்வேறாய் நினைப்பான் பாவி
புரட்டுருட்டாய் நினைவு தப்பிப் பேசுவானே. 17

பூசை செய்வோமென்று கூட்டம் கூடுவர். அறிவு இல்லாமல் உரிய முறையைக் கைவிட்டு வேறு மொழிகள் பல பேசி, பாட்டும் பாடிப் படிப்பர். மந்திரம் என்பதன் பயனை அறிய மாட்டார்கள்; பெண்ணாசை மயக்கத்தால் பூசைக்கு வந்த வாமப் பெண்ணைப் பலரும் வசம் செய்து மனம் காமமாய் நினைவு கொள்வர். பாவிகள் புரட்டுகள் பலவற்றை மயக்க நிலையில் பேசுவார்கள்.

விளக்கம்: வாமாச்சார சமயம் - ஒரு கன்னிப் பெண்ணைத் தெய்வமாகப் பாவித்து, பூசையில் அமர்த்தி வழிபடும் மதம்.

பேச்சென்றால் வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப் பேசிப்
பின்னு முன்னும் பாராமல் மதமேமீறி
நீச்சென்றும் நினைப்பென்றும் ஏதுங் காணார்
நிர்மூட ரனேகவித சாலங் கற்றே
ஆச்சென்றா லதனாலே வருவ தேது?
ஆத்தாளைப் பூசித்தோ னவனே சித்தன்
மூச்சென்ன செய்யுமடா நரகில் தள்ளும்
மோசமது போகாதே முக்கால் பாரே. 18

வாய்ப்பேச்சுப் பேசும் திறமையால் முன்பின் சிந்திக்காமல் பேசுவர். எது முடிவு (நீச்சு) எது நினைக்கத்தக்கது என அறிய மாட்டார்கள். பல மூடர்கள் கூடி, பல மாயம் கற்றபடி காட்டி மயக்குவார்கள். அதனால் ஒன்றும் ஆகாது. தாயான வாலையைப் பூசித்தவனே சித்தன் ஆவான். வெறும் மூச்சுப் பயிற்சியால் பயனில்லை. நரகமே கிட்டும். மோசம் போகாமல் பக்தி வழியில் நட. அதுவே முக்கால் பகுதியாம்.

முக்காலும் பொருந்துமென்று சொன்ன போதே
மோசமில்லை சூட்சமது மொழிந்து கூடும்
தக்காமற் போனபே ரனேக ருண்டு
சமர்த்தறிந்தா லவன்சாமி யவனே சித்தன்
எக்காலும் நடந்திருநீ காலு முன்னி
இருந்தடங்கி யுள்ளிருந்து வெளியிற் போன
அக்காலைக் காணாம லலைந்தே யோடி
அழிந்து கெட்டுப் போனவர்கள் அறிந்து கொள்ளே. 19

முக்காலும் இதுவே பொருத்தம் என்று சொல்லியதும் முதலுக்கு மோசமில்லாமல் சூக்குமம் வெளிப்படும். இது மனத்தில் தைக்காமல் போனவர்கள் பலர் உண்டு. இதன் திறத்தை அறிந்தால் அவன் கடவுளே ஆவான். அவனே சித்தன். எப்போதும் இவ்வழியே நடப்பாயாக. காற்றை

உள்வாங்கி அடக்கிப் பிறகு வெளிவிட்டதைத் தேடிக் காண முடியாது. இப்படி வீண் வழியில் அழிந்தவர்கள் பலர் என அறிக.

அறிந்துகுறி யடையாளங் காண வேண்டும்
அக்குறியிற் சொக்கிமனந் தேற வேண்டும்
அறிந்தவன்போ லடங்கிமன மிறக்க வேண்டும்
அலகையது வழிபாதை அறிய வேண்டும்
மறைந்தவரை நிறைந்தவரை நீதான காண
மயக்கத்தைக் கண்டுனையும் மதிக்க வேண்டும்
நிறைந்தமதி குறைந்தவகை அறிய வேண்டும்
நிச்சயத்தை யறிவார்க்கு முத்தி தானே. 20

அறிந்துகொண்டவர்கள் முயன்ற அடையாளங்களைக் காண வேண்டும். அந்த அடையாளங்களில் மனம் ஈடுபட்டுத் தெளிய வேண்டும். அறிந்தவன் எப்படியோ அப்படி நீயும் அறிந்து மனம் சிந்திப்பதை நிறுத்த வேண்டும். இப்படி வாழ்ந்து மறைந்தவர்களையும், இந்தத் தெளிவு நிறைந்து இங்கே உள்ளவர்களையும் நீ காண வேண்டும். மயக்கத்தைக் கண்டு அதை நீக்கி நீ யார் என்று உண்மையை உணரவேண்டும். நிறைந்த அறிவும் குறைந்த செயலும் வேண்டும். இந்த நிலையானவற்றை அறிபவர்க்கே முத்தி கிடைக்கும்.

விளக்கம்: மனத்தால் நினைப்பதால் வாயு அசையும். வாயு அசையவே புலன்கள் வசமாகாமல் எழும்பும். ஆகவே மனம் சிறக்க வேண்டுமென்பர்.

முத்திதரு மென்றுமனம் புத்தி யற்று
மோசமது போகாதே பாசங் கையில்
சித்தமதில் சந்திரனை நிறுத்திக் கொண்டு
செந்தீயில் உன்தீயை நடுவில் வாங்கிச்

சுத்தியுடன் ஆதியந்த மனத்தில் வைத்து
சொல்லாத மந்திரத்தின் தீயை மூட்டி
நித்யமல ரர்ச்சனைசெய் பாதம் போற்றி
நீயுமதி மதியுமதி லதிக மாமே. 21

முத்தி கிடைக்கும் என்று வெறும் நம்பிக்கையால் மனத்தையும் புத்தியையும் அவ்வழியே வைத்து மோசம் போகாதே. பாசம் உன் கையில் நின்று தடுக்கும். சித்தத்தில் சந்திர (இடா) நாடியை நிறுத்திக் கொள். மந்திர ஒலியில் உண்டாகும் செந்தீயை உன் உடம்பில் எழும் குண்டலினித் தீயுடன் இணைத்து மனச்சுத்தியுடன் முதலும் முடிவும் (முடிவு தலை உச்சி; முதல் மூலாதாரம்) மனத்தில் வைத்து வாய்பேசாது மவுனமாய்ச் சொல்லும் மந்திரத் தீயை மூட்டுக. என்றும் இருப்பதாகிய நினைவையே மலராகக் கொண்டு தாயின் பாதத்தைப் போற்றி நீ வழிபட்டால் அதில் உன் அறிவும் ஈடுபட்டால் பயனாகும்.

ம்திபெருங் கதிபெருகும் வாதம் வாதம்
வருந்தாதே யந்தமுறை யாகா தப்பா
நிதிபெருகு மிவள் குறியே வாதமாகும்
நிர்மூட ரறியாமல் வகாரம் பேசி
நதிகள்தனை யறியாமல் சலத்தில் மூழ்கி
நானே நானென்றுவாய் மதங்கள் பேசி
உரியபொருள் உள்ளதெல்லாம் சுட்டுச் சுட்டே
உட்பொருளைப் பாராம லழிந்திட் டாரே. 22

மனத்தால் துருவித் துருவி ஆய்வதால் அது வளரும். பலவித வழிகள் தோன்றும். இது வாத நோய் போல் முடக்கிவிடும். ஆகவே வருத்தம் தரும் இந்த முறை ஆகாது. பண ஆசையாகிய இவள் குறியே வாதமாகும். மூடர்கள் இதையறியாமல் வாமாசாரம் பேசுவர். (வகரம் - வாமாசாரம்) நதியின் பெருமை அறியாமல் அந்த நீரில் மூழ்கி, நான் நான் என்று வாயால் செருக்கைப் பேசி,

மதபேதம் வளர்த்து, உண்மைப் பொருளை அறியாமல் அதை எரித்துத் தாமும் அழிந்தார்.

விளக்கம்: உட்பொருள் சுடப்படுவது என்பது உடல் அழிந்தால் அதில் தோன்றும் கடவுளும் நமக்கு நெருங்கி வரமாட்டார் என அறிக.

இட்டகுறி நாதவிந்து ரூபங் காண
இயலறியாச் சண்டாளர் சுட்டு மாய்வார்
விட்டகுறை வந்ததென்றால் தானே யெய்தும்
விதியல்லார்க் கெத்தனைதான் வருந்தி னாலும்
பட்டுமன மாய்தலல்லால் வேறொன் றில்லை
பத்தியிலார்க் குரைத்துமனம் பாழ்போக் காதே
திட்டமதாய்ப் பாணம் வைத்துத் தேவிபூசை
சீர்பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே. 23

யோகக் குறிகளாகிய நாதம், விந்து ஆகியவற்றின் வடிவம் காண இயலாமல் சண்டாளர் மாய்வர். விட்டகுறை உள்ளதென்றால் அவை தானே தோன்றும். விதியில்லாதவர் களுக்கு எவ்வளவு முயன்றாலும் மனம் அழிவதன்றி வேறில்லை. இதைப் பக்தியில்லாதவர் களுக்குச் சொல்லி வீணாக்காதே. திட்டமாக இருந்து அம்புபோல் குறிக்கோள் தவறாமல் யோக நெறி நின்று, தேவி பூசையைச் செய்து பதினெட்டுச் சித்தர்கள் வந்தனர் என அறிக.

எட்டிரண்டு மொன்றுமது வாலை யென்பார்
இதுதானே பரிதிமதி சுழுமுனை யென்பார்
ஒட்டிமுறிந் தெழுந்தது முக்கோண மென்பார்
உதித்தெழுந்த மூன்றெழுத்தை யறியா ரையோ
கொட்டுமொரு தேளுருவாய் நிற்கும் பாரு
கூட்டமிட்டுப் பாராதே குறிகள் தோன்றும்
சுட்டசுடு காடுமது வெளியு மாகும்
சொல்லுதற்கு வாய்விளங்காச் சூட்சந் தானே. 24

எட்டும் இரண்டும் (அ+உ) சேர்ந்து ஓம் என்று ஒன்றாவதுதான் வாலை என்பர். இதுதான் இடா, பிங்களா சுழுமுனை என்பர்.

மூலாதார முக்கோணத்தை ஒட்டி எழுந்தது என்பர். பாலாமந்திரம் மூன்றால் (ஐம் க்லீம் ஸெள:) எல்லாம் தெரியும் என்பதை அறிய மாட்டார்.

விளக்கம்: கொட்டும் தேள் போல் உருவம் தெரியும். ஆனால் அது அருளுருவானதால் வதைக்காது. பலருடன் கூடிப் பேசி யோகம் செய்யாதே பல குறிகள் தோன்றும். சுடுகாடு கூட அண்டவெளியாகும். சொல்லால் விளக்க முடியாத சூக்குமம் அது.

சூட்சமிவள் வாசமது நிலைத்த வீடு
சொல்லுதற்கே எங்குமாய் நிறைந்த வீடு
தேசமதில் போய்விளங்கு மிந்த வீடு
சித்தாந்த சித்தரவர் தேடு வீடு
ஓசைமணிப் பூரமதி லுதிக்கும் வீடு
ஓகோகோ அதிசயங்க ளுள்ள வீடு
ஆசுகவி மதுரமது பொழியும் வீடு
அவனருளுங் கூடிவிளை யாடும் வீடே. 25

சூட்சமாய் இருக்கும் வாலையின் இருப்பிடம், என்றும் மாறாது நிலையாய் இருக்கும். எங்கும் சொன்னால் தெரியும் வீடு. நாட்டில் (உடலில்) பலவிடத்தும் விளங்கும் இந்த வீடு. ஓசை கொண்ட மணிப்பூரகத்தில் இந்த வீடு தோன்றும். இது மிகுந்த வாய்ப்புக்கள் கொண்ட வீடாகும்.

சித்தாந்த நெறி கொண்ட சித்தர்கள் தேடும் வீடும் இதுவே. உடனே கவி பாடும் திறம் கொடுக்கும் வீடு. இறைவன் அருளும் இங்கே இணைந்தே இருக்கும்.

விளக்கம்: ஆசு கவி - சொன்னதும் பாடும் ஆற்றல்.

வீடுமது தலைவாசல் அதுமேல் வாசல்
வெளியான சுழிக்கதவு அடைக்கும் வாசல்
தேடுகிற மூவருமே வணங்கும் வாசல்
திறமையான பன்னிருவர் காக்கும் வாசல்
ஆடுகிற புலியாகி நின்ற வாசல்
அரகர சிவசிவா வாசி வாசல்
கூடுகிற முக்கோணப் பரங்க ளாகிக்
குறுகுமதி பெருகுமதி கூறொண் ணாதே. 26

இந்த மூலாதாரமாகிய வீடுதான் தலைமையான வாயில், உச்சந்தலையில் உள்ளது மேல் உலகிற்குப் போகும் வாயில், வெளியில் கலக்கும் சுழுமுனையைத் திறக்காமல் அடைத்து நிற்கும் வாயில், மும்மூர்த்திகள் வணங்கும் படியான வாயில்; (மூலாதாரம் திறந்தால் மூன்று மண்டலமும் திறக்கும்.) பன்னிரண்டு விரல் தூரம் உள்ள காற்று வந்து காக்கும் வாசலாம். புலிபோல் குண்டலினி பாயக் காத்து இருக்கும் வாசல். அரகர சிவனே! இது பிராணாயாமம் வந்து திரும்பும் வாசல். முக்கோணங்கள் பலவும் பல ஆதாரங்களில் உள்ளன. அவை இம் மூலாதாரம் உணர ஒன்று கூடும். இதில் உள்ள மூன்று கோணச் சக்தியினர் திரளுவர். இதைக் கண்டவர்கள் விண்டிலர். ஆகையால் குறுகிய மதியாலும் இதைக் கூற முடியாது. தெரியாமை யால் பெரிய மதியாலும் அறிய முடியாது.

ஒண்ணாகி இரண்டாகி விளைவு மாகி
உத்தமியா ளுட்கருத்தை யறியப் போமோ?
தின்னாத விடக்கெடுத்துத் தின்னச் சொன்னாள்
செத்தசவம் போலிருந்து செபிக்கச் சொன்னாள்
பண்ணாத பணக்கோடிப் பண்ணி வைத்தாள்
பார்த்திருந்து கழுத்தறுக்கப் பார்த்தாள் பாவி
எண்ணாது எண்ணிமனம் ஏங்கி நாளும்
எனக்கபயம் ஏதெனவே யெழுந்திட் டேனே. 27

ஒன்று இரண்டாக வளர்ந்திடும் விளைவு போல உத்தமியாள் பரவுவாள். அவள் கருத்தை அறிய முடியாது (தசை உணவு) தின்னாததைத் தந்து தின்னுக என்றாள். (விடக்கு - தசை) செத்தபிணம் போலிருந்து செபிக்கச் சொன்னாள். (உணர்வு இன்றி மனம் கலங்காது தீவிரமாய்ச் செபித்தல்) கேளாமலே கோடிக்கணக்கான பணம் தந்தாள். அதில் ஆசை வைக்கிறோமோ என்று பார்த்துக் கழுத்தை அறுக்கக் காத்திருந்தாள் பாவி! எண்ணாத எண்ணம் பலவும் எண்ண நேர்ந்தது. எனக்கு இனி அபயம் (ஆதரவு) இல்லையோ என எழுந்தேன்.

எழுந்திட்ட திவள்பார்த்துத் தொடர்ந்து கூடி
என்னையுமே யிழுத்துமடி பிடித்துக் கொண்டு
கொழுந்துவிட்டு வளர்ந்தெரியும் அனலை மூட்டிக்
குடிகேடி சத்துருப்போல் கூச்ச லிட்டாள்
அழுதேனே முந்தியினி யந்த வூரில்
அரகரா துணையெனக்கே யாரு மில்லை
எழுந்திட்டா ரெல்லோரும் ஓடிப் போனார்
என்ன செய்வேன் தனித்திருந்தே ஏங்கினேனே. 28

எழுந்த என்னைப் பார்த்து, தொடர்ந்து வந்து என்னை மடி பிடித்து இழுத்தாள். கொழுந்து விட்டு எரியும் நெருப்பை எனக்குள் குண்டலினி உண்டாக்கி, குடிகேடி பகைவர் போல் கூச்சலிட்டாள். இந்த வூரில் எனக்கு யாரும் இல்லையே என்று நான் அழுதேன். அருகில் உள்ளவர் எல்லாரும் எழுந்து ஓடினர். (பாசம் ஓடியது என்க) என்ன செய்வேன்! தனியே இருந்து ஏங்கினேன்.

ஏங்கினேன் ஈடழிந்தேன் வீடும் அற்றேன்
என்னைத்தான் கண்டவர்கள் சீசீ யென்னத்
தூங்கினேன் காலறிந்து மடக்க மாட்டேன்
துணையெனக்கு யாருமில்லை சூழ்ச்சி யாக

வாங்கினேன் காலறிந்து மடக்க வேண்டும்
வகையான எனக்கொருத்தி யுறுதி சொன்னாள்
தேங்கினேன் முன்னுவள் பின்னு மாகத்
திடமெனக்குச் சொன்னதிந்தத் தெளிவு தானே. 29

ஏங்கினேன். ஈடழிந்து வீடு இல்லாது என்னைக் கண்டவர்கள் சீச்சீ என்று இழிவு செய்தனர். தியானம் செய்தேன் (தூங்கினேன்). காற்றை மடக்குவது அறிந்து மடக்காமலே செய்தேன் (கால் - காற்று). துணையற்றிருந்த எனக்குச் சூழ்ச்சியாக காற்றை எப்படி மடக்க வேண்டு மென்று ஒரு பெண் உறுதியாகக் கூறினாள். அவள் முன் செல்லத் தேங்கியபடி அவள் பின் சென்றேன். அவளே திடமாக நான் இருக்கும் வகை சொன்னாள். தெளிவு அதுவேயாம்.

தெளிவதற்குச் சூட்சமிது தெளிவாய்ப் பாரு
சிவனிருந்து விளையாடுந் தெருவைப் பாரு
மொழிவதற்கிந் நூலைவிட வேறொன் றில்லை
முன்னாதி யந்தமொடு நடுவுஞ் சொன்னோம்
சுழியதற்குள் சுழியிருந்த சூட்சம் சொன்னோம்
சொல்லாத மவுனமுதற் கருவுஞ் சொன்னோம்
ஒளிபிறக்கு முறுதியிந்த வுறுதி சொன்னோம்
உற்பனமாய்ப் பார்த்தவர்கள் சித்தர் தாமே. 30

தெளிவடையும் சூட்சமம் வாலைப் பெண் தயவு பெறுதலே ஆனாலும் சிவனிருக்கும் தலை (1008 தாமரை இதழ்ப்பகுதி)யில் உள்ள வழிகளைப் பார்த்து அறிக. இது போல் வேறு நூலில் சொல்லவில்லை. ஆதி அந்தம் நடு எல்லாம் சொன்னோம். சுழியான மூலாதாரத்தில் சுழிமுனை இருப்பையும் சொன்னோம். மவுனமே எல்லாம் என்ற கருவையும் சொன்னோம். ஒளி உடலுக்குள் எப்படிப் பிறக்கு மென்றும் உறுதியாகச் சொன்னோம். இப்படிச் சொன்னதை நேரில் உண்டாவதைக் கண்டவர்கள் சித்தர்களேயாம்.

# 34. அகப்பேய்ச் சித்தர்

இவர் அகத்தை (மனம்)ப் பேய் என்று உருவகம் செய்து பாடல் தோறும் இச்சொல்லை வைத்துப் பாடிய தால் இப்பெயர் இவருக்கு வந்தது எனலாம். சான்றுக ளோடு இவர் வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. இவர் திருவையாற்றில் அடக்கமானதாகக் கூறுவர். இவர் 90 கண்ணிகள் பாடியுள்ளார். தத்துவ வரலாறும் ஞான நெறியும் இவர் பாடலில் எளிமையாகக் கூறப்பட்டுள்ளன.

## அகப்பேய்ச் சித்தர் பாடல்கள்

### மூலமும் உரையும்

நஞ்சுண்ண வேண்டாவே அகப்பேய்
நாயகன் தாள்பெறவே
நெஞ்சு மலையாதே அகப்பேய்
நீயொன்றும் சொல்லாதே. 1

அகப்பேயே! நஞ்சு உண்ணல் முதலிய வழிகளில் உயிர் விட்டால் கடவுள் தாள் பெறலாம் என்பது உண்மை யன்று. நெஞ்சு மலைக்காமல் நான் சொல்வதைக் கேள். நீ வாயால் ஒன்றும் பேசாதிரு.

விளக்கம்: மவுனமே திருவடி பெற எளிய வழி என்பதாம்.

பராபர மானதடி அகப்பேய்
பரவையாய் வந்ததடி
தராதலம் ஏழ்புவியும் அகப்பேய்
தானே படைத்ததடி. 2

அகப்பேயே! பராபரமான கடவுள் எங்கும் பரவியதாய் உள்ளது. தராதலமாகிய ஏழு வகை உலகும் தானே கடவுள் படைத்தது.

நாத வேதமடி அகப்பேய்
நன்னடங் கண்டாயே
பாதஞ் சத்தியடி அகப்பேய்
பரவிந்து நாதமடி. 3

அகப்பேயே! நாதமே வேதமாகும். அதுவே நடமும் ஆகும். பாதமே சத்தியாகும். பரவிந்து நாதமாகும்.

விளக்கம்: பிரபஞ்சம் முழுதும் ஒளியாக உள்ள அணுப் பொருள் பரவிந்தாகும். அதுவே நாதமுமாம். பர விந்து - உலகம் முழுமையும் ஒளியாகப் பரவியுள்ள அணுப் பொருள்.

விந்து நாதமடி அகப்பேய்
மெய்யாக வந்ததடி
ஐந்து பெரும்பூதம் அகப்பேய்
அதனிடம் ஆனதடி. 4

அகப்பேயே! விந்துதான் நாதமாக வந்தது. இதுவே மெய்யாகும். இதிலிருந்தே ஐந்து பூதங்களும் உண்டாகின.

நாலு பாதமடி அகப்பேய்
நன்னெறி கண்டாயே
மூல மானதல்லால் அகப்பேய்
முத்தி யல்லவடி. 5

அகப்பேயே! நான்கு பாதங்கள் உண்டு. அதுவே நல்ல வழியாகும். ஆனால் அது மூலாதாரமே தவிர அதுவே முத்தியாகி விடாது.

விளக்கம்: நாலு பாதம் - நான்கு இதழ்த் தாமரையான மூலாதாரம்.

வாக்காதி யைந்தடியோ அகப்பேய்
வந்த வகைகேளாய்
ஒக்கம தானதடி அகப்பேய்
உண்மையது அல்லவடி. 6

அகப்பேயே! மூலாதாரம் முதல் ஐந்து வாக்குகள் உடலில் உள்ளன. அவை நேரில் காணக் கூடியவையல்ல. நிலைகளால் பிரித்த பிரிவே ஆகும்.

விளக்கம்: மூலாதாரத்தில் உள்ளது சூக்கும வாக்கு ஆகும். தொப்புள் பகுதியில் உள்ளது பைசந்தி வாக்காகும். மார்புப் பகுதியில் உள்ளது மத்திம வாக்காகும். தொண்டை யில் உள்ளது வைகரி வாக்காகும். இது இரு வகைப்படும். பிறர் காதில் கேளாதது சூக்கும வைகரி. பிறர் காதில் வீழ்வது தூல வைகரியாம். இவ்வாறு வாக்குகள் ஐந்து வகைப்படும்.

சத்தாதி யைந்தடியோ அகப்பேய்
சாத்திர மானதடி
மித்தையு மாகுமடி அகப்பேய்
மெய்யது சொன்னேனே. 7

அகப்பேயே! சப்தம் (சத்தம்) முதலான ஐந்து பூதங்க ளாம். இவையே சாத்திரமாகும். இவை மாயையாகவே தோன்றும். ஆனால் அது உண்மையேயாகும்.

விளக்கம்: மித்தை - மாயை. சுவை, ஒளி, ஓசை, ஊறு (தொடு உணர்வு) நாற்றம் என்பன சத்தாதி ஐந்து எனப் படும். இவை நுண்பூதங்களாம். இவை கண்ணால் பார்ப்பதற்கு முடியாதவை. எனவே மித்தை என்றார்.

வசனாதி யைந்தடியோ அகப்பேய்
வண்மையாய் வந்ததடி
தெசநாடி பத்தேடி அகப்பேய்
திடனிது கண்டாயே. 8

அகப்பேயே! வசனம் எனும் வாக்குகள் ஐந்து ஆகும். அவற்றின் உள்ளே நிற ஒளிகள் உண்டு. அது போல நாடிகள் பத்து. இவை பிராணன் என்பதன் பிரிவுகளாம். இவை யாவும் திடமாகக் கூறக் கூடியவை.

காரண மானதெல்லாம் அகப்பேய்
கண்டது சொன்னேனே
மாரணங் கண்டாயே அகப்பேய்
வந்தவி தங்களெல்லாம். 9

அகப்பேயே! இவை ஒவ்வொன்றுக்கும் காரணம் எவை எவை என்று கண்டதைச் சொன்னேன். இக் காரணங்கள் (மாரணம்) மரணம் அடைந்துவிடும்.

விளக்கம்: மரம் முளைத்ததும் அதற்குக் காரணமான விதை மரணமடைகிறது என அறிக. மரணம் என்பதையே மாரணம் என்றார்.

ஆறு தத்துவமும் அகப்பேய்
ஆகமஞ் சொன்னதடி
மாறாத மண்டலமும் அகப்பேய்
வந்தது மூன்றடியே. 10

அகப்பேயே! உடம்பில் ஆறு ஆதாரத் தத்துவங்களும் மூன்று மண்டலங்களும் வந்தன என்று ஆகமங்கள் சொல்கின்றன.

விளக்கம்:

ஆறு ஆதாரங்கள்

| 1 | 2 | 3 |
|---|---|---|
| மூலாதாரம் | சுவாதிட்டானம் | மணிப்பூரகம் |
| முதுகுமுன்அடி | சிறுநீர்த்துளை | தொப்புள் |

| 4 | 5 | 6 |
|---|---|---|
| அநாகதம் | விசுத்தி | ஆக்ஞை |
| மார்புநடு | தொண்டைக்குழி | புருவமத்தி |

மூன்று மண்டலங்கள்: சூரிய மண்டலம் -வலது கண்; சந்திர மண்டலம் - இடது கண்; அக்கினி மண்டலம் - புருவ மத்தி என்றபடி காண்க.

பிருதிவி பொன்னிறமே அகப்பேய்
பேதைமை யல்லவடி
உருவது நீரடியோ அகப்பேய்
உள்ளது வெள்ளையடி 11

அகப்பேயே! மண்பாகமான மூலாதாரம் (பிருதிவி) பொன்நிறம். இது பேதைமையால் கூறுவதன்று உண்மையே! நீரின் பாகம் ஆகிய சுவாதிட்டானம் நீர் உருவில் உள்ளது. இதன் நிறம் வெள்ளையாகும்.

தேயு செம்மையடி அகப்பேய்
திடனது கண்டாயே
வாயு நீலமடி அகப்பேய்
வான்பொருள் சொல்வேனே. 12

அகப்பேயே! நெருப்பு (தேயு)ப் பகுதியாகிய மணிப் பூரகம் (தொப்புள் பகுதி) சிவந்த நிறமானது. வாயு என்னும் அநாகதம் (மார்பு நடுப்பகுதி) நீலமாகும். கருப்பு என்றும் கூறுவர்.

வானம் மஞ்சடியோ அகப்பேய்
வந்தது நீ கேளாய்
ஊனம தாகாதே அகப்பேய்
உள்ளது சொன்னேனே. 13

அகப்பேயே! வானப் பகுதியாகிய விசுத்திக்கு (தொண்டைக்கு) மஞ்சள் நிறமென்க. குறையாகாமல் உள்ளதைச் சொன்னேன்.

அகார மித்தனையும் அகப்பேய்
அங்கென் றெழுந்ததடி
உகாரங் கூடியடி அகப்பேய்
உருவாகி வந்ததடி. 14

அகப்பேயே! 'அ'கரம் எனும் எழுத்தில் இத்தனையும் எழுந்தது. 'உ'கரம் என்ற எழுத்துக் கூடி ஓர் உருவமானது.

மகார மாயையடி அகப்பேய்
மலமது சொன்னேனே
சிகார மூலமடி அகப்பேய்
சிந்தித்துக் கொள்வாயே. 15

அகப்பேயே! 'ஓம்' என்றதில் கடைசி எழுத்தான 'ம'கரம் மாயையாகும். இதனை மல எழுத்தென்றும் கூறுவர். 'நமசிவாய' என்பதில் 'சி'எனும் எழுத்து மூல எழுத்தாகும். இதைச் சிந்திப்பாயாக.

வன்னம் புவனமடி அகப்பேய்
மந்திர தந்திரமும்
இன்னமுஞ் சொல்வேனே அகப்பேய்
இம்மென்று கேட்பாயே. 16

அகப்பேயே! இந்த உலகம் எழுத்துக்களின் ஒலி யாலும் ஒளியாலும் உண்டானது. மந்திரம் ஆகமமாகிய தந்திரம் யாவும் இந்த எழுத்துக்களால் உண்டாயின என்பதை இன்னும் கேட்பாய்.

(வன்னம் - எழுத்து.)

அத்தி வரைவாடி அகப்பேய்
ஐம்பத்தோ ரட்சரமும்
மித்தையாங் கண்டாயே அகப்பேய்
மெய்யென்று நம்பாதே. 17

அத்தியான (யானை) விசுத்தி இருக்கும் இடம் தொடங்கி, மூலாதாரம் உள்ள இடம் வரையிலும் ஐம்பத்தோர் எழுத்துக்கள் உள்ளன. அகப்பேயே! இவை மாயையல்ல; மெய்யேயாம்.

விளக்கம்: அத்தி - அஸ்தி - யானை. ஆறு ஆதாரத் தாமரை இதழ்கள் தோறும் ஒவ்வோர் வடமொழி எழுத்து இருக்கும்.

தத்துவ மானதடி அகப்பேய்
சகலமாய் வந்ததடி
புத்தியுஞ் சொன்னேனே அகப்பேய்
பூத வடிவலவோ. 18

அகப்பேயே! இவைகள் தத்துவம் எனப்படும். பொது வான கலைகள் (உணர்வு வெளிச்சம்) இவைகளால் உண்டாகும். இவை புத்தியால் வந்தவை. எல்லாம் பூதங்களால் வந்தனவாகும்.

இந்த விதங்களெல்லாம் அகப்பேய்
எம்மிறை யல்லவடி
அந்த விதம்வேறே அகப்பேய்
ஆராய்ந்து காணாயோ. 19

அகப்பேயே! இதுவரை கூறியன யாவும் கடவுள் அல்ல. நம் ஆன்மா, கடவுள் ஆகிய இரண்டும் அல்லாத ஒன்று என்று ஆராய்ந்து காண்பாயாக.

விளக்கம்: பாசம், மலம், மாயை எனப் பல விதங் களில் இவை கூறப்படும்.

பாவந் தீரவென்றால் அகப்பேய்
பாவிக்க லாகாதே
சாவது மில்லையடி அகப்பேய்
சற்குரு பாதமடி. 20

அகப்பேயே! பாவம் தீர வேண்டுமென்றால் இவைகளைப் பாவிக்கக் கூடாது. (இறைவனை மட்டுமே பாவிக்க வேண்டும்). அப்படிப் பார்த்தால் சாவும் இல்லாது போகும். காரணம் சத்குருவின் பாதம் அதுவாகையால் இப்பயன் கிட்டும்.

எத்தனை சொன்னாலும் அகப்பேய்
என்மனந் தேறாதே
சித்தும் அசித்தும்விட்டே அகப்பேய்
சேர்த்துநீ காண்பாயே. 21

அகப்பேயே! இப்படி எத்தனை சொன்னாலும் என் மனம் தெளிவடையாது. ஆகவே சித்து, அசித்து என்ற இரண்டால் வகுத்து உணர்வாயாக.

விளக்கம்: கடவுள் சித்துப் பொருள்; பேரறிவுப் பொருள். பூதம் முதலியன அசித்துப் பொருள்; அறிவற்றது. ஆன்மா சித்அசித்து; சிற்றறிவுடையது.

சமயம் ஆறுபடி அகப்பேய்
தம்மாலே வந்ததடி
அமைய நின்றவிடம் அகப்பேய்
ஆராய்ந்து சொல்வாயே. 22

அகப்பேயே! சமயங்கள் ஆறும் ஆறு படிகளாம். தாமாகவே அவை வந்தன. இவற்றை ஒரு நேர்க் கோட்டில் அமையுமாறு ஆராய்ந்தால் அப்போது அவை விளங்கும்.

ஆறாறும் ஆகுமடி அகப்பேய்
ஆகாது சொன்னேனே
வேறே யுண்டானால் அகப்பேய்
மெய்யது சொல்வாயே. 23

அகப்பேயே! தத்துவங்கள் முப்பத்தாறு (ஆறாறு) வகைப்படும். அவை தவிர பிற அவற்றில் சேரா. வேறு இருக்குமானால் மெய்யாக அவற்றைச் சொல்லுக.

விளக்கம்: ஆன்ம தத்துவம் 24+வித்யா தத்துவம் 7+ சிவதத்துவம் 5 = 36.

உன்னை யறிந்தக்கால் அகப்பேய்
ஒன்றையுஞ் சேராயே
உன்னை யறியும்வகை அகப்பேய்
உள்ளது சொல்வேனே. 24

அகப்பேயே! உன்னை அறிந்தபோது நீ எதிலும் சேரமாட்டாய். (அதாவது நீ தத்துவங்களில் ஒன்றல்ல) இப்படி உன்னை அறியும் வகை உள்ளபடி சொல்வேன்.

சரியை யாகாதே அகப்பேய்
சாலோகங் கண்டாயே
கிரியை செய்தாலும் அகப்பேய்
கிட்டுவ தொன்றுமில்லை. 25

அகப்பேயே! சரியை என்ற மார்க்கத்தில் சாலோகம் என்ற பயன் கிடைக்கும். கிரியை செய்தாலும் பெரிய பயன் கிட்டாது.

யோக மாகாதே அகப்பேய்
உள்ளது கண்டக்கால்
தேக ஞானமடி அகப்பேய்
தேடாது சொன்னேனே. 26

அகப்பேயே! யோக மார்க்கத்திலும் பயன் இல்லை. ஆராய்ந்து பார்த்தால் ஞான மார்க்கமும் தேக ஞானமே ஆகும்.

ஐந்துதலை நாகமடி அகப்பேய்
ஆதாயங் கொஞ்சமடி
இந்தவிஷந் தீர்க்கும் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. 27

பஞ்சபூதங்களை ஐந்து தலை நாகம் என்று உருவகப் படுத்தினார் சித்தர். பயன் தரும் பூதங்களோடு வாழ்வ தாயினும் மாயையில் சிக்குவதாகிய வேண்டத் தகாததும் இருப்பதால் நாகம் என்றார். இவற்றின் மாயையாகிய விஷம் தீர்ப்பதற்கு இறையருளே தேவை என அறிக.

விளக்கம்: இந்தக் கருத்தின்படி, ஐந்து தலைநாகம் குடை பிடித்திருக்க, ஆனந்தமாய்த் திருமால் சயனம் செய்வதால் நாகத்தின் தீமை குறையும் என்பதும் அறிக.

இறைவ னென்றதெல்லாம் அகப்பேய்
எந்த விதமாகும்
அறைவ நீகேளாய் அகப்பேய்
ஆனந்த மானதடி 28

அகப்பேயே! இறை என்றால் எல்லாவிதத்திலும் ஆனந்தமே ஆகுமெனக் கூறப்படுவதை நீ கேட்டுத் தெளிந்து கொள்க.

கண்டு கொண்டேனே அகப்பேய்
காதல் விண்டேனே
உண்டு கொண்டேனே அகப்பேய்
உள்ளது சொன்னாயே. 29

அகப்பேயே! அந்த ஆனந்தத்தைக் கண்டு கொண்டேன். அதன் மேல் காதல் கொண்டேன்; அதை மேலும் மேலும் உண்டேன் என்ற உண்மை சொன்னேன்.

உள்ளது சொன்னாலும் அகப்பேய்
உன்னாலே காண்பாயே
கள்ளமுந் தீராதே அகப்பேய்
கண்டார்க்குக் காமமடி. 30

அகப்பேயே! யார் உண்மை பற்றிச் சொன்னாலும் உன் அனுபவத்தால் அதைக் காண்பாயாக. பிறர் கள்ளமும் விருப்பமும் கொண்டு உண்மையைத் திரித்து விடலாம்.

அறிந்து நின்றாலும் அகப்பேய்
அஞ்சார்கள் சொன்னேனே
புரிந்த வல்வினையும் அகப்பேய்
போகாதே யுன்னைவிட்டு. 31

அகப்பேயே! அறிந்திடும் போதும் உன்னைப் பற்றிய வல்வினையால் உன் மனமும் திரியலாம். அறியும் உண்மையிலும் மாறுபாடு வரலாம்.

ஈசன் பாசமடி அகப்பேய்
இவ்வண்ணங் கண்டதெல்லாம்
பாசம் பயின்றதடி அகப்பேய்
பாரமது கண்டாயே. 32

அகப்பேயே! ஈசன் வேறு, பாசம் வேறு என இது வரை கண்டதைப் பிரித்துணர்க. அஞ்ஞானமாகிய பாசம் எங்கும் உள்ளது உண்மை. உணர்வோர்க்கு அது பாரமும் ஆகும்.

சாத்திர சூத்திரமும் அகப்பேய்
சங்கற்ப மானதெல்லாம்
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாழ்பலங் கண்டாயே. 33

அகப்பேயே! சாத்திரமும் தொடர்புடைய சூத்திரமும் சங்கற்பமும் எல்லாம் அனுபவ உண்மைக்கு நிகர் எனப் பார்க்கக் கூடாது. அவை பாழ்பலம் உடையனவே.

ஆறு கண்டாயோ அகப்பேய்
அந்த வினைதீர
தேறித் தெளிவதற்கே அகப்பேய்
தீர்த்தமும் ஆடாயே. 34

அகப்பேயே! ஆற்றைக் கண்டதும் பழைய வினை தீரவும் தெளிவாகச் சிந்திப்பதற்கும் தீர்த்தம் ஆடுதலாம்.

விளக்கம்: ஆறு ஆதாரங்களில் யோகம் பயில்வதும் தீர்த்தச் சிறப்பே ஆகும்.

எத்தனை காலமுந்தான் அகப்பேய்
யோக மிருந்தாலென்
முத்தனும் ஆவாயோ அகப்பேய்
மோட்சமு முண்டாமோ. 35

அகப்பேயே! எத்தனை காலங்கள் யோகமிருந்தாலும் முத்தனாகவோ மோட்சம் பெறுதலோ இயலாது. பற்று நீங்கி இறைவனுடன் ஏகனாதலே இவற்றைத் தரும்.

நாசம் ஆவதற்கே அகப்பேய்
நாடாதே சொன்னேனே
பாசம் போனாலும் அகப்பேய்
பசுக்களும் போகாவே. 36

அகப்பேயே! நாசமாவதற்கே அவைகளை நாடா திருக்கவும் பாசம் போனாலும் பசுவாகிய ஆத்மா போகாது.

நாணம் ஏதுக்கடி அகப்பேய்
நல்வினை தீர்ந்தக்கால்
காண வேணுமென்றால் அகப்பேய்
காணக் கிடையாதே. 37

அகப்பேயே! நல்வினை தீர்ந்தாலும் இறைவனை உடன் காண முடியாது. இதை நாணமின்றிச் சொல்லுக.

சும்மா இருந்துவிடாய் அகப்பேய்
சூத்திரஞ் சொன்னேனே
சும்மா இருந்தவிடம் அகப்பேய்
சுட்டது கண்டாயே. 38

அகப்பேயே! எதையும் மேற்கொள்ளாது சும்மா இருந்தால் சும்மா இருந்த இடம் சுட்ட இடமாகி விடும். இதைச் சூத்திரமாகக் கூறினேன்.

உன்றனைக் காணாதே அகப்பேய்
ஊனுள் நுழைந்தாயே
என்றனைக் காணாதே அகப்பேய்
இடத்தில் வந்தாயே. 39

அகப்பேயே! ஆத்மாவாகிய உன்னைக் காணாமல் உன் உடம்பிற்குள் நுழைந்தால், இது பற்றிக் குருவாகக் கூறும் என்னையும் உன்னால் காணமுடியாது திரும்புவாய்.

வானம் ஓடிவரில் அகப்பேய்
வந்தும் பிறப்பாயே
தேனை யுண்ணாமல் அகப்பேய்
தெருவோடு அலைந்தாயே. 40

அகப்பேயே! தேவர் உலகிற்குச் சென்றாலும் திரும்பி வந்து நீ பிறந்தே ஆக வேண்டும். தேனை உண்ணாமல் தெருத்தோறும் திரிந்தாயே.

(தேன் - யோக சித்தியால் வரும் அமிர்தம்)

சைவ மானதடி அகப்பேய்
தானாய் நின்றதடி
சைவ மில்லையாகில் அகப்பேய்
சலம்வருங் கண்டாயே. 41

அகப்பேயே! சைவ மதமாயிருந்து ஒழுகவே துன்பங்கள் தானாக நின்று போகும். இல்லாவிட்டால் துன்பம் வரும்.

ஆசை யற்றவிடம் அகப்பேய்
ஆசாரங் கண்டாயே
ஈசன் பாசமடி அகப்பேய்
எங்ஙனஞ் சென்றாலும். 42

அகப்பேயே! ஆசையற்ற இடத்தை அறிவதே ஆசார மாகும். எங்குப் போனாலும் ஈசனும் பாசமுமாகவே இருக்கும்.

ஆணவ மூலமடி அகப்பேய்
அகாரமாய் வந்ததடி
கோணும் உகாரமடி அகப்பேய்
கூடப் பிறந்ததுவே. 43

அகப்பேயே! அகாரம் போல மூலமாகிய ஆணவ மலம் எல்லா உயிருக்கும் உள்ளது. உகாரம் வந்து இணைவது போல் ஆணவத்தால் வேறு செயல் செய்யும்போது வினைகளாகின்றன. வாய் திறந்ததும் தானே பிறப்பது 'அ'கரம். அதுபோல் பூமிக்கு ஆன்மா வரும்போது ஆணவ மலமும் வருகிறது.

ஒன்று மில்லையடி அகப்பேய்
உள்ள படியாச்சே
நன்றில்லை தீதிலையே அகப்பேய்
நாணமு மில்லையடி. 44

அகப்பேயே! அவரவர் வினைப்படி எல்லாம் நடக்கிறதால் வேறு ஒன்றுமில்லை. அனுபவிப்பது கடமை ஆகையால் நல்லது, தீயது பார்க்க முடியாது. இதில் நாணமும் இல்லையாம்.

சும்மா இருந்தவிடம் அகப்பேய்
சுட்டது சொன்னேனே
எம்மாயம் ஈதறியேன் அகப்பேய்
என்னையுங் காணேனே. 45

அகப்பேயே! சும்மா இருந்த இடத்தில் மனதில் தீ எழுந்தது கண்டு கொண்டேன். இது என்ன மாயமோ! இதையறியேன். என்னையும் இதனால் காண முடியவில்லை.

கலைக ளேதுக்கடி அகப்பேய்
கண்டார் நகையாரோ
நிலைக ளேதுக்கடி அகப்பேய்
நீயார் சொல்வாயே. 46

அகப்பேயே! பல கலைகளும் தேவையில்லை. பிறர் சிரிக்கவே இடமாகும். ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிலை என்றால் நீ யார் எனச் சொல்வாயாக. (அது முடியாது.)

இந்த அமிர்தமடி அகப்பேய்
இரவி விஷமோடி
இந்து வெள்ளையடி அகப்பேய்
இரவி சிவப்பாமே. 47

அகப்பேயே! இந்த அமிர்தம் சூரியனின் விஷமாகி விடுமோ? சந்திரன் வெள்ளை, சூரியனோ சிவப்பு.

ஆணல பெண்ணலவே அகப்பேய்
அக்கினி கண்டாயே
தாணுவும் இப்படியே அகப்பேய்
சற்குரு கண்டாயே. 48

அகப்பேயே! ஆண், பெண் என்பதெல்லாம் அக்கினியின் பேதமாகும். சிவமும் இப்படியே. சற்குருவும் இதுபோலவே என்பதாம்.

என்ன படித்தாலும் அகப்பேய்
எம்முரை யாகாதே
சொன்னது கேட்டாயே அகப்பேய்
சும்மா இருந்துவிடு. 49

அகப்பேயே! என்ன படித்தாலும் நான் சொன்னது போல் ஆகாது. நான் சொன்னது போல் சும்மா இருந்து விடு.

காடு மலையுமடி அகப்பேய்
கடுந்தவம் ஆனாலென்
வீடும் வெளியாமோ அகப்பேய்
மெய்யாக வேண்டாமோ. 50

அகப்பேயே! காடும் மலையும் தேடிக் கடுந்தவம் இருந்தாலும் வீடு (மோட்சம்) வெளிப்படுமோ? அது வெறும் உணர்வாக இல்லாமல் மெய்யாக வேண்டும்.

பரத்தில் சென்றாலும் அகப்பேய்
பாரிலே மீளுமடி
பரத்துக்கு அடுத்தவிடம் அகப்பேய்
பாழது கண்டாயே. 51

பரத்தில் வாழ்ந்தாலும் மீண்டும் பாரில் மீளும். பரத்துக்கும் அடுத்த இடம்தான் பாழ் எனப்படும். (அங்குப் போவதில் திரும்பல் இல்லை.)

பஞ்ச முகமேது அகப்பேய்
பஞ்சு படுத்தாலே
குஞ்சித பாதமடி அகப்பேய்
குருபாதங் கண்டாயே. 52

அகப்பேயே! ஐவகையான பூதப்பகுதியும் பஞ்சு மெத்தையில் படுத்து உறங்கி விட்டால் பேசாமல்

செயலிழந்து நிற்கும். அந்த உறக்கத்தில் குஞ்சித பாத மாகிய நடராசரின் அருளே குருபாதமாக நம்மைக் காக்கும்.

பங்க மில்லையடி அகப்பேய்
பாத மிருந்தஇடம்
கங்கையில் வந்ததெல்லாம் அகப்பேய்
கண்டு தெளிவாயே. 53

அகப்பேயே! அப்பாதம் இருந்த இடத்தில் குறை ஏதுமில்லை. கங்கையில் இந்த உணர்வு தெரிந்திருக்குமே.

விளக்கம்: புருவ மத்தி என்பது கங்கை, யமுனை, சரஸ்வதி கலக்கும் திரிவேணி சங்கமம் ஆகையால் அந்த உணர்வால் அறிந்திருக்கலாம் என்றார்.

தானது நின்றவிடம் அகப்பேய்
சைவங் கண்டாயே
ஊனற நின்றவர்க்கே அகப்பேய்
ஊனமொன் றில்லையடி. 54

அகப்பேயே! தானாகிய ஆத்மா நிற்கும் இடம் அறிதலே சைவமாகும். இந்த உடம்பின் உணர்வு இல்லாது நின்றவர்க்கு ஊனம் எதுவும் இல்லை.

சைவம் ஆருக்கடி அகப்பேய்
தன்னை யறிந்தவர்க்கே
சைவ மானஇடம் அகப்பேய்
சற்குரு பாதமடி. 55

அகப்பேயே! தன்னை அறிந்தவர்க்கே சைவம் என்பது பொருந்தும். சற்குருவின் பாதம் இருக்கும் இடமே சைவமான இடமாம்.

பிறவி தீரவென்றால் அகப்பேய்
பேதகம் பண்ணாதே
துறவி யானவர்கள் அகப்பேய்
சும்மா இருப்பார்கள். 56

அகப்பேயே! பிறவி அழிய வேண்டுமானால் எந்த வகையிலும் பேதம் இருக்கக் கூடாது. எல்லாம் துறந்த வர்களே சும்மா இருக்கும் சுகம் காண்பர்.

ஆர்அ லைந்தாலும் அகப்பேய்
நீயலை யாதேயடி
ஊர்அ லைந்தாலும் அகப்பேய்
ஒன்றையும் நாடாதே. 57

அகப்பேயே! யார் அலைந்தாலும் நீ அலையாதிரு. ஊரே அலைந்தாலும் ஒன்றும் உணராதிரு.

தேனாறு பாயுமடி அகப்பேய்
திருவடி கண்டவர்க்கே
ஊனாறும் இல்லையடி அகப்பேய்
ஒன்றையும் நாடாதே. 58

அகப்பேயே! திருவடியைத் தலை உச்சியில் தியானித்து அதைப் பாவித்துக் கண்டவர்கள் தலையில் தேனாறு பாயும். ஒன்றையும் நாடாதே, ஊனில் எது நடந்தாலும்!

வெள்ளை கருப்பாமோ அகப்பேய்
வெள்ளியும் செம்பாமோ
உள்ளது உண்டோடி அகப்பேய்
உன்னாணை கண்டாயே. 59

அகப்பேயே! வெள்ளை நிறம் கருப்பாகி விடாது. வெள்ளியும் செம்பாகி விடாது. நம்மிடம் உள்ளது வெளியே போய் மாறிவிடுமா? உன் ஆணையாகச் சொல்.

அறிவுள் மன்னுமடி அகப்பேய்
ஆதார மில்லையடி
அறிவு பாசமடி அகப்பேய்
அருளது கண்டாயே. 60

அகப்பேயே! பரம்பொருள் அறிவில் வந்து படியும். வேறு ஆதாரம் அதற்கு இல்லை. அறிவு அதற்குப் பாசமாகும். அதில் அருளைக் காணலாம்.

வாசியி லேறியடி அகப்பேய்
வான்பொருள் தேடாயோ
வாசியி லேறினாலும் அகப்பேய்
வாராது சொன்னேனே. 61

அகப்பேயே! வாசியாகிய குதிரை மீது ஏறித்தான் அப்பெரிய பொருளைத் தேடமுடியும். வாசியின்மீது ஏறினால் மட்டும் அப்பொருள் வாராது.

தூராதி தூரமடி அகப்பேய்
தூரமும் இல்லையடி
பாராமற் பாரடியோ அகப்பேய்
பாழ்வினை தீரவென்றால். 62

அகப்பேயே! கடவுள் இருக்கும் இடம் நீண்ட தொலைவுதான். ஆனால் நெஞ்சில் உணரும்போது தூரமு மில்லை. நேரடியாகப் பார்க்காமல் பாராதது போல் பார்க்க வேண்டும். இதனால் பாழான வினைகள் எல்லாம் தீர்ந்து விடும்.

உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்
உள்ளது சொன்னேனே
கண்டார்கள் சொல்வாரோ அகப்பேய்
கற்பனை யற்றதடி. 63

அகப்பேயே! இது நான் கற்பனையால் உண்டாக்கிக் கொண்டது அன்று. உள்ளதையே சொன்னேன். கண்டவர் சொல்வதில்லை.

நாலு மறைகாணா அகப்பேய்
நாதனை யார்காண்பார்
நாலு மறைமுடிவில் அகப்பேய்
நற்குரு பாதமடி. 64

அகப்பேயே! நான்கு வேதங்களாலும் காண முடியாத இறைவனை யார் காண முடியும்? நான்கு வேதங்களின் முடிவில் இருப்பது குருவின் பாதமே. அதைப் பாவித்தால் எல்லாம் சரியாகும். (மறை முடிவு - உபநிஷத்துகள்)

மூல மில்லையடி அகப்பேய்
முப்பொரு ளில்லையடி
மூல முண்டானால் அகப்பேய்
முத்தியு முண்டாமே. 65

அகப்பேயே! மூலமான கடவுள் இல்லை என்றால் மும்மூர்த்திகளும் இல்லை. உடம்பு மூலத்தைக் கண்டு உணர்ந்தால் முத்தியும் உண்டாகும்.

இந்திர சாலமடி அகப்பேய்
எண்பத் தொருபதமும்
மந்திர மப்படியே அகப்பேய்
வாயைத் திறவாதே. 66

அகப்பேயே! எண்பத்தொரு பதவிகளும் மோட்ச மல்ல. இந்திர சாலம் ஆகிய மாயவித்தைதான். மந்திரமும் அப்படித்தான். ஆகவே வாயைத் திறவாதிரு.

விளக்கம்: முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்து எண்ணாயிரம் ரிஷிகள் (33+48=81) இரண்டும் சேர்ந்தால் 81வகைப் பதவி என்க.

பாழாக வேணுமென்றால் அகப்பேய்
பார்த்ததை நம்பாதே
கேளாமற் சொன்னேனே அகப்பேய்
கேள்வியு மில்லையடி. 67

அகப்பேயே! பாழாக வேண்டுமென்றால் பார்த்ததை மட்டும் நம்பாதே. அதற்கு மேல் கேட்டதையும் பிறரிடம் கேளாது அனுபவித்ததையும் கலந்து உணர்வாயாக.

சாதி பேதமில்லை அகப்பேய்
தானாகி நின்றவர்க்கே
ஓதி யுணர்ந்தாலும் அகப்பேய்
ஒன்றுந்தா னில்லையடி. 68

அகப்பேயே! தன்னை உணர்ந்தவர்க்குச் சாதிபேதம் இல்லை. ஓதி உணர்ந்தால் மட்டும் உணர்வு வருவதில்லை.

சூழ வானமடி அகப்பேய்
சுற்றி மரக்காவில்
வேழம் உண்டகனி அகப்பேய்
மெய்யது கண்டாயே. 69

அகப்பேயே! நம்மைச் சுற்றி எல்லாம் வெளியாக மட்டுமே இருப்பதாய் உணர்க. மரக்காட்டில் யானை உண்ட விளாம்பழம் போல எந்தப் பற்றுமில்லாது இரு.

விளக்கம்: விளாம்பழத்தில் வேழம் (யானை) என்று ஒரு நோய் உண்டு. அது வந்தால் அப்பழத்தில் ஓடு மட்டுமே இருக்கும். உள்ளே சதை விதை எதுவும் இராது. இப்படிப் பற்று விட்டு இருக்கக் கூறினார்.

நானு மில்லையடி அகப்பேய்
நாதனு மில்லையடி
தானு மில்லையடி அகப்பேய்
சற்குரு இல்லையடி. 70

அகப்பேயே! நான் வேறு, நாதன் வேறு இல்லை. என் குரு வேறு கடவுள் வேறு இல்லை.

மந்திர மில்லையடி அகப்பேய்
வாதனை யில்லையடி
தந்திர மில்லையடி அகப்பேய்
சமய மழிந்ததடி. 71

அகப்பேயே! மந்திரமும் அது போன்ற வாதனையும், ஆகமமும் (தந்திரம்), சமயமும் எதுவும் தன்னை உணர்ந்த வர்க்கு இல்லை.

பூசை பாசமடி அகப்பேய்
போதமே கொட்டமடி
ஈசன் மாயையடி அகப்பேய்
எல்லாமு மிப்படியே. 72

அகப்பேயே! பூசையோ பக்தியோ வேண்டாம். அவை பாசம். ஆனால் அறிவுதான் தேவை. ஈசனும் மாயைதான். எல்லாமே இப்படித்தான்.

சொல்ல லாகாதோ அகப்பேய்
சொன்னாலும் தோஷமடி
இல்லை இல்லையடி அகப்பேய்
ஏகாந்தங் கண்டாயே. 73

அகப்பேயே! சொல்லால் ஆகாது; சொன்னாலும் தோஷம்தான். ஏகாந்தமே தேவை; வேறு ஏதுமில்லை.

தத்துவத் தெய்வமடி அகப்பேய்
சதாசிவ மானதடி
மற்றுள்ள தெய்வமெல்லாம் அகப்பேய்
மாயை வடிவாமே. 74

அகப்பேயே! தத்துவங்களைத் தந்த தெய்வம் அது. எல்லாத் தத்துவமும் செயல்படுவதைக் கண்காணிக்கும் சதாசிவமும் அது. மற்றத் தெய்வமெல்லாம் மாயையால் வந்தனவாம்.

வார்த்தை யல்லவடி அகப்பேய்
வாச மகோசரத்தே
ஏற்றது அல்லவடி அகப்பேய்
என்னுடன் வந்ததல்ல. 75

அகப்பேயே! வார்த்தை அல்ல. தானேதான் வாச மகோசரம். ஒருவர் தர ஏற்றுக் கொண்டதன்று. என்னுடன் மட்டும் வெளிப்பட்டதன்று.

(வாச மகோசரம் - முற்பிறவி வாசனைகள் குழுமிய தொகுப்பு)

சாத்திர மில்லையடி அகப்பேய்
சலனங் கடந்ததடி
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாவனைக் கெட்டாதே. 76

அகப்பேயே! சாத்திரத்தால் அதை உணர முடியாது. அது சலனம் எல்லாம் கடந்தது; ஆனால் கண் பார்வைக்கு வாராது. பாவனைக்கும் எட்டாதது அக்கடவுள்.

என்ன படித்தாலென் அகப்பேய்
ஏதுதான் செய்தாலென்
சொன்ன விதங்களெல்லாம் அகப்பேய்
சுட்டது கண்டாயே. 77

அகப்பேயே! என்ன படித்தாலும், ஏதுக்கள் காட்டி னாலும், கிடைக்காத உணர்வு சொன்னதால் உண்டாகிச் சோதியும் தெரிந்தது; உள்ளே சுட்டது என அறிக.

தன்னை யறியவேணும் அகப்பேய்
சாராமற் சாரவேணும்
பின்னை யறிவதெல்லாம் அகப்பேய்
பேயறி வாகுமடி. 78

அகப்பேயே! தன்னை (ஆன்மாவை) அறிய வேண்டும். சாராமல் சார வேண்டும். இது தவிர வேறு வகையால் அறிவதெல்லாம் பேயறிவே ஆகும்.

பிச்சை யெடுத்தாலும் அகப்பேய்
பிறவி தொலையாதே
இச்சை யற்றவிடம் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. 79

அகப்பேயே! பிச்சை எடுத்து உண்ணுமளவு துறந்தாலும் இப்பிறவி போகாது. இச்சையே இல்லாத இடம் தான் எம் இறைவன் எனக் காண்க.

கோல மாகாதே அகப்பேய்
குதர்க்கம் ஆகாதே
சால மாகாதே அகப்பேய்
சஞ்சல மாகாதே. 80

அகப்பேயே! இது ஒரு கடினமான வாதமன்று. குதர்க்கமாகப் பேசுதலும் இல்லை. விசாலமும் ஆகாது. ஆகவே சஞ்சலப்படாதிரு.

ஒப்பனை யல்லவடி அகப்பேய்
உன்னாணை சொன்னேனே
அப்புடன் உப்பெனவே அகப்பேய்
ஆராய்ந் திருப்பாயே. 81

அகப்பேயே! ஒப்பனையாகச் சொன்னதன்று. உன் மேல் ஆணையிட்டுச் சொன்னேன். நீரில் கலந்து கரைந்த

உப்புப் போலக் கடவுளும் நானும் கலந்ததை ஆராய்ந்தபடி இருப்பாயே.

மோட்சம் வேண்டார்கள் அகப்பேய்
முத்தியும் வேண்டார்கள்
தீட்சை வேண்டார்கள் அகப்பேய்
சின்மய மானவர்கள். 82

அகப்பேயே! சின்மயமானவர்கள் மோட்சமோ முத்தியோ தீட்சையோ வேண்டாம் என்று கூறுவார்கள்.

பாலன் பிசாசமடி அகப்பேய்
பார்த்தால் பித்தனடி
கால மூன்றுமல்ல அகப்பேய்
காரிய மல்லவடி. 83

அகப்பேயே! சின்மயமானவர் இளைய வயதில் பிசாசு பிடித்தவர் போலவும், பித்து ஏறியவர் போலவும் இருப்பர். மூன்று காலம் அவர்களுக்கு ஒரே காலமாகும். எச்செயலும் செய்யார்.

கண்டது மில்லையடி அகப்பேய்
கண்டவ ருண்டானால்
உண்டது வேண்டடியோ அகப்பேய்
உன்னாணை சொன்னேனே. 84

அகப்பேயே! பிரம்மத்தைக் கண்டது இல்லை. அப்படிக் கண்டவர் இருந்தால் கண்டபடி கேட்பாயாக. உன் ஆணை யாக இதைச் சொன்னேன்.

அஞ்சையு முண்ணாதே அகப்பேய்
ஆசையும் வேண்டாதே
நெஞ்சையும் விட்டுவிடு அகப்பேய்
நிஷ்டையிற் சாராதே. 85

அகப்பேயே! ஐந்து பூதங்களின் வழியில் நடக்காதே! அவற்றினால் வரும் ஆசையும் கொள்ளாதே! நெஞ்சத்தை இழந்தபிறகு நிட்டையில் சேராதே.

நாதாந்த வுண்மையிலே அகப்பேய்
நாடாதே சொன்னேனே
மீதான சூதானம் அகப்பேய்
மெய்யென்று நம்பாதே. 86

அகப்பேயே! நாதாந்த வெளியில் போய்த் தேடாதே. பெரிய சூதான பேச்சுக்களை மெய்யாக நம்பாதே.

ஒன்றோடு ஒன்றுகூடில் அகப்பேய்
ஒன்றுங் கெடுங்காணே
நின்ற பரசிவமும் அகப்பேய்
நில்லாது கண்டாயே. 87

அகப் பேயே! ஒன்றுடன் வேறு ஒன்று சேர்ந்தால் ஏதாவது ஒன்று கெடுவது இயல்பு. அதனால் நிற்கும் பரசிவமும் நில்லாது என்று காண்பாயாக.

தோன்றும் வினைகளெல்லாம் அகப்பேய்
சூனியங் கண்டாயே
தோன்றாமல் தோன்றிடும் அகப்பேய்
சுத்த வெளிதனிலே. 88

அகப்பேயே! கடவுளைக் காட்டச் செய்யும் செயல்கள் எல்லாம் சூனியமே. தோன்றாது போல் பிறர் அழியும் போதே சுத்தவெளியில் நமக்குத் தோன்றும்.

பொய்யென்று சொல்லாதே அகப்பேய்
போக்கு வரத்துதானே
மெய்யென்று சொன்னவர்கள் அகப்பேய்
வீடு பெறலாமே. 89

அகப்பேயே! பொய் என்று சொல்லாதே. போவதும் வருவதுமாய் இருக்கும். மெய்யென்று சொன்னால் வீடுபேறு பெறலாம்.

வேதம் ஓதாதே அகப்பேய்
மெய்கண்டோம் என்னாதே
பாதம் நம்பாதே அகப்பேய்
பாவித்துப் பாராதே. 90

அகப்பேயே! வேதம் ஓத வேண்டாம். மெய்யாகக் கண்டோம் என்று சொல்ல வேண்டாம். வெறும் பாதம் என்று நம்பாதே. பாவனையாகவும் பாராதே.

## அகப்பேய்ச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 35. இடைக்காட்டுச் சித்தர்

இதே பெயரில் சங்க காலப் புலவர் ஒருவர் உண்டு; இவர் அவரில்லை. இதனால் இடைக்காடு என்னும் ஊர்ப் பெயரால் இருவரும் பெயர் பெற்றதாக அறியலாம். மதுரைக்குக் கிழக்கே 'இடைக்காடு' என்ற பெயரில் ஓர் ஊர் இருப்பதால் இதுவோ என்று பலர் நினைக்கின்றனர். இவர் 'ஆடு மேய்த்துச் சித்தி பெற்றார்' என்பர். இதனால் இடையன் + காடு என்ற பெயர்கள் இணைந்ததாகக் கொள்ளலாம். இவர் பற்றிய வரலாறுகளில் ஆதாரம் ஏதுமில்லை. கோனே என்று வரும் இடையர் குலச் சொல் (கோனார்)லால் இவர் ஆடு மேய்த்ததை உணரலாம்.

ஊது குழலே, கால் கற எனவரும் சொற்களால் முல்லை நில மக்கள் (ஆயர்கள்) வாழ்க்கை பெரிதும் ஒத்துள்ளதை அறிக. முல்லை நிலக் கடவுளாகிய திருமால் மீது இவர் பற்றுக் கொண்டிருந்தது ஒரு கதையால் விளங்குகிறது. திருமாலின் பத்து அவதாரங்களில் சிறந்தது எது எனக் கேட்ட போது இவர்,

''ஏழை இடையன் இளிச்ச வாயன்''

என்று பதில் சொன்னாராம்.

''ஏழையான, இடையனான, இந்த இளிச்சவாயனுக்கு என்ன தெரியும்?'' என்று இப்பதிலுக்குப் பொருள் கொள்ளலாம்.

''காடு செல்லும் ஏழைபோல் நடந்த இராமன்
இடையரால் வளர்க்கப்பட்ட கண்ணன்
வாய்திறந்து சிரித்தபடியான நரசிம்மம்''

என்று மூன்று அவதாரம் சிறந்ததாகக் கொள்ளலாம். தாண்டவக்கோன், நாராயணக்கோன் ஆகியோர் வினா

விடையாகப் பல கண்ணிகள் உள்ளன. தாண்டவக் கோன் - சிவன் எனவும், நாராயணக்கோன் - திருமால் எனவும் கொள்க. 130 கண்ணிகள் இவர் பாடல் பகுதியில் உள்ளன.

# இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள்

## மூலமும் உரையும்

### *காப்பு*
### *கலிவிருத்தம்*

ஆதி யந்தமில் லாதவ னாதியைத்
தீது றும்பவந் தீப்படு பஞ்சுபோல்
மோ துறும்படி முப்பொறி யொத்துறக்
காத லாகக் கருத்திற் கருதுவாம்.

தொடக்கமும் முடிவும் இல்லாத (ஆதி - பிரம்மம்) பிரம்மத்தைக் காதலோடு கருத்தூன்றி நினைத்தால், பஞ்சில் படும் நெருப்புப் போல், தீயது தரும் நம் பிறவி மற்றும் மூன்று பொறிகள் வெளிப்படும்.

விளக்கம்: மூன்று பொறி - முத்தீயில் ஏற்படும் மூன்று பொறிகளாம். வேதத்தில் முழுமுதற் கடவுள் என்று பேசப்படுவது பிரம்மம் ஆகும். எல்லாவற்றையும் தனியே சேர்ந்தாலும், எல்லாம் ஒன்றாகச் சேர்ந்தாலும் அவற்றை விடப் பெரியது என்பதே பிரம்மம் எனப்படும். இதையே ஆதி என்றும், ஆதியந்தம் இல்லாதது என்றும் கூறுவர்.

### *தாண்டவராயக்கோன் கூறுதல்*

எல்லா வுலகமு மெல்லா வுயிர்களும்
எல்லாப் பொருள்களு மெண்ணரிய
வல்லாளன் ஆதி பரம சிவனது
சொல்லா லாகுமே கோனாரே. 1

கோனாரே! எல்லா உலகங்களையும், எல்லா உயிர்களையும், உயிரற்ற எல்லாப் பொருள்களையும், (படைத்தது யார் என்றால்) எண்ணிப் பார்க்க முடியாத வல்லமை பொருந்திய ஆதிப் பரமசிவனின் சொல்லால் தான் இவை யாவும் உண்டாகின.

விளக்கம்: பேசுகிறவர் தாண்டவக் கோனாக இருப்பதால் எதிரில் இவருடன் உரையாடுபவர் நாராயணக் கோன் என்று பிற்காலத்தில் ஓர் உருவமைத்துக் கொண்டார்களே தவிர, இச்சித்தர் இங்கே சொல்லவில்லை. இருவர் பேசிக் கொள்ளும் உரையாடல் பாங்கில் இருக்கும் பாடலாகையால் ஒரு பாத்திரம் கற்பிக்கப்பட்டது என அறிக. பரமசிவன் சொல்ல மற்ற அதிகாரிகள் செய்தார்கள் என்று கொள்க.

வானியல் போல வயங்கும் பிரமமே
சூனிய மென்றறிந் தேத்தாக்கால்
ஊனிய லாவிக்கு ஒருகதி யில்லையென்று
ஓர்ந்துகொள் ளுவீர்நீர் கோனாரே. 2

கோனாரே! வானில் இருந்து இயங்குவதுபோல் பிரம்மத்தை உணர்க. ஆனால் அது ஒரு சூனியப் பொருள் தான். இப்படி நினைக்காவிட்டால் நம் உடலிற்குள் இருந்து இயங்கும் ஆன்மாவை அறியவும், அது போகும் வழி உணரவும் நமக்குப் பற்றுக்கோடு ஒன்றுமில்லை என்று நீர் தெளிவீராக.

முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது
முத்திக்கு உறுதிகள் செய்யாக்கால்
சித்தியும் பத்தியுஞ் சத்தியும் முத்தியுஞ்
சேரா வாகுமே கோனாரே. 3

கோனாரே! முத்திக்குக் காரணமான கடவுளைத் தொழுது முத்தி பெறுவதற்கு முன் ஏற்பாடுகள் செய்யாவிட்டால்,

சித்தி (வெற்றி), பத்தி (அன்பு), சத்தி (பராசத்தி), முத்தி ஆகிய எவையும் சேராமலே போகும்.

தொல்லைப் பிறவியின் தொந்தமற் றறவே
சோம்பலற் றுத்தவஞ் செய்யாக்கால்
எல்லையில் கடவு ளெய்தும் பதம்உமக்கு
இல்லையென் றெண்ணுவீர் கோனாரே. 4

கோனாரே! பழைய பிறவியின் தொடர்பு முழுதும் நீங்கிச் சோம்பல் இல்லாது தவம் செய்தால்தான், எல்லை காண முடியாத பெருங் கடவுளால் கிடைக்கும் பதம் உமக்கு இல்லாமலே போகும் என்று எண்ணுவீராக.

ஆரண மூலத்தை அன்புட னேபர
மானந்தக் கோலத்தைப் பண்புடனே
பூரண மாகவே சிந்தித்து மெய்ஞ்ஞானப்
போதத்தைச் சார்ந்திடு கோனாரே. 5

கோனாரே! வேதத்தின் மூலத்தை அன்புடனும் அதன் பரமானந்தத்தைப் பண்புடனும் முழுதுமாகவே சிந்தித்து, மெய்ஞ்ஞானமாகிய பேரறிவைச் சார்ந்திடுவீராக.

காலா காலங் கடந்திடு சோதியைக்
கற்பனை கடந்த அற்புதத்தை
நூலாற் பெரியவர் சொன்னநுண் பொருளை
நோக்கத்திற் காண்பது கோனாரே. 6

கோனாரே! காலா காலங்களையும் கடந்து நிற்கும் சோதியை, கற்பனையையும் கடந்த அற்புதத்தை, நூல்கள் மூலம் பெரியோர் சொன்ன நுண்ணிய பொருளை நோக்கத்தால் தான் காண முடியும்.

விளக்கம்: நோக்கம் என்பது குறிக்கோளாக ஏற்றுச் சிந்திப்பது அல்லது பாவிப்பது.

சொல்லருஞ் சகல நிட்கள மானதைச்
சொல்லினாற் சொல்லாமல் கோனாரே
அல்லும் பகலும் அகத்தில் இருந்திடிற்
அந்தகன் கிட்டுமோ கோனாரே. 7

கோனாரே! சொல்லால் சொல்ல முடியாத உருவமற்ற பொருளைச் சொல்லால் சொல்லாமல் இரவும் பகலும் மனத்தில் இருத்தினால் இயமன் கூட நம்மிடம் வர மாட்டான்.

விளக்கம்: சகலம் - எல்லாம், எல்லாக் கலைகளும், நிஷ்களம் - நிட்களம் - உருவற்றது, அந்தகன் - இயமன்.

சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடுந்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரி யிடப்பாகன் தான்நெஞ்சிற் போற்றியே
நற்கதி சேர்ந்திடும் கோனாரே. 8

கோனாரே! சூரியனின் கதிராகிய வாள் பட்டதும் பனி அழியும் தோற்றம் போல, கொடிய வினைகள் தூளாகிட, பெண்பாகம் கொண்ட சிவனை நெஞ்சில் போற்றினால் நல்ல கதி கிடைக்கும்.

மும்மலம் நீக்கிட முப்பொறி கிட்டாத
முப்பாழ் கிடந்ததா மப்பாழைச்
செம்மறி யோட்டிய வேலை யமைத்துஞ்
சிந்தையில் வைப்பீரே கோனாரே. 9

கோனாரே! மும்மலத்தை நீக்கிட முத்தீயின் பொறிகள் கிட்ட வேண்டும். முப்பாழும் கிடக்கும் தலைக்கு மேல் உள்ள பாழை (வெளியை)ச் செம்மறியாட்டை மேய்ப்புக்கு ஓட்டியபடியே அமைத்துச் சிந்தையில் வைப்பீர்.

விளக்கம்: மூன்று அக்கினிப் பொறிகளே ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்களை நீக்கும். முப்பாழ் உடலில் உள்ள சூன்ய வெளிகளுமாம். யோகம்

பயில்வோர் ஆடு மேய்த்தலாகிய புண்ணிய காரியம் செய்யத் தடை இல்லை என்க.

பஞ்ச விதமாய்ச் சஞ்சலம் பறக்கப்
    பற்றநின்றதைப் பற்றி யன்பாய்
நெஞ்சத் திருத்தி யிரவு பகலுமே
    நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே. 10

கோனாரே! ஐந்து புலன்களால் வரும் ஐந்து துன்பங்களும் பறந்து போன இறைவன் திருவடியைப் பற்றி அன்போடு அவைகளை நெஞ்சில் இருத்தி இரவும் பகலும் நேசித்துக் கொள்க.

விளக்கம்: புலன்கள் மட்டுமல்லாமல் புலன், பொறி, கன்மேந்திரியம், பூதம், அந்தக்கரணம், பூதம், கோசம் எனப் பலவும் ஐந்து ஐந்தாக உள்ளதால் பஞ்ச விதச் சஞ்சலம் என்றார்.

## *நாராயணக் கோன் கூறுதல்*
## *கொச்சகக் கலிப்பா*

சீரார் சிவக்கொழுந்தைத் தெள்ளமுதைச் செந்தேனைப்
பாராதி வான்பொருளைப் பஞ்சவுரு வானவொன்றைப்
பேரான விண்ணொளியைப் பேரின்ப வாரிதியை
நேராக எந்நாளும் நெஞ்சிருத்தி வாழ்வேனே. 11

(இது முதல் இரண்டு கண்ணிகள் தாண்டவக் கோனுக்குப் பதில் கூறுவது போல் உள்ளன) சிறப்பு வாய்ந்த சிவமாகிய கொழுந்தை, தெளிந்த அமுதை, தேனை, உலகங்கள் பலவும் கொண்ட வானமாகிய பொருளை, ஐந்து வகை உருவாக இருக்கும் ஒரு பொருளை, என்றும் மறையாத பேரொளியை, பேரின்பக் கடலை எந்நாளும் என் நெஞ்சில் நேராக வைத்து வாழ்வேன்.

விளக்கம்: ஐந்து உரு - ஐந்தறிவும் ஐந்து செயல் முதலியனவும் ஆகும்.

கண்ணுள் கருமணியைக் கற்பகத்தைக் காஞ்சனத்தைப்
பெண்ணுருவப் பாதியனைப் பேசரிய முப்பொருளை
விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்
தண்ணளியை யுள்ளில்வைத்துச் சாரூபஞ் சாருவனே. 12

கண்ணுக்குள் உள்ள கருமணியை, கேட்டதைத் தரும் கற்பகத்தை, பொன்னை, உடலில் பாதிப் பெண்ணாய் இருக்கும் பொருளை, பேச இயலாத மும்மூர்த்திகளாகிய பொருளை, விண்ணிற்குள் அமுதாய் இருப்பவனை, விளக்கமான ஒளியை, விருப்பமான கதிரை, குளிர்ந்த மதியை மனத்தில் வைத்துச் சாரூபமாகிய பதத்தைச் சாருவேனே. இனியும் வரும் கண்ணிகள் நாராயணக் கோன் பேசுவதாகவே கொள்ளலாம்.

## *கண்ணிகள்*

மனமென்னும் மாடுஅடங்கில் தாண்டவக் கோனே - முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக் கோனே. 13

தாண்டவக் கோனே! மனம் என்னும் மாடு அடங்கி விட்டால் முத்தி கிடைக்கும் என்று எண்ணுவாய்.

சினமென்னும் பாம்பிறந்தாற் தாண்டவக் கோனே - யாவுஞ்
சித்தியென்றே நினையேடா தாண்ட வக்கோனே. 14

தாண்டவக் கோனே! சினம் என்ற பாம்பு இறந்து விட்டால் எல்லாமே வெற்றியாகும் என்று நினைப்பாயாக.

ஆசையெனும் பசுமாளின் தாண்டவக் கோனே - இந்த
அண்டமெல்லாங் கண்டறிவாய் தாண்டவக் கோனே. 15

தாண்டவக்கோனே! ஆசை என்னும் பசு இறந்து விட்டால் இந்த உலகமெல்லாம் நீயே கண்டு அறியலாம்.

ஓசையுள் ளடங்குமுன்னந் தாண்டவக் கோனே - மூல
ஓங்காரங் கண்டறிநீ தாண்ட வக்கோனே. 16

தாண்டவக்கோனே! எல்லா ஓசைகளும் உனக்குள் அடங்குவதற்கு முன்பு மூலாதாரத்தில் தானாக எழும் ஓங்கார ஓசையைக் கேட்டறிவாயாக.

மூலப் பகுதியறத் தாண்டவக் கோனே - உள்ளே
முளைத்தவேர் பிடுங்கேடா தாண்டவக் கோனே. 17

தாண்டவக் கோனே! மூலப் பகுதி அறவே நீங்கும்படி அதன் உள்ளே முளைத்த வேரைப் பிடுங்கி விடுவாயாக.

விளக்கம்: மூலத்தின் வேர் சுழுமுனை நாடியாகும். அதைப் புரிந்து கொண்டால் மூலம் செய்யும் பணியை அதுவே செய்யும் என்பதாம்.

சாலக் கடத்தியல்பு தாண்டவக் கோனே - மலச்
சாலென்றே தேர்ந்தறிநீ தாண்டவக் கோனே. 18

தாண்டவக் கோனே! பெரிய இந்த உடல் இயல்பு எப்படி எனில், மலச் சாலாக இருப்பதாகவே அறிக.

(சால் - பெரிய பாத்திரம்)

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்டவக் கோனே - அதைப்
பற்றா தறுத்துவிடு தாண்டவக் கோனே. 19

தாண்டவக் கோனே! பற்றுதான் பிறப்பை உண்டாக்கும். ஆகையால் அதை அறுத்து விடு.

சற்றே பிரம்மத்திச்சை தாண்ட வக்கோனே - உன்னுள்
சலியாமல் வைக்கவேண்டுந் தாண்டவக் கோனே. 20

தாண்டவக் கோனே! பிரமத்தின் மீது விருப்பத்தை ஓரளவாவது உனக்குள் வைக்க வேண்டும்.

அவித்தவித்து முளையாதே தாண்டவக் கோனே - பத்தி
அற்றவர் கதியடையார் தாண்டவக் கோனே. 21

தாண்டவக் கோனே! அவித்த விதை முளைக்காது. அதுபோல் பக்தி இல்லாதவர் நற்கதி அடைய மாட்டார்.

செவிதனிற்கே ளாதமறை தாண்டவக் கோனே - குரு
செப்பில்வெளி யாமல்லவோ தாண்டவக் கோனே. 22

தாண்டவக் கோனே! இதுவரை யாரும் சொல்லிக் கேளாத ஒரு ரகசியம் குரு கூறினால், அது தானாகவே விளங்குவதாக ஆகும். (அதுவே வெளியாகவும் ஆகும்)

மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வான்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும் வெண்கலமும்
காடுங் கரைகளுங் கல்லாம் பணியும் கரிபரியும்
தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே. 23

மாடு, மனை, மக்கள், சுற்றம், பெரிய செல்வம், வீடு, மணிகள், வெள்ளி, தங்கம், வெண்கலம், காடு, கரை, கல் நகைகள், யானை, குதிரை, தேடக் கூடிய பல பண்டங்கள் முதலிய யாவும் நிலையானவை அல்ல. ஆகவே நிலை யான சிவகதியைச் சேருங்கள்.

போகம்போம் போக்கியம்போம் போசனம்போம் புன்மை போம்
மோகம்போம் மூர்க்கம்போம் மோசம்போம் - நாகம்போம்
வேதமுத லாகமங்கள் மேலான தென்றுபல்கால்
ஓதுபிர மத்துற்றக் கால். 24

வேதம் முதலியவையும் மேலானதாகப் பலரும் பல காலமும் சொல்லும் பிரம்மத்தை நினைத்து அதையடைந் தால் போகம், போக்கியம், உணவு, புன்மை, மோகம், மூர்க்கம், மோசம், நாகம் ஆகிய யாவும் தேவையற்றவை யாகப் போய்விடும்.

### *தாண்டவராயக்கோன் கூற்று*

தாந்தி மித்திமி தந்தக்கோ னாரே
தீந்தி மித்திமி திந்தக்கோ னாரே
ஆனந்தக் கோனாரே - அருள்
ஆனந்தக் கோனாரே.

இனி வரும் எட்டுக் கண்ணிகளுக்கான சந்தக் குறிப்பு இதில் கூறப்படுகிறது. நாராயணக் கோன் பேசியதற்குத் தாண்டவக்கோன் பதில் சொல்வது இனி வரும்.

இது போல் சந்தக் குறிப்புக் கூறாத இடத்தில் நாமாகச் சந்த இசை அமைக்கலாம். இதில் முதலிரண்டு அடிகள் வெறும் சந்தம் - பின் இரு அடிகளில் நாராயணக்கோன் பேசியதன் காரணம் அவர் பெற்ற ஆனந்த அனுபவமே என்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு கண்ணிக்குப் பிறகும் பல்லவியாக இந்தச் சந்தத்தைச் சொல்லுக.

ஆயிரத்தெட்டு வட்டமுங் கண்டேன்
அந்தவட் டத்துள்ளே நின்றதுங் கண்டேன்
மாயிரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்
மந்த மனத்துறுஞ் சந்தேகந் தீர்த்தேன். (தாந்) 25

ஆயிரத்தெட்டு - சகஸ்ராரம் எனும் தலையில் உள்ள யோக ஆதாரம் - *1008* தாமரை இதழ் மாயிரு ஞாலம் - இது உலகம் என்ற பொருள் பட்டாலும் நம் உடம்பையே குறிக்கிறது. (அண்டம் பிண்டம் என்பது போல் கொள்க)

ஆயிரத்து எட்டு இதழ்த் தாமரையாம் கட்டம் (வட்டம் - இதழ்) அந்த வட்டத்துக்குள் என் உணர்வு மலிந்திட நான் அங்கே நின்று அவைகளைக் கண்டேன்.

நம் உடம்பு எட்டு சாண் கொண்டது. ஒரு சாண் பன்னிரண்டு விரல் (8x12 = 96) அதன் மேல் பன்னிரண்டு விரல் நிராதார யோக பூமி அதையும் சேர்த்தால் 96 + 12 = 108 என ஆகும். அது முழுதும் மனத்தால் அளந்து கண்டேன். இதனால் அண்டமும் பிண்டமும் ஒன்று தானா என்ற என் சந்தேகமும் தீர்ந்தது.

அந்தக் கரணமெனச் சொன்னால் ஆட்டையும்
அஞ்ஞான மென்னும் அடர்ந்தவன் காட்டையும்
சந்தத் தவமென்னும் வாளினால் வெட்டினேன்
சாவாது இருந்திடக் கோட்டையுங் கட்டினேன்.

(தாந்) 26

அந்தக் கரணம் என்னும் ஆடுகளையும், அறியாமை என்னும் அடர்த்தியான காட்டையும் என் தவம் எனும் வாளால் வெட்டினேன். நான் சாகாமல் இருந்திட ஒரு கோட்டையும் கட்டினேன்.

விளக்கம்: அங்கும் இங்கும் திரிவதால் அந்தக் கரணத்தை ஆடு என்றார் - அவை அஞ்ஞானத்தோடு இணைந்து இருப்பதால் அடர்த்தியான (இருளான) காடு என்றார்.

மெய்வாய்கண் மூக்குச் செவியெனும் ஐந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூறோசை யாம்காட்டை
எய்யாம லோட்டினேன் வாட்டினேன் ஆட்டினேன்
ஏக வெளிக்குள்ளே யோக வெளிக்குள்ளே. (தாந்) 27

மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐந்தாடு களையும், அவை தரும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் காடுகளையும், அவை அங்கு மேயாமல் ஓட்டி னேன்; வாட்டினேன்; ஏக வெளியாகிய யோக வெளிக்குள் நான் அவற்றை ஆட்டினேன்.

பற்றிரண் டும்அறப் பண்புற்றேன் நண்புற்றேன்
பாலையும் உட்கொண்டேன் மேலையாங்
கண்கொண்டேன்
சிற்றின்பம் நீக்கினேன் பற்றின்பம் நோக்கினேன்
சிற்பரஞ் சேர்ந்திட்டேன் தற்பரஞ் சார்ந்திட்டேன்.
(தாந்) 28

யான் எனது என்னும் இரண்டு பற்றுக்களும் அற்றுப் போகுமாறு பண்பும் நண்பும் பெற்றேன்; என் ஊழையும் (பால்) உட்கொண்டேன்; மேலே ஒரு கண்ணும் பெற்றேன்; சிற்றின்பத்தை நீக்கினேன்; மற்ற இன்பங்களையும் நோக்கி னேன்; சித்தத்தில் உள்ள கடவுளுடன் சேர்ந்தேன்; பரம் பொருளையும் சார்ந்தேன்.

அண்ணாக்கை யூடே யடைத்தே யமுதுண்ணேன்
அந்தரத் தரத்தை யப்பொழு தேயெண்ணேன்
விண்ணாளும் மொழியை மேவிப்பூ சைபண்ணேன்
மெய்ஞ்ஞானம் ஒன்றன்றி வேறேயொன்றை
நண்ணேன். (தாந்) 29

மேல் அண்ணத்தில் நாக்கை மடித்துச் செய்யும் யோகத்தால் அமுதுண்ணேன். அந்தரமாகிய இடத்தில் இருப்பவர் பற்றி எண்ணவில்லை. விண்ணை ஆளும் மொழியால் (ஓம்) பூசையும் செய்யேன்; மெய்ஞ்ஞானம் ஒன்று தவிர வேறு ஒன்றையும் சென்று அடையவில்லை.

மண்ணாதி பூதங்க ளைந்தையுங் கண்டேனே
மாய விகாரங்கள் யாவையும் விண்டேனே
விண்ணாளி மொழியை மெய்யினுட் கொண்டேனே
மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே.(தாந்) 30

மண் முதலிய பூதங்கள் ஐந்தையும் கண்டேன்; மாய விகாரங்களை விலக்கினேன்; விண்ணாளும் மொழியாகிய 'ஓம்' என்பதை உடம்பினுள் சொல்லிப் பழகினேன். உலக வாழ்வை மேலாக மதிக்கவில்லை.

வாக்காதி யைந்தையும் வாகாய்த் தெரிந்தேனே
மாயைசம் பந்தங்க ளைந்தும் பிரிந்தேனே
நோக்கரும் யோகங்க ளைந்தும் புரிந்தேனே
நுவலும்மற்று ஐந்தியோக நோக்கம் பரிந்தேனே.
(தாந்) 31

ஐந்து வாக்குகளையும் வடிவாகத் தெளிந்தேன்; மாயை யின் சம்பந்தமான ஐந்து ஐந்தான பிரிவுகளை விட்டுப் பிரிந்தேன்; காண அரிய யோகங்கள் ஐந்தையும் செய்தேன்; சிறப்பிக்கும் ஐந்து யோகங்களையும் பரிவாக எண்ணினேன்.

விளக்கம்: எட்டு யோகத்தில் இயமம், நியமம், ஆசனம் ஆகியன நீங்கினால் ஐந்தாவது அறிக. ஐந்து ஐந்தான அடுக்குகளை ஐந்தெழுத்தால் வகைப்படுத்தினேன்.

ஆறா தாரத்தெய் வங்களை நாடு
அவர்க்கும் மேலான ஆதியைத் தேடு
கூறான வட்டவா னந்தத்திற் கூடு
கோசமைந் துங்கண்டு குன்றேறி யாடு. (தாந்) 32

ஆறு ஆதாரங்களின் அதிதேவதைகளை நாடுக. அவர் களுக்கும் மேலான பிரம்மத்தைத் தேடுக. இதன் பகுதியான ஆனந்த வட்டத்தில் கூடுக. ஐந்து கோசங்களை உணர்ந்து குன்றமாகிய உச்சந் தலைக்கு மேல் உணர்வால் அறிக.

### நாராயணக்கோன் கூறுதல்

ஆதி பகவனையே பசுவே
அன்பாய் நினைப்பாயேல்
சோதி பரகதிதான் பசுவே
சொந்தமது ஆகாதோ. 33

பசுவே! ஆதிபகவானாகிய பிரம்மத்தை அன்பாய் நினைப்பாயாகில், சோதி மிக்க பரகதியே உனக்குச் சொந்த மாகிவிடும். பசு - ஆன்மா.

எங்கும் நிறைபொருளைப் பசுவே
எண்ணிப் பணிவாயேல்
தங்கும் பரகதியில் பசுவே
சந்ததஞ் சாருவையே. 34

பசுவே! எங்கும் நிறையும் பொருளை நீ எண்ணி வணங்குவாயானால், எப்போதும் தங்கியிருக்கும் பரகதி என்றைக்கும் உன்னை வந்து சேரும்.

விளக்கம்: பசுவை ஓட்டியபடியே பேசுவதால் பசுவை அழைத்துப் பாடினார். பசு - ஆன்மாவுமாம்.

அல்லும் பகலும்நிதம் பசுவே
ஆதி பதந்தேடில்
புல்லு மோட்சநிலை பசுவே
பூரணங் காண்பாயே. 35

பசுவே! இரவும் பகலும் நாள்தோறும் பிரம்மத்தின் நிலையைத் தேடி வந்தால், நமக்கு வரும் மோட்ச நிலை பூரணமாக நம்மால் காணக் கூடியதாகும்.

ஒன்றைப் பிடித்தோர்க்கே பசுவே
உண்மை வசப்படுமே
நின்ற நிலைதனிலே பசுவே
நேர்மை யறிவாயே. 36

பசுவே! எதை ஒருவர் பிடித்தாலும் அவருக்கு அதன் உண்மை நிலை தெரிய வரும். இந்த நேர்மையான இயற்கையை அறிந்து பிரம்மத்தை நாடுவாயாக.

எல்லா மிருந்தாலும் பசுவே
ஈசர் அருளிலையேல்
இல்லாத் தன்மையென்றே பசுவே
எண்ணிப் பணிவாயே. 37

பசுவே! எல்லாம் இருந்தாலும் கடவுள் அருள் இல்லை யானால், இருப்பவை யாவும் இல்லாதது போல் தான் என்று எண்ணி வணங்கு.

தேவன் உதவியின்றிப் பசுவே
தேர்ந்திடில் வேறொன்றில்லை
ஆவிக்கும் ஆவியதாம் பசுவே
அத்தன் திருவடியே. 38

பசுவே! தேவனாகிய கடவுள் உதவி இல்லாத போது ஆராய்ந்தால் வேறு ஒரு துணையுமில்லை. நம் ஆவிக்கே ஓர் ஆவியாக அத்தலைவன் திருவடி உள்ளது.

தாயினும் அன்பனன்றோ பசுவே
சத்திக்குள் ளானவன்தான்
நேயம் உடையவர்பால் பசுவே
நீங்கா திருப்பானே. 39

பசுவே! அக்கடவுள் தாயை விட அன்பு கொண்டவன்; சத்திக்குள் இருப்பவன்; நேசம் உள்ளவர்களிடம் இருப்பான்.

முத்திக்கு வித்தானோன் பசுவே
மூலப் பொருளானோன்
சத்திக்கு உறவானோன் பசுவே
தன்னைத் துதிப்பாயே. 40

பசுவே! முத்திக்கு அவனே காரணம் ஆவான். எல்லாம் உண்டாக அவனே மூலப் பொருளாவான். அவன் சத்திக்கு உறவுடையோன். ஆகவே அவனை வணங்குவாயாக.

ஐயன் திருப்பாதம் பசுவே
அன்புற்றுநீ பணிந்தால்
வெய்ய வினைகளெல்லாம் பசுவே
விட்டோடுங் கண்டாயே. 41

பசுவே! ஐயனின் திருவடியை அன்போடு நீ பணிந்தால், கொடிய வினைகள் எல்லாம் விடுபட்டு ஓடும் என்பதனை அறிந்து கொள்.

சந்திர சேகரன்தாள் பசுவே
தாழ்ந்து பணிவாயேல்
இந்திரன் மான்முதலோர் பசுவே
ஏவல் புரிவாரே. 42

பசுவே! சந்திரசேகரனின் திருவடிகளைப் பணிந்தால் இந்திரன் திருமால் முதலோர் உனக்கு ஏவல் செய்வார்கள்.

கட்புலன் காணவொண்ணாப் பசுவே
கர்த்தன் அடியிணையை
உட்புலன் கொண்டேத்திப் பசுவே
உன்னத மெய்வாயே. 43

பசுவே! கடவுள் திருவடிகளைக் கண்ணால் காண முடியாது. உள்ளத்திற்குள் நினைந்து வழிபட்டால் உன்னத மான பயன் அடைவாய்.

சுட்டியுங் காணவொண்ணாப் பசுவே
சூனிய மானவஸ்தை
ஒட்டிப் பிடிப்பாயேல் பசுவே
உன்னை நிகர்ப்பவர்யார். 44

பசுவே! கடவுள் சூனியப் பொருள் ஆகையால் சுட்டிக் காட்ட முடியாது. விடாது மனத்தில் அதை நினைத்தால் (முடித்தால்) உன்னை ஒப்பவர் யாருமில்லை.

தன்மனந் தன்னாலே பசுவே
தாணுவைச் சாராதார்
வன்மரம் ஒப்பாகப் பசுவே
வையத் துறைவாரே. 45

பசுவே! தன் மனத்தால் அக்கடவுளை நினைந்து சாராது, இந்த வையத்தில் வாழ்பவர்கள் வலிய மரம் ஒப்பார்கள்.

சொல்லென்னு நற்பொருளாம் பசுவே
சோதியைப் போற்றாக்கால்
இல்லென்று முத்திநிலை பசுவே
எப்பொருளுஞ் சொல்லுமே. 46

பசுவே! கடவுளைப் போற்றும் சொல்லால் அந்தச் சோதியை வணங்கா விட்டால், முத்தி நிலை இல்லை என்று எல்லா நூல்களும் சொல்லும்.

## *பலருக்கும் கூறல்*

கண்ணுள் மணியைக் கருதிய பேரொளியை
விண்ணின் மணியை விளக்கொளியைப் போற்றீரே. 47

நம் கண்ணுக்குள் கருமணியாயிருக்கும் பேரொளியை, வானில் ஒளிச் சுடராய் இருப்பதை, விளக்கில் ஒளியாய் நிற்பதை மனத்தால் போற்றுங்கள்.

மனம்வாக்கு காயமெனும் வாய்த்தபொறிக் கெட்டாத
தினகரனை நெஞ்சிற் சேவித்துப் போற்றீரே. 48

மனம், வாய்ச் சொல், உடல் என்ற மூன்றாலும் உணர முடியாத சூரியனை நெஞ்சில் வழிபட்டுப் போற்றுங்கள்.

விளக்கம்: தினகரன் - சூரியன். தினமும் எங்கும் ஒளி செய்யும் சூரியன் போன்றவன் கடவுள்.

காலமூன் றுங்கடந்த கதிரொளியை யுள்ளத்தாற்
சாலமின் றிப்பற்றிச் சலிப்பறவே போற்றீரே. 49

மூன்று காலத்துக்கும் கட்டுப்படாத கதிரொளியை மனத்தால் விலகாதபடிப் பற்றிக் கொண்டு சலிக்காமல் போற்றுங்கள்.

பாலிற் சுவைபோலும் பழத்தின் மதுப்போலும்
நூலிற் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே. 50

பாலில் சுவை, பழத்தில் இனிமை, நூலில் பொருள் முதலியன நுண்ணியனவாய் இருப்பது போல் இறைவனும் நுண்பொருள் என உணர்ந்து போற்றுக.

மூவர் முதலை முக்கனியைச் சர்க்கரையைத்
தேவர் பொருளைத் தெள்ளமுதைப் போற்றீரே. 51

மும்மூர்த்திகளுக்கும் மூலமானவரை, முக்கனி போன்ற வரை, சர்க்கரையாய் இனிப்பவரை, தேவர்களின் பொருள் ஆனவரைத் தெள்ளமுதைப் போற்றுங்கள்.

தூய மறைப்பொருளைச் சுகவா ரிதியமிர்தை
நேய முடனாளு நிலைபெறவே போற்றீரே. 52

வேதத்தின் தூய்மையான பொருளாய் இருப்பதை, இன்பக் கடல் அமிர்தத்தை, நேசமுடன் நாள்தோறும் மனத்தில் நிலைத்து இருக்கும்படி போற்றுவீராக.

சராசரத் தைத்தந்த தனிவான மூலமென்னும்
பராபரத் தைப்பற்றிப் பவமறவே போற்றீரே. 53

இவ்வுலகப் பொருள் அனைத்தும் தந்த மூலப் பொருளாகிய பராபரத்தை மனத்தில் பற்றிப் பாவமெல்லாம் நீங்கப் போற்றுவீராக.

விளக்கம்: சரம் + அசரம் = சராசரம் - நடப்பன, அசையாமல் இருப்பன.

மண்ணாதி பூதமுதல் வகுத்ததொரு வான்பொருளைக்
கண்ணாரக் காணக் கருத்திசைந்து போற்றீரே. 54

மண் மூதலான ஐந்து பூதங்களையும் வகுத்துப் படைத்த பெரும் பொருளைக் கண்ணால் காணக் கருத்து ஒன்றிப் போற்றுவீரே.

பொய்ப்பொருளை விட்டுப் புலமறிய வொண்ணாத
மெய்ப்பொருளை நாளும் விருப்புற்றுப் போற்றீரே. 55

பொய்யான பற்றுகளை விட்டு விட்டு இந்திரியங்களால் அறிய முடியாத மெய்ப் பொருளை நாள்தோறும் விருப்பம் கொண்டு போற்றுவீராக.

எள்ளில்தை லம்போல எங்கும் நிறைபொருளை
உள்ளில் உதித்தே யுணர்வடைந்து போற்றீரே. 56

எள்ளுக்குள் (தைலம்) எண்ணெய் போல் எங்கும் நிறையும் பொருளை உள்ளத்தில் வணங்கி உணர்வு பெற்றுப் போற்றுங்கள்.

## *நெஞ்சிடம் கூறுதல்*

பூமியெல்லாம் ஓர்குடைக்கீழ் பொருந்தவர சாளுதற்குக்
காமியம்வைத் தாலுனக்குக் கதியுளதோ கல்மனமே. 57

கல் போன்ற மனமே! இந்தப் பூமி எல்லாம் ஒரு குடையின் கீழே வைத்து அரசாள ஆசை வைத்தால் உனக்கு நற்கதி கிடைக்குமோ?

பெண்ணாசை யைக்கொண்டு பேணித் திரிந்தக்கால்
விண்ணாசை வைக்க விதியிலையே கல்மனமே. 58

கல் போன்ற மனமே! பெண் மீது ஆசை வைத்துத் திரிந்தால் வானில் ஆசை வைப்பது நடக்காது என அறிக.

மேயும் பொறிகடமை மேவிடவொட் டார்க்குவினை
தேயுமென்றே நல்வழியிற் செல்லுநீ கல்மனமே. 59

கல் போன்ற மனமே! அங்குமிங்குமாக வீண் பொருள் களில் பதியும் (மேயும்) பொறிகள் தம்மை விரும்பா திருப்பவர்க்குள்ள வினைகள் தேயும் என்று எண்ணி நல்வழியில் செல்க.

பொன்னிச்சை கொண்டு பூமிமுற் றுந்திரிந்தால்
மன்னிச்சை நோக்கும் வாய்க்குமோ கல்மனமே. 60

கல் போன்ற மனமே! பொன்னுக்கு ஆசைப்பட்டு இப் பூமி முழுதும் திரிந்தால் நிலையாக இருக்கும் ஆசையின் நோக்கம் நிறைவேறாது.

பொய்யான கல்விகற்றுப் பொருள்மயக்கங் கொள்ளாமல்
மெய்யான ஞானக்கல்வி விரும்புவாய் கல்மனமே. 61

கல் போன்ற மனமே! பொய்யான கல்வியைக் கற்றுப் பொருளில் குழப்பம் அடையாமல் மெய்யான ஞானக் கல்வியை விரும்புவாயாக.

பேய்க்குரங்கு போலப் பேருலகில் இச்சைவைத்து
நாய்நரிகள் போலலைந்தேன் நன்மையுண்டோ கல்மனமே.
62

கல் போன்ற மனமே! பேய்க் குரங்கு போலப் பெரிய உலகின் ஆசை வைத்து நாய் நரிகள் போல் அலைந்தேன். இதனால் நன்மை உண்டோ?

இரும்பையிழுக் குங்காந்தத் தியற்கைபோற் பலபொருளை
விரும்பினதால் அவைநிலையோ விளம்புவாய் கல்மனமே. 63

கல் போன்ற மனமே! இரும்பை இழுக்கும் காந்தத்தின் தன்மை போல் பல பொருள்களையும் விரும்பினதால் அவை நிலைத்த பொருளாகுமோ?

கற்பநிலை யல்லவோ கற்பகா லங்கடத்தல்
சொற்பநிலை மற்றநிலை சூட்சங்காண கல்மனமே. 64

கல் போன்ற மனமே! கற்ப நிலை பெறக் கற்ப காலம் கடத்தல் வேண்டும். மற்றபடி சூட்சுமம் காண்பது சொற்ப நிலையேயாம்.

தேக மிழப்பதற்குச் செபஞ்செய்தென் தவஞ்செய்தென்
யோகமட்டுஞ் செய்தாலென் யோசிப்பாய் கன்மனமே. 65

கல் போன்ற மனமே! தேகம் அழியாதிருக்கச் செபம், தவம், போகம் செய்தால் மட்டும் போதாது என்று சிந்திப்பாயாக.

சாகா திருப்பதற்குத் தான்கற்ற கல்வியன்றோ
வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ கல்மனமே. 66

தான் கற்ற கல்வியால்தான் சாகாமல் இருக்க முடியும். ஆகவே, கல் போன்ற மனமே! நீ வாகான மெய்க் கல்வியைக் கற்பாயாக.

எல்லாப் பொருள்களையும் எண்ணப் படிபடைத்த
வல்லாளன் தன்னை வகுத்தறிநீ புல்லறிவே. 67

புல்லறிவே! எல்லாப் பொருள்களையும் தன் எண்ணப் படியே படைத்த வலிமையுள்ளவன் தன்னை வகுத்து நீ அறிவாயாக.

(புல் அறிவு - மிகச் சிறிய அறிவு)

கட்புலனுக் கெவ்வளவுங் காணா திருந்தெங்கும்
உட்புலனாய் நின்றவொன்றை உய்த்தறிநீ புல்லறிவே. 68

புல்லறிவே! நம் கண்ணுக்குத் தெரியாது இருந்து கொண்டே எல்லா இடத்திலும் உள்ளத்தில் தெரிவதாய் இருக்கும் ஒரு பொருளை உய்த்து உணர்ந்து அறிவாயாக.

விழித்திருக்கும் வேளையிலே விரைந்து உறக்க முண்டாகும்
செழித்திலங்கும் ஆன்மாவைத் தேர்ந்ததறிநீ புல்லறிவே.69

புல்லறிவே! நாம் விழித்திருக்கும் நேரத்தில் உறக்கம் உண்டாகும். அதைச் செய்வதுதான் நம் ஆன்மா என்று தேர்ந்து அறிவாயாக.

மெய்யிலொரு மெய்யாகி மேலாகிக் காலாகிப்
பொய்யிலொரு பொய்யாகும் புலமறிநீ புல்லறிவே. 70

புல்லறிவே! நம் உடம்பிற்கும் மேல் ஓர் உடம்பாக இருந்து அதற்கு மேலும் ஆகி, ஒளியாகி, பொய்யில் ஒரு பொய்யாகி விடும் ஓர் உணர்வை நீ அறிக.

விளக்கம்: காண முயலும் போது தெரியாததால் பொய்க்குப் பொய் என்றார். இந்த உணர்வே ஆன்மாவாம்.

ஆத்துமத்தின் கூறான அவயவப்பேய் உன்னுடனே
கூத்துப் புரிகின்ற கோளறிவாய் புல்லறிவே. 71

புல்லறிவே! ஆத்துமாவின் ஒரு பகுதியாக இருக்கும் உடல் உறுப்புக்களின் பேயாய் இருந்து உன்னுடனே எல்லாச் செய்கையும் செய்யும் குறிக்கோள் தன்னை அறிவாய்.

விளக்கம்: சில உறுப்புக்கள் நம் எண்ணத்துக்கும் அடங்காமையால் அவற்றைப் பேய் என்றார்.

இருட்டறைக்கும் நல்விளக்காய் இருக்குமுன்றன்
வல்லமையை
அருள்துறையில் நிறுத்திவிளக் காகுநீ புல்லறிவே. 72

புல்லறிவே! இருட்டறையில் விளக்கிற்குப் பதில் அறிவே விளக்காக இருப்பது அதன் வலிமை. அதே வலிமையை அருள் துறையில் நிறுத்தி உயர்வாயாக.

நல்லவழியிற் சென்று நல்பதவி யெய்தாமல்
கொல்வழியிற் சென்று குறுகுவதேன் புல்லறிவே. 73

புல்லறிவே! நல்ல வழியில் நடந்து நல்ல பதவியாகிய சிவகதி பெறாமல் தவறான வழியில் போய் வாழ்வு குறுகுவது ஏன்?

கைவிளக்குக் கொண்டு கடலில்வீழ் வார்போல
மெய்விளக்கு உன்னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே. 74

புல்லறிவே! கையில் விளக்கை வைத்துக் கொண்டே கடலில் விழுபவர் போல மெய்யான விளக்கு உனக்கு உள்ளே இருக்கும்போது நீ ஏன் வீழ்ச்சி அடைகிறாய்?

வாசிக்கு மேலான வான்கதியுன் னுள்ளிருக்க
யோசிக்கும் மேற்கதிதான் உனக்கரிதோ புல்லறிவே. 75

புல்லறிவே! வாசியை விட மேலான கதி உனக்கு உள்ளேயே இருக்க, சிந்திக்கும் மேற்கதிதான் உனக்குக் கிடைக்காது போகுமா?

(வாசி - பிராணாயாமம்)

அன்னையைப்போ லெவ்வுயிரும் அன்புடனே காத்துவரும்
முன்னவனைக் கண்டு முத்தியடை புல்லறிவே. 76

புல்லறிவே! தாய் போல எல்லா உயிர்க்கும் அன்பு தந்து காப்பாற்றி வரும் கடவுளைக் கண்டு முத்தியும் அடைவாயாக.

விளக்கம்: எதற்கும் முன் வருவான் முன் - கருதும் கருத்தில் முன் வருபவன், முன்னவன் என்று அறிக.

## தும்பியிடம் கூறுதல்

அஞ்ஞானம் போயிற்றென்று தும்பீபற - பர
மானந்தங் கண்டோமென்று தும்பீபற
மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற - மலை
மேலேறிக் கொண்டோமென்று தும்பீபற. 77

தும்பியே! அஞ்ஞானம் அழிந்ததென்றும், பரம ஆனந்தம் கண்டோம் என்றும், மெய்ஞ் ஞானம் வந்தது என்றும், மலை மீது ஏறிக் கொண்டோமென்றும் தும்பியே! பறப்பாயாக.

அல்லல்வலை இல்லையென்றே தும்பீபற - நிறை
ஆணவங்கள் அற்றோமென்றே தும்பீபற
தொல்லைவினை நீங்கிற்றென்றே தும்பீபற - பரஞ்
சோதியைக் கண்டோமெனத் தும்பீபற. 78

தும்பியே! அல்லல்களாகிய வலை இல்லை என்றும், ஆணவங்கள் நீங்கினோம் என்றும், பழைய வினைகள் நீங்கி விட்டன என்றும், சோதியான இறைவனைக் கண்டோம் என்றும் தும்பியே பறப்பாயாக.

ஐம்பொறி அடங்கினவே தும்பீபற - நிறை
அருவே பொருளாமெனத் தும்பீபற
செம்பொருள்கள் வாய்த்தனவே தும்பீபற - ஒரு
தெய்வீகங் கண்டோமென்றே தும்பீபற. 79

தும்பியே! ஐம்பொறிகள் அடங்கின. நிறைவான அருவமே பொருள் எனக் கொள்க. செம் பொருள் யாவும் வாய்த்தன என்றும் தெய்வீகம் கண்டோம் என்றும் தும்பியே! நீ பறந்திடுக.

மூவாசை விட்டோமென்றே தும்பீபற - பர
முத்திநிலை சித்தியென்றே தும்பீபற
தேவாசை வைத்தோமென்று தும்பீபற - இந்த
செகத்தை யொழித்தோமென்று தும்பீபற. 80

தும்பியே! மண், பெண், பொன் ஆசைகள் விட்டோம், இதனால் முத்தி பெறுவது வெற்றியே என்றும், தேவர் மீது ஆசை கொண்டு உலக ஆசை முற்றும் ஒழித்தோம் என்றும் பறப்பாயாக.

பாழ்வெளியை நோக்கியே தும்பீபற - மாயைப்
பற்றற்றோம் என்றேநீ தும்பீபற
வாழ்விட மென்றெய்தோம் தும்பீபற - நிறை
வள்ளல்நிலை சார்ந்தோமே தும்பீபற. 81

தும்பியே! பாழான வெளியை நோக்கினோம் என்றும், பற்றுகளை விட்டோமென்றும், வாழ்வதை முடிவாகக் கொண்டோம் என்றும், வள்ளல் நிலையைச் சார்ந்தோம் என்றும் பறப்பாயாக.

(வள்ளல் - கடவுள்)

எப்பொருளுங் கனவென்றே தும்பீபற - உல
கெல்லாம் அழியுமென்றே தும்பீபற
அப்பில்எழுத்து உடலென்றே தும்பீபற - என்றும்
அழிவில்லாதது ஆதியென்று தும்பீபற. 82

எல்லாப் பொருள்களும் கனவே. உலகம் யாவும் ஒரு நாள் அழியும். இவ்வுடல் என்பது நீரில் எழுதிய எழுத்துப்

போன்றது. ஆதி மட்டுமே அழியாதது என்று தும்பியே! பறந்திடுக.

(அப்பு - நீர்)

## குயிலிடம் கூறல்

கரணங்கள் ஒருநான்கும் அடங்கினவே - கெட்ட
காமமுதல் ஓராறும் ஒடுங்கினவே
சரணங்கள் ஒருநான்குங் கண்டனமென்றே - நிறை
சந்தோஷ மாகவே கூவுகுயிலே. 83

குயிலே! அந்தக்கரணங்கள் நான்கும் அடங்கி விட்டன. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மார்ச்சரிய மான கெட்ட குணங்கள் ஆகிய ஆறும் ஒடுங்கிவிட்டன. நான்கு இதழாகிய மூலாதாரத் தாமரையைக் கண்டு விட்டோம் என்று மகிழ்ந்து கூவுக.

விளக்கம்: மூலாதாரம் கடவுள் தந்த வரம். அதைப் பற்றி ஏறினால் இறையருள் கிடைக்குமாதலால் சரணம் என்றார்.

உலகம்ஒக் காளமாமென் றோதுகுயிலே - எங்கள்
உத்தமனைக் காண்பரிதென் றோதுகுயிலே
பலமதம் பொய்ம்மை யேயென் றோதுகுயிலே - ஏழு
பவமகன்றுஏ றிட்டோம் நாமென் றோதுகுயிலே. 84

குயிலே! உலகை வெறுத்திடுக என்றும், எங்கள் உத்தமனைக் காண்பது அரிது என்றும், பல மதங்களும் பொய் என்றும், ஏழு பிறவிகளையும் கடந்து ஏறி விட்டோம் என்றும் கூவுக.

சாதனங்கள் செய்தவர்கள் சாவார்குயிலே - எல்லாத்
தத்துவங்கள் தேர்ந்தவர்கள் வேகார்குயிலே
மாதவங்கள் போலும்பலன் வாயாக் குயிலே - மூல
மந்திரங்கள் தான்மகிமை வாய்க்குங் குயிலே. 85

குயிலே! சாதனங்கள் செய்தோர் சாவது உறுதி. தத்துவம் யாவும் தெளிந்தவர்கள் சாக மாட்டார். மா தவங்கள் போலும் பயன்கள் உண்டாகா. மந்திரங்கள் தான் மகிமை கொண்டன எனக் கூவுவாயாக.

எட்டிரண்டு அறிந்தோர்க்கிட ரில்லைகுயிலே - மனம்
ஏகமாய் நிற்கில்கதி யெய்துங்குயிலே
நட்டணையைச் சார்ந்தறிந்து கொள்ளுகுயிலே - ஆதி
நாயகனை நினைவில்வைத் தோதுகுயிலே. 86

குயிலே! எட்டும் இரண்டும் அறிந்தோர் துயர் உற மாட்டார்கள். மனம் ஏகமாய் நிற்கில் நற்கதியுண்டு. நல்ல சார்பு அறிந்து, நாயகனை நினைவில் வைத்து ஓதுக.

## *மயிலிடம் கூறல்*

ஆடுமயி லேநட மாடுமயிலே - எங்கள்
ஆதியணி சேடனைக்கண் டாடுமயிலே
கூடுபோகு முன்னங்கதி கொள்ளுமயிலே - என்றுங்
குறையாமல் மோனநெறி கொள்ளுமயிலே. 87

ஆதியான அணிசேடனைக் கண்டு ஆடு மயிலே! நடனம் ஆடு மயிலே! இவ் வுடல் போவதற்குள் நற்கதி அடை மயிலே! என்றும் குறைவற்றது மோன நெறி கொள்வதேயாம் என்று ஆடு மயிலே!

இல்லறமே யல்லலாமென் றாடுமயிலே - பக்தி
இல்லவர்க்கு முத்திசித்தி இல்லைமயிலே
நல்லறமே துறவறங் காணுமயிலே - சுத்த
நாதாந்த வெட்டவெளி நாடுமயிலே. 88

மயிலே! இல்லறம் என்பது பல வகைத் துன்பமே! பக்தி இல்லையேல் முத்தி இல்லை! துறவறமே நல்ல அறமாகும்! சுத்த நாதாந்த வெட்ட வெளியையே நாடுக.

விளக்கம்: தலைக்கு மேல் 6 விரல் உயரத்தில் உள்ளது நாதாந்த வெளி.

கல்தூணைப் போல்மனதைக் காட்டுமயிலே - வரும்
காலனையுந் தூரத்தி லோட்டுமயிலே
பற்றூ டுருவவே பாயுமயிலே அகப்
பற்றுச்சற்று மில்லாமற் பண்ணுமயிலே. 89

மயிலே! கல் தூண் போல் மனம் உறுதியாகட்டும். வரும் இயமனையும் தூரத்தில் ஓட்டி விடு. பற்றுகளை நீக்கவே பாய்ந்திடு. அகப்பற்று சற்றும் இல்லாமல் செய்.

### *அன்னத்திடம் கூறல்*

சிறுதவளை தான்கலக்கிற் சித்திரத்தின் இடழ்மறையும்
மறுவானைத் தான்கலக்கின் மதிமயங்கு மடவனமே. 90

இளைய அன்னமே! ஓவியத்தின் நிழல் நீரில் தெரியும் போது ஒரு சிறு தவளை கலக்கினாலும் மறையும். வானத்தில் மேகம் கலக்கினால் மதியும் மறையும்.

காற்றின் மரமுறியுங் காட்சியைப்போல் நல்லறிவு
தூற்றிவிடி லஞ்ஞானந் தூரப்போம் மடவனமே. 91

இளைய அன்னமே! காற்றினால் மரம் முறியும் காட்சி போல, நல்லறிவு தூற்றுவதால் அஞ்ஞானம் தூரப் போகும்.

அக்கினியால் பஞ்சுபொதி அழிந்திட்ட வாறேபோல்
பக்குநல் லறிவாலே பாவம்போம் மடவனமே. 92

இளைய அன்னமே! அக்கினியால் பஞ்சு மூட்டை அழிவது போல், பகுத்தறியும் நல்லறிவால் பாவம் போகும்.

குளவிபுழு வைக்கொணர்ந்து கூட்டிலுருப் படுத்தல்போல்
வளமுடைய வன்மனத்தை வசப்படுத்து மடவனமே. 93

இளைய அன்னமே! குளவி பச்சைப் புழுவைத் தன் கூட்டில் வைத்து இருப்பது போல், வளமான வலிய மனத்தை நீ வசப்படுத்துவாய்.

அப்புடனே உப்புச்சேர்ந்து உளவுசரி யானதுபோல்
ஒப்புறவே பிரமமுட னொன்றிநில்லு மடவனமே. 94

இளைய அன்னமே! நீரில் உப்பு சேர்ந்தபின் அளவு கூடாமல் சரியாகவே இருத்தல் போல, ஒப்புமை உடைய பிரம்மத்தோடு நீயும் ஒன்றி இருப்பாயாக.

காய்ந்த இரும்புநிறங் காட்டுதல்போல் ஆத்துமத்தை
வாய்ந்திலங்கச் செய்து வளம்பெறுநீ மடவனமே. 95

இளைய அன்னமே! நெருப்பில் காய்ந்த இரும்பு சிவப்பு நிறம் காட்டுவது போல், ஆத்மாவும் பிரம்மத்தில் சேர்ந்து அதுவாகவே ஆவதை நீயும் பெறுக.

## *புல்லாங்குழல் ஊதச் செய்தல்*

தொல்லைப்பிறவி தொலைக்கார்க்கு முத்திதான்
இல்லையென் றூதுகுழல் - கோனே
இல்லையென் றூதுகுழல். 96

கோனாரே! முன் பிறவியின் வாசனையைத் தொலைக்கா விட்டால் முக்தி இல்லை என்று குழல் ஊதுக.

இந்திர போகங்கள் எய்தினுந் தொல்லையென்
அந்தமா யூதுகுழல் - கோனே
அந்தமா யூதுகுழல். 97

கோனாரே! இந்திர போகங்கள் அடைந்தாலும் தொல்லை தான் என்று முடிவாகக் குழல் ஊதுக.

மோன நிலையினில் முத்தியுண் டாமென்றே
கானமா யூதுகுழல் - கோனே
கானமா யூதுகுழல். 98

கோனாரே! மோன நிலையில் முத்தி உண்டு என்று இசையோடு குழல் ஊதுக.

நாற்போற் பொறிகளை நாநாவிதம் விட்டோர்
பேயரென் றூதுகுழல் - கோனே
பேயரென் றூதுகுழல். 99

கோனாரே! நாள்கள் புதிதாகத் தினமும் வருவது போல் ஐந்து பொறிகளையும் புதுப்புது விதமாக விட்டவர்கள் பேயர் என்றே குழலை ஊதுக.

ஓடித் திரிவோர்க்கு உணர்வுகிட் டும்படி
சாடியே யூதுகுழல் - கோனே
சாடியே யூதுகுழல். 100

கோனாரே! வீணே ஓடித் திரிவோருக்கு உணர்வு உண்டாகும்படி அவர்களைச் சாடி (பழித்து)க் குழல் ஊதுக.

ஆட்டுக்கூட் டங்களை அண்டும் புலிகளை
ஓட்டியே யூதுகுழல் - கோனே
ஓட்டியே யூதுகுழல். 101

கோனாரே! ஆட்டு மந்தையைக் கண்டு அருகில் நெருங்கும் புலிகளை அகற்றியே குழலை ஊதுக.

மட்டிக் குணமுள்ள மாரீச நாய்களை
கட்டிவைத் தூதுகுழல் - கோனே
கட்டிவைத் தூதுகுழல். 102

கோனாரே! மட்டிக் குணம் கொண்ட மாரீச நாய்களைக் கட்டி வைத்து நீ குழல் ஊதுக.

விளக்கம்: சீதை முன் பொன் ம ாக வந்து வஞ்சித் தவன் மாரீசன். இப்படிப்பட்ட வஞ்சகர்களைத் தண்டிக்கச் சொல்கிறார் சித்தர்.

கட்டாத நாயெல்லாம் காவலுக்கு எப்போதும்
கிட்டாவென் றூதுகுழல் - கோனே
கிட்டாவென் றூதுகுழல். 103

கோனாரே! கட்டி வைக்காத நாய் காவலுக்கு எப்போதும் பயன்படாது என்று குழல் ஊதுக.

பெட்டியிற் பாம்பெனப் பேய்மனம் அடங்க
ஒட்டியே யூதுகுழல் - கோனே
ஒட்டியே யூதுகுழல். 104

கோனாரே! பேய் போன்ற மனம் பெட்டிப் பாம்பாய் அடங்குமாறு ஒட்டியபடி குழல் ஊதுக.

எனதென்றும் யானென்றும் இல்லா திருக்கவே
தனதாக வூதுகுழல் - கோனே
தனதாக வூதுகுழல். 105

கோனாரே! எனது என்றும் யான் என்றும் இரு மலங் களும் இல்லாது, தன் ஆன்மா வழியிலே செல்லக் குழல் ஊதுக.

அற்றவிட மொன்றே யற்றதோடு உற்றதைக்
கற்றதென் றூதுகுழல் - கோனே
கற்றதென் றூதுகுழல். 106

கோனாரே! பற்று விட்ட இடம் ஒன்றுதான். அது பரத்தை உற்ற இடம். அதைக் கற்றுக் கொண்டேன் என்று குழல் ஊதுக.

### பால் கறக்கச் சொல்லல்

சாவா திருந்திடப் பால்கற - சிரம்
தன்னி லிருந்திடும் பால்கற
வேவா திருந்திடப் பால்கற - வெறும்
வெட்ட வெளிக்குள்ளே பால்கற. 107

சாவாதிருப்பதற்கு வழி காணப் பால் கறந்திடுக. தலை உள்ளே இருக்கும் அமுதம் எனும் பால் கறந்திடுக. (செத்து) வேகாமல் இருக்கப் பால் கறந்திடுக. வெறும் வெட்ட வெளியில் தியானித்துப் பால் கறந்திடுக.

தோயா திருந்திடும் பால்கற - முனைத்
தொல்லை வினையறப் பால்கற
வாயா லுமிழ்ந்திடும் பால்கற - வெறும்
வயிறார வுண்டிடப் பால்கற. 108

உலகப் பற்றில் தோய்ந்திடாதிருக்கப் பால் கறந்திடுக. முன்பிருந்த பழைய வினைகள் கெடுமாறு பால் கறந்திடுக. வாயால் உமிழ்ந்திடும்படி பால் கறந்திடுக. வயிறார உண்ணவே பால் கறந்திடுக.

விளக்கம்: கெட்டவைகளை உண்டவன் வாயால் உமிழ்ந்தால், அது வந்தபின் வயிறு சுத்தமாகும். பிறகு உரியதை உண்ணுமாறு பால் கற என்பதாம்.

நாறா திருந்திடப் பால்கற - நெடு
நாளு மிருந்திடப் பால்கற
மாறா தொழுகிடப் பால்கற - தலை
மண்டையில் வளரும் பால்கற. 109

நாறாது இருக்கவும், நெடுநாள் வாழவும், மாறாமல் ஒழுகவும், தலையில் வளரும் (அமுதம்) பாலைக் கறந்திடுக.

விளக்கம்: செத்தால்தான் உடல் நாறும் என்க.

உலகம் வெறுத்திடும் பால்கற - மிக்க
ஒக்காள மாகிய பால்கற
கலசத் தினுள்விழாப் பால்கற - நிறை
கண்டத்தி னுள்விழப் பால்கற. 110

உலகத்தை வெறுக்குமாறு பால் கறந்திடுக எல்லா (உலக) இன்பமும் ஒக்களிப்பதாகப் பால் கறந்திடுக. கலசத்துள் விழுமாறு பால் கறந்திடுக. நிறை கண்டத்தில் (தொண்டையில்) விழுமாறு பால் கறந்திடுக.

விளக்கம்: கலசம், தொண்டை என்பன பால் பயனாகும்படி கறக்கச் சொன்னார்.

ஏப்பம் விடாமலே பால்கற - வரும்
ஏமன் விலக்கவே பால்கற
தீப்பொறி ஓய்ந்திடப் பால்கற - பர
சிவத்துடன் சாரவே பால்கற. 111

ஏப்பம் விடாமலே பால் கறந்திடுக. (சோம்பலின் அடையாளம் ஏப்பம்) இயமனை விலக்கவே பால் கறந்திடுக. தீப்பொறி ஓய்ந்திடப் பால் கறந்திடுக. (தீப்பொறி ஓய்ந்ததும் சிரத்தில் அமுதம் உண்டாகும்.) சிவத்துடன் சேரவே பால் கறந்திடுக.

அண்ணாவின் மேல்வரும் பால்கற - பேர்
அண்டத்தில் ஊறிடும் பால்கற
விண்ணாட்டில் இல்லாத பால்கற - தொல்லை
வேதனை கெடவே பால்கற. 112

அண்ணாக்கின் மேல் (சுழுமுனை நாடி உணரப் படுமாறு) வருமாறு பால் கறந்திடுக. உடம்பில் ஊறும் அமுதம் வெளிப்படப் பால் கறந்திடுக. வான நாட்டிலும் இல்லாத இப்பாலைக் கறந்திடுக. பழைய வேதனைகள் கெடுமாறு பால் கறந்திடுக.

## *மாட்டுக்கிடை கட்டுதல்*

இருவினையான மாடுகளை ஏகவிடு கோனே - உன்
அடங்குமன மாடொன்றை யடக்கிவிடு கோனே. 113

கோனாரே! இரு வினைகள் என்னும் மாடுகளை தனியே விடுக. உன்னுடைய அடங்கும் மனமான மாட்டை மட்டும் அடக்கி விடுக.

சாற்றரிய நைட்டிகரே தற்பரத்தைச் சார்வார் - நாளும்
தவமவமாக் கழிப்பவரே சனனமதில் வருவார். 114

சொல்வதற்கு அரிய பிரம்மச்சரியம் (நைஷ்டிகர்) காத்தவரே தற்பரத்தை அடைவர். தவத்தைத் தவறாகச் செய்பவரே மீண்டும் பிறப்பில் வருவர். நைட்டிகர் - நைஷ்டிகர்; பிரம்மசரியம் காத்தவர்.

அகங்கார மாடுகண்மூன் றகற்றிவிடு கோனே - நாளும்
அவத்தையெனும் மாடதைநீ யடக்கிவிடு கோனே. 115

கோனாரே! அலங்காரமாக இருக்கும் புருவ மத்தியை அகற்றி விட்டு அங்கே மூன்றாம் கண்ணை உண்டாக்குக. நாளும் அவத்தைப் படும் மனமாகிய மாட்டை நீ அடக்கி விடுக. மூன்றாம் கண் - மெய்யறிவு (ஞானம்) என்னும் கண்.

ஒருமலத்தன் எனுமாட்டை ஒதுக்கிக்கட்டுக் கோனே - உடன்
உறையுமிரு மலந்தனையும் ஓட்டிக்கட்டுக் கோனே. 116

ஒரு மலம் உடைய ஆன்மாக்களைத் தனியே கட்டு. இரு மலம் உடையவற்றை அவை போகும் விதமாகக் கட்டு.

விளக்கம்: ஒரு மலம் உடையவர் விஞ்ஞானகலர் ஆவார். இது ஆணவம் மட்டும் உடையவராம். ஆணவம் மாயை இரண்டும் உடைய ஆன்மா பிரளயாகலர் எனப்படுவார்.

மும்மலத்தன் எனுமாட்டை முறுக்கிக்கட்டுக் கோனே - மிக
முக்கால நேர்மையெல்லா முன்பறிவாய் கோனே. 117

கோனாரே! மூன்று மலம் உடைய ஆன்மாவை முறுக்கிக் கட்டுக. மிகவே முக்காலத்தின் இயற்கையெல்லாம் நன்கு அறிவாயாக.

விளக்கம்: ஆன்மா பசுத் தன்மை உடையது. ஆகை யால் மாடு என்று கூறினார். விஞ்ஞான கலர் - ஆணவம் என்னும் ஒரு மலம் மட்டும் உடையவர். பிரளயாகலர் - ஆணவம், மாயை என்னும் இரண்டு மலங்கள் உடையவர். சகலர் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களை உடையவர்.

இந்திரியத் திரயங்களை இறக்கிவிடு கோனே - என்றும்
இல்லையென்றே மரணங்குழ லெடுத்துஊது கோனே. 118

கோனாரே! இந்திரியங்களுக்குரிய திரவியங்களை, பொசிப்புகளை இறக்கி விடுவாயாக. இதனால் என்றும் மரணம் இல்லை என்று குழல் எடுத்து ஊது.

(இந்திரியத் திரவியங்கள் - இந்திரியங்களின் செய்கைக்குரியன திரவியம் எனப்படும். கண் - இந்திரியம். காண்பது என்பது திரவியம். பொசிப்புகள் - அனுபவித்தல்; புசிப்பது என்பதும் அது)

உபாதியெனும் மூன்றாட்டை ஓட்டிவிடு கோனே - உனக்கு
உள்ளிருக்குங் கள்ளமெல்லாம் ஓடிப்போங் கோனே. 119

கோனாரே! மூன்றுவித உபாதிகளாகிய மூன்று ஆடு களையும் ஓட்டி விடு. அதனால் உன் மனத்தில் உள்ள கள்ளம் எல்லாம் தாமாக ஓடி விடும்.

விளக்கம்: உபாதிகள் - தற்காலிக நிலைகள்; அவை காரண, சூக்கும, தூல உடல்கள் என மூன்று வகைப்படும்.

முக்காய மாடுகளை முன்னங்கட்டு கோனே - இனி
மோசமில்லை நாசமில்லை முத்தியுண்டாம் கோனே. 120

கோனாரே! மூன்று உடல் கொண்ட மாடுகளை முன்னதாகக் கட்டுக. இனி மோசமில்லை. நாசமில்லை. முக்தியுண்டாகும்.

விளக்கம்: முக்காய மாடுகள் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களைக் கொண்ட உடம்புகள். இவை தன் இனத்தோடு இருந்து பயில்வதால், முத்தி நிச்சயம் என்றார்.

கன்மபல மாடுகளைக் கடைக்கட்டு கோனே - மற்றக்
கன்மத்திர யப்பசுவைக் கடையிற்கட்டு கோனே. 121

கோனாரே! கன்மத்திற்கான பலன்களை அனுபவித்த மாடுகளை நீக்கிக் கட்டுக. இன்னும் கன்மப் பயன் அடையாத பசுவைக் (ஆன்மாவை) கடைசியில் கட்டுக.

காரணக்கோ மூன்றனையுங் கால்பிணிப்பாய் கோனே - நல்ல
கைவசமாஞ் சாதனங்கள் கடைப்பிடிப்பாய் கோனே. 122

கோனாரே! காரணப் பசுக்கள் மூன்றையும் காலைக் கட்டி வைப்பாயாக. நல்லபடி கைவசமாகும் சாதனங்களைப் பயன்படுத்துக.

பிரமாந்த ரத்திற் பேரொளி காணெங்கள் கோனே - வாய்
பேசா திருந்து பெருநிட்டை சாரெங்கள் கோனே. 123

எங்கள் கோனாரே! ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரை கொண்ட தலைப் பாகத்தில் (பிரம்மரந்திரம்) பேரொளியைப் பாவித்துக் காண்க. வாய் பேசாமல் இருந்து பெரிய நிட்டையில் சேர்க.

விளக்கம்: நிட்டை - சமாதி நிலை; மவுனமாகத் தியானத்தில் சலனமற்று ஆழ்ந்திருக்கும் நிலை. பிரம்மரந்திரம் - ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரை கொண்ட தலைப் பாகம்.

சிரமதிற் கமலச் சேவை தெரிந்தெங்கள் கோனே - முத்தி
சித்திக்குந் தந்திரஞ் சித்தத்து அறியெங்கள் கோனே. 124

கோனாரே! தலையில் தாமரையின் தரிசனம் எங்களுக்குத் தெரிந்தது. முத்தி வெற்றியாகும் வழியைச் சித்தத்தால் அறிவாயாக.

விண்ணாடி வத்துவை மெய்யறிவிற் காணுங் கோனே - என்றும்
மெய்யே மெய்யிற்கொண்டு மெய்யறிவிற் செல்லுங் கோனே. 125

கோனாரே! வானத்தில் நாடப்படும் பொருளை (கடவுளை) மெய்யான அறிவில் காண்பாயாக. என்றும் மெய்யானதை மெய்யில் கொண்டு மெய்யறிவில் செல்க.

கண்ணாடி யினுள்ளே கண்பார்த் துக்கொள்ளுங் கோனே - ஞானக்
கண்ணன்றிக் கண்ணாடி காணவொண்ணாது எங்கள் கோனே. 126

கண்ணாடியில் கண்ணைக் காணும் கோனாரே. ஞானக் கண்ணால் அல்லாமல் வேறு கண்ணால் நாடிக் காண முடியாது.

சூனியமானதைச் சுட்டுவா எங்குண்டு கோனே - புத்தி
சூக்குமமே யதைச்சுட்டும் என்றெண் ணங்கொள் கோனே. 127

கோனாரே! சூனியமானதைச் சுட்டிக் கூறுவது எங்கே உண்டு? புத்தி என்னும் சூக்குமப் பொருளால் அதைச் சுட்ட முடியும் என்று எண்ணுக.

நித்திய மானது நேர்படி லேநிலை கோனே - என்றும்
நிற்குமென் றேகண்டு நிச்சயங் காணெங்கள் கோனே. 128

கோனாரே! நித்தியமான பொருள் நேர் பட்டால் அது நிலையாகும். என்றும் அது நிற்கும் என்று கண்டு உறுதி கொள்வாயாக.

சத்தியும் பரமுந் தன்னுட் கலந்தே கோனே - நிட்டை
சாதிக்கி லிரண்டுந் தன்னுள்ளே காணலாங் கோனே. 129

கோனாரே! சத்தியும் சிவமும் (பரம்) தம்முள் கலந்தே இருக்கும். நிட்டை சாதித்தால் அந்த இரு பொருளும் தன்னுள்ளே காணலாம்.

மூகை போலிருந்து மோனத்தைச் சாதியெங் கோனே - பர
மூல நிலைகண்டு முட்டுப் பிறப்பறு கோனே. 130

எங்கள் கோனாரே! பேசத் தெரியாதவர் (மூகை) போல் இருந்து மோனத்தைச் சாதிப்பாயாக. பரமாகிய மூல நிலையைப் பார்த்துத் தடையான பிறப்பை அறுத்து விடுக.

## இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள்

மூலமும் உரையும் முற்றும்.

# 36. சூரியானந்தர் சூத்திரம்

## பதின்மூன்று

சீர்கொண்ட அருமறையின் பொருளாய்நின்ற
தெட்சணா மூர்த்தியுடபாதங் காப்பு
பேர்கொண்ட சூத்திரமே பதின்மூன்றுக்குள்
பிரித்துவைப்பேன் பூவழலை பெருமையெல்லாம்
நீர்கொண்ட வூசரத்தின் மகிமைதன்னை
நிசமாகச் சொல்லாமல் மறந்துபோட்டார்
ஆர்கொண்ட வேணியனா ருமைக்குச்சொன்னார்
ஆத்தாளு மடியேனுக் கறைந்திட்டாளே. 1

வேதங்களின் பொருளாய் இருக்கும் தட்சிணாமூர்த்தியின் திருவடி காக்கட்டும். பதின்மூன்று சூத்திரங்களுக்குள் யோகம் எல்லாம் அடக்கிச் சொல்வேன். மற்றையோர் உண்மைகளைச் சொல்ல மறந்து விட்டனர். சிவன் ஆகிய தட்சிணாமூர்த்தி உமைக்குச் சொல்ல அவள் எனக்குச் சொன்னாள்.

அறைந்திட்ட வகையேது வுப்பேஆதி
ஆகாச விந்துவினால் ஜெனித்தபிண்டம்
மறைந்திட்ட வுப்பதுவே காரங்காரம்
மண்ணான வுப்பதுவே சாரஞ்சாரம்
கறைந்திட்ட வூசரத்துங் கேற்றவுப்பைக்
காணாமற் போனதினாற் கலக்கமாச்சு
இறைந்திட்ட மலஜலமாய்க் காணலாகும்
இந்தவிரண் டோரிடத்தி லிருக்கும்பாரே. 2

உமை கூறிய விதமாவது: ஆதியில் உப்பே ஆகாசம் முதலிய ஐம்பூதங்களாய் நின்றது. அந்த விந்துவினால்தான் எல்லாம் உண்டானது. எல்லாவற்றுக்கும் மூலமான அந்த

உப்பு மிகுந்த காரம் உடையது. அதிலிருந்து பிரிந்த மண் ஆகிய பூதமே எல்லாம் வளரும் சாரமாகியது. அந்த மூலமான உப்பைக் காண முடியாததால்தான் கலக்கமானது. மலம், சலம் ஆகிய இவை மூலமாக அந்த மூலமும் கரைந்து வெளியேறக் காணலாம். ஊசரம் - சிறுநீர்.

இருக்கின்ற வுப்பினுக்கு மூலாதாரம்
இந்துவொன்று இரவியொன்று வன்னியொன்று
பெருக்கின்ற வீசனுக்குச் சூட்சமுந்தான்
பிரிதிவியே தூலமெனப் பேசலாகும்
கருக்கொண்ட யோனியிலே நாலுபேதம்
கருதையிலே யெழுதோற்றங் காணலாகும்
உருக்கொண்ட ஜீவஜெந்து அனேகமுண்டாம்
உற்றுப்பார் அண்டபிண்ட முண்மைதானே. 3

உடம்பிலுள்ள மூலாதாரமான உப்புக்கு இடாபிங்களா, குண்டலினி ஏறும் சுழுமுனை என்பன சூக்குமமாக இருக்கும். அதற்கும் சூக்குமம் ஈசனிருப்பதாம். உடல்கள் உண்டாகும் யோனிகளை நான்கு வகையாகக் கருதும் போது எழுவகைத் தோற்றங்கள் உண்டாகும். பிரபஞ்ச மாகிய அண்டமும் உடல்களாகிய பிண்டமும் ஒன்றாகும் உண்மையையும் அறியலாம்.

தானாக நின்றதுவே பாருமாச்சு
சகலசித்துப் பிரகிருதி யுருவமாச்சு
வானாகி நின்றதுவே சாட்சியாகும்
மன்னுயிரெல் லாஞ்சோதி மயமுமாச்சு
ஊனாகப் பிறந்தசடம் பிறவாமுத்திக்
குதவியல்லோ பிரதிநல் யோனியோனி
கோனாக நின்றகுரு வுபதேசத்தாற்
குழிபுகுந்து வுப்பெடுத்துக் கொள்ளுவாயே. 4

தனித்து நிற்பதே நிலப் பூதமாகும். அதில் சகலமும் உண்டாகும். மூலப் பிரகிருதி உருவமாய்த் தோன்றியது. வானமே இதற்குச் சாட்சி. எல்லா உயிர்களும் சோதி மயமு மாயின. ஊனாகப் பிறந்தது பிறவாதிருக்கவே முத்தியுள்ள தாகும். இல்லாவிட்டால் மறுபடியும் யோனியில் பிறக்க நேரும். எனவே குரு உபதேசத்தால் குழியறிந்து உப்பை எடுத்துக் கொள்வாயாக.

கொள்ளுவார் முப்பூவின் முதலாமங்கம்
கூர்ந்துபா ரூசரத்தைக் கொள்கைகொண்டு
விள்ளுவார் யோனியின் படிவிடாமல்
மேலேற்ற மேலுதவி மேவித்தானாற்
விள்ளுவா ரிந்தவுப்பு சிவமுமாச்சு
துருசுப்பு பணவிடையால் தொந்தமேற்றித்
தள்ளுவார் பிரளயமோர் கோடிகாலம்
சகலசித்தும் மூலவுப்பு தன்னிலாச்சே. 5

முப்பூவின் முதலங்கம் ஊசரமான சிறுநீரில் உள்ளது. அதை முறைப்படி ஏற்றுக் கொள். இதுவே சிவநீராகும். பணவிடையளவு (மிளகு மூழ்குமளவு) உள்ளங் கையில் கொண்டு உண்பவர் பல காலம் வாழ்வர். எல்லாச் சித்தும் இதில் அடங்கும்.

ஆச்சப்பா மூலவுப்புக் கஞ்சுதீட்சை
ஆதியுப்புக் கப்படியே தீட்சையாகும்
மூச்சப்பா தசதீட்சை யார்தான்செய்வார்
மூலகுரு செய்வார்பின் னார்தான்செய்தார்
ஏச்சப்பா கொங்கணவர் தீட்சைமார்க்கம்
ஏற்றிவிட்டால் முப்பத்தி ரண்டாமென்று
பேச்சப்பா பேசினதி லாவதுண்டோ
பிண்டவுப்புக் கேழுவிதம் பேசலாமே. 6

மூல உப்புக்கும் ஆதி உப்புக்கும் தச தீட்சையில் ஐந்து தீட்சை பெற்றதற்குச் சமமான பலன் உண்டு. யாரும் முழுதுமான பத்து தீட்சையும் செய்வதில்லை. மூல குரு வானவர்தான் செய்வார். கொங்கணவர் தீட்சை பெற்றால், முப்பத்திரண்டு தீட்சை பெற்றதற்குச் சமமாகும். வெறுமே இதைப் பேச வேண்டாம்.

விளக்கம்: 32 தீட்சை என்பது பலன் மிகுதியைக் கூறியதாம்.

பேசுகின்ற வுப்பினுக்கு மேலேஅங்கம்
பெருமையுள்ள சித்தர்கள்தான் செய்யுமார்க்கம்
வீசுகின்ற சூதத்தின் துறைகளெல்லாம்
மிஞ்சவில்லை மூன்றுநா லஞ்சானாலும்
பாஷையினாற் சொன்னார்கள் வெளிதோணாது
பாலனுக்குத் தோன்றுமிந்த நூலைப்பார்த்தால்
கூசல்மிஞ்சிப் போடுதென்று என்றன்நூலைக்
குகைக்குள்மறைத் திட்டதினாற் கூறொண்ணாதே. 7

உப்பிற்கு மேலும் சில அங்கம் சித்தர் செய்வர். இதைச் சூதமாகிய பாதரசத்தால் செய்வதும் உண்டு. இவை மூன்று வகை முதல் ஐந்து வகையாம். வார்த்தையால் மட்டும் சொன்னால் அது விளங்காது. இந்த நூலில் சிறுவர்களும் அறியுமாறு மறைக்காது கூறியுள்ளேன்.

ஒண்ணான நூலாரு மிருநூற்றைந்தி
லோதிவைத்த கருத்தெரியு மிருபத்தைந்திற்
கண்ணாகு மிந்தநூல் பதின்மூன்றுக்குள்
கருவையொரு கற்பமுறை காட்டிவைத்தேன்
வண்ணானை யறியாத பேருக்கெல்லாம்
வாதியென்ற பேரேது வாதமேது
பெண்ணாடன் சுரோணிதமுத விந்துங்கண்டால்
பேரான பூரணத்தின் பெருமைதானே. 8

இருநூற்றைந்து, இருபத்தைந்து என விளித்துக் கூற வேண்டியது பதின்மூன்றாகச் சுருக்கிக் கூறப்பட்டது. ஒரு கற்பத்துக்குள்ள ஆதியைச் சொன்னேன். வாதம், இரச வாதம் என்பன ஏது? ஆண் பெண் கலந்து சேர்ந்து குழந்தை பெறும் போதே பூரணமாகிய கடவுள் வேறோர் உடலுடன் வருவதை அறிகிறோம். (எல்லாச் சித்தும் இயற்கை என்பதாம்)

பெருமையென்ற காயசித்தி பண்ணாவிட்டாற்
பேரான அடியோடு முடியும்போச்சு
அருமையென்ற குண்டலிக்குள் வராகிபூசை
அப்பனே கண்டமதி லங்கென் றூணு
புருவமையத் துள்ளேவு மென்றுகும்பி
போதமென்ற மவுனவித்தை கைக்குள்ளாச்சு
தருமவித்தை பிரகிருதி மூச்சாடாது
சகஸ்திரத்தெண் மலர்பதத்திற் சார்ந்துநில்லே. 9

காயத்தை (உடலை)ச் சித்தி பண்ணி அழியாது காக்கா விட்டால், அடி முடியாக நமக்குள் இருக்கும் யோக ஆதாரங் களின் பயன் வீணாகும். எனவே குண்டலினி முதல் மூச்சுப் பயிற்சி செய்து, தொண்டையில் அம் என்று மூச்சை நிறுத்தி, மவுன யோகத்துடன் 1008 இதழ் கொண்ட தாமரை (சகஸ்ராரம்) ஆகிய தலை உச்சியை நினைத்து உறவு கொள்க.

நில்லாத மூலிகையாற் காயசித்தி
நிஷ்டைமவு னத்தாலே யோகசித்தி
கொல்லாத மூலமதில் அபானசுத்தி
கூடாம லிருந்துவிட்டா லேதுமுத்தி
சொல்லாத வீசனுப்பு மதிசூதத்திற்
சூட்டினேன் வெள்ளையென்ற சூடன்வித்தை
எல்லாரு மிந்தவிதம் பாடமாட்டார்
இதமான சூதகத்தின் வெடியுப்பாச்சே. 10

மூலிகைப் பயனால் காய சித்தியும், மவுனத்தால் யோக சித்தியும், மூலாதாரத்தில் அபான வாயு சுத்தி செய்வதும், கொண்டால் முத்தியாகும். சூதமே ஈசனாகிய உப்பு என அறிக. யாரும் இவ்வளவு வெளிப்படையாகக் கூற மாட்டார்கள் என்பது அறிக.

*''எண்ணாயிரத்தி லிருநூறு மந்திரம்
அண்ணார்சொன்னா ரடியே னறிந்தேன்
சொன்னார்சிவப்பு சோர்பச்சை ரூபம்
வண்ணா னறிவான் வகாரத் திரையமே'' என்றும் 10

எண்ணாயிரத்தில் இருநூறு மந்திரம் சித்தர்கள் கூறிய படியே அறிந்தேன். வகாரத் திரயமாகிய சிவாய எனும் மூன்று எழுத்துக்கள் ஓம் என்னும் எழுத்தின் மூன்று நிறமாகிய சிவப்பு பச்சை கருப்பு என்பன கலந்து நிற்கும் என அறிக.

விளக்கம்: இதுவும் 10ஆம் சூத்திரமாம்.

உப்பான வெடியுப்புச் செயநீராலே
ஒருகோடி வித்தையெல்லா மாடலாகுங்
அப்பான கல்லுப்பு நீரினாலே
ஆடலாந் துருசினுட அங்கமெல்லாம்
செப்பாத யோனிருது சேநீர்மட்டாற்
சிவன்வேறு தானுண்டே யிவனல்லாமல்
தப்பாமற் செய்தென்ன சவுக்காரந்தான்
சஷ்டிமுதற் பவுரணையுந் தாக்கிப்பாரே. 11

வெடியுப்புச் செயநீராலே ஒரு கோடி வித்தைகளை அடக்கலாம். கல்லுப்புச் செய நீரால் எல்லா அங்கமும் அடங்கக் காணலாம். யோனிக்குள் உள்ள சுரோணிதமும்

*திருமூலர் திருமந்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்.

ஒரு செய நீரே. அதில் விந்துவாகிய சிவன் உப்புச் சேர்ந்தால் (விந்து - சுக்கிலம்) உறுதியாகக் குழந்தை உண்டாகும். சஷ்டி முதல் பவுர்ணமி வளர் பிறையில் இது நிகழும் என்றார்.

விளக்கம்: செயநீர் - எல்லா மூவுலகங்களையும் வசம் செய்யும் தன்மை கொண்ட நீர்.

தாக்கிப்பா ராகாசஞ் சருவசாட்சி
 சதாநித்தம் அந்தரமே சாடிநின்றால்
கோச்சிப்பார் வாயுலயப் படுவதற்கு
 நூதனமாய் வன்னியத்திற் கூடவேணும்
மூக்கிற்றா னோடுவது பிராணவாயு
 மூலமெனும் வளையமது நகாரந்தன்னைத்
தாக்கித்தான் விட்டவர்க்கு போகமெய்தும்
 ...............சொல்லும் நூலே. 12

மூச்சைக் கட்டி ஆகாசமாகிய தலைவரை எண்ணிப் பார்ப்பது சர்வ சாட்சியாகும். இப்படியே தினமும் உள்ளுக்குள் பயிற்சி செய்து நின்றால், வாயு கட்டுப்படும். அது குண்டலினித் தீயில் கூட வேண்டும். மூக்கில்தான் பிராண வாயுவும் தலை மீது ஓடும். ஆகவே மூலாதாரத்தில் ஓம் என்று தொடங்கி, நமசிவாய என்று பிராணாயாமம் செபிப்பவர்க்கு இது உணர்வாகும்.

செல்வதென்ன ரேசகத்தை வெளிவிடாதே
 துடியான பூரகத்தைப் பின்னிடாதே
வெல்வதென்ன கும்பகத்தை யடிவிடாதே
 மேலேற்று மாத்திரையை மறந்திடாதே
செல்வதென்ன கற்பத்தை மறந்திடாதே
 செந்தூரஞ் சேர்க்கையிலே சிதறிடாதே
சொல்வதென்ன அமுதமதிலே பிறக்குமிந்தக்
 குளிகைக்குச் சாரணைசெய் குணமுமாற்றே. 13

இழுத்த காற்றை அலையாது அடக்கி வைத்து மெல்ல மெல்ல வெளியேறுமாறு செய்க. இதற்குரிய காலப் பொழுதாகிய மாத்திரையை மறந்து விடாதே. இதனால் காய கற்பமாகும். செந்தூரம் ஆகிய குண்டலினி நெருப்பு சேரும்போது மனம் கலங்கிடாதே. இதனால் (குளிகை யால்) அமிர்தம் உண்டாகும்.

விளக்கம்: பூரகம் உள் மூச்சு, ரேசகம் வெளி மூச்சு, கும்பகம் அடக்கும் மூச்சு. மாத்திரை 1 மடங்கு இழுத்து நான்கு மடங்கு அடக்கி இரு மடங்கு விடுவதாம். ஒரு மடங்கு என்பது பதினாறு வினாடி என்பது இலட்சிய எண். அவரவர் முயற்சியே அளவாகக் கொள்க.

## சூரியானந்தர் சூத்திரம்

**மூலமும் உரையும் முற்றும்.**

*சித்தர் பாடல்கள் முழுவதும் மூலமும் உரையும் முற்றுப் பெற்றது.*



# பாட்டு முதற் குறிப்பகராதி

## சிவ வாக்கியர்

# சிவ வாக்கியர் தொடர்ச்சி.......

## சிவ வாக்கியர் தொடர்ச்சி......

# சிவ வாக்கியர் தொடர்ச்சி.......

## சிவ வாக்கியர் தொடர்ச்சி.......

## சிவ வாக்கியர் தொடர்ச்சி.......

# அழுகணீ சித்தர்

# அழுகணீ சித்தர் தொடர்ச்சி.......

# அழுகணீ சித்தர் தொடர்ச்சி......



# கடுவெளிச் சித்தர்

## கடுவெளிச் சித்தர் தொடர்ச்சி.......



## குதம்பைச் சித்தர்

# குதம்பைச் சித்தர் தொடர்ச்சி.......

## குதம்பைச் சித்தர் தொடர்ச்சி.......

## பத்திரகிரியார்

## பத்திரகிரியார் தொடர்ச்சி.......

## பத்திரகிரியார் தொடர்ச்சி......

# பாம்பாட்டிச் சித்தர்

# பாம்பாட்டிச் சித்தர் தொடர்ச்சி.......



## காக புசுண்டர்

## காக புசுண்டர் தொடர்ச்சி......

## சங்கிலிச் சித்தர்



## சத்தியநாதர் என்ற ஞானச் சித்தர்

## சத்தியநாதர் என்ற ஞானச் சித்தர் தொடர்ச்சி......



## ஏகநாதர் என்ற பிரம்மானந்தச் சித்தர்

## மச்சேந்திரநாதர் என்ற நொண்டிச் சித்தர்

# திரிகோணச் சித்தர்

## கடேந்திரநாதர் என்ற விளையாட்டுச் சித்தர்

## கடேந்திரநாதர் என்ற விளையாட்டுச் சித்தர் தொடர்ச்சி......



## புண்ணாக்குச் சித்தர்

## கல்லுளிச் சித்தர்

## கல்லுளிச் சித்தர் தொடர்ச்சி.......



## கஞ்சமலைச் சித்தர்



## வகுளிநாதர் என்ற மௌனச் சித்தர்

## ஆதிநாதர் என்ற வேதாந்தச் சித்தர்



## காரைச் சித்தர்

## காரைச் சித்தர் தொடர்ச்சி.......



## சதோக நாதர் என்ற யோகச் சித்தர்

## சதோக நாதர் என்ற யோகச் சித்தர் தொடர்ச்சி.......



## காயக் கப்பல்



## உரோமரிஷி ஞானம்



## தடங்கண் சித்தர்

## பட்டினத்துச் சித்தர் ஞானம்

## கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார்

## கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் தொடர்ச்சி....

## கைலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் தொடர்ச்சி....

## கொங்கணச் சித்தர்

# கொங்கணச் சித்தர் தொடர்ச்சி.......

## சட்டைமுனி ஞானம்



## திருவள்ளுவ ஞானம்

# அகத்தியர்

## திருமூல நாயனார்



## வால்மீகி சூத்திரம்



## இராம தேவர்

## கருவூரார்



## அகப்பேய்ச் சித்தர்

## அகப்பேய்ச் சித்தர் தொடர்ச்சி......



## இடைக்காட்டுச் சித்தர்

## இடைக்காட்டுச் சித்தர் தொடர்ச்சி.......

## சூரியானந்தர் சூத்திரம்



*சித்தர் பாடல்கள்*

*பாட்டு முதற்குறிப்பகராதி முற்றிற்று.*



# சித்தர் பாடல்கள்

## மூலமும் உரையும்

உரையாசிரியர்

முனைவர் அ. அறிவொளி

வர்த்தமானன் பதிப்பக வெளியீடு